அனைத்திந்திய நூல் வரிசை

# தர்பாரி ராகம்

ஸ்ரீலால் சுக்ல

தமிழாக்கம்:

சரஸ்வதி ராம்னாத்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

முதற்பதிப்பு : 1977 (சக : 1898)
*இரண்டாம் அச்சு* : 1990 (சக : 1912)

*ரூ. 28.00*
*Original title* : Raag Darbari *(Hindi)*
*Tamil Title* : Darbari Ragam.
வெளியிட்டவர் : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,
ஏ.5. கிரீன்பார்க், புது தில்லி-110016.

# முன்னுரை

பத்தொன்பதாம் நூற்ருண்டின் இறுதிக் காலகட்டந்தான் இந்தி நாவல்களின் துவக்கம் என்ருலும், ஆழமான, வளம் நிறைந்த, கம்பீரமிக்கதொரு பரம்பரையின் துவக்கம் பிரேம் சந்திலிருந்துதான் ஆரம்பமாகிறது. இருபதாம் நூற்ருண்டின் துவக்கக் காலத்திலேயே மேலை நாடுகளில் நாவல் இலக்கிய மானது தனது வளர்ச்சியின் உச்சகட்டத்தை எட்டியிருந்த சமயம், இந்தி நாவல் இலக்கியமானது தனது இளம் பருவத் துப் பேதைமை, கற்பனை மிகுந்த பாத்திரப் படைப்பு, அளப்பு ஆகியவற்றிலிருந்து விடுபட முயற்சி செய்து கொண்டிருந்த தென்பது வியப்பிற்குரிய விஷயமாக இருக்கலாம். ஆனல் சில ஆண்டுகளுக்குள்ளாகவே பிரேம்சந்தின் படைப்புக்கள், நாவல் இலக்கியத்தில் புதியதொரு பாணியைத் தோற்றுவித்தன அத்துடன், இந்தி நாவல் இலக்கியத்திற்குப் புத்துயிரளித்து, மேன்மையுறச் செய்து, சிறந்த நாவல்களின் வரிசையிலே அதற்கொரு தனியிடமும் அளித்துவிட்டன.

இந்த இருபதாம் நூற்ருண்டு, தனது அரசியல் கிளர்ச்சிகள், கலாசார மாற்றங்கள், மோதல்கள் ஆகியவற்றின் மூலம் நியதிக்குட்பட்ட மனித வாழ்வின்முன் ஒரு பெரும் கேள்விக் குறியை எழுப்பும் நூற்ருண்டாகும். விஞ்ஞான அறிவியல் துறை, தொழில் நுட்ப வளர்ச்சி ஆகியவற்றின் முன் னேற்றம், பண்பாடு, நுண்கலைகள் போன்றவைகளை அர்த்த மற்றவை என நிரூபிப்பதற்குரிய சான்றுகளை இந்த யுகம் திரட்டி வருவது மட்டுமன்றி, கலைகள் ஒரு கடினமான சவாலை எதிர்நோக்கும்படியும் செய்துள்ளன.

அறிவியல், தொழில்நுட்ப அறிவின் அறைகூவலுக்குமுன் நாவலும் இதே நிலையில்தான் நிற்கின்றது. நாவலின் அதீத கற்பனைகளை விஞ்ஞானம் உருவாக்கிக் காட்டியுள்ளது எனி னும் மனித உள்ளத்தின் ஆசைகளும், எதிர்பார்ப்புகளும் குன்ருத, குறையாத பொக்கிஷமாகவே இன்றளவும் இருந்து வருகின்றன. தொழில்நுட்ப அறிவிற்குமுன் சிறுமைப்பட்டு விடும் மனித உணர்வுகளை, அவற்றுடைய விகாரங்களுடன் நாவல் சித்திரிக்கின்றது. நம்முடைய இன்றைய சமூக, தனிப் பட்ட வாழ்வின் அகப்புற நிலைகளின் நரகத்தையும் அதே

தீவிர முனைப்புடன் இன்றைய நாவல்கள், தமக்குரிய விஷய மாகவும் எடுத்துக்கொண்டிருக்கின்றன. இந்தி நாவல் இலக்கியம் பற்றிக் கூறும் இந்தச் சந்தர்ப்பத்தில் சிறந்ததொரு மொழியின் மகத்தான பேறு எனக் கணிக்கப்படும் மனித வாழ்வின் பல்வேறு நிலைகளைப்பற்றிய படைப்புகளை இந்தி நாவல் இலக்கியம் பெற்றுள்ளது எனக் கூறுவது மிகை யாகாது. இந்தி நாவல் இலக்கியத்தின் வரலாறு மிகப் பழமையானது, தொன்மையானது என்ற நிலை இல்லா விடினும், அது அடைந்துள்ள முன்னேற்றமும், ஆதாயமும் குறிப்பிடத் தக்கனவாகும்.

பிரேம்சந்திற்கு முற்பட்ட காலத்தின் நாவல்கள், இந்திர ஜாலங்களும், அற்புதங்களும், சரித்திர காலக் கற்பனைகளும் நிறைந்ததாக இருந்தன. அவை, தங்களது சுவடுகளை இலக்கியத் தடத்தில் பதிக்காமல் சென்றிருப்பதே அவற் றின் முக்கியத்துவமற்ற தன்மைக்கு ஒரு சான்ருகும். மொழி நடை, கலைத்தன்மை என்ற நிலையிலிருந்து கணிக்கும் போதும்கூட இந் நாவல்கள், இந்தி நாவல் இலக்கியத்திற்கு எதையும் அளித்துள்ளன என்று மதிப்பிட முடியாமல் இருக் கிறது. பிரேம்சந்த் முதல் முறையாகச் சமுதாய விழிப் புணர்வுடன், சமூக மாற்றங்கள், சுதந்தரம், சிதிலமாகி அழிந்துகொண்டிருந்த மதிப்பீடுகள், மரபுகள் ஆகியவற்றின் அமைப்பை எதிர்த்து, மற்றப் பல்வேறு பிரச்னைகளுக்கும் தீர்வு காணும் முயற்சியில் ஈடுபட்டார் என்பது தெளிவு. பிரேம்சந்தின் நாவலான ‘கோதானம்’ ஒரு மைல் கல்லா கும்; இங்கிருந்துதான் இந்தி நாவல்களின் புதிய சகாப்தம் தொடங்குகிறது.

கோதானத்தில் ஒரு விவசாயி, கூலியாக மாறவேண்டி யிருந்த நிர்ப்பந்தம், சோக வரலாருகச் சித்திரிக்கப்பட்டுள் ளது. இந்தச் சித்திரத்தின் மூலம் பிரேம்சந்த், முதலாளித்துவ அமைப்பைத் தாக்க விரும்பிஞர். மேலும் ஒரு விவசாயி கூலியாக மாறவேண்டிய அவல நிலையானது நகர்ப்புற நாகரிகப் பாதிப்பின் பயங்கரமான முன்னேடி என்பதை யும் உணர்த்த விரும்பிஞர். நகரம், கிராமம் எனும் வெவ் வேறுபட்ட இரு புள்ளிகளைத் தொட்டுச் செல்லும் இக்கதை யானது நம்முடைய இன்றைய வாழ்வின் சரித்திர பூர்வமான இலக்கிய தஸ்தாவேஜு ஆகும். பிரேம்சந்தும்

அவரது சமகாலத்து எழுத்தாளர்களில் பெரும்பாலோரும், சமூக யதார்த்த வாதத்தைத்தான் தங்களுக்கு விஷய மாக்கிக் கொண்டிருந்தனர். வாழ்வின் பல்வேறு அம்சங் களையும் தன்னகத்தே கொண்டிருந்த அக்காலத்து நாவல் களில், பண்பாட்டின் வளர்ச்சிக்குரிய அம்சங்கள் யாவும் நிறைந்திருந்தன.

அடிமைத் தளையிலிருந்து விடுபடவேண்டுமென்ற துடிப்பு, குடியானவர்களின், தொழிலாளர்களின் பொருளாதார நிலை உயர அவர்களது போராட்டங்கள், இந்திய சமூகத்தில் நியாய பூர்வமான அடிப்படையில் சமத்துவத்தைக் கொண்டு வரவேண்டுமென்ற உறுதி ஆகியவை தீவிர முனைப்புடன் சித்திரிக்கப்பட்டுள்ளன.

உலகம் முழுவதிலும் விரவி நின்ற ஃபாசிஸம், உலகப் போரின் கெடுபிடி, முடியாட்சியாளர்களின் மனப்போக்கு ஆகியவை எத்தகைய அச்சமூட்டும் சூழலைத் தோற்றுவித்திருந் தன என்பதை இந்தி நாவல்களில் சுதந்தரப் போராட்டத்தின் சம்பவங்களிடையே இன்றும் தேட முடியும். மக்களின் எழுச்சி யெனும் யதார்த்த நிலையிலிருந்து தோன்றிய தேசிய மனோபா வத்தை அடிப்படையாகக் கொண்டிருந்த நாவலானது இரண் டாம் உலகப் போருக்குப் பின் 'மனிதனை' நிலைக்களனாகக் கொண்டு, தனி மனிதனின் அகவயப்பட்ட உள்மன உலகத் தின் உணர்வுகளைச் சித்திரிக்கும் நாவலாக எப்படி மாறியது என்பது சுவையான விஷயமாக இருக்கக் கூடும். ஆனால், சமூக உணர்வுகளுக்குப் பின், தனி மனிதனின் அகவயப்பட்ட உலகத்தின் சித்திரிப்பு என்பது தற்செயலாய் நிகழ்ந்து விட்டது அல்ல என்பதில் சந்தேகத்திற்கு இடமேயில்லை. உண்மையில், தனி மனிதனைக் கூறு போட்டு ஆராயும் இந்தப் போக்கு, தனி மனித ஆராய்ச்சியின் போக்குத்தான். அக்ஞேய், ஜைனேந்திரர், இலாசந்திர ஜோஷி, பகவதி சரண் வர்மா ஆகியோரின் நாவல்களுடன், யஷ்பால், அஷ்க், அமிருதலால் நாகர், விருந்தாவன்லால் வர்மா போன்ற நாவலாசிரியர்களின் படைப்புக்களும் சரியான அர்த்தத்தில், இந்திய வாழ்வின் பல்வேறு மொழி பண்பாட்டுத் துறையைச் சார்ந்தவர்களின் கதைகளை நம் முன் வைத்துள்ளன.

சுதந்தரம் என்பது உறுதியான புள்ளியாகும். இதை ஆதார மாகக் கொண்டு, சுதந்தரத்திற்கு முற்பட்ட, பிற்பட்ட

நாவல்களில் 'சமூக யதார்த்த வாதம், மனேதத்துவம்' என்ற பிரயோகங்களுக்குப் பின்னர், முற்றும் புதியதொரு போக்கைப் பற்றிய உணர்வு, நாட்டின் விடுதலைக்குப் பின் படைக்கப்பட்ட நாவல்களிலே காணப்படுகிறது. புதிய தலைமுறைப் படைப்பாளர்கள் இந்திய அரசியல், மற்றும் விடுதலைக்குப் பின்னுள்ள பாரத நாட்டின் யதார்த்த நிலையை அதன் உண்மையான நிலைகளில் கண்டு சித்திரிப்பதில் வெற்றி யடைந்துள்ளனர். மோகன் ராகேஷ், பணீஷ்வர் நாத் ரேணு, கிருஷ்ண பலதேவ் வைத், நாகார்ஜுன், பைரவ பிரசாத் குப்தா, கமலேஷ்வர், ராஜேந்திர யாதவ், ராங்கேய ராகவ், நரேஷ் மேஹ்தா போன்ற நாவலாசிரியர்களின் படைப்புக்களில் இதைக் காண முடியும். ரேணுவின் 'மைலா அஞ்சல்', நாகார்ஜுனனின் 'பல்சன்மா' ஆகிய இரண்டு நாவல்களும் பிரேம்சந்த் காலத்துச் சமூக யதார்த்தவாதத்தின் மறு மலர்ச்சி பெற்ற மனேநிலையைச் சித்திரித்துக் காட்டு கின்றன. மேலும் உணர்வின் வெளிப்பாடு என்ற அடிப் படையில் இன்றைய பாரத மக்களின் உணர்வை வெளிப் படுத்தியுள்ளன. இக்கால கட்டத்து நாவல்களில் பல இன்றைய 'கிளாஸிக்' நாவல்களாக இடம் பெற்றுள்ளன. இதில் வியப்பிற்குள்ளாக்கும் விஷயம் என்ன வென்றால், இன்றைய படைப்புகளே இன்றைய யுகத்தின் 'கிளாஸிக்' படைப்புகளாகும் தகுதி பெற்றுள்ளன. ஆனால், கதைக் கரு என்ற நோக்கில் மட்டுமின்றிக், கலைத்தன்மை, உணர்ச்சிகளின் வெளிப்பாடு என்ற நோக்கில் கூடச் சுதந்தரத்திற்குப் பின் படைக்கப்பட்டுள்ள பல நாவல்கள், நாவல் எனும் உருவகத் துக்கு மீண்டும் விளக்கம் கூறும் முயற்சியாக உள்ளன என்பதையும் மறுப்பதற்கில்லை.

விடுதலைக்குச் சில வருடங்களுக்குப் பின்னர், புதிய தலை முறையைச் சார்ந்த எழுத்தாளர்கள் பலர் தோன்றியுள்ளனர். இவர்களில் சிலர் சிறந்த நாவல்களை எழுதியுள்ளனர். உருவ அளவில் இவை சிறியனவையாக இருந்தபோதிலும், இன்றைய யதார்த்தத்தைப் புரிந்துகொள்ள இவை தம்மள விலேயே ஒருவிதப் பிரமாணங்களாக அமைந்துள்ளன. ஸ்ரீ காந்தவர்மா, ஸ்ரீலால் சுக்லா, ரமேஷ் பக்ஷி, மகேந்திர பல்லா போன்ற எழுத்தாளர்களின் படைப்புகள், தங்கள் சமகாலத்து வாழ்வை, அதன் முழு அவலத்துடன் சித்திரித்

துக் காட்டியுள்ளன. நமது சமூக வாழ்வில் உள்ளவற்றை, கலைத் தன்மையுடன் விவரிப்பது என்பது எந்த வொரு சாதனத்தின் மூலமும் சாத்திய மன்று. ஏனெனில் இன்று இருப்பவை எல்லாமே, ஒரு கடுமையான வகையைச் சேர்ந்த வம்ச அழிவின் பகுதியேயாகும். தனி மனிதன், குடும்பம், ஜாதி, அமைப்பு, ஸ்தாபனம்; நம்பிக்கை, எதிர் காலத்தைப் பற்றிய கணிப்பு ஆகியவற்றின்பால் வளர்ந் துள்ள கண்ணோட்டத்தை பார்வையை, வெறிகொண்ட தென்றோ, புரட்சிகரமனதென்றோ, நிராசையானது பைத் தியக்காரத்தனமானது என்றோ வார்த்தைகளால் சிறைப் பிடித்து அறுதியிட்டுக் கூறிவிட முடியாது. இது ஒரு கொள் கைப் பிடிவாத மற்ற நிலை. இது அழிக்கப்பட வேண்டும் என்று தான் கூறமுடியும். உண்மையில் சில நாவல்கள் இதை அழிப்பதற்குரிய கருத்துக்களைச் சித்தாந்த ரீதியாக ஏற்றுக் கொண்டுள்ளன.

விடுதலைக்குப் பின்னர், ஜனநாயகத்தை அமலாக்குவதில் ஈடுபட்டுள்ள அரசியல், எந்த அளவு வரை நமது கலாசாரத் தில் ஏற்பட்டு வரும் மாற்றங்களை அதிக நெருக்கடிக்கு உள்ளாக்கியுள்ளது என்பது ஒரு விசித்திரமான, ஆனால், அச்சமூட்டும் கதையாகும். சமகாலத்து நாவலாசிரியர்கள், இந்தத் திகிலூட்டும் நெருக்கடியைத் தமது நாவல்களின் குறிக்கோள்களாக்கிக் கொண்டிருக்கின்றனர். சுதந்தரத் துக்கு முற்பட்ட நாவலாசிரியன் எந்த அளவிற்குச் சமூகம், மனிதன் ஆகிய இரண்டின் அக புற வாழ்வின் பிரச்னைகளை வேதனையுடன் சித்திரித்தானோ, அந்த முறையைத் துறந்து விட்டு, ஒதுங்கி நின்று சித்திரிக்காமல், புதிய தலைமுறை எழுத்தாளன், தன்னைத்தானே அச் சமூக நிலையில் நிலைநிறுத் திக் கொண்டு, சமூகத்திலிருந்து செத்து மடிந்துகொண் டிருக் கும் நம்பிக்கைகளின் போர்வையை விலக்கிக் காட்டியுள் ளான். 'ஜஹாஜ்-கா-பஞ்ச்சி'யை 'அந்தேரே பந்த் கம்ரே' யுடன் ஒப்பிடமுடியாது. எந்த இரு நாவல்களையும், எந்த வொரு நிலையினின்றும் ஒப்பு நோக்க இயலாமல் போகலாம். சௌகரியத்துக்காக வேண்டுமானால், இரு நாவல்களும் வெவ் வேறு கண்ணோட்டத்தைக் கொண்டுள்ளன எனக் கூறலாம். இந்தப் பார்வை அல்லது மனோபாவமே ஒரு விதத்தில் நாவலின் மூலாதாரத்தின் அமைப்பாகும். இதனால், சுதந்தரத்

துக்குப் பின்னால் எழுதப்பட்டிருந்தாலும், இரு நாவல்களின் சமுதாயப் பார்வையில் வேறுபாடுகள் இருக்கமுடியும். இதனால்தான், ஒரு நாவலில் மனித நிலையில் நின்று காட்டப்படும் தனி மனிதனின் உள் மன உலகத்தைக் காண்கின்றோம். இன்னொரு நாவலில், நமது யதார்த்த நிலையை நேரிடையாகக் காணவும், அச்சுறுத்தும் அதன் மனித உருவைப் பார்க்கவும் நேரிடும் நிலையில், இவ்விரண்டு பார்வையிலுமுள்ள வேறுபாட்டின் சூத்திரத்தைத் தேடி எடுத்து விடுகிறோம். அது இன்றைய நாவல்களை, முந்திய நாவல்களிலிருந்து வேறுபடுத்தி இனம் கண்டுகொள்ள நமக்கு உதவுகிறது.

'கோதானத்'திலிருந்து — 'ராக் தர்பாரி' (தர்பாரி ராகம்) வரையிலுள்ள நீண்ட யாத்திரையினிடையே இப்படிப்பட்ட எண்ணற்ற சிறந்த படைப்புகள் உள்ளன. ஒரு 'கிளாஸிக்'குக்குரிய சிறப்புகளுடன் கூடியவையாகவும் உள்ளன. மேலும் இன்றைய நாவல்களில், 'சோதனை முயற்சி'களான நாவல்களும் உள்ளன. 'கோதானமும், ராக் தர்பாரியும் நிச்சயம் இரு துருவங்கள்தான். இவ்விரண்டிற்குமிடையே, படைப்பாற்றல் என்ற முறையில் எவ்வித ஒற்றுமையிருந்தாலும் இல்லாவிடினும், இந்திய வாழ்க்கையின் இரு முக்கியமான புள்ளிகள். இரு கலாசாரப் பார்வையின் உயிர்த் தத்துவம் இரு நாவல்களிலும் உள்ளது.

பிரேம்சந்த் பெரும் புகழ் பெற்ற நாவலாசிரியர். இலக்கிய உலகில் அவருக்குள்ள மதிப்பும் இடமும், 'ராக் தர்பாரி'யின் ஆசிரியரைவிட முற்றும் வேறுபட்டது. தமது சோதனை பூர்வமான எழுத்துக்கள் மூலம் இலக்கியத்தில் தமக்கென இடம் வகுத்துக்கொண்ட புதிய தலைமுறை எழுத்தாளர்களில் ஸ்ரீ லால் சுக்லாவும் ஒருவர். ராக் தர்பாரிக்குமுன் ஸ்ரீலால் சுக்லா, நையாண்டி, அங்கத எழுத்தாளர் என்ற முறையில் இந்தி இலக்கியத்தில் புகழ் பெற்றிருந்தார். திடீரென 'ராக் தர்பாரி' நாவலின் மூலம், அவர் சிறந்த நாவலாசிரியர் வரிசையில் இடம் பெற்றுவிட்டார்.

அங்கத எழுத்தாளர் என்ற முறையில் அவரது கட்டுரைகளில், நையாண்டியின் எத்தகைய தீவிரத்தைப்பற்றி விமர்சிக்கப்பட்டதோ (குறிப்பாக 'அங்கதனின் கால்' என்ற கட்டுரைத் தொகுப்புப்பற்றி) அதே தீவிர முனைப்பை அவரது

நாவலிலும் காண்கிறோம். 'ராக் தர்பாரி' நையாண்டிக் கட்டுரைகளின் தொகுப்புதான் எனச் சில விமரிசகர்கள் கருத்து வெளியிட்டிருக்கும்போதும், அவரது நாவலில் பரிகாசத்தின் கடுமையை உணர்கின்றோம். இதனால் உண்மையில் எழுத்தாளர்களின் தீவிரத் தன்மையைப் பொறுத்தவரையில், கோதானமும், ராக் தர்பாரியும் ஒன்றுதான். இவ்விரு எழுத்தாளர்களின் படைப்பாற்றலைப்பற்றிச் சந்தேகப்படுவதற்கில்லை. இதில் ஒரு சுவையான விஷயம் என்னவென்றால் 'கோதான'த்தில் கிராமத்திலிருந்து நகரத்தின் கதை வெளிப்படுத்தப்பட்டுள்ளது; அதாவது நகர்ப்புற நாகரிகத்தின் எதிர்விளைவுகளின் பயங்கரமான அச்சுறுத்தும் உண்மை வெளிப்படுத்தப்பட்டுள்ளது. 'ராக் தர்பாரி'யிலோ, பிரயாணம் நகரத்திலிருந்து கிராமத்தை நோக்கிச் செல்லுகிறது. விடுதலைக்கு முன் நகர்ப்புற நாகரிகத்தின் மாயையை நோக்கி விரைந்த கண்மூடித்தனமான ஓட்டத்தில் நகரத்துக்கு மகத்துவம் இருந்தது. இன்றும் அதன் மகத்துவமும், முக்கியத்துவமும் குறையவில்லை எனினும், அரசியல் புரட்டுகளிலிருந்து தப்ப வேண்டி, நகரத்தின் மற்றப் பாதிப்புகளிலிருந்து விடுபடுவதற்காக, 'கிராமத்தை நோக்கிச் செல்' என்று கூறப்படும் வாசகம் இருக்கிறதே அது இன்றைய பாரதத்தின் உண்மையான நிலையை, நிஜமான சித்திரத்தைத் திறந்து காட்டிக் கொண்டே செல்லுகிறது.

கிராமமும், நகரமும் இந்திய மக்களின் விழிப்பு, அதாவது எழுச்சி அல்லது வீழ்ச்சியின் இரு கலாசாரக் கேந்திரங்களாகும். இங்கு வாழ்க்கையின் துடிப்பில், அதன் கதியில் எல்லாவிதமான வேற்றுமைகளும் உள்ளன. ஆனால் ஜனநாயகமானது இவர்களுக்கு அளித்துள்ள முன்னேற்ற வாய்ப்பு ஒன்றேதான். ஒரு சிறிய கிராமம் போன்ற ஊரும், பெரிய நகரங்களிலும், தலைநகரங்களைப் போலவே இங்கும் கிராமீய வாழ்வின் சந்தடிகளும், குழப்பங்களும், இனம், ஜாதி ஆகியவற்றின் பாதிப்புகளிலிருந்து தப்பமுடியவில்லை. இதே போல் அரசியல் மாற்றங்களிலிருந்தும், போக்குகளிலிருந்தும் தங்களை விலக்கிக்கொண்டு வாழ இயலவில்லை. 'ராக் தர்பாரி'யிலுள்ள இந்த உண்மை அதன் தலைப்பிலேயே எதிரொலிக்கிறது. சிறிய கிராமங்களிலும், மாநகரங்களிலும் அரசியல் அமைப்பானது எந்தவொரு புதிய மன இயல்புகளைத் தோற்று

வித்து வளர்த்துக்கொண்டு வருகிறதோ, அது பல்வேறு மட்டங்களிலும் புதியதொரு பிரபுத்துவ முறையின் செயற்பாட்டை மலரச் செய்துகொண்டிருக்கிறது. 'ராக் தர்பாரி'யிலுள்ள கிண்டலும், அங்கதமும், நையாண்டியும் அமானுஷியமானது மட்டுமல்ல; மிகவும் அசிங்கமான, குரூரமான, அருவருக்கத்தக்க, சகிக்கமுடியாத செயல்முறையைக் கடுமையாகத் தாக்கி விமரிசிக்கின்றன.

கதையில் பல்வேறு உத்திகளைத் தாராளமாகக் கையாண்டிருப்பதாலும், சரளமான, இனிய நடையினாலும் இந் நாவல் ஒரு 'கிளாஸிக்'கிற்கு எந்த விதத்திலும் குறைந்ததல்ல. ஆனால் ஒரு மிகச் சாதாரணமான 'கிளாஸிக்' எனக் கூறுவது பொருந்தாது. இது, இன்றைய அச்சுறுத்தக்கூடிய நிலையை உணர்த்தும் அர்த்தமுள்ள கிண்டலாகும். இந்த அமைப்புக்குள்ளே, இதன் விளையாட்டுகளுக்குள்ளே இருந்துகொண்டே ஒரு விதத்தில் அதை மறுப்பதாகும் இது. தான் இருந்துகொண்டே, தன் இருக்கையை அழிப்பதென்பது நல்லதொரு படைப்பாற்றலின் லட்சியமாக இருக்கவும் கூடும். ஆனால் இங்கு 'ராக் தர்பாரி'யிலுள்ள சிறப்புக்களை, நல்ல அம்சங்களை ஒவ்வொன்றாக எண்ணுவது என் உத்தேசம் அல்ல. கலைத்தன்மை என்ற நோக்குடன் பார்க்க, எந்தவிதமான முக்கிய ஆதாரங்களும் இல்லை. (வரையறுக்கப்பட்ட கலைத்தன்மை என்னும் நோக்குடன் பார்க்கும்போது, அது இல்லாத நிலையிலும், கலைத்தன்மையற்ற படைப்பு சிறந்ததாக விளங்கமுடியும்.) மற்ற ஆதாரங்களின்படியும், 'ராக் தர்பாரி' சிற்சில இடங்களில் பலவீனமானதாக இருக்கலாம். ஆனால் தன்னுணர்வின் வெளிப்பாடு என்ற அடிப்படையில், இது ஒரு நேர்மையான முயற்சியாகும். நமது சமூகத்தின் அயோக்கியத்தனம், மோசடி, நாணயமற்ற போக்கு, சூழ்ச்சி, தகிடுதத்தங்களை அப்படியே அப்பட்டமாகக் காட்டும் ஒரு நேர்மையான முயற்சி இது.

விமரிசகர் ஒருவர் 'ராக் தர்பாரி'யை வட்டார நாவல்களில் கடைசியான படைப்பு எனக் கூறியுள்ளார். வட்டார நாவல்களின் துவக்கம் எங்கிருந்து ஆரம்பிக்கிறது என அவர் நினைக்கிறாரென்பது எனக்குத் தெரியாது. ஆனால், ஒன்று மட்டும் கூறமுடியும். 'ராக் தர்பாரி' பயனுள்ள, கிண்டல் எழுத்தின் ஆரம்பம் என்பது உறுதி. இதில் சில அசிங்கமான

அங்கதப் பிரயோகங்களும் உள்ளன. ஆனால் ஒவ்வோர் அங்கதமும், நையாண்டியும் மேலெழுந்தவாரியான அர்த்தத்தில் விகாரமானவைதான். ஒவ்வோர் அடியும், தாக்குதலும், தர்க்கமெனும் ஆயுதத்தின் மூலந்தான் தாக்குகின்றது. ஒவ்வொரு தாக்குதலும், குருதியில் தோய்ந்த குரூரத்துடன்தான் தொடங்குகின்றது. இன்றைய மொழியில் எதைப் புரட்சி, அல்லது கிளர்ச்சியெனக் கூறுகிறோமோ, அதையே அங்கதமானது தனது மொழியில் ஒப்புதல் எனக் கூறி, அதன் உள்ளர்த்தங்களின், சுயநலங்களின் அடிப்படையையே கலங்க் அடித்து, ஒளிவு மறைவு இன்றி அதனை, அதனுடைய சரியான அர்த்தத்தில் வெளிச்சம் போட்டுக் காட்டி, உணர்த்திப் புரிய வைக்க முயற்சி செய்கிறது. ஓர் அங்கத நாவல் என்ற முறையில் 'ராக் தர்பாரி'யின் வெற்றி சர்ச்சைக்குரியதாக இருக்கலாம். ஆனால் சந்தேகத்துக்கு இடமின்றி இது ஓர் அங்கத நாவல்தான். இதற்குத் தனக்கென ஒரு தனிப் பார்வை இருக்கிறது. அதைப் புரிந்துகொள்ள வேறு வழியும் இருக்கும் எனக் கூறவும் முடியும். அதைப் படைப்பின் போக்கு என்று பார்க்கவும் வாய்ப்புள்ள நாவல் இது. இதனால்தானோ என்னவோ, இது நாவலாகவும் அங்கதமாகவும் உள்ளது. இன்றைய அமைப்பின் குரூரமான முகத்தை, அரசியலின் அருவருப்பூட்டும் செயல்களை, அட்டகாசங்களை நம் முன்னே கொணர்ந்து நிறுத்தும் செயலைப் பத்திரிகைகளினாலும் சாதிக்க முடியும். இந்த நோக்கில் பார்த்தால் 'ராக் தர்பாரி'க்கும் பத்திரிகைக்கும் வேற்றுமை உண்டு. பத்திரிகை கலைப் படைப்பாக முடியாது. 'ராக் தர்பாரி'யோ ஒரு கலைப்படைப்பாகும். அது கலைத்தன்மை கொண்ட படைப்பு என்பதற்கு முதல் நிபந்தனையே, அது எல்லாவிதச் சந்தேகங்களும் நிறைந்ததாக, சர்ச்சைக்குரியதாக இருக்கவேண்டும் என்பதுதான். 'ராக் தர்பாரி' சர்ச்சைக்குரியது மட்டும் அல்ல, சந்தேகத்துக்கும் மையமானது என்பதில் வியப்பேதும் இல்லை.

—கங்கா பிரசாத் விமல்

# அத்தியாயம் 1

நகரத்தின் எல்லை இது. இங்கிருந்து தொடங்குவதுதான் இந்தியக் கிராமமெனும் பெருங் கடல்.

அங்கே ஒரு டிரக் நின்றுகொண்டிருந்தது. அதைப் பார்த்ததுமே பாதைகளைப் பலவந்தமாய் மிதித்துச் செல்வதற்கென்றே இது பிறந்திருக்கிறதென்ற உறுதி ஏற்பட்டுவிடும். சத்தியம், அதாவது மெய்யைப் போலவே இதற்கும் பல தோற்றங்கள் இருந்தன. போலீஸ்காரன், தான் நின்ற இடத்திலிருந்து பார்த்தால் இந்த டிரக் நட்ட நடுப் பாதையில்தான் நிற்கிறது எனச் சாதிக்கமுடியும். இன்னொரு புறத்திலிருந்து டிரைவர், இது பாதையின் ஓரத்தில்தான் நிற்கிறது என நிரூபிக்கவும் முடியும். இன்றைய நாகரிகத்தின்படி டிரைவர், டிரக்கின் வலதுபுறத்துக் கதவை, இறக்கையைப் போல் நன்றாய்த் திறந்து வைத்திருந்தது அதற்கு மேலும் அழகூட்டியது எனலாம். இது மட்டுமா? இது இங்கே நிற்கும் சமயத்தில் இன்னொரு வாகனம் இதைக் கடந்து சென்றுவிடும் என்ற ஆபத்துக்கும் இடமில்லாமல் இருந்ததும் குறிப்பிடத் தக்கது.

பாதையின் ஒருபுறத்தில் பெட்ரோல் பங்க் ஒன்று இருந்தது. மற்றொரு புறத்தில் கூரை வேய்ந்த கடைகள். மரக் கட்டை, ஒடிந்துபோன தகரத் துண்டுகள், மற்றும் அங்கே கிடைக்கக் கூடிய தட்டுமுட்டுச் சாமான்களைக் கொண்டு நிறுவிய கடைகள் வரிசையாக நின்றன. அவற்றைப் பார்த்ததுமே இந்தக் கடைகளை எண்ணிவிடமுடியாது என்பது புரிந்துவிடும். பெரும்

பாலான கடைகளில் மக்கள் விரும்பிப் பருகும் பானம் இருந்தது. அங்கு விரவி நின்ற தூசி, எண்ணெய்ச் சிக்கு, பல முறை உபயோகித்த தேயிலைத் தூள், கொதிக்கின்ற தண்ணீர் ஆகியவற்றின் உதவி கொண்டு தயாரித்த அவ்வினிய பானம் தாராளமாய்க் கிடைத்தது. இரவு, பகல், காற்று, மழை, ஈ, கொசு போன்றவற்றின் இடைவிடாத தாக்குதல்களைத் தீரத்துடன் எதிர்த்துப் போராடிக்கொண்டிருக்கும் இனிப்புப் பலகாரங்களும் அங்கே இருந்தன. நம் நாட்டுக் கைவினைக் கலைஞர்களின் கைத்திறமைக்கும், விஞ்ஞான நுட்ப அறிவுக்கும் அவை ஒரு சான்றாக விளங்கின. எங்களுக்கு ஒரு நல்ல க்ஷவர பிளேடு தயாரிக்கும் நுட்ப அறிவு தெரியாமல் இருந்தாலும், மட்டமான சாமான்களை ருசி மிக்க உணவுப் பண்டங்களாக மாற்றுவது எப்படி என்ற உபாயம் இந்த உலக முழுவதிலும் எங்களுக்கு மட்டுந்தான் தெரியும் என்பதை அவை பறைசாற்றின.

டிரக்கின் டிரைவரும், கிளீனரும் ஒரு கடையின் எதிரே நின்று தேநீர் பருகிக்கொண்டிருந்தனர்.

தூரத்திலிருந்தே ரங்கநாத் டிரக்கைப் பார்த்துவிட்டான். பார்த்ததுமே நடையில் வேகம் பிறந்துவிட்டது.

இன்று ரெயில் அவனை ஏமாற்றிவிட்டது. தினமும்போல் லோக்கல் பாசஞ்ஜர் வண்டி இரண்டு மணி நேரம் தாமதித்து வரும் என நினைத்தே அவன் வீட்டிலிருந்து புறப்பட்டான். ஆனால் அது ஒன்னரை மணி நேரம் மட்டும் தாமதித்து வந்து விட்டுப் போய்விட்டது. புகார்ப் புத்தகமெனும் சரித்திர ஏட்டில் தன் பங்கு வரலாற்றையும் பதித்துவிட்டு, ரெயில்வே அதிகாரிகளின் கேலிக்குப் பாத்திரமான நிலையில் அவன் ஸ்டேஷனை விட்டு வெளியேறினான். சாலைக்கு வந்ததும் டிரக் கண்ணிலே பட்டது; அவ்வளவுதான். அவன் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

அவன் டிரக்கை நெருங்கியபோது, டிரைவரும், கிளீனரும் தேநீரின் கடைசித் துளிகளை ருசித்துக்கொண்டிருந்தனர். இங்கு மங்கும் பார்வையை அலையவிட்ட ரங்கநாத் இயன்றவரையில் தன் மகிழ்ச்சியை மறைத்துக்கொண்டு, "டிரைவர்! இந்த டிரக் சிவபால் கஞ்ச் பக்கம் போகுமா?" என்று வினவினான்.

டிரைவருக்கு நாவால் சுவைக்க இன்னும் தேநீரும், கண்ணால் பருகக் கடைக்காரியும் இருந்ததனால் அவன் அலட்சியமாகப் பதிலுரைத்தான்: "போகும்."

"என்னை அழைத்துப் போவாயா? பதினைந்தாவது மைலில் இறங்கிவிடுவேன். நான் சிவபால்கஞ்ச் போகவேண்டும்."

எதிரே அமர்ந்திருந்த கடைக்காரியிடம் தான் காண விரும்பியதை யெல்லாம் ஒரே பார்வையில் அளந்துவிட்ட டிரைவர் தனது பார்வையை ரங்கநாத்தின்பால் திருப்பினான். ஆகா! என்ன தோற்றம்! கதர்ப் பைஜாமா, தலையில் கதர்த் தொப்பி, கதர்ச் சட்டை, தோளிலிருந்து தொங்கும் பெரிய ஜோல்னா பை, கையில் தோல் பெட்டி! டிரைவர் பார்த்துக் கொண்டே நின்றான். இமைக்கக்கூட இல்லை. பின்னர் ஏதோ யோசித்தவன்போல், "உட்காருங்க ஐயா! இதோ புறப்பட வேண்டியதுதான்" என்றான்.

கடாபுடா ஓசையுடன் டிரக் புறப்பட்டது. நகரத்தின் கோணல் மாணலான வளைவுகளிலிருந்து விடுபட்டதும் சற்றுத் தூரத்தில் நேரான, சீரான, சந்தடியற்ற பாதை வந்துவிட்டது. இங்கே தான் டிரைவர் முதல் முறையாக டாப் கியரைப் பிரயோகித்தான். ஆனால் அது நழுவி நழுவி நியூட்ரலில் விழலாயிற்று. நூறு கஜ தூரம் செல்வதற்குள் கியர் நழுவிவிடும். ஆக்ஸிலேட்டரை மிதித்ததும் டிரக்கின் கர்புர் ஓசை அதிகரித்து, வேகம் குறைந்துவிடும். இதையெல்லாம் பார்த்துக்கொண்டேயிருந்த ரங்கநாத், "டிரைவர் சார்! உங்க கியர் நம்ம நாட்டு அரசாங்கம்போல்தான் இருக்கிறது" என்றான்.

டிரைவர் சிரித்துக்கொண்டே இந்தப் பாராட்டுப் பத்திரத்தை ஏற்றுக்கொண்டான். ரங்கநாத் தான் கூற வந்ததை மேலும் தெளிவாக்க விரும்புபவன்போல் தொடர்ந்தான்: "எத்தனை முறை டாப் கியரில் போட்டாலும், அது இரண்டு கஜ தூரம் சென்றதுமே நழுவி, தன் பழைய இருப்பிடத்துக்கு வந்து விடுகிறதே."

டிரைவர் சிரித்தபடி, "ஐயா! ரொம்பப் பிரமாதமாய்ச் சொல்லிட்டீங்க!" என்றான்.

இந்த முறை கியரை டாப்பில் போட்டதும் ஒரு காலை 90° டிகிரி கோணத்தில் உயர்த்திக் கியரைத் துடையின் கீழே அழுத்திக்கொண்டான். அரசாங்கத்தை நடத்தவும் இந்த நுட்பந்தான் தேவை எனச் சொல்ல விரும்பிய ரங்கநாத், விஷயம் கொஞ்சம் பிரமாதமாகப் போய்விடப் போகிறதே என்று அஞ்சியவன் போல் மௌனமாகிவிட்டான்.

டிரைவர் தன் துடையைக் கியரிலிருந்து நகர்த்திப் பழைய இருக்கைக்குக் கொணர்ந்துவிட்டான். இம்முறை அவன் கியரில் ஒரு நீண்ட மரக்கட்டையை முட்டுக் கொடுத்து நிறுத்தினான். கட்டையின் ஒரு முனையைப் பேனலின் கீழே செருகி விட்டான். அவ்வளவுதான். டிரக் விரைந்தது. முழு வேகத்துடன் விரைந்த அதைத் தொலைவில் கண்டதுமே, சைக்கிள்காரன், வண்டியோட்டி, பாதசாரி என்று யாவருமே பயந்து போய்ப் பாதையை விட்டு ஒதுங்கிவிட்டனர். அவர்கள் அஞ்சி ஓடிய வேகத்தைப் பார்த்தால் அவர்களைத் துரத்திக்கொண்டு வருவது ஒரு சாதாரண டிரக் அல்ல, காட்டுத் தீயின் ஜ்வாலையோ, வங்கக் குடாக் கடலில் எழுந்ததொரு கடற்புயலோ, மக்களின்மீது ஏவிய, கண்டபடி வசை பாடும் ஊழியனோ, அல்லது கொள்ளைக்கூட்டத்தினரோ என்று தோன்றியது. 'மக்களே, உங்கள் ஆடு மாடுகளை, குழந்தை குட்டிகளை வீட்டிற்குள்ளே பத்திரப்படுத்திக் கொள்ளுங்கள். நகரத்திலிருந்து இப்பொழுதுதான் ஒரு டிரக் புறப்பட்டிருக்கிறது' என்று முன்னரே அறிவித்திருக்கவேண்டுமென நினைத்தான் ரங்கநாத்.

இதற்குள் டிரைவர், "சொல்லுங்க, ஐயா, என்ன விஷயம்? ரொம்ப நாட்களுக்குப் பிறகு கிராமத்துப் பக்கம் போகிறாப்போல இருக்குது" என்றான். ரங்கநாத் தன் புன்னகையினால் இந்த க்ஷேமநல விசாரணையை ஊக்குவிக்கவே டிரைவர் தொடர்ந்தான். "ஐயா! இப்பொழுது என்ன செய்துகொண்டு இருக்கிறீர்கள்?"

"சும்மா, திண்ணையைத் தேய்த்துக் கொண்டிருக்கிறேன்!"

டிரைவர் சிரித்தான். எதிர்பாராமல் ஒரு விபத்தே நேர்ந்திருக்கும். நல்ல வேளை, தப்பியது. சுமார் பத்துப் பன்னிரண்டு வயதிருக்கும்; கோவணாண்டியான ஒரு பையன் டிரக்கின் சக்கரத்திலிருந்து மயிரிழையில் தப்பினான். எகிறிக் குதித்துப் பல்லியைப்போல் பாலத்தின் மீது போய் விழுந்தான். டிரைவர் இதனால் பாதிக்கப்பட்டதாகவே தெரியவில்லை. ஆக்ஸிலேட்டரை ஒரு மிதி மிதித்தவன் சிரித்துக் கொண்டே, "என்ன சொன்னீங்க? கொஞ்சம் விளக்கமாய்ச் சொல்லுங்க" என்றான்.

"சொன்னேனே, திண்ணையைத் தேய்க்கிறேன் என்று! இங்கிலீஷிலே இதைத்தான் ரிஸர்ச் என்று சொல்லுகிறார்கள்.

போன வருடம் எம். ஏ. முடித்தேன். இந்த வருடம் ரிஸர்ச் செய்யத் தொடங்கி யிருக்கிறேன்."

ஏதோ அலீவ்லைலா கதையைச் சுவாரசியமாய்க் கேட்டுக் கொண்டிருப்பவன்போல் புன்னகை தவழ டிரைவர் வினவினன்: "ஐயா! சிவபால் கஞ்சுக்கு என்ன விஷயமாய்ப் போறீங்க?"

"அங்கே என் மாமா இருக்கிருர். எனக்கு உடம்பு சரியில்லாமல் இருந்தது. கிராமத்தில் கொஞ்ச நாட்களிருந்து உடம்பைத் தேற்றிக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன்."

இம் முறை டிரைவர் வெகு நேரம் சிரித்துக் கொண்டிருந்தான். பின்னர், "நல்லாக் கதை அளக்கறீங்க ஐயா" என்ருன்.

ரங்கநாத் அவனைச் சந்தேகத்துடன் பார்த்தவாறே, "இதில் க்தை அளக்க என்ன இருக்கிறது?" என்ருன்.

ஒன்றுமே அறியாதது போன்ற இந்தப் பாவத்தைக் கண்ட அவனுடைய சிரிப்பு பின்னும் அதிகமாகிவிட்டது. சிரிப்புக்கிடையே, "நல்லாச் சொன்னீங்க, போங்க! சரி, இது கிடக்கட்டும். மித்தல் சாகப் எப்படி இருக்கிருர்? சொல்லுங்க! ரிமாண்டிலிருந்தவன் கொலை விஷயம் என்ன ஆயிற்று?" என்று வினவியதும் ரங்கநாத்தின் ரத்தமே உறைந்துவிட்டது. தழுதழுத்த குரலில், "எனக் கென்ன தெரியும் இதெல்லாம்? அந்த மித்தல் என்பவன் யார்?" என்று கேட்டான்.

டிரைவரின் சிரிப்பு ப்ரேக்போட்டதுபோல் நின்றுவிட்டது. டிரக்கின் வேகமும் சற்றுக் குறைந்துவிட்டது. ரங்கநாத்தை உற்றுப் பார்த்தவாறே கேட்டான்; "உங்களுக்கு மித்தல் சாகப்பைத் தெரியாதா?"

"தெரியாது."

"ஜயின் சாகப்பை?"

"தெரியாது."

டிரைவர் ஜன்னல் வழியே காறி உமிழ்ந்து விட்டுத் தெளிவான குரலில் கேட்டான்: "தாங்கள் சி. ஐ. டி. யில் தானே வேலை பார்க்கிறீங்க?"

ரங்கநாத்துக்கு எரிச்சலாக வந்தது. "சி. ஐ. டி யா? அப்படீன்ன என்ன?" நீண்ட பெருமூச்சொன்றை வெளியேற்றிய டிரைவரின் பார்வை, கண்முன்னே நீண்டு கிடந்த பாதையில் படிந்தது. சில மாட்டு வண்டிகள் ஊர்ந்துகொண் டிருந்தன.

எப்பொழுது, எங்கே சந்தர்ப்பம் கிடைக்கிறதோ, அங்கே காலை நீட்டிப் படுத்துவிடவேண்டியதுதான் என்ற பொதுப் படையான சித்தாந்தத்தை நிறைவேற்றுபவர்களாய் வண்டிக் காரர்கள் காலை நீட்டிப் படுத்து, முகத்தைத் துணியால் மூடிய வண்ணம் உறங்கிக்கொண்டிருந்தார்கள். மாடுகள் தங்கள் திறமையினுல் அல்லது பழக்கத்தினுல் தம் பாட்டில் வண்டியை இழுத்துச் சென்றுகொண்டிருந்தன. இதுவும் கூட 'மக்கள்', 'மகேசன்' என்று பேசக்கூடிய விஷயந்தான். ஆனல் ரங்க நாத்துக்கு எதையும் பேசக்கூடிய துணிவு இல்லை இப்பொழுது. அந்தச் சி. ஐ. டி. என்ற வார்த்தைகளே அவனை ஒரு கலக்குக் கலக்கி விட்டிருந்தன. டிரைவர் முதலில் ரப்பர் ஹாரனை அழுத் தினன். பின்னர் ஆரோகண, அவரோகண ஸ்வரங்களில் ஒலிக்கும் ஹாரனை அழுத்தினன். நாராசமாயிருந்தது அந்த ஒலி. ஆனல் வண்டிகள் நகரவில்லை. தன் வழியே மெல்ல மெல்ல அசைந்து கொண்டிருந்தன. டிரக்கை வெகு வேகமாய் ஓட்டிக்கொண்டு வந்த டிரைவர், மாட்டு வண்டிகளைக் கடந்து செல்லவே விரும்பினன். ஆனல் வண்டிகளை நெருங்கியதுமே, தான் செலுத்திக்கொண்டிருப்பது டிரக்தான், ஹெலிகாப்டர் அல்ல என்பது தெரிந்துவிட்டது போலும். சட்டெனப் பிரேக்கைப் போட்டான். பேனலில் செருகி வைத்திருந்த கட்டையைக் கீழே தள்ளினன். கியரை மாற்றியவன், வண்டி களை உராய்வதுபோல் அவற்றைக் கடந்து விர்ரெனச் சென்று விட்டான். சற்றுத் தூரம் சென்றதும் வெறுப்பு நிறைந்த குரலில் கேட்டான்: "சி. ஐ. டி. இல்லையென்ருல் இந்தக் கத ரெல்லாம் ஏன் போட்டுக்கொண்டிருக்கிறீங்க நீங்க?"

ரங்கநாத் இந்தத் தாக்குதலில் பின்னும் சற்று வெலவெலத் துப் போய்விட்டான். இருந்தாலும் சகஜமான விசாரிப்பாகக் கருதுபவன் போல், "இந்தக் காலத்தில் எல்லாருந் தானே கதர் போடுகிருர்கள்" என்ருன் நிதானமாக.

"சாதாரண ஆசாமி எவனும் கட்டுவதில்லையே!" என்ற டிரைவர் மீண்டும் ஒரு முறை காறி உமிழ்ந்தவன் கியரை டாப் பில் போட்டான்.

டிரக்கின் பின்புறமிருந்து வெகு நேரமாய் ஒரு ஹாரன் ஒலித்துக்கொண்டே இருந்தது. ரங்கநாத் அதைக் கேட்டுக் கொண்டிருந்தான். டிரைவரோ கேட்டும் கேளாதவன் போல் பாவித்தான். சற்று நேரத்திற்கெல்லாம் பின்னுலிருந்த

கிளீனர் தொங்கிக்கொண்டே நகர்ந்து, டிரைவரின் காதருகிலே இருந்த ஜன்னலில் டிக்டிக்கெனத் தட்டி ஓசை எழுப்பியதும் டிரக்கின் வேகம் குறைந்துவிட்டது. பாதையின் இடது புறத்துக்கு டிரைவர் டிரக்கை மாற்றி விட்டான்.

ஹார்னின் ஒலி ஒரு ஸ்டேஷன் வாகனிலிருந்துதான் வந்துகொண்டிருந்தது. வலது புறமாக முன்னேறி வந்த அதன் வேகம் குறைய, வண்டியினுள்ளே இருந்து நீண்ட கரம் ஒன்று டிரக்கை நிற்கும்படி சைகை காட்டவே, இரண்டுமே நின்றுவிட்டன.

ஸ்டேஷன் வாகனிலிருந்து அதிகாரிபோன்ற தோரணையுடன் ஒரு பியூனும், பியூன்போலிருந்த ஓர் அதிகாரியும் இறங்கினர். கூடவே காக்கி உடை அணிந்த இரு போலீஸ்காரர்களும் இறங்கினர். அவ்வளவுதான். பிண்டாரிகள் போல் இழுத்துப் பறிக்கும் சோதனை ஆரம்பமாகிவிட்டது. ஒருவன் டிரைவரின் டிரைவிங் லைசென்ஸைப் பிடுங்கினான். ரிஜிஸ்ட்ரேஷன் கார்டை இன்னொருத்தான் பறிமுதல் செய்தான். ஒருவன் டிரைவர் ஸீட்டின் முன்னாலிருந்த கண்ணாடியைத் தட்டிப் பார்த்தான். ஹார்னை அமுத்தினான். ஒருத்தன் ப்ரேக்கைச் சோதித்தான். புட்போர்டை ஆட்டிப் பார்த்தான். விளக்கைப் போட்டான். மணியை அடித்துச் சோதித்தான். அவர்கள் எதைப் பார்த்தாலும், எதில் கை வைத்தாலும் அது மோசமாய் இருந்தது. எதைத் தொட்டாலும் அது வேலை செய்ய மறுத்தது. நான்கு நிமிஷத்திற்குள் அந்த நான்கு பேரும் டிரக்கில் 40 குறைகளைப் பரிசோதித்து அறிந்துவிட்டனர். சோதனை முடிந்ததும் இறங்கிச் சென்று ஒரு மரத்தினடியில் கூடி நின்று விவாதிக்கலாயினர். விவாதத்தின் விஷயம்? எதிரியிடம் எந்த விதமாய் நடந்துகொள்ளவேண்டும் என்பது தான்.

ரங்கநாத் சற்றுத் தள்ளி வேறொரு மரத்தின் அடியிலே போய் நின்றான். டிரைவருக்கும் 'செக்கிங்' குழுவினருக்குமிடையே டிரக்கின் ஒவ்வொரு பகுதியைப் பற்றியும் விவாதம் நடந்துகொண்டிருந்தது. பின்னர் மெல்ல மெல்ல டிரக்கின் கருவிகளை விட்டு நழுவிய விவாதம் நாட்டின் நிலை, மோசமான பொருளாதாரம் பற்றிய விஷயத்துக்கு வந்துவிட்டது. சற்றைக்கெல்லாம் அங்குக் கூடியிருந்தவர்கள் தனித்தனிக் குழுவாகப் பிரிந்தனர். குறிப்பிட்ட ஒரு விஷயத்தில் நிபுணர்போல் தனித்தனியே ஒரு மரத்தின் கீழே நின்று ஒவ்வொரு விஷயத்

தைப் பற்றியும் சிந்திக்கலாயினர். நெடு நேர விவாதம். சிந்தனைக்குப் பின்னர் ஒரு மரத்தின் அடியிலே மீண்டும் திறந்த வெளி அரங்கம் கூடியது. சற்றைக்கெல்லாம் விவாதம் ஒரு முடிவுக்கு வந்து விட்டது எனத் தோன்றியது.

கடைசியில் அதிகாரியின் வரட்டுக் குரல் ரங்கநாத்தின் காதில் விழுந்தது: ''என்ன? அஷ்பாக்மியான்! என்ன சொல்லுகிருய்? மன்னித்து விடலாமா?''

''வேறு என்ன செய்ய முடியும் சாகப்? ஏதாவது ஒரு விஷயம் மோசமாயிருக்கிறதென்றுல் சார்ஜ் செய்யலாம்; எது எதுக்கென்று சார்ஜ் செய்வது?'' சில நிமிஷம் ஏதேதோ பேசிய அதிகாரி முடிவில் கூறினுர்: ''சரி, பன்டாசிங்! நீ போகலாம். உன்னை மன்னித்துவிட்டேன்.''

''ஐயா ஒருவரால்தான் இப்படி நடந்துக்க முடியும்'' என்று முகஸ்துதி பாடினுன் டிரைவர்.

மரத்தடியில் நின்றுகொண்டிருந்த ரங்கநாத்தை அந்த அதிகாரி நெடு நேரமாய்க் கவனித்துக்கொண்டே இருந்தார். இப்பொழுது சிகரெட்டைப் புகைத்தவாறே அவனை நோக்கி வந்தவர், அவனை நெருங்கியதும், ''நீங்களும் இந்த டிரக்கில் பிரயாணம் செய்கிறீர்களா?'' என வினவினுர்.

''ஆமாம்'' என்ருன் ரங்கநாத்.

''உங்களிடம் சார்ஜ் எதுவும் இவன் வாங்கிக்கொள்ள வில்லையே?''

''இல்லை.''

''உங்கள் உடையைப் பார்த்ததுமே இது தெரிந்துவிட்டது. ஆனுல் விசாரிப்பது என் கடமையல்லவா?''

அவரைக் கிண்டல் செய்ய விரும்பிய ரங்கநாத் சொன்னுன்: ''இது அசல் கதர் அல்ல, மில் கதர்.''

''அரே சாகப்! இதனுல் என்ன? கதர் என்றுல் கதர்தான்; இதில் அசலாவது, நகலாவது?'' என்ருர் மரியாதையுடன்.

அதிகாரி அவ்விடம் விட்டகன்றதும் டிரைவரும், பியூனும் ரங்கநாத்திடம் வந்தனர். ''சார்! இரண்டு ரூபாய் கொடுங்க'' என்ருன் டிரைவர்.

முகத்தைத் திருப்பிக் கொண்ட ரங்கநாத் கடுமை தொனிக்க, ''ஏன்? நான் எதுக்காக ரூபாய் கொடுக்கணும்?'' என்ருன்.

டிரைவர் பியூனின் கரத்தைப் பற்றி, ''வாங்க, நீங்க வாங்க என்கூட'' என்றவன், போகும்போது ரங்கநாத்தை நோக்கி,—

''உன்னால்தான் இன்னைக்கிச் செக்கிங் நடந்தது. நீயே கஷ்ட காலத்தில் என்னிடம் இப்படிப் பேசுகிறாயே! இதுதான் நீ படித்த படிப்பா?'' என்று கேட்டுக்கொண்டே சென்றான்.

தற்காலக் கல்வி இருக்கிறதே அது வழியில் படுத்துக் கிடக்கும் நாய் மாதிரிதான். யார் வேண்டுமானாலும் அதை எட்டி உதைக்கலாம். இந்த டிரைவர்கூட அப்படித்தான். நடந்து கொண்டே அதை எட்டி ஓர் உதை உதைத்துவிட்டுப் பியூனுடன் டிரக்கை நோக்கிச் சென்றுவிட்டான்.

ரங்கநாத் பார்த்தான். மாலைப் பொழுது இறங்கிக்கொண்டிருக்கிறது. அவனுடைய தோற்பெட்டியோ டிரக்கில் இருக்கிறது. சிவபால்கஞ்ச் இங்கிருந்து குறைந்த பட்சம் 5 மைலாவது இருக்கும். இவர்களுடைய நல்லெண்ணமும் ஒத்துழைப்பும் மிகத் தேவை என்பதை உணர்ந்ததும் அவன் கால்கள் டிரக்கை நோக்கி எட்டி நடை போட்டன.

ஸ்டேஷன் வாகனின் டிரைவர் ஹாரனை அடித்து அடித்துப் பியூனை அழைத்துக்கொண்டிருந்தான். ரங்கநாத் இரண்டு ரூபாயை டிரைவருக்குக் கொடுக்க விரும்பியதும் அவன் அலட்சியமாகக் கூறினான்: ''இப்பக் கொடுக்கிறதா இருந்தா பியூனுக்குக் கொடுங்க. எனக்கு எதுக்கு ரூபாய்?''

இதைக் கூறும்பொழுதே அவன் குரலில் காசைக் கரத்தால் தீண்டாத, 'உன் காசு எனக்குத் தூசுக்குச் சமானம்' எனக் கூறும் சாதுக்களின் தொனி வந்துவிட்டது. ரூபாயைப் பையில் போட்டுக்கொண்ட பியூன் பீடியைக் கடைசியாக இழுத்துப் புகைத்த பின், பாதி எரிந்த பீடித் துண்டை ரங்கநாத்தின் பைஜாமாவின்மீது வீசிவிட்டு ஸ்டேஷன்வாகனை நோக்கி நடந்துவிட்டான். அவர்கள் புறப்பட்ட பின், டிரைவர் டிரக்கை ஓட்டினான். இம்முறை கியரை டாப்பில் போட்டுவிட்டு ரங்கநாத்தின் கரத்தில் கொடுத்துவிட்டான்.

வண்டி ஓடியது. சற்று நேரத்துக்கெல்லாம் அந்தி வேளையின் மங்கலான ஒளியில் பாதையின் இருபுறமும் உருட்டிவிட்ட மூட்டைகள் மாதிரி தெரிந்தன. அவை மூட்டைகள் அல்ல; பெண்கள்தாம் இப்படி வரிசையாக உட்கார்ந்திருக்கின்றனர் என்பது தெரிய வந்தது. மிகவும் சாவகாசமாய் அரட்டை அடித்தவாறு காற்று வாங்கிக்கொண்டிருந்த அவர்கள் அதே சமயத்தில் மல, மூத்திரமும் கழித்துக்கொண்டிருந்தார்கள்.

பாதை ஓரத்தில் குப்பைக்கூளங்கள் நிறைந்து கிடந்தன போலும். மாலை நேரத்திய மென்காற்று, அந்த முடை நாற்றத்தின் சுமையால் கர்ப்பிணிப் பெண்ணைப் போல் தளர் நடை போட்டுக்கொண் டிருந்தது.

தொலைவிலே நாய்கள் குரைத்தன. கண்களுக்கெதிரே புகை மண்டலம் மேலே எழும்பிச் செல்வது தென்பட்டது. அவர்கள் ஒரு கிராமத்தை நெருங்கிக்கொண் டிருக்கின்றனர் என்பதை எவரும் மறுக்கமுடியாது.

இதுதான் சிவபால் கஞ்ச்.

## அத்தியாயம் 2

சிவபால் கஞ்ச் போலீஸ் ஸ்டேஷன். இன்ஸ்பெக்டரின் முன்னல் நின்று, ஒருவன் தன் இரு கரங்களையும் குவித்தவாறு வேண்டிக் கொண்டிருந்தான். "இன்ஸ்பெக்டர் சார்! இன்னைக்கு, நாளைக் குன்னு எத்தனையோ மாசங்களாயிட்டுது. இனிமேயும் தாமதம் செய்யாம எங்களைச் சார்ஜ் செய்துடுங்க."

இன்ஸ்பெக்டர் அமர்ந்துகொண் டிருந்த, இல்லை, சாய்ந்து கொண்டிருந்த அந்த ஆசனம் முகலாயர் காலத்தில் சிம்மாசனமாக இருந்திருக்கவேண்டும். இப்பொழுது அது தேய்ந்து மாய்ந்து சாய்வுநாற்காலியாக மாறிவிட்டிருந்தது. உள்ளம் உருக்கும் இவ் வேண்டுகோளைக் கேட்டபின் அதில் சாய்ந்திருந்தவர் மெல்ல சற்றே தலையைத் தூக்கி, "அதற் கென்ன? சார்ஜ் செய்துவிட்டால் போகிறது? என்ன அவசரம் இப்போது? அப்படி என்ன நேர்ந்துவிட்டது?" என்றார்.

நின்றுகொண் டிருந்தவன் இதைக் கேட்டதும் அச் சாய்வு நாற்காலியின் அருகே கிடந்த சரித்திர காலத்துக்கும் முந்தியது எனத் தோற்றமளித்த ஒரு மோடாவை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்துகொண்டான். "எனக்கு ஆபத்

துத்தான். நீங்கள் சார்ஜ் செய்துட்டா. அப்பாடா, விட்டது தொந்தரவுன்னு இருப்பேன்'' என்றான்.

இன்ஸ்பெக்டர் யாரையோ திட்டுவதுபோல் தமக்குள் முணு முணுத்துக் கொண்டார். சற்று நேரத்துக்குப் பின்பே அம் முணுமுணுப்பின் பொருள் விளங்கியது. அதாவது, அவருக்கு ஒரே வேலை. தலைக்கு மேலே வேலை சுமந்து கிடக்கிறது. குற்றவாளிகளை விசாரிக்க முடியவில்லை. வழக்குகளைப் பதிவு செய்ய முடியவில்லை. கோர்ட்டுக்குச் சாட்சிகளைத் தயாரிக்க இயலவில்லை. எந்த வேலையையென்று கவனிப்பது? எல்லாம் அப்படியே கிடக்கிறது.

மோடா இப்பொழுது சாய்வு நாற்காலியை மேலும் நெருங்கி வந்தது. ''ஹுஜூர்! எதிரிகள் என்ன சொல்றாங்க தெரியுமா? சிவபால் கஞ்சிலே பட்டப் பகலிலேயே சூதாட்டம் நடக்குது. கேள்வி கேட்பாரு இல்லைன்னு பேசிக்கிறாங்க. மேலிடத்துக்கு மொட்டைப் பெட்டிஷன் போயிருக்குது. நமக்குள்ளே இருக்கிற ஒப்பந்தப்படி வருஷத்துக்கு ஒரு முறை சார்ஜ் செய்ய வேண்டியதுதானே? இந்த வருஷந்தான் ஏனோ தாமதமாவுது. நீங்க இப்பவே சார்ஜ் செய்துட்டா ஜனங்க குறை சொல்ல வழி இருக்காது.''

சாய்வு நாற்காலி மட்டும் அல்ல, அந்த ஸ்டேஷனிலிருந்த ஒவ்வொரு பொருளும், சூழலும் இடைக்காலச் சரித்திரக் காலத்தைச் சார்ந்தவையாகவே இருந்தன. உட்காரும் பலகை, அதன் மேலிருந்த விரிப்பு, கந்தலாகிப் போய்விட்ட ஜமக் காளம், பேனாக் கூடு, உலர்ந்து கிடந்த மசிப் புட்டிகள், பழுப் பேறி ஓரங்கள் மடங்கிப் போன ரிஜிஸ்டர் யாவுமே பல நூற்றாண்டுகளுக்கு முந்தியவையாகக் காட்சி அளித்தன.

இங்கே அமர்ந்துகொண் டிருக்கும் ஒருவனுக்கு, அறையைச் சுற்றி ஒரு முறை பார்த்தால் தான், சரித்திர காலத்தில் எங்கோ ஒரு மூலையில் நின்றுகொண் டிருப்பதாக ஓர் உணர்வு ஏற்படுவதில் வியப்பில்லை. இந்த ஸ்டேஷனுக்கு இன்னமும் பவுண்டன் பேனா வரவில்லை. ஆனால் ஒன்று. நாணல் குச்சி, பேனாக்கட்டை கூட அங்கு இல்லை என்பதும் குறிப்பிடத் தக்கது. இத்தனை தூரத்துக்கு அது அபிவிருத்திதான். இன்ன மும் டெலிபோன் இங்கு வரவில்லை. சுவரில் தொங்கிய ஆயுதங்கள், மிகவும் பழைய ரைபிள்கள். பார்த்தால், முதல் புரட்சிக் காலத்தில் உபயோகப்படுத்தியவையோ எனத்

தோன்றும். மற்றபடி போலீஸ்காரர்களின் சாதாரண உபயோகத்துக்குக் குண்டாந்தடிகளே இருந்தன. ஆறு, வாய்க்கால்களைத் தாண்டவேண்டுமா? நாயின்மீது லபக்கென்று பாய்ந்து இரண்டடி போடவேண்டுமா? இந்தத் தடிகள் மிகவும் உபயோகமானவை என்று யாரோ ஒரு கவிஞர்கூடச் சொல்லியிருக்கிறார். இன்றுவரை இந்த ஸ்டேஷனுக்கு ஒரு 'ஜீப்' வசதி தரப்படவில்லை. ஷெர்ஷா காலத்திலிருந்ததே, அப்படியொரு குதிரை. குதிரை என்ற பெயரில், இரண்டு, மூன்று காவல்காரர்களின் அன்பான அரவணைப்பில் பராமரிக்கப்பட்டு வந்தது என்பதையும் மறப்பதற்கில்லை.

ஸ்டேஷனுக்குள் காலடி வைத்ததுமே, ஒருவனுக்குத் தன்னை யாரோ பல நூற்றாண்டுக் காலத்துக்குப் பின்னே தூக்கி எறிந்துவிட்டாற்போன்ற உணர்வு ஏற்படுவதும் இயல்புதான். அதிலும் அவன் அமெரிக்கத் துப்பறியும் நாவல்களைப் படித்திருந்தால், 'கைரேகையைப் பார்க்கும், விரல் அடையாளங்களைக் கணிக்கும் கண்ணாடி லென்ஸ்கள் எங்கே? காமிரா எங்கே? வயர்லெஸ் பொருத்திய மோட்டார் வண்டி எங்கே?' எனப் பரபரப்புடன் தேடத் துவங்கிவிடுவான். மேலே குறிப்பிட்ட பொருள்கள்தாம் அவன் கண்களிலே தட்டுப்படும். இது மட்டுமா? அரை நிர்வாணமாய், லங்கோடு மாத்திரமே அணிந்த ஒருவன், எதிரே புளியமரத்தின் கீழே கஞ்சா அரைத்துக்கொண்டிருப்பதும் தென்படும். அந்தத் தனியொரு மனிதன்தான், இருபது கிராமங்களின் பாதுகாப்புப் பொறுப்பை ஏற்றிருப்பவன். எந்த இடத்தில், இப்பொழுது எந்த நிலையில் இருக்கிறானோ அங்கிருந்தபடியே அந்த இருபது கிராமங்களிலும் குற்றங்கள் ஏதும் நிகழாதபடி அவனால் தடுக்க முடியும். அப்படியே நிகழ்ந்தாலும் குற்றவாளியைக் கண்டுபிடித்துவிடமுடியும். அப்படிக் குற்றங்கள் ஏதும் நிகழாவிட்டாலும் அதை நிகழ்த்திவிடமுடியும் என்பனவெல்லாம் பின்னர்த் தெரியவரும். காமிரா, லென்ஸ், மோப்ப நாய், வயர்லெஸ் எதுவும் அவனுக்குத் தேவையில்லை. இப்படி அந்தப் போலீஸ் ஸ்டேஷனின் சூழ்நிலையே, மிக அற்புதமாக, கடந்த காலத்தின் கௌரவத்துக்கு மிக ஏற்றதாக அமைந்திருந்தது.

'இன்ஸ்பெக்டர், மற்றும் ஸ்டேஷனிலிருந்த பத்துப் பன்னிரண்டு கான்ஸ்டேபிள்களிடம் ஊர் மக்களுக்கு அபாரமான நம்பிக்கை. இருநூற்றைம்பது, முந்நூறு கிராமங்களைத் தன்

காவலின் கீழ் கொண்டிருந்த அந்த ஸ்டேஷனிலிருந்து சுமார் எட்டு மைல் தூரத்தில் ஏதோ ஒரு கிராமத்தில் கன்னம் வைத்துக் களவு நடந்தாலும் இவர்களில் யாரேனும் ஒருவர் அதைப் பார்த்திருப்பார்கள் என்று பரவலாக நம்பப்பட்டது. பன்னிரண்டு மைல் தூரத்தில் எங்கேனும் வழிப்பறிக் கொள்ளை நடந்தாலும் இவர்கள், கொள்ளைக்காரர்களுக்கு முன்னரே அந்த இடத்தில் இருந்திருப்பார்கள் என அவர்கள் எதிர் பார்த்தனர். இந்த நம்பிக்கையினுல்தான் எந்தக் கிராமத் திலும் இரண்டொருவரைத் தவிர வேறெவருக்கும் துப்பாக் கியோ, ஆயுதங்களோ வழங்கப்படவில்லை. ஆயுதங்களை அப்படிக் கொடுப்பதற்கும் பயம். நாகரிகமற்ற கிராமத்து முரட்டு மனிதர்கள் துப்பாக்கி சுடக் கற்றுக்கொண்டுவிட்டால், கொலை விழுவது சகஜமாகிவிடும். ரத்த ஆறு பெருகி ஓடும் என அஞ்சினர். கொள்ளைக்காரர்களிடமிருந்து ஊர் மக்களைக் காப்பாற்றுவது என்ற பிரச்னையைப் பொறுத்தவரையில் அது, இன்ஸ்பெக்டர், மற்றும் 10, 15, போலீஸ்காரர்களின் மந்திர மாயாஜாலத் திறமையை நம்பி விடப்பட்டுவிட்டது எனலாம்.

கொலைகள் சம்பந்தப்பட்ட விஷயத்தில் இவர்களின் மகேந்திர ஜாலத் திறமை பெரிதும் எதிர்பார்க்கப்பட்டது. ஏனென்றால் இந்த முந்நூறு கிராமவாசிகளிலும் யாருக்கு, யாரிடம் பகைமை, யாருக்கு யாரிடம் விரோதம், யார் யாரைப் பழிதீர்த்துக்கொள்ளத் துடிக்கிருர்கள் என்ற விவரமெல்லாம் ஒன்றுவிடாமல் அவர்களுக்குத் தெரியும் என்றும் கருதப் பட்டது. இதனுல் ஒருவரை ஒருவர் கொலை செய்துவிட முடியாதபடி அவர்களால் தடுத்துவிட முடியும். அப்படியே கொலை செய்துவிட்டாலும் காற்ருகப் பறந்து சென்று கொலை காரனைப் பிடித்துவிடுவார்கள். இறந்தவனின் சடலத்தைத் தங்கள் கைவசம் எடுத்துக்கொண்டு, குருதி தோய்ந்த மண்ணைச் சட்டியில் வாரி எடுத்துக்கொள்வார்கள். இது மட்டுமா? கொலை நடந்ததைப் பார்க்காத சாட்சிகளுக்கு ஞான திருஷ்டி அளித்துவிடுவார்கள். பிறகு எந்தக் கோர்ட் டானுல் என்ன? மகாபாரதத்தில் சஞ்சயன், குருக்ஷேத்திர யுத்தகளத்தை மனக் கண்ணுல் கண்டு விவரிக்கவில்லையா? அத்தகைய கண்ணுல் பார்த்ததைச் சாட்சிகள் விவரித்து விடுவார்கள் என்றெல்லாம் மக்கள் நம்பினர்; எதிர்பார்த்

கேட்டால் இந்தக் கடிதம் கல்வி இலாக்காத் தொடர்புடையதாக எனக்குப் படுகிறது.'' என்ருர்.

''அப்படியென்ருல்?''

''அதாவது உங்கள் கல்லூரி சம்பந்தப்பட்டதாகத் தோன்றுகிறது.''

ரூப்பனுக்குக் கோபம் வந்துவிட்டது. ''உங்களுக்கு எங்கள் கல்லூரி என்ருல் பிடிக்காது.''

''உங்கள் கல்லூரியிலிருந்து யாரோ ஒரு பையன்தான் ராம்தீனுக்கு இந்தக் கடிதத்தை அனுப்பி இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. நீ என்ன நினைக்கிருய்?''

''உங்கள் பார்வையில் மாணவர்கள் தாம் எல்லாக் குற்றங்களுக்கும் பொறுப்பாளிகள்.'' ரூப்பன் ஆத்திரத்துடன் கூறினுன். ''உங்கள் கண் முன்னே யாராவது ஒருவன் விஷம் குடித்துச் செத்தால் கூட அது தற்கொலை என நீங்கள் ஏற்றுக் கொள்ளமாட்டீர்கள். யாரேனும் ஒரு மாணவன் விஷம் கொடுத்திருப்பானென்றே சொல்லுவீர்கள்.''

''ரூப்பன், நீ சொல்வதும் சரி தான். அவசியம் நேர்ந்தால் நான் அப்படியும் சொல்லக்கூடும். நான் பக்தாவர் சிங்கின் சீடன் அல்லவா? ஒரு வேளை உனக்கு இது தெரியாதோ என்னவோ?''

இதன் பிறகு பேச்சு, சர்க்கார் ஊழியர்களைப் பற்றித் திரும்பியது. முன்பெல்லாம் சர்க்கார் ஊழியர்கள் எப்படி இருந்தார்கள், இப்பொழுது எப்படி இருக்கிருர்கள் என்று அலசினுர்கள்.

ரூப்பனுக்குப் பதினெட்டு வயதிருக்கும். உள்ளூர்க் கல்லூரியில் பத்தாவது படித்துக்கொண்டிருந்தான். படிப்பதில், அதிலும் பத்தாவது வகுப்பின் மீது ஒரே மோகம். கடந்த மூன்ருண்டுகளாக அதை விட்டுப் பிரியவில்லை.

ரூப்பன் உள்ளூர்த் தலைவன். இந் நாட்டில் தலைவராவதற்கு நிறைய அநுபவ ஞானம் தேவை என்ற கூற்றை ரூப்பன் பொய்யாக்கிக்கொண்டிருந்தான். அவன் தலைவனுனதற்கு ஒரு காரணம் அவன் யாவரையும் சமநோக்குடன் பார்த்தது தான் எனலாம். ஸ்டேஷனின் இன்ஸ்பெக்டர், ரிமாண்டிலுள்ள கைதி இருவரும் அவனது நோக்கில் ஒன்றுதான். இதைப் போலவே காப்பி அடிக்கும் மாணவனையும் கல்லூரி முதல்

வரையும் அவன் ஒன்ருகப் பாவித்தான். யாவரும் அவனது இரக்கத்துக்குரியவராக இருந்தனர். யாவருக்காகவும் அவன் உழைத்தான், பாடுபட்டான்; எல்லாரையும் உபயோகப்படுத்திக்கொண்டான். முதலாளித்துவத்தின் சின்னங்களாக விளங்கும் கடைக்காரர்கள் அவனுக்குத் தங்கள் சாமான்களை விற்கவில்லை. காணிக்கையாக அர்ப்பணித்தார்கள். சுரண்டலின் சின்னங்களாக விளங்கும் இக்கா வண்டிக்காரர்கள் அவனை நகரத்துக்கு அழைத்துச் சென்ருலும் அவனிடம் வாடகை ஏதும் வாங்கிக்கொள்ளவில்லை. அவனது ஆசியைக் கோரி நின்றனர் என்பதிலிருந்து ரூப்பனின் பெருமையை நீங்கள் தெரிந்துகொள்ளலாம். அவனுடைய தலைமைச் செயலகத்தின் துவக்கமும் முடிவும் கல்லூரிதான். அவன் சொன்னல் போதும், நூற்றுக் கணக்கான மாணவர்கள், கடுகை மலையாக்கவும், அவசியம் நேர்ந்தால் அம்மலையின் மீது ஏறி நிற்கவும் காத்திருந்தனர்.

பிறப்பிலேயே தலைவனுக விளங்கிய ரூப்பனின் தந்தையும் ஒரு தலைவர். அவரது பெயர் வைத்திய ஜீ.

# அத்தியாயம் 3

இரண்டு பெரிய அறைகளும் இரண்டு சிறிய அறைகளும் கொண்ட முசாபரி பங்களாவை ஜில்லா போர்டு தன் பொறுப்பிலிருந்து விட்டுவிட்டது. அதன் மூன்று புறமுமிருந்த மண் சுவரின் மீது கூரை வேய்ந்து அதைக் குதிரை லாயமாக்கி விட்டிருந்தனர். இதிலிருந்து சற்றுத் தூரத்தில் செங்கல் சுவரிலிருந்து தகரத் தகடுகளின் சார்ப்பு இறக்கி, ஒரு கடை திறக்கப்பட்டது. ஒருபுறம் ரெயில்வே கேட்டின் அருகில் இருக்குமே அது போன்ற ஒற்றையறைக் கோபுரம் இருந்தது. மற்ருெருபுறம் ஒரு பெரிய ஆலமரத்தின் கீழே

கல்லறைபோல விசாலமான மேடை இருந்தது. குதிரை லாயத்தின் அருகே நவீன முறைப்படி கட்டிய ஒரு கட்டடத்தின் முகப்பில் 'சமுதாய நலக் கேந்திரம், சிவபால்கஞ்ச்' என எழுதப்பட்டிருந்தது. இதற்கெல்லாம் பின்னல் மூன்று, நான்கு ஏக்கராப் பரப்புள்ள தரிசு நிலம் கிடந்தது. அதை இங்குமங்கும் வெட்டிக் கொத்தி மேய்ச்சல் நிலமாகப் புல்லை விளைவித்திருந்தனர். உண்மையிலேயே இங்கு மங்கும் பசுமை சற்றே தலை காட்டிக்கொண்டிருந்தது.

இந்தக் கட்டடங்கள் யாவும் ஒட்டு மொத்தமாகச் சேர்த்து 'சங்காமல் வித்யாலயம், இன்டர்மீடியட் காலேஜ், சிவபால் கஞ்ச்' என்று அழைக்கப்பட்டு வந்தது. சங்காமல் ஒரு காலத்தில் ஜில்லா போர்டுச் சேர்மனாக இருந்தார். அச் சமயம் ஜில்லா போர்டுக்குச் சொந்தமான இந்த முசாபரி பங்களாவை, கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டதாக ஒரு போலித் தீர்மானத்தின் பேரில் கல்லூரி நிர்வாகக் கமிட்டியிடம் ஒப்படைத்துவிட்டார். அந்தச் சமயம் கல்லூரி நிர்வாகக் கமிட்டியைத் தவிர வேறு எதுவுமே இருக்கவில்லை. தீர்மான ஷரத்தின்படி, கல்லூரிக்குச் 'சங்காமல் வித்யாலயம்' என்று பெயர் சூட்டப்பட்டது. வித்யாலயத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு தனிச் சரித்திரமே இருந்தது. சமுதாய நலக் கேந்திரம், கிராமத்தின் பொதுக் கட்டடம் என்ற பெயரில் சர்க்காரிடமிருந்து பெற்ற பணத்தில் கட்டப்பட்டது. ஆனால் இப்பொழுது அது கல்லூரி முதல்வரின் அறையாக, காரியாலயமாக விளங்கியது. பதினோராவது, பன்னிரண்டாவது வகுப்புகளும் இங்கு நடைபெற்றன. குதிரை லாயம் போன்ற கட்டடங்கள் சிரமதானத்தினல் எழுப்பப்பட்டவை. தகர ஷெட் உருவானதே ஒரு தனிக் கதை. ராணுவ முகாமொன்றின் இடிபாடுகளிலிருந்து இரவோடிரவாக நகர்த்திக் கொண்டு வந்த தகரத் தகடுகள் இதற்கு உதவின. உழப்பட்ட தரிசு நிலம் விவசாயப் படிப்புக்கு உதவியது. அங்குமிங்கும் முளைத்து நின்ற சோளக் கதிர்கள் கல்லூரி முதல்வரின் எருமையைப் போஷித்தன.

அது ஒன்பதாம் வகுப்பு. விஞ்ஞான வகுப்பு நடந்து கொண்டிருந்தது. எப்படியோ ஒரு வழியாகப் பி. எஸ்ஸி. படித்துப் பாஸ் செய்திருந்த மாஸ்டர் மோதிராம், மாணவர்களுக்கு 'ரிலேட்டிவ் டென்ஸிடி'யைப் பற்றிப் போதித்துக்

கொண்டிருந்தார். வெளியே அந்தச் சின்னஞ்சிறு கிராமத்தின் சிறிய உலகம் எதுகை, மோனை இல்லாமலேயே பிரகாசித்துக் கொண்டிருந்தது. சாலையில் கருப்பங்கழிகளின் சுமையை ஏற்றிக்கொண்ட பாரவண்டிகள் சர்க்கரை ஆலையை நோக்கிச் சென்றுகொண் டிருந்தன. சில சோனிப் பயல்கள் பின்னாலிருந்து கருப்பங்கழிகளை இழுக்க இழுக்க, முன்னாலிருந்த வண்டிக் காரன் திட்டிக்கொண்டே இருந்தான். பதிலுக்குச் சிறுவர்கள் வசை பாட, வண்டிக்காரன் உரத்த குரலில் வசை மாரி பெய்ய, சாளரத்தின் வழியே பாய்ந்து வந்த குரலொலிகள் பின்னணி கீதமென வகுப்பறை யெங்கும் ஒலித்துக்கொண் டிருந்தன. மாணவர்கள் இந்த நாடகத்தை ரசித்தவாறே விஞ்ஞானம் படித்துக்கொண் டிருந்தனர்.

ஒரு மாணவன் வினவினான்: ''மாஸ்டர்ஜீ! கால இடப் பொதுத் தொடர்புத் தத்துவ நெருக்கம் என்றால் என்ன?''

''அப்படியென்றால் 'ரிலேட்டிவ் டென்சிடி.''

''சார்! தாங்கள் விஞ்ஞானத்தை அல்ல, ஆங்கிலத்தைப் போதிக்கின்றீர்கள்'' என்றான் இன்னொரு மாணவன்.

''இந்த எளவு சயின்ஸ், ஆங்கிலம் இல்லாமல் எப்படி வரும்?''

மாணவர்கள் சிரித்தார்கள். சிரிப்புக்குக் காரணம், இந்தி, ஆங்கிலத்தைப்பற்றிய விவாதம் இல்லை; 'எளவு' என்ற சொற் பிரயோகந்தான்.

''இது சிரிக்கவேண்டிய விஷயம் அல்ல.''

மாணவர்களுக்கு இந்தக் கூற்றில் நம்பிக்கை இல்லையோ என்னவோ? பின்னும் உரக்கச் சிரிக்கலாயினர். மாஸ்டர் மோதிராமும் அவர்களின் சிரிப்பிலே கலந்துகொள்ளவே அவர்கள் மௌனமாயினர்.

அவர் பையன்களை மன்னித்துவிட்ட பாவனையில் மேலே தொடர்ந்தார். ''ரிலேட்டிவ் டென்சிடி புரியவில்லை என்றால், ஒன்றை ஒன்று சார்ந்த தொடர்புத் தத்துவத்தை, அதன் இறுக் கத்தை வேறோர் உதாரணம் மூலம் புரிந்துகொள்ள முயற்சி செய்யுங்கள். ரிலேட்டிவ் என்றால் ஒன்றைச் சார்ந்தது, அதா வது சம்பந்தப்பட்டிருப்பது. அதாவது நீங்கள் ஒரு மாவரைக் கும் யந்திரம் வைத்திருக்கிறீர்கள் என்று வைத்துக்கொள் வோம். உங்கள் கடைக்குப் பக்கத்தில் இன்னொருவன் அதே போல் இன்னொரு மாவரைக்கும் யந்திரத்தை வைக்கிறான்.

உங்களுக்கு மாவரைக்கும் யந்திரத்தின் மூலம் மாதம் 500 ரூபாய் வருமானம் கிடைக்கிறது. உங்கள் அண்டைக் கடைக் காரனுக்கு 400 ரூபாய் வருகிறது. அதாவது, உங்களுக்கு அவனைவிட லாபம் கிட்டுகிறது. இதைத்தான் விஞ்ஞான மொழியில் 'ரிலேட்டிவ் ப்ராஃபிட்' என்று சொல்லுகிறோம். புரிந்ததா?''

''புரிந்துவிட்டது சார்! ஆனால் விஷயம் முற்றும் தவறானது. மாவரைக்கும் யந்திரம் மூலம் இந்தக் கிராமத்தில் யாரும் மாதம் 500 ரூபாய் சம்பாதிக்க முடியாது.''

மாஸ்டர் மோதிராம் கையினால் மேஜையை ஓங்கித் தட்டிய வாறே வினவினார்: ''ஏன் முடியாது? திறமையிருக்கிறவன் எதைச் சாதிக்கமுடியாது?''

மாணவன், தன் ஆசிரியரின் இக் கூற்றினாலோ, வாதத் திறமையினாலோ சற்றும் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. அவன் தொடர்ந்தான்: ''எதுவுமே முடியாது. எங்கள் சித்தப் பாவின் மெஷின் இடைவிடாமல் அரைத்துத் தள்ளுகிறது. ஆனால் மாதம் 200 ரூபாய் கிடைப்பதே கஷ்டமாக இருக்கிறது.''

''யார் உன் சித்தப்பா?'' மாஸ்டரின் குரல் வேர்வையில் தெப்பமாய் நனைந்துவிட்டதுபோல் ஒலித்தது. அந்தப் பைய னைக் கூர்ந்து பார்த்தவாறே கேட்டார்: ''நீ அந்த அயோக்கியன் முன்றுவின் அண்ணா பிள்ளையா?''

சிறுவன் தன்மானத்தைச் சற்றும் தளரவிட விரும்பாதவன் போல் அலட்சியமான குரலில் பதிலுரைத்தான்: ''ஆமாம். அதற்கென்ன?''

அயோக்கியன் முன்று மிகவும் கௌரவமுள்ள மனிதர். ரோஜா மலரை எந்தப் பெயரிட்டு அழைத்தால் என்ன? அதன் மணம் குறையவா போகிறது என்று ஆங்கிலத் தில் ஒரு பழமொழி உண்டு. அதுபோலத்தான் முன்றுவை எந்தப் பெயரிட்டு அழைத்தால் என்ன? அவர் தம் பாட்டில் மாவரைக்கும் தொழிலை நடத்திக்கொண்டும், பணம் சம்பா தித்துக் கொண்டும் இருந்தார். அயோக்கியன் என்ற பட்டப் பெயரை அவர் தாமாகச் சம்பாதித்துக்கொண்டதல்ல. இது அவருக்குப் பரம்பரைச் சொத்தாகக் கிடைத்தது. குழந்தை யாக இருந்தபோது அவருடைய அப்பா செல்லமாக, 'அட அயோக்கியப் பயலே' என்றுதான் அழைப்பார். அம்மாவோ மிக அருமையாக 'முன்று' என்று கூப்பிட்டாள். அவ்வளவு

தான், கிராமம் முழுவதும் அவரை அன்புடன் 'அயோக்கியன் முன்று' என்று அழைக்கத் தொடங்கிவிட்டது.

மாஸ்டர் மோதிராம் சில நிமிஷம்வரை முன்றுவின் அண்ணு பிள்ளையை முறைத்துப் பார்த்துக்கொண் டிருந்தார். பிறகு நீண்ட பெருமூச்சுடன், "சரி, உட்கார்" என்ருர். அவரது பார்வை எதிரே இருந்த திறந்த புத்தகத்தில் பதிந்திருந்தது. அவர் நிமிர்ந்து பார்த்தபோது மாணவர்களின் கவனம் தம்பால் இல்லை என்பது புரிந்ததும், "என்ன விஷயம்?" என்று உறுமினர்.

"ஒன்றுமில்லை சார். 'மாவரைக்கும் தொழிலில் மாதம் 500 ரூபாய் சம்பாதிக்கமுடியுமா?' என்று யோசிக்கிறேம்" என்ருன் ஒருவன்.

"யார் சொன்னது?" என்ருர் மோதிராம். "நான் மாவரைக்கும் தொழிலில் மாதம் 700 ரூபாய் சம்பாதித்திருக்கிறேன், தெரியுமா? அந்த அயோக்கியன் முன்றுவினல்தான் எல்லாம் அடியோடு நாசமாகிவிட்டது." முன்றுவின் அண்ணு பிள்ளை நிதானமாகப் பதில் உரைத்தான்: "இதைப்பற்றி வருத்தப்பட என்ன இருக்கிறது சார்! இது வியாபாரம். ஏறும், இறங் கும். எல்லாந்தான் இருக்கும். போட்டி என்ருல் இப்படித் தானே?"

"யோக்கியனுக்கும், அயோக்கியனுக்கும் என்ன போட்டி? பெட்டிஷன்? என்ன உளறுகிருய்?" என்று அதட்டினர் மோதிராம்.

"ரொம்ப மோசம் சார்" என்ருன் ஒருவன். திடுக்கிட்டவராய், மோதிராம் வகுப்பை நோக்கி அதட்டினர். "யார்? யார் அப்படிக் கூறியது?"

ஒரு பையன் தான் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்தே கரத்தை உயர்த்தினன். "நான்தான் சார்! ரிலேட்டிவ் டென்சிடியை எப்படிக் கண்டுபிடிப்பது என்று கேட்டேன்."

மோதிராம் கம்பீரத்துடன் விளக்கலானர். "ஒரு பொருளின் ரிலேட்டிவ் டென்சிடியைக் கண்டுபிடிக்க, அந்தப் பொருளின் கனத்தை, அதன் வால்யூமைக் கண்டுபிடிக்கவேண்டும். இதன் பின்பே ரிலேட்டிவ் டென்சிடியைக் கண்டுபிடிக்கவேண்டும். இந்தத் தியரியையும் கண்டுபிடிக்க இருவழிகள் உள்ளன. ஒன்று சரியான வழிமுறை. மற்ருென்று தவருன வழிமுறை. சரியான வழிமுறையாக இருந்தால் சரியான முடிவு

கிடைக்கும், வழி தவருக இருந்தால் தவருன விடைதான் கிடைக்கும். இதை ஓர் உதாரணத்தின் மூலம் விளக்க விரும்பு கிறேன். நீ ஒரு மாவரைக்கும் மெஷின் வைக்கிருய் என்று வைத்துக்கொள். நல்ல புது மெஷின், பளபளவென்று இருக் கிறது. நல்ல கிரீஸ், இன்ஜின் புதிது, வார்ப்பட்டை புதியது, எல்லாம் இருக்கிறது. ஆனுல் இதை இயக்க மின்சாரம் இல்லை. இதன் பலன் என்னவாகும்? இதனுல் என்ன பலன் கிடைக்கும்?'' முதலில் பேசிய சிறுவன் மீண்டும் இடைமறித் தான். ''டீசல் இன்ஜினைப் போடவேண்டியதுதான். முன்று சித்தப்பா அப்படித்தானே செய்திருக்கிருர்.''

''இங்கு உன் முன்று சித்தப்பா ஒருவருக்குத்தான் மூளை இருக்கிறது என்பதல்ல. இந்த ஊருக்கு முதல் முதலில் டீசல் இன்ஜின் கொண்டு வந்தது யார் தெரியுமா, உங் களுக்கு?'' என்ருர் மோதிராம்.

பையன்கள் யாவரும் கரத்தை உயர்த்தி ஒருமித்த குரலில் கூவிஞர்கள். ''நீங்கள்—நீங்களேதான்.''

மாஸ்டர் மோதிராம் பெருமிதத்துடன் முன்றுவின் அண்ணு பிள்ளையை நோக்கியவாறே வெறுப்புடன் பேசிஞர்: ''கேட் டுக்கொண்டாயா? என்னைப் பார்த்துத்தான் அந்த அயோக்கி யன் முன்று டீசல் இன்ஜின் போட்டான். என்னுடைய மெஷின் இந்தக் கல்லூரி திறப்பதற்கு முன்னே இருந்து நடக்கிறதாக் கும். இந்தக் கல்லூரி கட்டடத்துக்காக, மாவரைக்கும் ஒவ் வொருவரிடமிருந்தும் அந்த மெஷினிலிருந்துதான் ஒரு சேர் மாவு தானமாகத் திரட்டினேன், தெரியுமா? என் யந்திரத்தில் அரைத்த மாவுதான் டவுனில் விற்பனைக்குச் சென்றது. என் மெஷினில்தான் இந்தக் கல்லூரிக் கட்டடத்தின் பிளானே உருவாகியது. மானேஜர் என்ன சொன்ஞர் தெரியுமா? 'மோதி, நீ இங்கே வாத்தியாராக இருந்தாலும் நீ தான் உண் மையில் கல்லூரியின் முதல்வர்' என்ருர். நடந்தது எல்லாம் என் பட்டறையில்தான். இப்பொழுது அந்த அயோக்கியன் முன்றுவின் மெஷின் எல்லாருக்கும் தெரிகிறது. என் மெஷின் ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை ஒருவருக்கும்.''

பையன்கள் பொறுமையுடன் கேட்டுக்கொண் டிருந்தனர். இதெல்லாம் அவர்கள் பல முறை கேட்ட விஷயந்தான். மேலும் எந்நேரத்திலும் இதைக் கேட்க அவர்கள் தங்களைத் தயாராக்கிக் கொண்டிருந்தனர். விஷயம் அவர்களை எந்தவிதத்

திலும் பாதிக்கவில்லை. எவ்வித அநுதாபத்தையும் ஏற்படுத்த வில்லை. ஆனால் மூன்றுவின் அண்ணா பிள்ளை மட்டும் கூறினான்: "மாஸ்டர்ஜி! உங்களுடையது, சித்தப்பாவுடையது எல்லாமே நல்ல மெஷின்தான். ஆனால் உங்களுடைய நெல்லரைக்கும் மெஷினுக்கு ஓவர்ஹாலிங் தேவை. அதில் அரிசியைவிடக் குருணை அதிகமாகி விடுகிறது."

"அப்படியொன்றும் இல்லை. என்னுடைய நெல்லரைக்கும் மெஷின் மாதிரி இந்த வட்டாரத்திலேயே கிடையாது. ஆனால் இந்த அயோக்கியப் பயல் மூன்று அரைக்கிற கூலி ரேட்டைக் குறைத்துக் கொண்டே போகிறானே! அதனால்தான் எல்லாரும் அங்கேயே ஓடுகிறார்கள். இந்த நாட்டு ஜனங்கள் இரண்டு பைசா லாபமென்றால் அங்கேதான் பாய்வார்கள்."

"இது எல்லா இடத்திலுந்தான் இருக்கிறது" என்றான் பையன் விடாப்பிடியாக.

"எல்லா இடத்திலும் இல்லை. இந்த இந்தியாவில் மட்டுந்தான் இப்படி." மோதிராம் சற்றே மௌனத்துக்குப் பின் தொடர்ந்தார். "இப்படி ரேட்டைக் குறைப்பவர்கள் அந்த நஷ்டத்தைச் சரிக்கட்ட இன்னொரு வழியைக் கடைபிடிப்பார்கள். அதாவது வாடிக்கைக்காரர்களின் மாவைத் திருடி நஷ்டத்துக்கு ஈடுகட்டி விடுகிறார்கள். இந்த மோதிராம் இருக்கிறானே, அவனால் எதை வேண்டுமானாலும் செய்யமுடியும். இதுமட்டும் செய்யமுடியாது."

ஒரு பையன் குறுக்கிட்டான்: "ரிலேட்டிவ் டென்சிடியைக் கண்டுபிடிக்கும் முறை என்னவாயிற்று சார்?"

"நான் அதைத்தானே கூறிக்கொண்டிருந்தேன்" என்றார் மோதிராம். அவசரமாக அவரது பார்வை சாளரத்தைக் கடந்து, பாதையில் ஊர்ந்துகொண்டிருந்த கரும்பு வண்டிகளுக்கு மேலே 3 அடி உயர்ந்து, அதற்கும் அப்பால் அடிவானத்திலே லயித்தது. சில ஆண்டுகளுக்கு முன்வரை, சில கவிகள் எப்பொழுதும் உணர்ச்சி வயப்பட்டதொரு நிலையில் போஸ் கொடுப்பார்களே அது போன்ற முகபாவத்துடன் தனக்குள்ளே பேசிக்கொண்டே போனார். 'இந்த வட்டாரத்திலேயே அது ஒரே ஒரு மெஷின்தான். இரும்பு மெஷின்தான். ஆனாலும் கண்ணாடி மாதிரி என்ன பளபளப்பு!'

சட்டென வகுப்பின் பக்கம் தம் பார்வையைத் திருப்பிய அவர் வினவினார். "நீ என்ன கேட்டாய்?"

பையன் தன் கேள்வியை மறுபடியும் கூறினான். ஆனால் இதற்குள் அவரது கவனம் பழயபடி வேறு இடத்தில் லயித்துவிட்டது. பையன்களும் கவனத்துடன் செவிமடுத்தார்கள் என்றுதான் கூறவேண்டும். வெளியே கரும்பு வண்டிக்காரன், கரும்பை இழுத்துப் பறித்துக்கொண்டு ஓடியவர்களின் வசைமாரி, பியூனை அதட்டும் பிரின்ஸ்பாலின் குரல், இசைக் கல்லூரியிலிருந்து எழும் ஹார்மோனியத்தின் மியாவ் மியாவ்....இவ்வளவுக்கும் மேலே திடீரென 'ஜக்—ஜக்—ஜக்' என்ற உரத்த ஓசை கேட்க ஆரம்பித்துவிட்டது. அதாவது மாஸ்டர் மோதிராமின் மாவரைக்கும் மெஷின் ஓடுகிறது. அதன் சத்தந்தான் இது. இதுதான் அதன் உண்மையான, இயல்பான சத்தம். உணவு உடைத் தட்டுப்பாடு, பற்றுக்குறை பற்றிய ஓலம், சண்டை ரகளையின் ஆர்ப்பாட்டம், கூச்சல் இவற்றுக்கெல்லாம் மேலே ஓர் உண்மையான தலைவரின் காதில் எப்படித் தன் ஆத்மாவின் குரலைத் தவிர வேறெதுவும் விழுவதில்லையோ, அப்படிப்பட்ட நிலையில்தான் மாஸ்டர் மோதிராமும் இருந்தார். அவர் காதில் வேறு எதுவுமே விழவில்லை. ஜக்—ஜக்—ஜக் என்ற ஒலி மட்டுமே கேட்டுக்கொண் டிருந்தது.

அவர் சட்டென்று வகுப்பிலிருந்து ஓடினார். பையன்கள் சத்தம் போட்டனர். "மாஸ்டர்ஜி! என்ன நடந்தது? இன்னும் மணி அடிக்கவில்லையே!"

"மெஷின் சரியாகி விட்டது போலிருக்கிறது. எப்படி ஓடுகிறது என்று பார்த்து விட்டு வருகிறேன்."

கதவு வரைச் சென்றவர் ஏனோ சட்டெனத் திரும்பிவிட்டார். யாரோ ஓங்கிக் குட்டிவிட்டாற்போல் முகத்தில் ஒரு வேதனை. "புத்தகத்தைப் படியுங்கள். ரிலேட்டிவ் டென்சிடி பற்றிய அத்தியாயம் மிகவும் முக்கியமானது" என்று மாணவர்களை நோக்கிச் சொன்னவர் எச்சிலை விழுங்கிக்கொண்டார். சற்றுப் பொறுத்து, "மிகவும் இம்பார்ட்டென்ட்" என்றார். இதைக் கூறியதுமே ஏனோ அவர் முகம் பழையபடி மலர்ந்துவிட்டது.

"ஜக்.... ஜக்.... ஜக்... ஜக்..."

வெளியே சிரமங்கள் நிறைந்த தொழில் நிலையத்தில் செயலாற்ற கடமை அவரை அழைத்தது. மாணவர்கள், பாட புத்தகங்களின் ஆசாபாசம் ஆகிய அறைகூவல்களால் அவரைத் தடுத்து நிறுத்த இயலவில்லை. அவர் புறப்பட்டுவிட்டார்.

பகலில் சுமார் நான்கு மணி இருக்கும். கல்லூரி முதல்வர் தன்னறையைவிட்டுப் புறப்பட்டார். மெலிந்த, வற்றலான சரீரம். இதன் சில பகுதிகளைக் காக்கி அரைக்கால் நிஜாரும் ஷர்ட்டும் மறைத்துக்கொண்டிருந்தன. போலீஸ் சார்ஜென்ட் வைத்துக்கொண்டிருப்பாரே, அதுபோன்ற பிரம்பைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டிருந்தார். காலில் செருப்பு. மொத்தமாகப் பார்த்தால் சுறுசுறுப்பானவராய், சாமர்த்தியசாலியாய் இருப்பவர்போல் ஒரு தோற்றம். ஆனால் தமது சாமர்த்தியம், திறமையைப்பற்றிச் சற்று அதிகமான நினைப்பு.

அவருக்குப் பின்னால், வழக்கம்போல் கல்லூரியின் குமாஸ்தா வந்துகொண்டிருந்தார். முதல்வருக்கும் அவருக்கும் நெருங்கிய நட்பு.

இருவரும் மாஸ்டர் மோதிராமின் வகுப்பை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர். குதிரை லாயம் போன்ற வகுப்பறை; தூரத்திலிருந்தே மாஸ்டர் வகுப்பில் இல்லை என்பது தெரிந்துவிட்டது. காலிலிருந்து துடைவரை கிழிந்திருந்த பைஜாமாவை அணிந்திருந்த ஒரு பையன் மாஸ்டரின் மேஜையின்மீது அமர்ந்து அழுதுகொண்டிருந்தான். பிரின்ஸ்பால் அந்தப் பக்கமாக வருவதைக் கண்ணுற்றதும் அவனது அழுகை பின்னும் உரத்தது.

''என்ன விஷயம்? மாஸ்டர் எங்கே?'' என்று விசாரித்தார் பிரின்ஸ்பால்.

பையன் பதில் கூறாமல் எழுந்து நின்று அழலானான்.

இன்னொரு பையன் கூறினான். ''இது மாஸ்டர் மோதிராமின் வகுப்பு.''

இதன்பின் மாஸ்டர் எங்கே போனார் என்பதுபற்றி விளக்கம் தரவேண்டிய அவசியம் இருக்கவில்லை.

''ஸகன்ட்ஹான்ட் மெஷின் என்றால் இருபத்திநாலு மணி நேரமும் கவனிக்க வேண்டியதுதான். இந்த மாவரைக்கிற மெஷினை விற்றுத் தொலை என்று மோதிராமிடம் எவ்வளவோ முறை சொல்லியாயிற்று. கேட்டால் தானே? ஒரு சமயம் நானே இதற்கு 1500 ரூபாய் வரை தருவதாகச் சொன்னேன்'' என்றார் குமாஸ்தா.

''சரி, சரி! அது கிடக்கட்டும். அந்த வகுப்பிலிருந்து மாளவியாவை அழைத்து வா'' என்றார் பிரின்ஸ்பால்.

குமாஸ்தா ஒரு பையனைக் கூப்பிட்டார். "இதோ பார், அங்கே போய். அந்த வகுப்பிலிருந்து மாளவியாவைக் கூப்பிட்டுக் கொண்டு வா."

சற்றைக் கெல்லாம் பார்ப்பதற்குக் கண்ணியமாகத் தோற்றமளித்த இளைஞன் ஒருவன் வருவது தெரிந்தது. தொலைவில் அவனைப் பார்த்ததுமே பிரின்ஸ்பால் குரலை உயர்த்திக் கூவினார். "தம்பி, இந்த வகுப்பையும் சற்றுப் பார்த்துக் கொள்ளப்பா."

மாளவியா அருகில் வந்து மேற்கூரையின் ஒரு மூங்கிலைப் பற்றியவாறே நின்றவன், "ஒரே பீரியடில் இரண்டு வகுப்புகளை எப்படி நடத்த முடியும்?" என்றான்.

அழுதுகொண்டிருந்த பையன் இன்னமும் அழுகையை நிறுத்தவில்லை. அழுதுகொண்டே இருந்தான். வகுப்பின் பின்பகுதியில் அமர்ந்திருந்த பையன்கள் உரக்கச் சிரித்துக் கொண்டிருந்தனர். மற்றப் பையன்க்ள் அவர்களைச் சுற்றி, நாற்சந்தி முனையில் வேடிக்கை பார்ப்பவர்கள் போல் நின்றுகொண்டிருந்தனர்.

பிரின்ஸ்பால் குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு உறுமினார். "அதிகம் சட்டம் பேசாதே. அந்தக் கன்னாவுடன் நீ உறவாட ஆரம்பித்ததிலிருந்து ஒவ்வொரு வேலையும் உனக்குச் சிரமமாகப் போய் விட்டது."

மாளவியா, பிரின்ஸ்பாலின் முகத்தையே வெறித்தவாறு நின்றான்.

குமாஸ்தா தான் பேசினார். "சர்க்கார் பஸ் கணக்குத்தான் மாளவியா. ஒரு பஸ் கெட்டுவிட்டால், பிரயாணிகளை அடுத்து வரும் பஸ்ஸில் நிறைத்து விடுகிறார்கள் அல்லவா? நீயும் இந்தப் பையன்களை உன் வகுப்பில் கொண்டு போய் உட்கார வைத்துக்கொள்."

இனிமையான குரலில் பதிலிறுத்தான் மாளவியா. "ஆனால் இது ஒன்பதாம் வகுப்பு; அங்கு நான் நடத்திக்கொண்டிருப்பது ஏழாம் வகுப்பு."

பிரின்ஸ்பாலின் கழுத்து முறுக்கிக் கொண்டது. அவரது கரங்கள் அரைக்கால் நிஜாரின் பாக்கெட்டுக்குள் நுழைந்து கொண்டன. இனி அவர் கத்துவார் என்பது அவரைத் தெரிந்தவர்களுக்குப் புரியும். புரிந்து கொள்வார்கள். நடந்ததும்

அது தான். "எனக்கு எல்லாம் தெரியும். நீயும் கன்னு மாதிரி தர்க்கம் செய்ய ஆரம்பித்து விட்டாய். ஏழாவது வகுப்புக்கும் ஒன்பதாவது வகுப்புக்கும் உள்ள வித்தியாசம் எனக்குப் புரிகிறது. எனக்குக் கல்லூரியை நடத்தக் கற்றுக் கொடுக்க வேண்டிய தில்லை, மகனே! நான் சொல்லுவதைப் பதில் பேசாமல் ஏற்றுச் செய். புரிந்ததா, இல்லையா?"

பிரின்ஸ்பால் பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்தவர். அந்த வட்டாரத்தில் தமது இரு சிறப்பியல்புகளுக்காக அவர் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தார். செலவு சம்பந்தப்பட்ட வரையில் போலியான திட்டக் கணக்குகளைக் காட்டிச் சர்க்காரிடமிருந்து கல்லூரிக்காக எவ்வளவு பணம் வசூலிக்க முடியுமோ அதை வசூலிப்பதில் அவருக்குள்ள திறமை இதிலொன்றாகும். மற்றொன்று அவருக்குக் கோபம் வந்துவிட்டால், வட்டார மொழியான அவதியில் சரமாரியாகப் பொழியத் துவங்கிவிடுவார். அவர் மட்டும் கணக்கு வழக்குப் பட்டியல் தயார் செய்து விட்டால் எப்பேர்ப்பட்ட பெரிய ஆடிட்டரானாலும் சரி, தம் பேனாவை அதில் வைக்கமுடியாது. ஒரு திருத்தம், அடித்தல், ஊஹூம் கிடையாது. இதுபோலத்தான், அவதியில் பேசத் தொடங்கிவிட்டால் எந்தத் தர்க்கவாதியாலும் அவருக்குப் பதில் கூற இயலாது.

மாளவியா தலை குனிந்தவாறே அங்கிருந்து அகன்றான். அந்தக் கிழிந்த பைஜாமாக்காரப் பையனின் முதுகில் பிரம்பால் அடித்த பிரின்ஸ்பால் அதட்டினார். "போ! உம், போங்கள் எல்லாரும். அந்த வகுப்பில் போய்ச் சத்தம் போடாமல் உட்காரவேண்டும். மூச்சு விட்டீர்களோ தோலை உரித்து விடுவேன்."

பையன்கள் சென்றபின் குமாஸ்தா புன்சிரிப்புடன் கூறினார்: "சரி, வாங்க! அந்தக் கன்னா சாகப்பையும் ஒரு கண் பார்த்து விட்டுப் போகலாம்."

கன்னா மாஸ்டரின் இயற்பெயர் கன்னா தான். திலகர், காந்தி, படேல், நேரு போன்ற இனத்தைக் குறிக்கும் பெயர்களெல்லாம், தனி மனிதர்களின் பெயர்களாகிவிடவில்லையா? அப்படித்தான் இதுவும், இந்த நாட்டிலிருந்து சாதியை ஒழிக்க இது ஒரு நல்ல, சரியான உபாயந்தான். சாதியிடமிருந்து அதன் பெயரைப் பிடுங்கி, தனியொரு மனிதனுக்கு அளித்து விடுவதால் சாதியிடம் ஒன்றுமே இல்லாமல் போய்விடும்.

பிறகு என்ன? அது தானாகவே அழிந்துவிடும். கன்னா சரித்திர ஆசிரியர். ஆனால் தற்பொழுது இன்டர்மீடியட்டின் ஒரு வகுப்பில் ஆங்கிலம் போதித்துக்கொண்டிருந்தார். இச்சமயம் பற்களைக் கடித்துக்கொண்டு, ''இந்தியில் பெரிய பெரிய காதற் கதைகளையெல்லாம் எழுதித் தள்ளுகிறீர்கள். ஆங்கிலப் பாடத்தில் கேள்விக்குப் பதில் சொல்வதென்றால் குதிரை மாதிரி முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு நிற்கிறீர்களே?'' எனக் கடிந்துகொண்டிருந்தார்.

ஒரு பையன் தலையைக் குனிந்தபடி நின்றுகொண்டிருந்தான். தயிர், பால் இல்லாததாலோ, போதிய விளையாட்டு, தேகப் பயிற்சி இல்லாததாலோ என்னவோ மாணவர்கள். சோனிக் குதிரை மாதிரியே காட்சி தந்தனர். அதிலும் இந்தப் பையனின் முகம் அந்த உவமைக்கு முற்றும் பொருத்தமானதாக இருக்கவே பையன்கள் உரக்கச் சிரித்தனர். மிஸ்டர் கன்னா ஆங்கிலத்தில் கேட்டார்: ''சொல்லு, 'மெடாஃபர்' என்றால் என்ன பொருள்?''

பையன் அசையாது நின்றான். பேசவில்லை.

கொஞ்ச நாட்களுக்கு முன் 'படிக்காதவன் கொம்பும் வாலும் அற்ற மிருகம்' என்ற கூச்சல் இந்நாட்டில் எழுந்ததல்லவா? அந்த அமர்க்களத்தில் படிக்காதவர்களின் பிள்ளைகள் பலரும், கலப்பையையும், மண்வெட்டியையும் வீசி எறிந்துவிட்டுப் பள்ளிகளுக்குப் படை எடுக்கத் துவங்கி விட்டனர். ஆயிரக்கணக்கான எண்ணிக்கையில் திரண்டெழுந்து வந்த இவர்கள், பள்ளிகளையும், கல்லூரிகளையும், சர்வகலாசாலைகளையும் முற்றுகையிடத் துவங்கி விட்டனர். இப்பலத்த முற்றுகையில் கல்வித் துறையே கலகலத்துவிட்டது. இப்பொழுது எவருமே படிக்காதவர்கள் மிருகத்துக்குச் சமம் என்று சொல்லுவதாகத் தெரியவில்லை. மாறாகத் தணிந்த குரலில், 'தகுதியுள்ளவர்கள்தான் உயர் கல்வி பெறவேண்டும். இதற்கு ஸ்கிரீனிங் தேவை' என்று முணுமுணுக்கத் துவங்கியுள்ளார்கள். இப்படிச் சுற்றி வளைத்துப் பேசி இந்தக் கிராமத்துப் பையன்களை மீண்டும் கலப்பையைப் பிடிக்கச் சொல்லி, வயல்களில் இறக்கிவிட வேண்டும் என்று அபிப்பிராயமும் சொல்லப்பட்டு வருகிறது. ஆனால் பிரதி வருடமும் பரீட்சையில் தோல்வி கண்டும், ஆசிரியரின் வசவு திட்டுகளைச் சகித்துக்கொண்டும் இருக்கும் இம்மாணவர்கள், விவசாயத்தின் பெருமையைப்

பற்றித் தேனருவியாகச் சொற்பொழிவாற்றும் தலைவர்களின் உரையைக் கேட்ட பின்னும், கலப்பையின் உலகத்துக்குத் திரும்பிச் செல்லத் தயாராக இல்லை. பள்ளியுடன் அட்டை மாதிரி ஒட்டிக்கொண்டு விட்டார்கள். என்னவானாலும் சரி, அப்படியே இருக்கவும் விரும்பினர்.

இந்தக் குதிரை மூஞ்சிக்காரப் பையனும் அந்தக் குழுவில் ஒருவன்தான். வகுப்பில் நேரிடையாகவும், மறைமுகமாகவும் தினம் தினம் அவனுக்குப் புகட்டப்பட்ட அறிவுரைகள் இதுதான். 'மகனே, போய் உன் எருமையைக் கற.' மாட்டின் வாலைப் பிடித்து முறுக்கு. ஷெல்லியும், கீட்ஸும் உனக்குச் சரிப்பட்டு வராது.' ஆனால் மகன் தன் தந்தையைவிடப் பல நூற்றாண்டுகள் முன்னே சென்றுவிட்டான். இதனால் இந்த ஜாடை மாடைப் பேச்சுக்களைப் புரிந்துகொள்ள அவன் தயாராக இல்லை. அவன் அப்பா இன்னும் தன் மாடுகளுக்குத் தீவனம் வெட்டவே பன்னிரண்டாம் நூற்றாண்டில் பழக்கத்திலிருந்த அரிவாளை உபயோகித்து வருகிறான். ஆனால் மகனோ, சாண நிறம் கொண்ட புத்தகத்தில் தன் குதிரை முகத்தைப் பதித்துக்கொண்டு, இருபதாம் நூற்றாண்டுக் கல்கத்தாவின் இன்ப இரவுகளைப் பற்றித் தியானித்துக் கொண்டிருக்கிறான். இந்நிலையில் அவன் எந்தவித மாறுதலையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. இதனால்தான் அவனால் 'மெடாஃபர்' என்ற வார்த்தையின் பொருளைக் கூற இயலவில்லை; கல்லூரியின் இன்றைய சராசரி மாணவனைப் போலவே இந்த மாணவனும் தன் உடை விஷயத்தில் அதிக அக்கறை இல்லாதவனாக, வெளி நாகரிக முறைகளைச் சற்றும் பொருட்படுத்தாதவனாகவே இருந்தான். காலில் செருப்பு இல்லை; வெறுங்கால். கோடுகள் போட்ட அழுக்கேறிய பைஜாமா. நகரத்து நாகரிக மனிதர்கள் பெரும்பாலும் இரவு உடை அணிவார்களே, அதே போன்ற உடை. ஆழ்ந்த காக்கி நிறத்தில் பட்டன்கள் இல்லாத ஒரு ஷர்ட். அதுவும் முரட்டுத் துணியில் தைத்தது. நீள நீளமாய், படியாமல் நிற்கும் எண்ணெய் அறியாத தலை மயிர். முகத்தைக் கழுவியதாகத் தெரியவில்லை. கண்களிலே தெளிவில்லாத ஒரு கிறக்கம். பார்த்தால் ஏதோ பிரசார மயக்கத்தில் சிக்கிக் கல்லூரியில் வந்து சிக்கிக்கொண்டவன்போல் தோன்றியது.

இவன் சென்ற வருஷம், ஏதோ ஒரு மட்டரகமான பத்திரிகையில் வெளி வந்த காதற்கதையைக் காப்பி பண்ணி, தன்

பெயரில் கல்லூரிப் பத்திரிகையில் வெளியிட்டுவிட்டான். ஆசிரியர் கன்று இந்த விஷயத்தை வைத்துக்கொண்டுதான் சமயம் நேரும்போதெல்லாம் அவன்மீது சேற்றை வாரி வீசிக்கொண் டிருந்தார்.

"எழுத்தாளர் அவர்களே! சொல்லுங்கள். 'மெடாஃபர் என்றால் என்ன?" என்று குரலில் நையாண்டி தொனிக்க மீண்டும் வினவினார் அவர்.

காக்கிப் பாண்டும், நீல நிறப் புஷ் ஷர்ட்டும் அணிந்திருந்த அவர் தோற்றத்துக்கு ஒரு கம்பீரத்தை அளிக்க லேசான கறுப்பு நிறக் கண்ணாடியும் அணிந்திருந்தார். நாற்காலி யிலிருந்து எழுந்து மேஜையின் முன்புறம் வந்து நின்று, கரத்தை லேசாக மேஜையின்மீது ஊன்றி, மாணவர் களிடம் எதையோ கேட்க வாயெடுத்தவர், வகுப்பின் பின்புற வாயிலில் முறைத்துப் பார்த்துக்கொண்டு நிற்கும் பிரின்ஸ் பாலைப் பார்த்துவிட்டார். வராந்தாவில் நிற்கும் குமாஸ்தா வின் தோளின் ஒரு பகுதியும் அவர் கண்களுக்குத் தப்பவில்லை.

மேஜையின் மீதிருந்த கரத்தை எடுத்துவிட்டு நிமிர்ந்து நின்று, "சார், ஷெல்லியின் ஒரு கவிதையை நடத்திக்கொண் டிருக் கிறேன்" என்றார்.

சொற்கள் ஒன்றோடொன்று மோதி விழும் வேகத்துடன் பிரின்ஸ்பால் பேசினார்: "இவர்கள் படமல்லவா பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் சொல்லுவதை எங்கே கவனிக் கிறார்கள்?"

இப்பொழுது அவர் வகுப்புக்குள்ளேயே வந்துவிட்டார். ஒருவர்பின் ஒருவராக இரண்டொரு பையன்களின் முதுகைப் பிரம்பால் பதம் பார்த்ததும் அவர்கள் எழுந்து நின்றனர். அழுக்குப் பைஜாமா, புஷ் ஷர்ட், எண்ணெய் வழியும் தலை, மயிர் சிக்குப் பிடித்த ஒருவன்; மற்றொருவனோ மொட்டை அடித்த தலை, அரைக்கைச் சட்டை. அன்டர்வேர் தரித்த வன் பயில்வானைப் போல் தோன்றினான்.

"இதுதான் பாடம் நடக்கிறதா?" என உறுமிய பிரின்ஸ்பால் முதல் பையனின் சாய்வு மேஜையிலிருந்து ஒரு பத்திரிகையை எடுத்தார். அது ஒரு சினிமாப் பத்திரிகை. அதில் ஒரு பக்கத்தைத் திறந்து காட்டினார் அவர். யாரோ ஒரு வெளி நாட்டு நடிகையின் மார்பகம் காற்றிலே படபடத்தது. பத்திரி

கையைத் தரையிலே வீசி எறிந்தவாறு பிரின்ஸ்பால் கத்தினுர்: "இதுதான் படிப்பா? படிக்கிற லட்சணமா?"

அறையில் அமைதி நிலவியது, பிரின்ஸ்பால் வகுப்பின் ஒரு மூலையிலிருந்து இன்ஞெரு மூலையில் நிற்கும் கண்ணுவைப் பார்த்துக் கத்தினுர். "உங்கள் வகுப்பில் ஒழுங்கு இது தானு? பையன்கள் சினிமாப் பத்திரிகை படித்துக் கொண் டிருக்கிருர்கள். இந்த லட்சணத்தில் உங்களை வைஸ்பிரின்ஸி பாலாகப் போடவேண்டும் என்று வற்புறுத்துகிறீர்கள், இல்லையா? வைஸ் பிரின்ஸ்பால்! ஹூம்! படிப்பிலும் எழுத் திலும் என்ன இருக்கிறது? கட்டுப்பாடு தான் முக்கியம். புரிந்துகொண்டீர்களா மிஸ்டர் கண்ணு?" என்று கேட்டபின், உமர்கயாமின் கதாநாயகன், 'நான் தண்ணீரைப் போல வந்தேன். புயலைப் போல் போகிறேன்' என்று சொல்லு வானே, அதே மிடுக்குடன் அவ்விடம் விட்டகன்ருர். பின்னு லிருந்து கண்ணுவின் முணுமுணுப்பு அவர் காதில் விழத்தான் செய்தது.

கல்லூரி வாயிலை விட்டு வெளியேறினுர் பிரின்ஸ்பால். பாதைக்கு வந்ததும் எதிரே பான்ட்டும் ஷர்ட்டும் அணிந்த ஒருவன் சைக்கிளில் வருவது தெரிந்தது. அருகே வந்ததும் அவன் பிரின்ஸ்பாலுக்கும், பிரின்ஸ்பால் அவனுக்கும் பரஸ் பரம் வணக்கம் தெரிவித்துக் கொண்டனர். அவன் அவர் களைக் கடந்து சென்றதும் பிரின்ஸ்பால் குமாஸ்தாவிடம் கேட்டார்: "யார் இந்தப் புது ஆள்?"

"மலேரியா இன்ஸ்பெக்டர், புதிதாக வந்திருக்கிருன்."

"பி. டி. ஓ. வின் மருமான் போலிருக்கிறது. மிகவும் போக்கிரி யாய் இருப்பான் என நினைக்கிறேன். நான் ஒன்றும் பேச வில்லை. இருந்தாலும் சமயத்துக்குப் பயன்படுவான் எனத் தோன்றுகிறது."

"இந்தக் காலத்தில் இப்படிப்பட்ட ஆசாமிகளால்தான் காரியம் நடக்கிறது. நேர்மையான நல்ல மனிதஞல் எதுவுமே நடப்பதில்லை" என்ருர் குமாஸ்தா.

சற்று நேரம் இருவரும் மௌனமாகவே நடந்து கொண் டிருந்தனர். பிரின்ஸ்பால் மீண்டும் பேச ஆரம்பித்தார்: "எல்லோரிடமும் பழகி, அவர்களைத் தெரிந்துவைத்துக் கொள் வது அவசியம், இந்தக் கல்லூரிக்காக ஒரு கழுதையைக் கூட 'அப்பா', 'மகனே' என்று சொல்ல வேண்டி இருக்கிறது."

"அதைத் தான் நானும் பார்த்துக் கொண்டிருக்கிறேனே. நாள் முழுவதும் உங்களுக்கு இந்த வேலைதானே" என்றார் குமாஸ்தா.

"நீங்களே பாருங்கள்" என்றார் பிரின்ஸ்பால். "எனக்கு முன்னால் ஐந்து பிரின்ஸ்பால்கள் இருந்திருக்கின்றனர். யாரால் இவ்வளவு பெரிய கட்டடத்தை எழுப்ப முடிந்தது? இதோ, இந்தச் சமுதாய நலக் கேந்திரம் இருக்கிறதே! இதைக் கட்டு வித்தது நான் தான் இல்லையா?"

குமாஸ்தா தலையை வேகமாய் ஆட்டினார்: "ஆமாம், ஆமாம்."

சில நிமிஷங்களுக்குப் பின்னர் கவலை மிகுந்த குரலில் அவர் தொடர்ந்தார்: "இப்பவும் இதே வேட்டையில் தான் இருக்கிறேன். கொழுத்த வேட்டை ஒன்று சிக்கினால் இன்னும் இரண்டொரு பிளாக்கைக் கட்டிப் போடலாமே!"

குமாஸ்தா ஒன்றும் பேசவில்லை. மௌனமாகவே தொடர்ந்து கொண்டிருந்தவர் சட்டென நின்றுவிடவே பிரின்ஸ் பாலின் நடையும் தடைப்பட்டது.

"இரண்டு கட்டடங்கள் வரப் போகின்றனவே" என்றார் குமாஸ்தா.

பிரின்ஸ்பால் உற்சாகத்துடன் கழுத்தை நீட்டி, "எங்கே?" என்றார்.

"ஒன்று, ஹரிஜனங்களுக்காக! தோல் பதனிடும் தொழிற் சாலைக் கட்டடம் வரப்போகிறதாம். குதிரை டாக்டர் சொல் லிக்கொண் டிருந்தார். இன்னொன்று ஆஸ்பத்திரியில் காலரா வுக்காக, தொத்து நோய் வார்டு தேவையாம். அங்கே இடம் போதாது. இங்கே கல்லூரிப் பக்கத்திலே எங்கேயா வது இந்தக் கட்டடங்களைக் கட்டிக்கொள்வோம். முதலில் இடம் தந்துவிட்டால் பின்னால் மெள்ள மெள்ள இதைக் கைப் பற்றிக் கொண்டு விடலாம்."

பிரின்ஸ்பால் நிராசை மிகுந்த பெருமூச்செறிந்தவராய் மேலே நடந்தார். "எனக்கு முன்னரே தெரியும். டிப்ஸ், கிப்ஸ் எதுவும் இந்த விஷயத்தில் நடக்காது."

சற்று நேரம் இருவரும் பேசவில்லை.

பாதையோரத்தில் மூன்று, நான்கு கூலியாட்களை நிறுத்தி வைத்து, ஒருவன் அவர்களைத் திட்டிக்கொண் டிருந்தான். அவன் எதற்காகக் கோபித்துக் கொள்ள விரும்புகிறான் என்

பதை அறிய விரும்புறகிறவர் போல் பிரின்ஸ்பால் அவன் அருகில் போய் நின்றார். கூலியாட்கள் ஏதேதோ கூறிக் கெஞ்சி மன்றாடிக்கொண்டிருந்தனர். விசேஷமாக ஏதும் இல்லை. காண்டிராக்டருக்கும் கூலிகளுக்குமிடையே வழக்கமாக எழும் தகராறுதான். பேச்சுவாக்கில் வார்த்தை தடித்து விட்டது என்பது புரிந்ததும் பிரின்ஸ்பால் சற்று முன்னே வந்து கூலிகளை நோக்கி, "போங்கடா, போய் உங்கள் வேலையைப் பாருங்க. காண்டிராக்டர் ஐயாவை ஏமாற்றப் பார்த்தால் செருப்படிதான் கிடைக்கும்" என்று இரைந்தார்.

கூலிகள் அவரை நன்றியுடன் பார்த்தவாறே சமயம் கிடைத்ததும் நழுவித் தங்கள் தங்கள் வேலையில் ஈடுபடலாயினர். காண்ட்ராக்டர் பிரின்ஸ்பாலை நோக்கி. "எல்லாரும் அயோக்கியப் பசங்க! கொஞ்சம் கண் அசந்தால் ஆளையே முழுங்கி விடுவாங்க. கூலி அதிகம் வேண்டுமாம். ஆனால் வேலைக்கு சுணங்கறாங்க" என்றார்.

"எல்லா இடத்திலும் இப்படித் தான் இருக்கிறது. எந்தத் துறை சரியாக இயங்குகிறது? எங்கள் கல்லூரியை எடுத்துக் கொள்ளுங்கள். எந்த ஆசிரியராவது படிப்புச் சொல்லித் தர விரும்புகிறாரா? நான் பின்னாலேயே சுற்றிக் கொண்டிருந்தால் தான்."

அந்த மனிதன் உரக்கச் சிரித்தான். "என்னிடமா சொல்லுகிறீர்கள்? நான் இதைத்தானே எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருக்கிறேன், செய்து கொண்டிருக்கிறேன். எனக்குத் தெரிந்த விஷயந் தான்" என்றவன், "ஆமாம், எங்கே இப்படி....?" என்று இழுத்தாற்போல் கூறவே, குமாஸ்தா இடைமறித்தார். "வைத்தியர் வீடு வரைக்கும் போகிறோம். செக்கில் கையெழுத்து வாங்க வேண்டி இருக்கிறது."

"சரி சரி, போங்க!" என்று மேலே போகலாம் என்று ஜாடை காட்டியவன் பிரின்ஸ்பால் இரண்டடி எடுத்து வைத்ததும், "ஆமாம். வேறு என்ன விஷயம்?" என்றான்.

பிரின்ஸ்பால் நின்றுவிட்டார். "எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. அந்தக் கண்ணுதான் ஏதேதோ செய்து கொண்டிருக்கிறான். உங்களுக்கு, எனக்கு எல்லாருக்கும் எதிராகப் பிரசாரம் செய்து கொண்டு திரிகிறான்."

"தாங்கள் கவலைப்படாதீர்கள்" என்றான் அந்த மனிதன். பின்னர் உரத்த குரலில், "பிரின்ஸ்பால் உத்தியோகத்தை

ஜோர்ராய் நடத்துங்க. பிரசாரத்துக்குப் பதில் குண்டாந்தடி தான் கிடைக்குமென அவனிடம் சொல்லி விடுங்க. இது சிவபால் கஞ்ச். கொஞ்சம் பார்த்துப் பதன்மாய் நடக்க வேண்டும் என்று சொல்லி வையுங்க."

சற்றுத் தூரம் சென்றதும் பிரின்ஸ்பாலிடம் குமாஸ்தா கிசு கிசுத்தார். "இந்தக் கான்டிராக்டரைக் கல்லூரிக் கமிட்டியிலே போட்டு வையுங்க. சமயத்துக்கு உதவுவார்."

பிரின்ஸ்பால் ஏதோ யோசனையில் இருந்தார். குமாஸ்தா தொடர்ந்தார். "நாலு வருஷத்துக்கு முந்திய தேதியில் பாது காப்பு நிதி ரசீது போட்டு விடுவோம். நிர்வாகக் கமிட்டியிலே கூட இவர் இருப்பது நல்லது. எல்லாம் சரியாகிவிடும்."

பிரின்ஸ்பால் உடனடியாக இதற்குப் பதிலேதும் கூறவில்லை. சற்றுத் தயங்கிய பின் கூறினார்: "வைத்தியரிடம் பேசிக் கொள்ளலாம். இதிலெல்லாம் ரொம்ப பாலிடிக்ஸ் இருக்கிறது. நானும் நீயும் சொல்வதால் என்ன நடக்கும்?"

# அத்தியாயம் 4

சில குப்பைக் கூளங்கள் நிறைந்த மேடுகள், அதைவிட மோசமான சில கடைகள், தாலுக்கா ஆபீஸ், போலீஸ் ஸ்டேஷன், கள்ளுக்கடை, சமுதாய நல அபிவிருத்தி திட்டக் காரியாலயம், சாராயக் கடை, கல்லூரி—என்று யாவுமே பாதையோடு செல்பவனின் கண்களில் படாமலிருக்காது. சற்றுத் தள்ளி, சற்று அடர்ந்த மாந்தோப்பில் ஒரு மண் கட்டடம் தெரிந்தது. அதன் பின்புறம் பாதையை நோக்கியும், கதவுகள் அற்ற வாசல் காட்டை நோக்கியும் அமைந்திருந்தது. மழைக் காலத்தில் குடியானவர்கள், மரத்தடியை விட்டு விட்டு இந்தக் கட்டடத்தில் வந்து சூதாடுவது வழக்கம்; மற்ற நாட்களில் இது காலியாகத்தான் கிடக்கும். காலியாகக் கிடக்கும் நாட்களில் கூட

மக்கள் இதைக் காலியாக விட்டு வைக்கும் வழக்கமில்லை. ஆண்களும் பெண்களும் பிறர் அறியாமல், தருணம் பார்த்து இந்த அறையைத் தங்கள் கேளிக்கைகளுக்காக உபயோகப் படுத்திக் கொள்வதும் உண்டு. சிவபால் கஞ்ச்வாசிகள் இந்த அறைக்குக் கொடுத்திருக்கும் பெயர் ஹென்ரி மில்லரைக் கூடத் திகைக்க வைத்துவிடும் என்றால் நீங்கள் கற்பனை செய்து கொள்ளுங்கள். அதைச் சற்றே குளிர வைக்கும் முயற்சியில் கல்லூரி ஆசிரியர் ஒருவர் இதற்கு 'காதல் மாளிகை' எனப் பெயர் வைத்திருந்தார். குப்பை மேடுகள், காதல் மாளிகை இவ்விரண்டிற்கும் இடையேயுள்ள பாதையின் இப்பகுதி, சிவபால் கஞ்சின் ஒரு மூலையில் அதன் ஓர் எல்லையோரமாக இருந்தது. பாதைக்கு அப்பால் மறுபுறத்தில் சிவபால் கஞ்ச் ஊர் இருந்தது. உண்மையாகப் பார்த்தால் வைத்தியர் வீட்டுக் கூடந்தான் சிவபால் கஞ்ச். கூடத்தை அடையச் சந்தில் இறங்கி நடக்கவேண்டும். சந்தின் இரு புறங்களிலும் முண்டி முரண்டிக்கொண்டிருந்தன, கூரைகள் வேய்ந்த வீடுகள். வீடுகளின் வெளித் திண்ணைகள் நீண்டு சந்தின் அகலத்தை ஆக்கிரமித்துக்கொண்டிருந்ததைப் பார்த்த போது, உனது எல்லைக்கு அக்கம்பக்கத்தில் எங்கு வேண்டுமானாலும் கையகலம் காலி இடம் கிடைத்தாலும், பிறர் அறியாது இரண்டொரு முழு இடத்தையாவது வளைத்துப் போட்டுக் கொள்ளவேண்டும் என்ற தத்துவம் தெளிவாகப் புலனாகியது.

நடந்து கொண்டே இருக்கும்போது சட்டெனச் சற்று முடிந்து ஒரு மைதானம் வந்துவிடும். அதில் நாலைந்து வேப்ப மரங்கள். அவை தழைத்தோங்கி நிற்பதைப் பார்த்தாலே, வனமகோற்சவ விழாக் கொண்டாடுவதற்கு முன்னரே இவை நடப்பட்டவை எனப் புலப்பட்டுவிடும். எந்தத் தலைவர், அதிகாரியின் திருக்கரங்களாலும் தீண்டப்படாத இவை, மரம் நடும் விழா, படமெடுத்தல் போன்றவற்றிலிருந்து விலக்களிக்கப் பட்டவை எனத் தோன்றியது.

கண்களுக்குப் பசுமையாகக் காட்சி அளித்த இப்பகுதியில் ஒரு வீடு, கிட்டத்தட்ட மைதானத்தின் பெரும் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டிருந்ததால் மேலே செல்வது கடினமாக இருந்தது. இந்த வீடுதான் வைத்தியருடையது. வீட்டின் முற்பகுதி நல்ல காரைக் கட்டடம். கிராமத்தார் நோக்குப்படி, மிகப் பிரமாதமானது. வீட்டின் பிற்பகுதியின் சுவர்கள் மண்

சுவர்கள்தான். இதற்குப் பின் குப்பைக் கூளங்கள்தான் கிடக்கும் என்ஞெரு சந்தேகம். பளபளவென்று கண்களைக் கவரும் விமான தளங்கள், ஜிலு ஜிலு வென்று காட்சி தரும் ஹோட்டல்கள் மூலம் இந்த நாட்டில் எப்படி 'சிம்பாலிக் மாடர்னிசேஷன்' நடந்துகொண் டிருக்கிறதோ, அதன் பிரபாவம் இந்த வீட்டின் கட்டடக் கலை அமைப்பிலும் வெளிப்பட்டு, தில்லியிலிருந்து சிவபால் கஞ்ச் வரையிலும் கட்டடத் தொழிலாளரின் அறிவு பூர்வமான ஒருமைப்பாட்டை நிரூபித்துக்கொண் டிருந்தது.

வீட்டின் முன்பகுதியில் திண்ணை, வராந்தா, ஒரு பெரிய அறை என இவை யாவும் முன்கட்டு என்ற பெயரில் பிரசித்தி பெற்றிருந்தன. செங்கல்லையும், காரைச் சட்டியையும் சுமக்கும் கூலியாளுக்குக் கூட முன் கட்டு (கூடம்) என்ருல் செங்கல்லால் கட்டிய காரைக் கட்டடம் அல்ல என்பது நன்ருய்த் தெரிந்திருந்தது. 'நம்பர் 10, டௌனிங் தெரு, வெள்ளை மாளிகை,' கிரம்ளின் - இவையெல்லாம், கட்டடங்களின் பெயர்கள் அல்ல. 'பவர்'-அதாவது அதிகாரத்தின், செல்வாக்கின் குறியீடுகள்.

போலீஸ் ஸ்டேஷனிலிருந்து திரும்பிய ரூப்பன் பாபு தர்பாரேயில், அதாவது வராந்தாவில் கூடியிருந்த கூட்டத்தைப் பார்த்தான். பார்த்ததுமே நடையில் ஒரு வேகமும் மிடுக்கும் ஏறியது. வேட்டி படபடத்தது. கூடத்துக்குள் பிரேவேசித்ததும், ஊரிலிருந்து தாய் வழிச் சகோதரன் ரங்கநாத் டிரக்கில் ஏறி வந்திருப்பதையும் வழியில் டிரைவர் அவனிடமிருந்து இரண்டு ரூபாயைப் பறித்துக் கொண்டதையும் அறிந்தான்.

ஒடிசலான வற்றிய உடல், அழுக்கேறிய பனியன், கோடுகள் போட்ட அன்டர்வேர் ஆகிய இந்தக் கோலத்துடன் ஒருவன் அமர்ந்திருந்தான். நவம்பர் மாதம், மாலை வேளை. நல்ல குளிராகத்தான் இருந்தது. ஆயினும் வெறும் பனியனை அணிந்திருந்த அவன் சந்தோஷமாகவே இருந்தான். அவனது இயற்பெயர் மங்கள். மக்கள் அவனைச் 'சனிஸ்வரன்' என்றே அழைத்தனர். அவனுக்குத் தலை நரைக்க ஆரம்பித்து விட்டது. முன் பற்கள் விழுந்து விட்டிருந்தன. வைத்தியரின் கூடத்தில் உட்கார்ந்திருப்பதுதான் அவன் வேலை. பெரும்பாலும் அன்டர்வேருடன் தான் இருப்பான். இன்று அவன் பனியன் அணிந்திருப்பதைக் கண்ட ரூப்பன், சனிஸ்வரனும் ஃபார்மலாக இருக்க விரும்புகிருன் என்பதைப் புரிந்துகொண்டான். ரங்கநாத், தான் பட்ட சிரமத்தை ஒரே மூச்சில் கூறியவன், தபலாவில் கூடச்

சற்றே சிரமப்பட்டு எழுப்பக் கூடிய ஒலிகளை, தன் வெற்றுத் துடையைத் தட்டி எழுப்பியவாறே உற்சாகத்துடன் மொழிந்தான்: "பத்ரி அண்ணு இருந்தால் ரொம்ப மஜாவாக இருக்கும்."

ரங்கநாத்தைப் பார்த்ததுமே ரூப்பன், "நல்ல காரியம் செய்தாய் அண்ணு! இரண்டு ரூபாயுடன் தீர்ந்தது தொல்லை! சின்னச் சின்ன விஷயங்களுக்காக அடிதடியெல்லாம் சரியில்லை."

ரங்கநாத் இரண்டரை வருஷங்களுக்குப் பிறகு ரூப்பனைப் பார்க்கிறுன். ரூப்பனின் கம்பீரமான வார்த்தைகளை அன்றைய ருசிகரமான விஷயமாகக் கருதி, "நான் அடிதடி வரைக்கும் இறங்கத் தயாராகத் தான் இருந்தேன். அப்புறம் கொஞ்சம் யோசித்தவனுய் நின்று விட்டேன்" என்றுன்.

அடிதடிக் கலையில் நிபுணன் என்ற முறையில் கரத்தை உயர்த்திய ரூப்பன், "நீங்க செய்தது சரிதான். இந்த மாதிரியான சச்சரவுகளில்தான் ஸ்டூடன்ட் கம்யூனிட்டிக்குக் கெட்ட பெயர்" என்றுன்.

ரங்கநாத் இப்போழுதுதான் அவனை நன்ருய்க் கவனித்தான். தோளின் மீது தவழும் வேட்டியின் நுனிக்கரையும், இப்போது தான் வெற்றிலை மென்றுன் என்பதற்குச் சாட்சியாக உதட்டிலே படிந்திருந்த வெற்றிலைச் சாறும், தலையில் கொட்டிக் கொண்டிருக்கும் எண்ணெயும், உள்ளூர்க் குண்டர்களின் தரத்தை விட மேற்பட்டவன் என்பதைப் பறைசாற்றின. பேச்சை மாற்ற விரும்பிய ரங்கநாத், "பத்ரி அண்ணு எங்கே? கண்ணிலேயே படவில்லையே?" என்றுன்.

ஏதோ மொய்க்கும் எறும்புகளை இடமாற்றம் செய்ய விரும்புபவன்போல் அன்டர்வேரைத் தட்டிய சனிஸ்வரன் புருவங்களை நெறித்தவனுய்க் கூறினுன்: "எனக்குப் பத்ரி அண்ணுவின் நினைவுதான் வருகிறது. அவர் இருந்திருந்தால் இதற்குள்...."

அவன் பேச்சைக் காதில் வாங்காதவனுய் ரங்கநாத், ரூப்பனிடம் கேட்டான்; "அண்ணு எங்கே?" என்று.

ரூப்பன் அலட்சியமாகக் கூறினுன். "அது தான் சனிஸ்வரன் சொல்லுகிருனே! என்னிடமா சொல்லிவிட்டுப் போயிருக்கிருர்? எங்கோ வெளியே போயிருக்கிருர். நாளையோ, நாளை மறுநாளோ, அதற்கடுத்த நாளோ வருவார்."

அவன் பேச்சிலிருந்து பத்ரியும் அவனும் கூடப் பிறந்த சகோதரர்கள், ஒரே வீட்டில் வசிப்பவர்கள் என்பதைத் தெரிந்து

கொள்வது கடினமாக இருந்தது. நீண்ட பெருமூச்செறிந்த ரங்கநாத் இன்னொரு கேள்வியைக் கேட்டான்: "இப்பொழுது நீ எந்த வகுப்பில் படிக்கிறாய் ரூப்பன்?"

இந்தக் கேள்வியை ரசிக்கவில்லை என்பது ரூப்பனின் முக பாவம் வெளியிட்டது. எனினும் அவன் கூறினான்: "பத்தாவது. இரண்டு வருஷத்துக்கு முன்புகூட நீ இதில்தானே இருந்தாய் என்று நீ கேட்கலாம். ஆனால் இந்த வகுப்பிலிருந்து வெளியேற எனக்கொரு வழியும் தோன்றவில்லை." அவன் மேலே தொடர்ந்தான். "இந்த ஊர்க் கல்லூரியைப் பற்றி உனக்குத் தெரியாது அண்ணா. போக்கிரிகள், அயோக்கியர்களின் சந்தை மடம் இது. ஆசிரியர்கள் பாடம் சொல்லிக் கொடுப்பதில்லை. அரசியல் பேசி மோதவிடுகிறார்கள். இரவில்லை, பகலில்லை; அப்பாவுக்கு ஒரே தலைவேதனைதான். ....ஹூம் இங்கு யாராவது பரீட்சையில் தேறமுடியுமா என்ன?"

அறையினுள்ளே வைத்தியர் நோயாளிகளுக்கு மருந்து கொடுத்துக்கொண்டிருந்தார். திடீரென அங்கிருந்தே குரல் கொடுத்தார் அவர். "அமைதியாக இரு ரூப்பன்! இந்த மோசமான நிலைமைகளுக்கெல்லாம் ஒரு முடிவு வரத்தான் போகிறது."

'பயப்படாதீர், வசுதேவரே! கம்சனுக்கு ஒரு காலன் பிறக்கப் போகிறான்' என்ற அசரீரி ஒலித்தது போலிருந்தது இது. ரூப்பன் மௌனமாகிவிட்டான். ரங்கநாத் அறையின் பக்கம் திரும்பி, "மாமா! உங்களுக்கும் இந்தக் கல்லூரிக்கும் என்ன சம்பந்தம்?" என வினவினான்.

"சம்பந்தமா?" வைத்தியர் சிரித்த சிரிப்பினால் அந்த அறையே அதிர்ந்தது. "கல்லூரியுடன் எனக்குள்ள தொடர்பை அறிந்து கொள்ள விரும்புகிறாயா? ரூப்பன், ரங்கநாத்தின் ஆவலைச் சற்றுத் தணியேன்."

ரூப்பன் வியாபாரத் தோரணையுடன் கூறினான்: "அப்பா, காலேஜ் மானேஜர்; ஆசிரியர்கள் இருப்பதும், போவதும் இவர் கையில் தான் இருக்கிறது." தன் கூற்றின் எதிர்விளைவை ரங்கநாத்தின் முகத்திலிருந்து அறிந்தவாறே தொடர்ந்தான்: "இம்மாதிரியான மானேஜர் இந்த நாடு முழுவதிலும் கிடைக்க மாட்டார். நல்லவனுக்கு நல்லவர், பொல்லாதவனுக்கு ஜன்மப் பகைவன்."

ரங்கநாத் இவ்வறிவிப்புகளை மௌனமாக விழுங்கிக்கொண்டான். ஏதோ சொல்லவேண்டுமே என்பதற்காக, "கோவாபரேடிவ் யூனியன் விஷயம் எப்படி இருக்கிறது? மாமா அதிலும் ஏதோவாக இருந்தாரே" என்றான்.

"இருந்தார் என்ன? இப்பொழுதும் இருக்கிறார்" என்றான் ரூப்பன் காரமாக. "மானேஜிங் டைரக்டராய் இருந்தார்;" இருக்கிறார்; இருப்பார். வைத்தியராக இருந்தார், இருக்கிறார், இருப்பார்.

"ஆங்கிலேய அரசாட்சிக் காலத்தில் அவர் ஆங்கிலேயரிடம் தமது பணிவையும், சிரத்தையையும் வெளியிட்டார். சுதந்தர ஆட்சியில், தன் நாட்டு அதிகாரிகளிடம் சிரத்தையும் பக்தியும் காண்பிக்கலானார். அவர் நாட்டின் பழங்கால ஊழியர். சென்ற மகாயுத்தத்தில், நாட்டுக்கு ஜப்பான் படை எடுப்பின் ஆபத்து விளைந்த நேரத்தில் கிழக்கத்தியப் போர்க்களங்களில் போரிட ஏராளமான வீரர்களை ராணுவத்தில் சேர்ப்பதில் ஈடுபட்டிருந்தார். இப்பொழுதோ, அவசியம் நேரிடும் சமயத்தில் இரவோடிரவாகக் கட்சிக்கு ஆள் சேர்க்கும் பணியில் நூற்றுக்கணக்கான மெம்பர்களைப் பதிவு செய்கிறார். முன்னரும் அவர் கோர்ட்டில் ஜூரியாகவும், ஆலோசகராகவும், சிவில் வழக்குகளில் சொத்துக்களின் பாதுகாவலராகவும், கிராமத்து ஜமீன்தார்களுக்கு வரி வசூலிப்பவராகவும் இருந்து மக்களுக்குச் சேவை புரிந்து, தற்சமயம் கோவாபரேடிவ் யூனியனின் மானேஜிங் டைரெக்டராகவும், கல்லூரியின் மானேஜராகவும் பணியாற்றுகிறார். உண்மையில் அவர் இப்பதவிகளில் வேலை பார்க்க விரும்பவில்லை. ஏன் தெரியுமா? அவருக்குப் பதவிகளில் ஆசையில்லை, மோகமில்லை. ஆனால் இந்த ஊரில் இத்தகைய பொறுப்பு வாய்ந்த பதவிகளைச் சமாளிக்க, நிர்வகிக்கத் தகுதியானவர்கள் வேறொருவரும் இல்லை. அவ்வூரிலிருந்த அத்தனை இளைஞர்களும், இந் நாட்டின் ஏனைய இளைஞர்களைப் போலவே உபயோகமற்றவர்கள். இதனால்தான் பாவம், இந்த வ்யதான காலத்தில் அவர் இந்தப் பதவிகளைக் கட்டிக் காத்து வரவேண்டியிருக்கிறது."

'வயோதிகம்!' வைத்தியரைப் பொறுத்த வரையில் இந்தச் சொல்லை, கணக்கு மாதிரி ஏற்றுக் கூற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருந்தது. ஏனெனில் கணக்குப்படி அவருக்கு 62 வயதாகிறது. முக்கிய நகரங்களில் வாழ்ந்து வளம் பெற்றவாறு,

நாட்டுப் பணி புரியும் நூற்றுக்கணக்கான மகா புருஷர்களைப் போன்றே இவரும் வயதாகிவிட்டபோதிலும் கிழவராக வில்லை. அந்த மகா புருஷர்களைப் போலவே வைத்தியர், தாமும் இறந்தால்தான் கிழவனுவேன் என்ற பிரதிக்ஞை எடுத்துக் கொண்டிருந்தார். 'நீ இறந்துவிட்டாய்' என மக்கள் நம்பக மாய்த் தெரிவிக்காத வரையில் தம்மை உயிருடன் இருப்பவ ராகக் கருதி நாட்டிற்கு நற்பணி புரிந்துகொண்டே இருப்பவர் களில் இவரும் ஒருவர். ஒவ்வொரு மாபெரும் அரசியல்வாதி யைப் போன்றே இவருக்கும் அரசியலில் பற்றில்லை. அரசியலை வெறுப்பவர். அரசியல்வாதிகளைக் கிண்டல் செய்பவர். காந்திஜி யைப் போலவே அரசியலில் எந்தவொரு குறிப்பிட்ட பதவி யையும் ஏற்கவில்லை. இவர் இளந்தலைமுறையினரை உற்சாகப் படுத்த, ஊக்குவிக்க விரும்பியதே இதற்குக் காரணம். ஆனல் இந்தக் கோவாபரேடிவ், கல்லூரி போன்ற விவகாரங்களில் மக்கள் அவரைக் கட்டாயப்படுத்திவிட்டனர். வேறு வழியின்றி அவர் இப்பொறுப்பையெல்லாம் மேற்கொண்டிருக்கிறார்.

வைத்தியரின் இன்னொரு தொழில் வைத்தியம் பார்ப்பது. அவர் நோய்களை இரு வர்க்கங்களாகப் பிரித்து வைத்திருந் தார். வெளிப்படையான நோய்கள், ரகசிய நோய்கள். இவ்விரு நோய்களுக்குமே அதனதன் இயல்புபடி வெளிப்படையாக வும், ரகசியமாகவும் அவர் வைத்தியம் செய்து வந்தார். நோய் களைப் பொறுத்தவரையில் பிரம்மசரியத்திலிருந்து வழுவுவது தான் நோய்களுக்குக் காரணமென்பது அவரது 'தியரி'. கல்லூரி மாணவர்களின் ஒளியற்ற, ஒட்டிக் கிடக்கும் முகங் களைப் பார்த்ததும் அவர் தமது தியரியைப் பற்றிப் பேசத் துவங்கிவிடுவார். ஏழ்மையினுலும், நல்ல சத்துள்ள உணவின் பற்ருக் குறையினுலும் மாணவர்கள் ஆரோக்கியம் இப்படிச் சீர்குலைந்திருக்கிறது என யாரேனும் கூறினுல்; அவன் பிரம்ம சரியத்தின் மகத்துவத்தை ஏற்க மறுத்தே, இப்படிச் சுற்றி வளைத்துப் பேசுவதாக அவர் நினைத்தார். பிரம்மசரியத்தை ஏற்காதவன் ஒழுக்கம் கெட்டவன். இந்நிலையில் பார்த்தால் ஏழ்மை, இல்லாமையைப் பற்றிப் பேசுபவனும் அவர் நோக் கில் ஒழுக்கமில்லாதவனே.

ஒருநாள் அவர் ரங்கநாத்துக்குப் பிரம்மசரியத்தின் சிறப்பி யல்புகளைப் பற்றி விளக்கினுர். அவர் கூறிய புதுமையான உடற்கூற்றுச் சாத்திரத்தின்படி, பல மணங்கு உணவு சாப்பிடு

வதின் மூலம் சில விசம் ரசம்' உண்டாகிறது. இந்த ரசத்தி லிருந்து ரத்தமும், பல்வேறு பொருள்களும் ஏற்பட்டுக் கடைசி யில் வீரியத்தின் ஒரு துளி உண்டாகிறது. வீரியத்தின் ஒரு துளி உருவாக என்ன செலவாகிறதோ, அது அணுக்குண்டு தயாரிப் பதில் கூடச் செலவாகாது என்று அவர் அடித்துக் கூறினார்.

இதைக் கேட்டபொழுது 'இந்தியாவில் ஏதேனும் விலையுயர்ந்த பொருள் இருக்குமாயின் அது வீரியமாகத் தானிருக்க வேண் டும்' என ரங்கநாத்துக்குத் தோன்றியது. "வீரியத்துக்கு ஆயிர மாயிரம் எதிரிகள். எல்லாரும் அதைக் கொள்ளையடிப்பதற்கே முளைத்திருக்கின்றனர். எந்த உபாயத்தினாலாவது வீரியத்தைக் காப்பாற்றிக்கொண்டு விட்டால் தன் நடத்தையையே காப் பாற்றிக்கொண்டு விட்டாற்போல்தான்" என்றார் வைத்தியர். அவர் பேச்சிலிருந்து, ஒரு காலத்தில் இந்நாட்டில் வீரியப் பாதுகாப்பு வலிந்துரைக்கப்பட்ட விஷயமாக இருந்தது; ஒரு புறம் பாலும் தயிரும் ஆறாகப் பெருகி ஓடியதுபோல் மற்றொரு புறம் வீரியமும் வெள்ளமாய் ஓடியது என்றும் தோன்றியது. கடைசியாக அவர் சம்ஸ்கிருதத்தில் ஒரு சுலோகம் கூறினார். அதன் பொருள்: வீரியத்தின் ஒரு துளி வீணாவதால் ஒருவன் இறக்கிறான். ஒரு துளியைப் பெருக்கிக்கொள்வதால் நல் வாழ்வை அடைகிறான். சம்ஸ்கிருத மொழி காதில் விழுந்ததுமே சனிஸ்வரன் இரு கரங்களையும் குவித்தவனாய் "ஜய் பகவான்" என்றான். பின்னர் தரையில் சிரம்படிய வணங்கியவன், பக்தி ஆவேசத்தில் உடலின் பிற்பகுதியைக் கூரையை நோக்கி உயர்த்திவிட்டான். வைத்தியரின் உற்சாகம் கரை புரள ஆரம் பித்துவிட்டது. ரங்கநாத்தை நோக்கி, "பிரம்மசரியத்தின் தேஜ ஸைப் பற்றி என்ன சொல்ல? கொஞ்ச நாட்களுக்குப் பின் கண் ணாடியில் உன் முகத்தைப் பார்த்துக்கொள். அப்பொழுது தெரியும்" என்றார்.

ரங்கநாத் தலை அசைத்தவாறே உள்ளே போக எழுந்தான் மாமாவின் சுபாவம் அவனுக்குத் தெரிந்ததுதான். ரூப்பன் கத வருகில் நின்றுகொண்டிருந்தான். வைத்தியரின் நீண்ட பிரசங் கம் அவனை எவ்விதத்திலும் பாதித்ததாகத் தெரியவில்லை. ரங்க நாத்தின் காதருகில் வந்து கிசுகிசுத்தான்: "முகத்தில் தேஜஸ் சுடர் விட வேண்டுமானால் இந்தக் காலத்தில் பிரம்மசரியம் எதற்கு? கிரீமையும் பவுடரையும் உபயோகித்தால் தானாக வருகிறது."

# அத்தியாயம் 5

மறுபிறவி உண்டு என்ற சித்தாந்தம் சிவில் கோர்ட்டில் தான் கண்டுபிடிக்கப் பட்டிருக்க வேண்டும். ஏனெனில் தங்கள் வழக்குகள் முடிவு பெறுமலேயே தாங்கள் இறக்கின்றோமே என்ற ஏக்கத்துடன் வாதி, பிரதிவாதிகள் உயிர் துறக்க வேண்டிய அவசியம் இதனால் ஏற்படாமல் போகுமல்லவா? வழக்கின் தீர்ப்பைக் கேட்க மறுபிறவி இருக்கவே இருக்கிறது என்ற நிம்மதியுடன் உயிர் துறக்கலாம்.

வைத்தியரின் வீட்டு வெளித் திண்ணையில் அமர்ந்திருந்தவன் சுமார் ஏழு ஆண்டுகளுக்கு முன் கோர்ட்டில் சிவில் வழக்கொன்று தொடுத்திருந்தான். இதனால் அவன் பேச்சுவாக்கில், பாவம், புண்ணியம், அதிர்ஷ்டம், பகவான், அடுத்த பிறவியின் காரிய திட்டங்கள் முதலியவற்றை விவரமாக எடுத்துரைப்பதும் இயல்புதானே! ஊரார் அவனை 'லங்கட்' அதாவது 'நொண்டி' என்று அழைத்தனர். நெற்றியில் கபீர் சம்பிரதாயத்தைக் குறிக்கும் திலகம். கழுத்தில் துளசிமாலை, அநுபவத்தின் சுவடு பதிந்த தாடியுடன் கூடிய முகம், மெலிந்த உடல், இறுக்கமான பனியன், ஒரு காலில் முழங்கால் மட்டுமே இருந்தது. ஊன்றுகோலொன்று வெட்டப்பட்ட காலின் தேவையைப் பூர்த்தி செய்தது எனலாம். தன் கையினாலேயே தன் முதுகில் ஓங்கி ஓங்கி நாலு கசையடி கொடுத்துக் கொண்ட ஆதிகாலத்துக் கிறிஸ்துவத் துறவிகளைப் போன்றதொரு பாவம் முகத்திலே.

பங்கி பானம் நிறைந்த டம்ளரை அவனிடம் நீட்டியவாறே சனிஸ்வரன் கூறினான்: "இந்தா! பிடி! குடித்துவிடு! மசாலாவெல்லாம் ரொம்பப் பிரமாதமாய்ச் சேர்த்திருக்குது."

தன்னிரக்கம் கொண்டவர்களிலிருந்து அதிகமாகச் சாப்பிட்டு விட்டவர்கள்வரை, தங்கள் அசதியைப் பிரதிபலிக்க அசாதாரணமான பாவமொன்றை வரவழைத்துக் கொள்வார்களே, அதுபோல நொண்டி நீண்டதொரு பெருமூச்செறிந்தவ

ஞய்க கண்களை மூடிக்கொண்டான். சனிஸ்வரன் அவனை விட்டு விட்டு, டார்வினின் பரிணாம சித்தாந்தத்தை உறுதிப் படுத்துபவன் போல் ஒரு குரங்குத் தாவு தாவிக் கூடத்தின் உள்ளே பாய்ந்தான். அங்கேதான் பிரின்ஸ்பால், குமாஸ்தா, வைத்தியர், ரங்கநாத் யாவரும் அமர்ந்திருந்தனர். காலை பத்து மணி இருக்கும்.

சனிஸ்வரன் அமிருத பானத்தின் தம்ளரைப் பிரின்ஸ் பாலிடம் நீட்டினன். மீண்டும் அதே பல்லவி: "குடியுங்கள், மாஸ்டர் சாகப்! பிரமாதமான கலவை யெல்லாம் சேர்த் திருக்குது."

பிரின்ஸ்பால் வைத்தியரை நோக்கி, "கல்லூரி வேலையை யெல்லாம் அப்படியே விட்டு விட்டு வந்திருக்கிறேன். இதைச் சாயந்திரத்துக்கு வைத்துக் கொள்ளலாமே."

வைத்தியர் அன்புடன் பகன்றார்: "சாயந்திரம் மீண்டும் பருகினல் போகிறது".

"கல்லூரியை விட்டு விட்டு வந்திருக்கிறேன்" என்றார் அவர் மீண்டும்.

ரூப்பன் கல்லூரி செல்லத் தயாராகி விட்டான். தினமும் போல் வேட்டியின் நுனி தோளிலே கிடந்தது. வாயில் வெற்றிலை. தலையை வாரிக்கொண்டிருந்தான். புஷ்ஷர்ட், அது அழுக்காக இருந்தாலும் விலையுயர்ந்த துணியாக இருந்ததால் அணிந்து கொள்ளலாம் என்பது அவனது கொள்கை. கையிலே ஒரு தடிமனை புத்தகம். முக்கியமாகச் 'சிவிக்ஸ்' பாட வகுப்பில் படிப்பதற்காக எடுத்துச் செல்லப்படுகிற இந்தப் புத்தகத்தின் பெயர் 'பாக்கெட் ஒற்றன்'. பாக்கெட்டில் இரண்டு பேனு; ஒன்றில் சிவப்பு மையும் மற்றொன்றில் நீல மையும் போட்டுக் கொள்ள. ஆனல் தற்சமயம் இரண்டிலுமே மசியில்லை. கையிலிருந்த கடிகாரத்தைப் பார்த்தால் சூதாடுகிறவன் தன் கைக் கடிகாரத்தைக் கூடப் பணயம் வைத்து விடுவான். சூதாடுகிறவர்களின் பொருளை அடகுக்கு எடுத்துக் கொள்பவனுக்கு விலையுயர்ந்த கடிகாரம் கூடப் பத்து ரூபாய்க்குக் கிடைத்து விடும் என்பது புரிந்து விடும். வெளியே புறப்பட்ட ரூப்பனின் காதில் பிரின்ஸ்பால் கூறியது விழுந்தது. வெளியிலிருந்த படியே அவன், "கல்லூரியை நீங்கள் எப்பொழுது விட வில்லை? அந்தக் கல்லூரிதான் உங்களை விடமாட்டேன் என்கிறது" என்ருன்.

பிரின்ஸ்பால் வெட்கத்தால் குன்றியபோதும் சிரித்துக் கொண்டு உரத்த குரலில், "ரூப்பன் சரியாகத்தான் சொல்லு கிறான்" என்றார்.

சனிஸ்வரன் லபக்கெனப் பாய்ந்து அவர் கரத்தைப் பற்றிக் கொண்டான். "அப்படி யென்றால் இதைக் கூறியதற்காக வாவது போடுங்க ஒரு கிளாஸ்" என்றான்.

பிரின்ஸ்பால் அமுதபானம் அருந்துவதை வைத்தியர் மகிழ்ச்சியுடன் பார்த்துக்கொண் டிருந்தார். குடித்தபின் பிரின்ஸ்பால் அவரை நோக்கி, "உண்மையிலேயே பிரமாத மான கலவைதான்" என்றார்.

"பங்கி...பெயரளவுக்குத்தான் போட்டிருக்கிறது" என்றார் வைத்தியர். "இல்லை என்று கூடச் சொல்லலாம். உண்மையில் போட்டிருப்ப தெல்லாம், பாதாம், பிஸ்தா, கொட்டைத் திராட்சைதான். பாதாம் புத்தியையும், வீரியத்தையும் தூண்டி விடும். கொட்டைத் திராட்சை மல மிளக்கி. இதில் ஏலம் கூடப் போட்டிருக்கிறது. இது சீதள குணமுடையது. இதனால் வீரியம் விரயமாகாது; நன்றாய் உறுதிப்படும். இந்தப் பானத் தைக் கொண்டு நான் ரங்கநாத் மீது ஒரு சிறிய சோதனை செய்து பார்க்கலாமென இருக்கிறேன்."

பிரின்ஸ்பால் கழுத்தை உயர்த்தி ஏதோ கேட்க வாயெடுப்ப தற்குள் வைத்தியர் தொடர்ந்தார். "கொஞ்ச நாட்களுக்கு முன் இவனுக்குக் காய்ச்சல் வந்தது. பலவீனமாகிவிட்டது. இதற் காகத்தான் இவனை இங்கு வரச் சொன்னேன். இவன் அன்றா டம் செய்யவேண்டிய வேலைகளைத் திட்டமிட்டாகிவிட்டது. புஷ்டியான பொருள்களில் பாதாமையும் சேர்த்திருக்கி றேன். கஞ்சா இலை இரண்டொன்று. பார்த்துக்கொண்டே இருங்கள், ஆறு மாதத்தில் இவன் இங்கிருந்து எப்படிப் போகி றான் என்று பாருங்கள்."

குமாஸ்தா இடைவெட்டினார். "சுண்டெலி மாதிரி வந்தார்; காண்டாமிருகம்போல் திரும்பிப் போவார், இல்லையா சித்தப்பா?"

குமாஸ்தா வைத்தியரைச் 'சித்தப்பா' என்று அழைக்கும் போதெல்லாம், பிரின்ஸ்பாலுக்குத் தாம் அவரை "அப்பா" என்று அழைக்க முடியவில்லையே என்று மனத்துக்குள் ஒரே வருத்தமாக இருக்கும். இப்பொழுதும் அவர் முகம் வாடி விட்டது. எதிரேயிருந்த பைல்களைப் புரட்டலானார்.

இதற்குள் 'நொண்டி' வாயிற்படிக்கு வந்து விட்டான். சாத்திரப்படி சூத்திரர்கள் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்று விதிமுறைகள் இருந்தனவோ அவற்றின்படியே வாயிற்படியிலேயே கோழி மாதிரி குனிந்து வைத்தியரைக் கும்பிட்டான். இதிலிருந்து இன்றும் சாஸ்திரந்தான் யாவற்றுக்கும் மேலானது. ஜாதி முறைகளை அறவே ஒழிப்பது என்பதும் அதற்கான முயற்சிகளும் வெறும் ஏமாற்று வித்தை அல்லது மிகவும் கவர்ச்சி நடவடிக்கைகள் என்பதும் வெளிப்பட்டது. நொண்டி எதையோ யாசிப்பவன் போன்ற குரலில் இறைஞ்சினான். "நான் வரட்டுமா ஐயா?"

வைத்தியர் பெருமிதத்துடன் பதிலிறுத்தார்: "போய் வாப்பா! நீ ஒரு தர்மப் போராட்டமே நடத்துகிறாய். போராடு. இதில் நான் உதவி செய்ய என்ன இருக்கிறது?"

"நல்லதுங்க ஐயா! இந்தப் போராட்டத்தில் நீங்க என்ன செய்ய முடியும்? ஏதாவது சிபாரிசு கிபாரிசு என்று தேவைப் பட்டால் இங்கு வந்துதான் உங்க வாசலில் முறையிட்டுக் கொள்வேன்" என்றான் நொண்டி சாதாரணமாக.

மீண்டும் தரையில் குனிந்து அவருக்கு வணக்கம் செய்து விட்டு ஒற்றைக் காலில் ஊசலாடியவாறே அவன் அவ்விடம் விட்டகன்றான். அவன் சென்றதுமே வைத்தியர் உரக்க நகைத்தார். "ஹூம், குழந்தையாக இருக்கிறான்."

எப்பொழுதும் அவர் அதிகமாகச் சிரிக்கமாட்டார். இதனால் திடுக்கிட்ட ரங்கநாத் அவரை நோக்கினான். சிரிப்பினால் வைத்தியரின் முகத்தில் மென்மை விரவி நின்றது. தலைவரின் மிடுக்குக்குப் பதில் கனவானுக்குரிய பெருந்தன்மை மிளிர்ந்தது.

ரங்கநாத் கேட்டான்: "இவன் எதற்காக வழக்காடிக் கொண்டிருக்கிறான்?"

பிரின்ஸ்பால் எதிரே கிடந்த ஃபைல்களையும், செக் புத்தகங்களையும் திரட்டலானார். இவற்றை ஒரு சாக்காகக் கொண்டு தாமே இடையிடையே காலை வேளையில் அமிர்தபானம் அருந்த அவர் இங்கு வந்துகொண்டிருக்கிறார். ரங்கநாத்தின் கேள்வி காதில் விழுந்ததுமே அவர் கரங்கள் தாமாக நின்றுவிட்டன. "தாலுக்கா ஆபீஸிலிருந்து இவனுக்கு ஒரு தஸ்தாவேஜு நகல் எடுக்க வேண்டியிருந்தது. லஞ்சம் கொடுப்பதில்லையென இவன் பிரதிக்ஞை செய்திருக்கிறான். அதனால் சட்டப்படி நான்

நகல் எடுத்துக் கொள்வேன் என்கிறான். ஆனால் அந்த நகல் எடுத்துத் தரும் குமாஸ்தாவும், 'நான் லஞ்சம் வாங்கமாட்டேன். முறைப்படித்தான் நகலைத் தருவேன்' என்கிறார். இதுதான் வழக்கு!'' என்றார் பிரின்ஸ்பால்.

ரங்கநாத் சரித்திர பாடத்தில் எம். ஏ. எத்தனையோ யுத்தங்கள், போராட்டங்களின் வரலாற்றைப் படித்திருக்கிறான். காரணங்களைக் கண்டறிந்திருக்கிறான். பாரதத்தைக் கைப்பற்றவேண்டிச் சிகந்தர் படை எடுத்து வந்தான். அவன் கைப்பற்றிவிடக் கூடாதேயெனப் புரு எதிர்த்து நின்றான். இதனால் சண்டை நடந்தது. நான் பத்மினியை என்னுடையவளாக்கிக் கொள்வேன் என்றான் அல்லாவுதீன். தரமுடியாது என்றான் ராணா. போர் நடந்தது. எல்லா யுத்தங்களுக்கும், போர்களுக்கும் அடிப்படைக் காரணமே இவைதான். ஒருவன் வேண்டும் என்பான்; மற்றவன் முடியாது என்பான். பிறகு சண்டை மூளும்.

ஆனால் இங்கேயோ, நொண்டி சட்டப்படி நகல் எடுப்பேன் என்கிறான். குமாஸ்தாவும் சட்டப்படிதான் கொடுப்பேன் என்கிறார். இருந்தாலும் வழக்கு நடக்கிறது. தர்ம யுத்தம் தொடருகிறது.

குமாஸ்தாவே விளக்கத் தொடங்கினார்:

''இவை எல்லாம் இந்த ஊர்க்காரர்களின் விஷமத்தனம்; புரிவது கடினம்.''

''இங்கிருந்து பத்து மைல் தூரத்தில் அவருடைய கிராமம். மனைவி இறந்துவிட்டாள். பிள்ளைகளிடம் இவருக்குக் கோபம். தன் வரையில் அவர்கள் இறந்துவிட்டதாக நினைக்கிறான். சாமி பக்தி உடையவன், நல்லவன். கபீர், தாதுவின் பஜனைப் பாடல்களைப் பாடிக்கொண்டிருப்பான். பாடிப் பாடிக் களைத்து விட்டான் போலிருக்கிறது. சிவில் வழக்குத் தொடுத்து விட்டான்.''

''இந்த வழக்கிற்கு ஒரு பழைய தீர்ப்பின் நகல் தேவையாக இருந்தது. அதற்காக முன்னரே தாலுக்கா ஆபீஸிற்கு விண்ணப்பம் செய்திருந்தான். விண்ணப்பத்தில் ஏதோ தவறு இருந்தது போலும். அது செல்லுபடியாகவில்லை. அதன் பேரில் அவன் மற்றொரு விண்ணப்பம் கொடுத்தான். சில நாட்களுக்குப் பின் நகலைப் பெற்றுக்கொள்ள தாலுக்கா ஆபீஸிற்கு இவன் போனான். நகலெடுக்கும் குமாஸ்தா ரொம்ப அயோக்

கியன். ஐந்து ரூபாய் கேட்டிருக்கிறான். நொண்டி வந்து 'ரேட் இரண்டு ரூபாய் தானே' என்றானாம். அவ்வளவுதான். வார்த்தை தடித்து விட்டது. நாலு வக்கீல்கள் வேறு அங்கு நின்றுகொண்டிருந்திருக்கிறார்கள். அவர்கள் அந்தக் குமாஸ்தாவிடம், 'போனால் போகிறது, இரண்டு ரூபாய்க்கு ஒத்துக்கொள்ளப்பா. பாவம் நொண்டியாக இருக்கிறான். நகல் கிடைத்ததும் பார் உன்னைத் துதி பாடுவான்' என்று கூறியிருக்கிறார்கள். ஆனால் அந்தக் குமாஸ்தா கடுகளவுகூட அசையவில்லை. ஒரே வெறி கொண்டவனாகி விட்டான். 'ஆண் பிள்ளை யென்றால் வார்த்தை ஒன்றுதான். சொன்னபடிதான் வாங்கிக். கொள்வேன் முடியாது' என்று அடம் பிடித்தான்.

"வக்கீல்கள் நொண்டியைச் சமாதானப்படுத்த முயன்றனர். பாவம், 'குமாஸ்தா சம்சாரி. பெண்கள் கல்யாணத்துக்கு நிற்கின்றனர். இதனால்தான் ரேட்டை உயர்த்திவிட்டார். ஒத்துக்கொண்டு ஐந்து ரூபாயைக் கொடுத்துவிடு' என்றனர். ஆனால் இவன் முறைத்துக்கொண்டு விட்டான். 'முடியாது. இவன் வாங்குகிற சம்பளத்தைக் குடித்து அழிக்கிறான். பெண்கள் கல்யாணத்துக்கு லஞ்சம் வாங்குகிறான்' என்றான். அவ்வளவுதான். குமாஸ்தாவுக்குக் கோபம் வந்து விட்டது, தலைக்கு மேல்! 'சரி, போ! நீ சொன்னாய் அல்லவா? அதன்படி நான் லஞ்சம் வாங்கப் போவதில்லை. செய்ய வேண்டியதைச் சட்டப்படி முறைப்படி செய்வேன். நீ போ' என்று கத்திவிட்டான். வக்கீல்கள், பாவம் எவ்வளவோ சொன்னார்கள். 'நொண்டி நல்லவன். அவன் சொல்வதைத் தவறாக எடுத்துக் கொள்ளாதே' என்றெல்லாம் கூறியும் அவன் கோபம் தணியவேயில்லை. மெர்க்குரி ஏறியது ஏறியதுதான், இறங்கவில்லை."

"உண்மைதான் ரங்கநாத் பாபு! நொண்டி சொன்னது பொய்யல்ல. திருடுவது கூடப் பெண்களுக்குக் கல்யாணம் செய்வதற்கு என்று ஒரு சாக்காகப் போய்விட்டது. ஒருவன் லஞ்சம் வாங்கினால் மற்றொருவன் என்ன செய்வான்? 'பாவம், பெரிய குடும்பம்! பெண்களுக்குக் கல்யாணமாகவேண்டுமே!' என்கிறான். செய்கிற அயோக்கியத்தனம் எல்லாம் பெண்கள் கல்யாணத்தில் வந்து விடிகிறது."

"எதுவானால் என்ன? இப்பொழுது நொண்டிக்கும் நகலெடுக்கும் குமாஸ்தாவுக்கும் ரகளை. இப்பொழுதும் லஞ்சம் பற்றிப் பேச்சுக்குப் பேச்சு விதண்டாவாதம். அர்த்தமற்ற சண்டை.

முன் காலத்தில் காரியம் சரியாக நடந்தது. பழைய காலத்து மனிதர்கள் வார்த்தை பிறழ மாட்டார்கள். ஒரு ரூபாய் வைத்தால் போதும்; மறுநாள் நகல் ரெடியாக வந்துவிடும். இப்போதெல்லாம் பள்ளிக்கூடத்திலிருந்து புதிதாக, அநுபவமற்றவர்கள் ஆபீஸில் நுழைந்து விடுகிறார்கள். ரேட்டைக் கெடுத்து விடுகிறார்கள். இவர்களைப் பார்த்து அந்தப் பழங்காலத்து ஆட்களும் தகராறு செய்ய ஆரம்பிக்கிறார்கள். என்ன செய்ய? இந்த லஞ்சம் கேட்பது, கொடுப்பது இரண்டுமே ரொம்பத் தகராறு பிடித்த விஷயங்கள்.

"நொண்டிக்கும் கோபம் வந்து விட்டது. தன் கழுத்திலிருந்த துளசி மாலையைத் தொட்டு, 'சரி ஐயா! நீ சட்டப்படி வேலை செய்தால் நானும் சட்டப்படி பெற்றுக்கொள்கிறேன், இனி உனக்கு ஒரு செல்லாக் காசுகூடக் கிடைக்காது. நான் விண்ணப்பம் கொடுத்தாகிவிட்டது. இன்றில்லாவிட்டாலும் என்றாவது ஒரு நாள் நம்பர் வந்துதானே ஆகவேண்டும்' என்று சூளுரைத்துவிட்டான்."

"அத்துடன் விட்டானா? நேராகத் தாசில்தாரைப் போய்ப் பார்த்து விஷயத்தையெல்லாம் கூறிவிட்டான். தாசில்தார் சிரித்துவிட்டு, 'சபாஷ், நீ செய்தது சரிதான். இந்தக் கொடுக்கல் வாங்கல் விவகாரமெல்லாம் வைத்துக்கொள்ளாதே. கிரமப்படி உனக்கு நகல் வந்து சேரும்' என்று சொல்லி இருக்கிறார். அவர் பேஷ்காரைக் கூப்பிட்டு, 'இதோ பார், நொண்டி நாலு மாதமாய் அலைகிறான். இனிமேல் ஒழுங்காக வேலையைக் கவனிக்க வேண்டும். பாவம், அவனைத் தொந்தரவு செய்யாதீர்கள்' என்றதும், பேஷ்கார், 'சார், இந்த நொண்டி மிகப் பிடிவாதக்காரன். தாங்கள் இந்த விஷயத்தில் தலையிடாதீர்கள்' என்று சொல்லி இருக்கிறான். அவ்வளவுதான். நொண்டி, பேஷ்காரிடம் கோபித்துக்கொண்டு விட்டான். சரமாரியான வாய்ச் சண்டை; தாசில்தார் குறுக்கிட்டுச் சமாதானம் செய்து வைத்தார்.

"நகலெடுக்கும் குமாஸ்தா ஏதாவதொரு குறையைக் கண்டுபிடித்து, தன் விண்ணப்பத்தைத் தள்ளிவிடுவான் என்று நொண்டிக்கு நன்றாய்த் தெரியும். இந்த விண்ணப்பம் இருக்கிறதே, அதற்கு உயிர், எறும்பு மாதிரி. யார் வேண்டுமானாலும் நசுக்கித் தூக்கி எறிந்து விடலாம்; நிராகரித்தும் விடலாம். கோர்ட் ஸ்டாம்பு ஒட்டியது சரியில்லை; குறைவாக இருக்கிறது. விலாசம் சரியில்லை. நமூனா சரியாகப் பூர்த்தி செய்யப்படவில்லை. இப்படி

ஏதோ ஒன்று நோட்டீஸ் போர்டில் எழுதித் தொங்கவிடப் படுகிறது. அதில் கொடுக்கப்பட்டிருக்கும் தேதிக்குள் விண்ணப்பத்தைத் திருத்தாவிட்டால் அது தள்ளுபடியாகி விடும்.

"இதனால் நொண்டி முழு மூச்சுடன் ஏற்பாட்டில் இறங்கியிருக்கிறான். கிராமத்தை விட்டு வந்து விட்டான். தன் வீட்டைப் பூட்டியாகி விட்டது. விடுவாசல் என்ன? நடவு, பயிர், அறுப்பு, மாடு, கன்று எல்லாப் பாரத்தையும் கடவுள்மேல் போட்டு விட்டு வந்தாகி விட்டது. தன் சொந்தக்காரன் ஒருத்தன் வீட்டில் வாசம். தினமும் காலையிலிருந்து மாலை வரையில் நோட்டீஸ் போர்டைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருக்கிறான். நோட்டீஸ் போர்டில் தன் விண்ணப்பத்தைப் பற்றி ஏதாவது தகவல் இருந்து தனக்குத் தெரியாமல் போய்விடுமோ என்ற பயம் அவனுக்கு. ஒருமுறை அப்படியும் ஆகிவிட்டது.

"நகல் பிரதி வாங்குவதற்கு வழி முறைகள், சட்டதிட்டங்கள் யாவும் இப்போது அவனுக்கு அத்துபடியாகிவிட்டன. கட்டணம் பற்றிய பூரா விவரமும் மனப்பாடம். மனிதனுக்குக் கஷ்டகாலம் வந்தால்தான் அவன் போலீஸ் ஸ்டேஷனையும், கோர்ட்டையும் மிதிக்கிறான். நொண்டிக்கு இது கெட்டகாலம். ஆனால் இந்த முறை அவன் தாலுக்கா ஆபீஸின் மீது பாய்ந்திருக்கும் பாய்ச்சலில், பயல் நகல் பிரதியை வாங்கிக்கொண்டுதான் மூச்சுவிடுவான் போல் தோன்றுகிறது."

குமாஸ்தா ஒரு வழியாய்ப் பேசி முடித்துவிட்டு எழுந்தார். பிரின்ஸ்பால் சுற்றும் முற்றும் பார்த்தவராய், "எங்கே? பத்ரித் தம்பியைக் கண்ணிலேயே காணோம்" என்றார்.

"சொந்தக்காரர் ஒருத்தர் கொள்ளைக் கேஸில் மாட்டிக் கொண்டுவிட்டார், போலீஸ் லீலையைப் பற்றிக் கேட்பானேன்? தெரிந்த விஷயந்தானே! பத்ரி அங்கேதான் போயிருக்கிறான். இன்று வருவான்."

சனிஸ்வரன் வாயிற்படியில் உட்கார்ந்திருந்தான். மெள்ள சீழ்க்கை அடித்தவாறே, "வராத வரையில் நல்லது" என்றான்.

அமிர்தபானம் செய்த பிரின்ஸ்பாலுக்கு வேலை செய்யாமல் இருப்பது பாவம் என்பது அறவே மறந்துபோய் விட்டிருந்தது. ஒரு பெரிய திண்டைத் தம்மிடம் இழுத்து நிம்மதியாகச் சாய்ந்தவாறே, "ஏன்? என்ன விஷயம்?" என்றார்.

சனிஸ்வரன் தாழ்ந்த குரலில், "கோவாபரேடிவ் யூனியனில் பணத்தைக் கையாடிவிட்டார்கள். பத்ரி தம்பி காதில் விழுந்தால் சூபர்வைசரை அப்படியே விழுங்கிவிடுவார்" என்றார்.

பிரின்ஸ்பால் அதிர்ந்து போய்விட்டார். அதே கிசுகிசுத்த குரலில், "அப்படியா?" என்றார். வைத்தியர் கடுமையான குரலில் இடைவெட்டினார்: "என்ன இது! பெண் பிள்ளைபோல் கிசுமுசு என்ற பேச்சு? கோவாபரேடிவ் யூனியனில் பணத்தைக் கையாடிவிட்டால் என்ன பிரமாத விஷயம் அது? எந்த யூனியனில் இது நடக்கவில்லை?"

சற்றுப் பொறுத்துச் சமாதானம் சொல்லுவதுபோல், "நம் யூனியனில் கையாடல் எதுவும் நடக்கவில்லை. இதனால் ஜனங்கள் நம்மைச் சந்தேகத்தோடு பார்க்கலானார்கள். இனிமேல் நாங்கள் உண்மையானவர்கள் என்று நாம் சொல்லிக்கொள்ளலாம். கையாடல் நடந்திருக்கிறது, அதை வெளிப்படுத்திவிட்டோம், மறைக்கவில்லை என்று சொல்லவேண்டியதுதான்."

நீண்ட பெருமூச்சுடன் அவர் தம் பேச்சை முடித்துவிட்டார். "சரி. இதுவும் நல்லதாகத்தான் போயிற்று. ஒரு தொல்லை விலகியது, கவலை தீர்ந்தது."

பிரின்ஸ்பால் திண்டில் நிம்மதியாகச் சாய்ந்து கொண்டிருந்தார். கடைசியில் எல்லாரும் அறிந்த ஒரு விஷயத்தைத் திருவாய் மலர்ந்தருளினார்: "இந்தக் காலத்தில் எல்லாருமே அயோக்கியராகி விட்டார்கள்."

இந்தக் கருத்து இருக்கிறதே இது மிக மிக நல்ல கருத்து, பயன் உள்ளது. ஒவ்வொரு நல்ல மனிதனும் 'மல்ட்டி விட்டமின்' மாத்திரைகளைப்போல் இதைப் பிரதிதினமும் உணவுக்குப்பின் மூன்று தடவை விழுங்கலாம். ஆனால் குமாஸ்தாவுக்கு இது தனிப்பட்ட தாக்குதலாகப் பட்டதோ என்னவோ? "இவை எல்லாம் தனிப்பட்டவர்களைப் பொருத்தது. நம் கல்லூரியில் இதுவரை அப்படியெல்லாம் ஒன்றும் நர்ந்துவிடவில்லையே" என்று ஆட்சேபக் குரல் எழுப்பினார்.

வைத்தியர் அவரை அந்நியோந்நியமான பாவனையுடன் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். கோவாபரேடிவ் யூனியினில் விதைக் கிடங்கிலிருந்து கோதுமை களவாடப்பட்டிருக்கிறது. இதைச் சுட்டிக் காட்ட விரும்பியவர்போல், "கல்லூரியில் எப்படிக் களவு போகமுடியும்? அங்கே கோதுமைக் கிடங்கு இல்லையே?" என்றார் வைத்தியர்.

நல்ல கிண்டல் இது. பிரின்ஸ்பால் சிரித்துவிட்டார். ஒரு முறை சிரிக்கவேண்டியதுதான். அப்புறம் அமிருத பானம் அதைச் சமாளித்துக்கொள்ளும். பிரின்ஸ்பாலின் சிரிப்பு நிற்கவேயில்லை. ஆனால் குமாஸ்தா, இது தனிப் பட்ட தாக்குதலோ என்ற சந்தேகத்தில் பீடிக்கப்பட்ட வராய்த் தோன்றினர். "ஆனால் சித்தப்பா! கல்லூரியில் நூற்றுக்கணக்கான உமிக்கிடங்கு இருக்கிறதே! ஒவ்வொருவர் மண்டையிலும் என்ன இருக்கிறது? உமி தான்!" என்றார்.

கௌரவமிக்க நமது பரம்பரையில், உண்மையான விஷயம் இரண்டு, மூன்று மணி நேரப் பேச்சுக்குப் பின்பே வெளிப் படுகிறது. அதனால் வைத்தியர் பிரின்ஸ்பாலை நோக்கி, "வேறு ஏதாவது விசேஷம் உண்டா?" என்று வினவினார்.

"ஒன்றுமில்லை. எல்லாம் அந்தக் கன்னாவின் விஷயந்தான். முந்தா நாள் வகுப்பில் கறுப்புக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு பாடம் நடத்திக்கொண்டிருந்தார். அப்படியே அந்த இடத்திலேயே பிச்சி விளாசிவிட்டேன். பையன்களைத் தன் பேச்சிலே மயக்கிக்கொண்டிருந்தான். நான் சொன்னேன்: 'இந்தாப்பா, இதோ பார், இங்கேயே உன் சுயரூபத்தை இழுத்து வெளியிலே விட நேருமா இல்லையா என்று பார்." பிரின்ஸ்பால் தன்னை மிகவும் கட்டுப் படுத்திக்கொண்டு தான் இருந்தார். ஆனால் வர வரத் தம் நிதானத்தை முற்றும் இழந்து விட்டார். முடிவில் அவர் வாயிலிருந்து பிக்—பிக்....என்ற.... ஒலி தான் வெளிவரலாயிற்று.

வைத்தியர் கம்பீரத்துடன் பேசினார்; "இப்படி நடந்து கொள்ளக்கூடாது. ஒவ்வொரு பெரிய தலைவனுக்கும் ஒரு விரோதி இருப்பான். எல்லாரும் தாங்களாகவே, தங்கள் தங்கள் விரோதியைப் பிடித்து வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இது தான் ஜனநாயகத்தின் சித்தாந்தம். நம்முடைய தலை வர்கள் எவ்வளவு பெருந்தன்மையுடன் தங்கள் விரோதிகளைச் சகித்துக்கொண்டிருக்கிறார்கள். எதிர்க் கட்சிகள் தங்கள் பாட்டுக்கு உளறிக்கொண்டிருக்கிறார்கள். தலைவர்கள் வாயைத் திறக்காமல் தம் இச்சைப்படி நடந்துகொண்டிருக்கிறார்கள். ஒருவரும் மற்றொருவரால் பாதிக்கப்படுவதில்லை. இது தான் லட்சிய எதிர்ப்பு. நீங்களும் இந்த வழியைத்தான் கடைப் பிடிக்கவேண்டும்."

அரசியலின் இந்த மூலாதாரக் கொள்கைகள் குமாஸ்தாவிடம் எத்தகைய பிரபாவத்தையும் ஏற்படுத்தவில்லை. "இதெல்லாம் ஒன்றும் நடக்காது சித்தப்பா! கன்னு மாஸ்டரை எனக்கு நன்றாகத் தெரியும். சரித்திரத்தில் எம். ஏ. ஆனால், தன் அப்பாவின் பெயர் கூடத் தெரியாது. பார்ட்டி விஷயத்தில் மட்டும் கெட்டிக்காரர். பையன்களைத் தன் வீட்டுக்கு அழைத்து அழைத்து மூளையைக் கலக்குகிறார். அவரை வழிக்குக் கொண்டு வர ஒரே வழிதான் இருக்கிறது. சமயம் பார்த்துப் பிடித்துப் பட்பட் என்று நாலு போடு போடவேண்டும்" என்றார்.

வைத்தியர் இதைக் கேட்டதும் பின்னும் ஆழ்ந்த யோசனையில் ஆழ்ந்து விட்டார். ஆனால் மற்றவர்கள் உற்சாகம் அடைந்தனர். பேச்சு, செருப்படி கொடுக்கும் முறையிலிருந்து பரம்பரை வரை வந்து விட்டது. சனிஸ்வரன் மிகவும் குதூகலத்துடன், "கன்னு மாஸ்டரை நாலு போடு போடும்போது என்னிடமும் சொல்லுங்கள். யாரையாவது செருப்பால் அடித்து ரொம்ப நாட்களாகி விட்டன. நானும் இரண்டொரு சாத்துச் சாத்துகிறேன்" என்றான். "பிய்ந்த செருப்பாக இருந்து, அதிலும் மூன்று நாட்கள் தண்ணீரில் ஊறி இருந்தால் அடிக்கும்போது நல்ல சத்தம் வரும். தூரத்திலிருப்பவர்களுக்குக்கூட யாருக்கோ செருப்படி நடக்கிறது என்று தெரிந்து விடும்" என்றான் ஒருத்தன். "படித்தவனைச் செருப்பால் அடிக்கவேண்டுமென்றால் அகிம்சைச் செருப்பால் அடிக்கவேண்டும். அடியும் நன்றாகப்படும். அதிகமான அவமதிப்பும் ஏற்படாது" என்றான் இன்னொருத்தன். "செருப்படி கொடுக்க ஒரு நல்ல முறை இருக்கிறது. எண்ணி எண்ணி நூறு அடி போடவேண்டும். 99-ஆவது அடிக்கு வந்ததுமே எண்ணிக்கையை மறந்துவிட்டுப் பழையபடி ஒன்று, இரண்டு என அடிக்கத் தொடங்கவேண்டும்" என்றான் திண்ணையிலிருந்த ஒருத்தன். நான்காமவன் இதை ஆமோதித்தவாறே, "செருப்படி கொடுக்க இதுதான் சரியான வழி. இதனால் தான் நான் நூறுவரை எண்ணிக்கையை நினைவு வைத்துக் கொள்ள ஆரம்பித்திருக்கிறேன்" என்றான்.

# அத்தியாயம் 6

ராமாதீனின் முழுப் பெயர் பாபு ராமாதீன் பீகம் கேட்வி பீகம்கேடா, சிவபால் கஞ்சை ஒட்டிய பாழாகிக்கொண் டிருந்த ஒரு சிறிய கிராமம். இரண்டொரு குடிசைகளில் நிலவரி சம் பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளில், பாபு ராமாதீனின் பழைய கவிதைகளில் அது வாழ்ந்துகொண் டிருந்தது.

பாபு ராமாதீன் குழந்தையாக இருந்தபோது, பீகம்கேடா ராகிமத்திலிருந்து கிளம்பி, ரெயில்வே லைன் ஓரமாகவே நடந்து நகரத்தை அடைந்துவிட்டார். அங்கிருந்து ஏதோவொரு ரெயிலில் ஏறி அமரவேண்டும் என எண்ணியவர், முன் கூட்டிய திட்டம் ஏதுமின்றியே ரெயிலேறிக் கல்கத்தாவை அடைந்தார். கல்கத்தாவில் ஒரு வியாபாரியிடம் வேலைக்கு அமர்ந்தார். முதலில் 'தபால் கொண்டு வருவது; பின்னர் சாமான்களை எடுத்துச் செல்வது' என்று சிற்றுள் வேலை பார்த்த அவர், பின்னர் அந்த வியாபாரியின் பங்குதாரராகவே ஆகி வியாபாரத்தையும் தொடங்கி விட்டார். முடிவில் வியாபாரம் முழுவதுமே அவர் கைக்கு வந்து விட்டது.

வியாபாரமோ, அபின் வியாபாரம். மேற்கேயிருந்து அபினி வந்தது. அதைப் பலவிதமாகப் பல ரூபமாகக் கல்கத்தாவின் பெரும்புள்ளிகள்ான வியாபாரிகளிடம் சேர்ப்பிப்பது இவர் வேலை. அங்கிருந்து நாட்டுக்கு வெளியே இதை அனுப்பும் தொழிலை அவர் விரும்பியிருந்தால் ஏற்றிருக்கலாம். ஆனால் அவருக்கு அத்தகைய பேராசை இல்லை. தம்முடைய தரகு வியாபாரத்தைச் சத்தமிடாமல் செய்துகொண் டிருந்தார். சமயம் கிடைக்கும்போது மேற்கத்திய ஜில்லாக்களிலிருந்து வருபவர்களிடம் தொடர்பு ஏற்படுத்திக் கொள்வார். அங்கே தம் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்களிடையே அவர் நல்ல பெயர் பெற்றிருந்தார் எனலாம். படிப்பு வாசனையற்ற அவரது

திறமையை வெகுவாகப் புகழ்ந்த அவர்கள், கல்லூரிப் பட்டம் இல்லாமலேயே தொழிலில் வெற்றி பெறுவது எப்படி என்பதைப் புரிந்துகொள்ளவும் முயன்றனர்.

அபின் வியாபாரத்தில் நல்ல வருமானம் உண்டு. மற்ற வியாபாரிகளுடன் இதில் நல்ல போட்டியும் இருந்தது. போட்டாப் போட்டியும் லாபமும் மிகுந்த இந்தத் தொழிலில் ஒரே ஒரு குறை; அதாவது இது சட்ட விரோதமானது என்பதுதான். இதைப் பற்றி யாரேனும் குறிப்பிட்டால் ராமாதீன்பாபு தம் நண்பர்களிடம் சொல்லுவது வழக்கம். "இதைப்பற்றி நான் என் செய்ய? சட்டம் என்னைக் கேட்டுக்கொண்டு இயற்றப்படவில்லையே."

அபினி விற்பனை சம்பந்தமாக, சட்டப்படி ராமாதீன் பாபு கைது செய்யப்பட்டு மாஜிஸ்டிரேட் முன்னர் ஆஜர் செய்யப்பட்டபோதும், அவர் இதே பல்லவியைத்தான் தொடர்ந்தார். ஆங்கில அரசாங்கத்தின் சட்டங்களை நிந்தித்து, மகாத்மா காந்தியடிகளை மேற்கோள் காட்டி, அந்நியர் ஆட்சி தன் இஷ்டம் போல், மனம் போனபடி சட்டங்களை உருவாக்கி யிருக்கிறது என்பதை எடுத்துரைக்க முயற்சி செய்தார். ஒவ்வொரு சிறு விஷயமும் குற்றமாகப் பட்டிருப்பதையும் தெளிவு படுத்தினார்.

"ஐயா! அபினி ஒரு செடியிலிருந்து உண்டாகிறது. செடி வளர்ந்ததும் அதிலிருந்து மிக அழகான வெண்ணிறப் பூக்கள் மலருகின்றன, ஆங்கிலத்தில் இதைப் 'பாப்பி' என்கிறார்கள். இதில் இன்னொரு வகையுண்டு. அதில் சிவப்பு மலர்கள் பூக்கும். துரைமார்கள் தங்கள் பங்களாக்களில் இந்தச் செடியை வளர்க்கிறார்கள். இதிலேயே மூன்றாவது வகையொன்று உண்டு. அதையே 'டபிள் பாப்பி' என்கிறார்கள். இவையெல்லாம் செடி கொடி, தாவர வகைகள் சம்பந்தப்பட்ட விஷயம். இதற்கும் குற்றத்துக்கும் என்ன சம்பந்தம்? அந்த வெள்ளைப் பூச்செடியிலிருந்துதான் பின்னால் இந்தக் கறுப்பு நிறப் பொருள் உண்டாகிறது. இது மருந்தாகவும் பயன்படுகிறது. இதனால்' இந்தத் தொழில் எப்படிக் குற்றமாகும்? இதைச் சட்டப்படி குற்ற மென்பது மிக மிக மோசமான சட்டமாகும்; அநியாயமாகும். எங்களை யெல்லாம் அடியோடு அழிப்பதற்காக இது ஏற்படுத்தப் பட்டுள்ளது.

இந்த நீண்ட பிரசங்கத்துக்குப் பின்பும் ராமாதீன் பாபுவுக்கு இரண்டாண்டுச் சிறைத் தண்டனை கிடைத்தது. அந்தக்

காலத்தில் இதற்குத் தண்டனை வழங்கப்பட்டுத்தான் வந்தது. எனினும் அவர் புரிந்த பிரசங்கந்தான் இதில் குறிப்பிடத்தக்க தாகும். தண்டனை பெறுவதற்கு முன் கோர்ட்டில் பிரசங்க மாரி பொழிந்த அவருக்கு, இம்மாதிரி நீண்ட பிரசங்கங்கள் ஆற்றி, புரட்சியாளர்களிலிருந்து அகிம்சாவாதிகள் வரை, தங்கள் கொள்கைக்காக உயிர் துறந்த மாபெரும் தியாகச் செம்மல்களாகி யிருக்கிறார்கள் என்பது தெரியும். இம்மாதிரி யான அறிக்கை மூலம் தாமும் அவர்களில் ஒருவர் ஆகலாம் என்ற நம்பிக்கையும் அவருக்கு இருந்தது. இது எளிது எனவும் அவர் கருதினார். ஆனால் சிறைத்தண்டனையை அநுபவித்து விட்டு வெளியே வந்த பிறகுதான் அவருக்கு, அபினிச் சட்டத்தை மீறுவதால் அல்ல, உப்பு வரிச் சட்டத்தை எதிர்த் தால் தான் தாம் தியாகச் செம்மலாக முடியும் என்பது புரிந் தது. சில நாட்கள் கல்கத்தாவில் இங்குமங்கும் சுற்றி அலைந் தார். பஜாரில் தமக்கு மதிப்பில்லை என்பது புரிந்ததும், அந்தத் துயரத்தில் இரண்டொரு கவிதைகளை உதிர்த்தார். பின்னர், இம்முறை டிக்கட் வாங்கிக்கொண்டு கிராமத்துக்கு ரெயிலேறி னார். வந்தவர் சிவபால் கஞ்சில் காலை ஊன்றிக் கொண்டார்.

தாம் தரகு வியாபாரக் கடையை மூடி, வியாபாரத்தை நிறுத்தி விட்டேன் என்றவரையில் அவர் உண்மையை வெளி யிட்டார். இதைத் தவிர மற்றவற்றைச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை யல்லவா? சுமாரான ஒரு சிறிய வீட்டைக் கட்டிக் கொண்டார். கொஞ்சம் நிலத்தை வாங்கி விவசாயம் செய்ய ஆரம்பித்தார். சோழி வைத்து விளையாடிக் கொண் டிருந்த கிராமத்துப் பையன்களுக்குச் சீட்டுக்கட்டை வைத்துக் கொண்டு சூதாடக் கற்றுக் கொடுத்தார். முன் வாசலில் கட்டி லின் மீது சாய்ந்தவாறே, தமது கல்கத்தா வாசத்தைப் பற்றிய கதைகளை அளப்பதிலும், பெருமை யடித்துக் கொள்ளுவதிலும் கூடக் கெட்டிக்காரராகிவிட்டார். அப்பொழுதுதான் கிராமத் தில் பஞ்சாயத்துக்கள் உருவாகத் தொடங்கி இருந்தன. பின் என்ன? தமது கல்கத்தா சாமர்த்தியத்தை வைத்துக் கொண்டு, தம் சிற்றப்பா பிள்ளை ஒருவனைப் பஞ்சாயத்துத் தலைவனாக்கி விட்டார். தலைவனாவது என்பது என்ன என்று கூட அந்தக் காலத்தில் கிராமத்து ஜனங்களுக்குத் தெரியாது. இதனால் அவருடைய சிற்றப்பா பிள்ளை இந்தப் பதவிக்காக எந்தத் தேர்தலையும் சமாளிக்க நேரவில்லை. கொஞ்ச நாட்களுக்

குப் பிறகு மக்களுக்கு உண்மை விளங்கலாயிற்று. அதாவது, கிராமத்து நிலங்களுக்குப் பட்டா கொடுக்கும் விஷயத்தில் ராமாதீன் பாபுவும், அவசியம் போன்ற வழக்குகளில் ஜயிலுக் குப்போவதற்கு, அவருடைய சிற்றப்பா பிள்ளையும் இணைந்து வேலை செய்தார்கள். இப்படி இரண்டு தலைவர்களின் சுய நலச் சேவையை அவர்கள் பின்னால்தான் புரிந்து கொண்டனர்.

ஒரு காலம் வரை ராமாதீன் பாபுவின் அதிகாரந்தான் கிரா மத்தில் கொடி கட்டிப் பறந்தது. அவருடைய வீட்டுக்கு எதிரே ஓடு வேய்ந்த ஒரு பங்களா. இது தான் கிராமத்து இளைஞர்கள் சூதாடும் இடம். இதில் ஒருபுறம் கஞ்சா, பங்கி பானம் அவ்வப் போது தயாரிக்கப்பட்டு வந்தது. அந்தச் சூழலே அற்புத மாய்க் காவிய எழிலுடன் விளங்கியது. ராமாதீன் பாபுதாம் முதல் முதலில் கிராமத்துக்கு, 'கைனு, நைஸ்ட்க்ஸியன்' லார்க்கஸ்பர் போன்ற ஆங்கிலப் பூச் செடிகளை அறிமுகம் செய்து வைத்தார். அவற்றில் செந்நிறமான சில பூக்கள் இருக்கும். சிலசமயம் அவற்றைப் பார்த்து "இதுதான் பாப்பி; அதோ அதுதான் டபிள் பாப்பி" என்பார்.

வெளியூரிலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்த பயில்வான் பத்ரியின் ரிக்ஷாவை யாரோ கிராமத்துக்கு வெளியேயே வழி மறித்தான். கொஞ்சம் லேசான இருட்டு. அதனால் வழி மறித்தவனின் முகம் பத்ரிக்குத் தெளிவாய்த் தெரியவில்லை.

"யாரடா அவன்?" என்று சத்தம் போட்டார் அவர்.

"அடே, கிடே என்றெல்லாம் பேசாதே, பயில்வான்! நான் தான் ராமாதீன்" என்றவாறே, ஒருவன் ரிக்ஷாவின் அருகில் வந்து நின்று கொண்டான். ரிக்ஷாக்காரன் அப்படியே நட்ட நடுச்சாலையில் வண்டியை நிறுத்தி விட்டான் வந்து நின்றவன் வேட்டியும் ஷர்ட்டும் அணிந்திருந்தான். ஆனால் அந்தியின் இருள் மயக்கத்தில் இந்த வேட்டி, ஷர்ட்டை வைத்துக் கொண்டு யாரென்று இனம் கண்டுபிடிப்பது கடினம். அந்தத் தலை மொட்டையிலிருந்துதான் தெரிந்துகொள்ள முடியும். ரிக்ஷா வின் ஹாண்டிலைப் பிடித்துக்கொண்டு அவன் கூறினான்: "என் வீட்டில் கொள்ளை நடக்கப் போகிறது தெரியுமா?"

பயில்வான் ரிக்ஷாக்காரனின் முதுகில் தன் விரலால் ஒரு குத் துக் குத்தி, 'மேலே வண்டியை ஓட்டு' என்று ஜாடையாகத் தெரி வித்தவாறே, "அதற்கு இப்போதிருந்தே ஏன் 'லொய் லொய்' என்கிறாய்? கொள்ளை நடக்கும்போது, கூப்பிடு என்னை" என்றான்.

ரிக்ஷாக்காரன் பெடலின் மீது காலை வைத்தான். ஆனல் ராமாதீன் ஹாண்டிலைப் பிடித்து அழுத்திய அழுத்தத்தின் முன் இவன் ஜம்பம் ஒன்றும் சாயவில்லை. ரிக்ஷா நகரவில்லை. இருந்த இடத்திலேயே நின்றது. "உனக்கு என்ன வந்துவிட்ட தென்றே எனக்குப் புரியவில்லையே! நடுரோடில் ரிக்ஷாவை நிறுத்திப் பெண்பிள்ளை மாதிரி அழுகிருயே?" என்று முணு முணுத்தான் பத்ரி பயில்வான்.

"நான் ஒன்றும் அழவில்லை. முறையிடுகிறேன். வைத்தியர் வீட்டில் நீ ஒருவன்தான் ஆண் பிள்ளை. மற்றவர்களெல்லாம் சோமாறிகள். அதனுல்தான் உன்னிடம் சொல்லுகிறேன். எனக்கு மிரட்டல் கடிதமொன்று வந்திருக்கிறது. கொள்ளைக் காரர்கள் என்னிடம் ஐந்தாயிரம் ரூபாய் கேட்கிறார்கள். அமாவாசை இரவன்று தென்புறமிருக்கும் குன்றுக்கு வந்து கொடுத்துவிட்டுப் போகச் சொல்லி இருக்கிருர்கள்."

பத்ரி துடையை ஓங்கிச் சத்தமாய்த் தட்டியவாறே, "மான மிருந்தால் போய்க்கொடுத்து விட்டு வா. இல்லாவிட்டால் ஒரு தம்படிகூடக் கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை. வேறு என்ன சொல்லட்டும்"? என்றவன், "விடப்பா வண்டியை" என்ருன்.

வீடு நெருங்கிவிட்டது. பங்கி பானம் அரைத்துக் கரைத்துத் தயாராக இருக்கும். குடித்துவிட்டு, குளித்து முழுகி லங்கோட்டை வரிந்து கட்டிக்கொண்டு, மேலே ஒரு குர்த்தாவும் போட்டுக் கொண்டு முன் அறையில் ஜம்மென்று உட்கார வேண்டும். 'என்ன, பயில்வான்! போனுயே என்னவாயிற்று காரியம்?" என்ற கேள்விகள் வரும். கண்களை மூடிக்கொண்டு கேள்விகளைக் கேட்பான். அவர்களே கூறிக்கொள்ளும் பதிலை கேட்டு ரசிப்பான். உடலின் வலிமை, பங்கியின் மயக்கத்தில் சுற்றுப்புறத்திலுள்ள கூச்சல்கள், இரைச்சல்களெல்லாம் கொசுக்கள் 'ஙொய்' என்று ரீங்காரம் பாடுவதுபோலத் தான் இருக்கும்.

இத்தகைய கற்பனைச் சுகத்தில் லயித்திருந்த பத்ரிக்குத் தன் வண்டியைச் சாலையில் மறித்து நிறுத்தியது மிகவும் உறுத்தியது. "உன்னிடம் தான் சொல்லுகிறேன். போடா" என்று அதட்டி ஞன் ரிக்ஷாக்காரனை.

ஆனுல் அவன் நகருவது எப்படி? ராமாதீனின் கரம் இன்ன மும் ஹாண்டிலின் மீதே இருந்தது. "இது பணத்தைப்

பற்றிய விஷயம் அல்ல. என்னிடத்திலிருந்து ஒருவன் ரூபாயைப் பறித்துவிட முடியுமா? 'ரூப்பனைக் கொஞ்சம் அடக்கிவை' என்று தான் உன்னிடம் சொல்ல வந்தேன். தன்னைப் பற்றி ரொம்பப் பிரமாதமாய் நினைத்துக்கொண்டிருக்கிறான். ஏதோ ஆகாயத்திலே...."

பயில்வான் பத்ரி சட்டென ரிக்ஷாவிலிருந்து கீழே குதித்தான். ராமாதீனின் தோல்களைப் பற்றிச் சற்று எட்ட அழைத்துச் சென்று, "ஏன் அநாவசியமாய் வாயைக் கெடுத்துக் கொள்கிறாய்? ரூப்பன் என்ன செய்துவிட்டான்?" என்றான்.

"எனக்கு இந்தக் கடிதத்தைத் தபாலில் அனுப்பியது ரூப்பன் தான். என்னிடம் இதற்கு அத்தாட்சி இருக்கிறது."

பயில்வான் முணுமுணுத்தான். "இரண்டு நாள் ஊரை விட்டுப் போனால் போதும். ஒரே தொந்தரவாகப் போய்விடுகிறது. நான் அந்தப் பக்கம் போனதுதான் தாமதம், இங்கே இந்தக் கூத்து ஆரம்பமாகிவிட்டது." சில விநாடிக்குப்பின் ஏதோ யோசித்தவனாய், "உன்னிடம் அத்தாட்சி இருக்கிறதென்றால் பிறகு என்ன பயம்?" என்று ராமாதீனுக்கு அபயம் கொடுத்தவாறே சற்றே குரலை உயர்த்தி, "உன் வீட்டில் கொள்ளை கிள்ளை ஒன்றும் நடக்காது. போ, வீட்டுக்குப் போய் நிம்மதியாய்த் தூங்கு. ரூப்பன் கொள்ளையடிக்கமாட்டான். காளைப் பருவம், ஏதோ வேடிக்கை செய்திருப்பான்" என்றான்.

"அது எனக்கும் தெரியும்" என்றான் ராமாதீன் காரமாக. "ரூப்பன் வேடிக்கை பார்க்கிறான். ஆனால் இதெல்லாம் ஒரு வேடிக்கையா?"

பயில்வான் பத்ரி இந்தக் கூற்றை ஆமோதித்தவனாய், "நீ சொல்வது சரிதான். அல்பத்தனமான வேடிக்கை இது" என்றான்.

சாலையில் கனவேகத்துடன் ஒரு டிரக் வருவதைக் கண்ட பத்ரி ரிக்ஷாக்காரனை நோக்கி, "வண்டியை ஓரமாய் நிறுத்து. ரோடு உங்க அப்பன் பாட்டனுடையது அல்ல" என்று எரிந்து விழுந்தான்.

ராமாதீனுக்குப் பத்ரியின் சுபாவம் தெரியும். இதைக் கேட்டதும், "பயில்வான் கோபித்துக்கொள்வதில் புண்ணியம் இல்லை. யோசித்துப் பார், இதெல்லாமா ஒரு வேடிக்கை?" என்றான்.

பயில்வான் ரிக்ஷாவை நோக்கி நடந்தான். அதில் ஏறி அமர்ந்ததும், "கொள்ளை நடக்கப் போவதில்லை. எதற்காக

வின் பேச்சு! ஏய், விடப்பா வண்டியை" என்றவன், வண்டி புறப்பட்டதும், "நான் ரூப்பனைக் கவனித்துக்கொள்கிறேன். இதெல்லாம் சரியில்லை" என்றான்.

ராமாதீன் பின்னாலிருந்து உரத்த குரலில் கத்தினான். "கொள்ளை அடிப்பதாய் மிரட்டி அவன் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறான். நீ அவனைச் சும்மா கண்டிப்பதாகச் சொல்லுகிறாயா? இது சும்மா கண்டிக்கும் விஷயம் அல்ல. செருப்படி கொடுக்கவேண்டும் தெரியுமா?"

ரிக்ஷா புறப்பட்டுவிட்டது. பயில்வான் திரும்பிப் பார்க்காமலேயே, "உனக்கு அவ்வளவு ஆத்திரமாக இருந்தால் எனக்கும் அப்படியே ஒரு கடிதம் எழுதிப் போட்டுவிடு, போ!" என்றான்.

# அத்தியாயம் 7

மாடியில் ஒரே ஒரு அறை. கூட்டுக் குடும்பத்தின் பாடப் புத்தகம்போல் எப்போதும் திறந்தே கிடக்கும். ஒரு மூலையில் சாற்றி வைக்கப்பட்டிருக்கும் ஒரு ஜோடிக் கர்லாக் கட்டைகள் இந்த அறைச் சட்டப்படி பயில்வான் பத்ரியினுடையது என் பதைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன. ஆனால் இந்த அறையை வீட்டிலுள்ள அவ்வளவு பேரும் தங்கள் தேவைக்கேற்பப் பயன்படுத்திக்கொண் டிருந்தனர். வீட்டுப் பெண் மணிகள் ஜாடியிலும், மண் சட்டியிலும் நிறைய நிறைய ஊறுகாய் போட்டு மாடியில் வெயிலில் வைப்பார்கள். மாலை வெயில் மங்கியதும் எடுத்து அறைக்குள் வைத்து விடுவார்கள். மாடியில் உலர்ந்த துணிமணிகளின் நிலையும் இது தான். அந்த அறையின் குறுக்கே ஒரு கயிறு தொங்கியது. மாலையாகியதும் அதில் லங்கோடு, சோளிகள், உள் பாவாடை

கள், துண்டுகள் என்று எவ்வித வேற்றுமையுமின்றி ஒன்ருக ஊசலாடத் தொடங்கிவிடும். வைத்தியருக்கு வேண்டாத மருந்துக் குப்பிகள் அறையின் ஓர் அலமாரியை நிறைத்துக் கொண்டிருந்தன. பெரும்பாலும் காலி புட்டிகள்தான். அப் புட்டிகளின் மீது ஒட்டியிருந்த லேபிளில், 'உபயோகத்துக்கு முன்னர்' எனக் குறிப்பிட்டு, குற்றுயிரான ஒரு மனிதனின் படமும், 'உபயோகித்த பின்னர்' என்பதற்கு நேரே முறுக்கி விட்ட மீசையும் இறுக்கிக் கட்டிய லங்கோடுமாய் வஸ்தாது போல் காட்சி தரும் ஒரு மனிதனின் படமும் காட்சி தந்தன. அதாவது உடல் நலம் தேறியதற்கு இது அத்தாட்சி போலும். இதிலிருந்து ஆயிரக்கணக்கானவர்களை, வீறுகொண்டெழும் சிங்கம்போல் மாற்றி விட்டவை இந்தக் காலி புட்டிகளே என்பது தெளிவாக விளங்கியது. ஆனல் இந்த மனிதர் களெல்லாம் குளியல் அறையிலும், படுக்கை யறையிலும் சிங்கங்கள்போல் உலவி வந்தனர். வெளியே வெறும் ஆட்டு மந்தைகளாக, ஆடுகளாகத் தான் இருந்தனர் என்பது வேறு விஷயம்.

குடும்பத்தில் உள்ளவர்களுக்கு அமைதியான சகவாழ்வின் பெருமையைச் சாற்றிய இந்த அறை, காண்பவர்களின் மனத்திலே அவ்வில்லத்தின் பண்பில் சிரத்தை ஏற்படச் செய்யலாம். இந்த அறையைக் கண்டபின் எந்தச் சமூகவியல் ஆராய்ச்சியாளரும், கிழக்கு நாடுகளில் கூட்டுக் குடும்ப வாழ் வின் அமைப்புக்கு ஆபத்து ஏற்பட்டுள்ளது என்று கூறிவிட முடியாது.

இந்த அறைதான் தற்சமயம் ரங்கநாத் தங்குவதற்கும் தரப்பட்டது. கிட்டத்தட்ட நான்கு ஐந்து மாதங்கள் அவன் தங்க நேரிடலாம். எம். ஏ. படித்து முடிப்பதற்குள் ஒரு சராசரி மாணவனைப்போல் அவன் மிகவும் பலவீனமடைந்து விட்டான். காய்ச்சல் இருந்துகொண்டே இருந்தது. சாதாரண இந்தி யனைப் போலவே டாக்டர் வைத்தியத்தில் நம்பிக்கையில்லா மலேயே டாக்டரின் மருந்தைச் சாப்பிட்டு வந்தான். கொஞ்ச மும் குணம் தெரியவில்லை. ஒரு சராசரி பட்டணவாசியைப் போலவே அவனுக்கும் பட்டணத்து வைத்தியமும், கிராமத்து வைத்தியமும் ஒன்றுதான் என்ற நம்பிக்கை இருந்ததே விசேஷம். அதனல் இங்கே புறப்பட்டு வந்திருக்கிருன். எல் லாரையும் போலவே எம். ஏ. முடித்தபின் வேலை கிடைக்கா

மற்போகவே 'ரிஸர்ச்' செய்யத் தொடங்கி விட்டான். ஒரு சராசரி இந்திய அறிவாளியைப் போலவே அவனும் ஆராய்ச்சி செய்வதற்காகப் பல்கலைக் கழகத்துக்குச் செல்வதோ, புத்தகாலயங்களுக்குச் சென்று படிப்பதோ அவசியம் இல்லை என்று கருதினன். கிராமத்திலிருந்து கொண்டு, நன்ருக ஓய்வெடுக்க, ஆரோக்கியத்தைப் புதுப்பித்துக் கொள்ள அவன் முடிவு செய்திருந்தான். இங்கிருந்து கொண்டு படிக்கவும், அவசியம் நேர்ந்தால் நகரத்துக்குச் சென்று நூலகப் புத்தகங்களை மாற்றி எடுத்து வரவும் அவன் திட்டமிட்டிருந்தான். இது மட்டுமா? ஒவ்வொரு சமயத்திலும் வைத்தியர் மிக்க நாகரிகமான பாஷையில், "ஹூம்! நம்முடைய இளைஞர்கள் உதாவக்கரைக்களாக இல்லாமல் இருந்திருந்தால் வயதான காலத்திலும் நாங்கள் இத்தகைய பொறுப்புகளைச் சுமந்து கொண்டிருக்க நேரிட்டிருக்காது" என்று கூறி, பெருமூச்சு விடச் சந்தர்ப்பம் அளிப்பதற்காகவும் அவன் கிராமத்துக்கு வந்திருந்தான் என்று தோன்றியது.

அது நல்ல விசாலமான அறை. அதன் ஒரு பகுதியையே வந்ததும் ரங்கநாத் தனதாக்கிக் கொண்டு விட்டான். நன்ருய்ச் சுத்தம் செய்திருந்த அப்பகுதியில் நிரந்தமாக ஒரு கட்டில் போடப்பட்டது. அருகிலிருந்த அலமாரியில் அவனது புத்தகங்கள் அடுக்கப்பட்டன. துப்பறியும் நாவல்கள் (பாக்கெட் பிரதிகள்), பிறர் அறியாத மர்மங்களை விளக்கும் நூல்கள் அதில் இடம் பெறத் தகுதியற்றனவாய் ஒதுக்கப்பட்டுவிட்டன. கல்லூரியிலிருந்து வரவழைத்த ஒரு சிறிய மேஜை நாற்காலியும் அங்கு இடம் பெற்றிருந்தன. கட்டிலுக் கருகே ஒரு சாளரம் இருந்தது. அதைத் திறந்தால் தோட்டங்கள், வயல்களின் இனிய காட்சிகளை அது தெளிவாகக் காட்டியது.

ரூப்பன் எங்கிருந்தோ சில செங்கற்களையும், கற்களையும் எடுத்து வந்து இணைத்து அடுக்கி ஒரு ரேடியோ மாதிரி அமைத்திருந்தான். அறைக்கு மேலே மூங்கில்கள்; சுற்றிலுமுள்ள மரங்களில் குறுக்கும் நெடுக்குமாய்க் கம்பிகளைக் கட்டியிருந்ததைப் பார்த்தால் ஆசியாவிலேயே அதுதான் மிகப் பெரிய டிரான்ஸ்மிஷன் சென்டர் எனத் தோன்றியது. ஆனல் உள்ளே இருந்த ரேடியோவை, ஹெட்ஃபோனல் மட்டுந்தான் கேட்க முடியும். ரங்கநாத் அதைக் காதுகளிலே பொருத்திக்கொண்டு சில சமயங்களில் உள்நாட்டுச் செய்திகளையும், வைஷ்ணவ

சாதுக்களின் சோகமயமான பஜனைகளையும் கேட்பான். அப் பொழுதெல்லாம் 'இந்த ஆல் இந்தியா ரேடியோ இன்றும் மாருமல் அப்படியேதான் இருக்கிறது. ஆயிரமாயிரம் கண்ட னங்களையும், சரமாரியான வசவுகளையும் கேட்ட பின்னும் தன் இடத்தை விட்டு இம்மியும் நகரவில்லை' எனத் தோன்றும். சில நாட்களுக்குப் பின் ரங்கநாத் ஒரு மலிவான ரேடியோ செட்டை வாங்கி வைத்துக் கொண்டான்.

ரங்கநாத்தின் அன்றுட நிகழ்ச்சி நிரல்கள் வைத்தியரின் ஆலோசனையின்படி திட்டமிடப்பட்டன. விடியற்காலை எழுந்திருப்பது; எழுந்தபின் இரவு சாப்பிட்ட உணவு ஜீரண மாயிற்று என யோசிப்பது; தாமிர லோட்டாவில் வைத்திருக் கும் குளிர்ந்த நீரைப் பருகுவது; நீண்ட தூரம் உலாவச் செல்வது; நித்தியகர்மம் செய்வது (ஏனெனில் உலகத்தில் இது ஒன்றுதான் நித்திய கர்மம்: மற்றவை யெல்லாம் அநித் தியம்); உலாவி விட்டுத் திரும்புவது (பரம் சக்ரமணம் ஹிதம்); கைகால் கழுவிக் கொள்வது; பற்குச்சியைச் சுவைத்தவாறே பற்களைத் துலக்குவது; வெதுவெதுப்பான நீரில் வாயைக் கொப்பளிப்பது; உடற்பயிற்சி செய்வது; பால் அருந்துவது; படிப்பது. பின்னர் பகல் உணவு, ஓய்வு, படிப்பு, மாலை உலாவல். திரும்பிய பின் சாதாரண உடற் பயிற்சி. பாதாம் கொட்டை, திராட்சை முதலியவற்றிஞல் தயாரித்த பானத்தை அருந்திய பின் மீண்டும் படிப்பு, இரவுச் சாப்பாடு, படிப்பு, கடைசியில் உறக்கம்.

ரங்கநாத் இக்காரிய திட்டங்களை மிகுந்த நேர்மையுடன் ஏற்றுக்கொண்டான். ஆனுல் ஒரு லேசான திருத்தம். படிப்பு என்ற நேரத்தை வைத்தியரின் முன்னறையில் கூடிய சிவபால் கஞ்ச்வாசிகள் எடுத்துக் கொண்டுவிட்டனர். சில நாட்களுக் குள், ரங்கநாத சிவபால்கஞ்சை நன்குப் புரிந்து கொண்டான். மகாபாரதத்தைப் போல் எங்குமில்லாதது இங்கில்லை; இங்கில் லாதது எங்குமில்லை எனத் தோன்றியது. இந்திய மக்களான நாம் யாவரும் ஒன்றேதான். ஒவ்வோர் இடத்திலும் நம் புத்தி ஒரே மாதிரிதான் இருக்கிறது என்று புரிந்தது. பிரசித்தி பெற்ற பத்திரிகைகள் முன் பக்கத்தில் கொட்டை எழுத்தில் புகழ்ந்து பாராட்டும் பிரலாபமும், மாநகராட்சிகள் மாறி ஆட்சி கள் வீழ்வதும், கூடுவதும், குலைவதும் எந்த மகத்தான சக்தி யினுல் இயக்கப்படுகின்றனவோ, அந்த அகில பாரதத் திறமை

யான சூழ்ச்சியும், தந்திரமும், கட்சி மாறலும் இங்குக் கச்சாப் பொருள் போல் தேவைக் கதிகமாகவே பரந்து கிடப்பதை அவன் கண்டான். இதைப் பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க ரங்கநாத்தின் அகில இந்தியக் கலாசார ஒற்றுமையின்பால் உள்ள நம்பிக்கை இன்னும் வலுவடைந்தது மட்டும் அல்லாமல் அசைக்க முடியாததாகவும் ஆயிற்று.

சிவபால் கஞ்ச் கிராமந்தான். ஆனால் அது நகரத்தை அடுத்துப் பிரதான பாட்டையில் இருந்தது. இதனால் பெரும் தலைவர்கள், அதிகாரிகள் போன்றவர்களுக்கு அங்கு வருகை புரியச் சித்தாந்த ரீதியாக எந்த விதமான ஆட்சேபமும் ஏற்பட முடியாது. கிணறுகளைத் தவிர, அங்கே சில ஹேண்ட் பம்ப்புகள் போட்டிருந்தன. இதனால் வெளியிலிருந்து வரும் பெரிய மனிதர்கள் தாகமெடுத்தால், உயிருக்கு எவ்வித அபாயம் இல்லை என்ற நிம்மதியுடன் நிர்ப்பயமாய் நீர் அருந்தலாம். சாப்பாட்டிற்கும் நல்ல வசதி இருந்தது. ஊரிலிருந்த குட்டி அதிகாரிகளில் இரண்டொருவரின் ஆடம்பரத்தைக் கண்ட ஊரார் இவன் முதல் நம்பர் அயோக்கியன் என்று முணுமுணுத்தாலும் வெளியிலிருந்து வருபவர்கள் தங்களுக்குள் அவனைப் பாராட்டி, எத்தனையோ இங்கிதமும் மரியாதையும் தெரிந்தவன் எனப் பாராட்டினர். 'பாரப்பா, பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவன். நம்ப சிக்கோவின் பெண்ணைத் தான் கொடுத்திருக்கிறது இவனுக்கு' என்று உரிமையுடன் கூறிக் கொண்டனர். இதனால் பசியெடுத்தால் தங்கள் நாணயத்துக்கு எவ்விதப் பங்கமும் நேராமல் அவர்கள் அங்கு உணவருந்த முடியும். காரணம் எதுவாக இருக்குமோ தெரியாது. இச் சமயத்தில் மக்கள் தலைவர்களும், மக்களின் தொண்டர்களும் சிவபால்கஞ்சிற்கு வருகை புரிவது அதிகரித்திருந்தது. அவர்கள் யாவருக்குமே சிவபால்கஞ்சின் முன்னேற்றத்தில் அக்கறை இருந்தது; கவலையிருந்தது. இதன் பலன், அவர்கள் சொற்பொழிவு ஆற்றலானார்கள்; பிரசங்கமாரி பெய்தது.

இச் சொற்பொழிவுகளின் முக்கிய விஷயம் விவசாயம். அந்த நாட்களில் முக்கியமாக அடிபட்ட விஷயமும் இதுதான். இப்படிச் சொல்லுவதால் இதற்கு முன்பு வேறு விஷயங்கள் பேசப்பட்டதாக அர்த்தமில்லை. பார்க்கப் போனால் கடந்த பல வருடங்களாகவே, கிராம மக்களிடம் பாரதம் ஒரு விவசாய நாடு என்று திரும்பத் திரும்பக் கூறப்பட்டு வந்தது. கிராமத்தினர்

இதை மறுக்கவோ, எதிர்க்கவோ இல்லை. ஆனால் மேடை ஏறிய ஒவ்வொரு பிரசங்கியும், கிராம மக்கள் இக் கூற்றை எதிர்ப்பார்கள் என்ற எண்ணத்துடனேயே தம்மைத் தயார் செய்து கொண்டு வந்திருப்பதுபோல் மேடை ஏறியதும், பல வேறு காரணங்களையும் ஆதாரங்களையும் காட்டி, வலியுறுத்தி, இந்தியா ஒரு விவசாய நாடு என்பதை நிரூபிக்க முழுமூச்சுடன் இறங்கிவிடுவார்கள். பின்னர் விவசாயத்தின் வளர்ச்சியும், முன்னேற்றமுந்தான் நாட்டின் வளர்ச்சி, முன்னேற்றம் என்பார்கள். மேற்கொண்டு அவர்கள் ஏதும் கூறுவதற்கு முற்படும் முன்னரே, பெரும்பாலும் சாப்பாட்டு நேரமாகிவிடும். மரியாதையும், இங்கிதமும் அறிந்த பிள்ளை, சிக்கோ சாகபின் மாப்பிள்ளை, பிரசங்கியின் பின்னாலிருந்து அவருடைய சட்டையைப் பிடித்திழுத்து, 'சித்தப்பா சாப்பாடு ரெடி' என்பதைச் சூசகமாக அறிவிப்பான். சில சமயம் ஒரு சில பேச்சாளர்கள், மேலே ஏதேதோ பேசிக் கொண்டே போவார்கள். அவர்கள் முன்னே கூறியதற்கும், இப்பொழுது கூறுவதற்கும் வித்தியாசம் எதுவுமில்லை. அதையேதான் திரும்பக் கூறுகிறார்கள் என்பதும் அப்பொழுதுதான் புரியும். ஏனெனில் சுற்றி வளைத்து அவர்கள் சொல்வது ஒரே விஷயந்தான். 'இந்தியா விவசாய நாடு. நீ விவசாயி. நீ விவசாயத்தை நல்ல பலன் தரும் முறையில் செய்ய வேண்டும். உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும்; அதிக விளைச்சல் காண வேண்டும்.' இதில் வேடிக்கை என்னவென்றால் குடியானவர்கள் அதிக விளைச்சல் காண விரும்பவில்லையோ என்று ஒவ்வொரு பேச்சாளருக்கும் சந்தேகம்.

பிரசங்கங்களின் பற்றாக்குறையை விளம்பரங்கள் ஈடு கட்டி விடும். சிவபால்கஞ்சின் சுவர்களில் ஒட்டப்பட்டிருந்த, அல்லது எழுதப்பட்டிருந்த விளம்பரங்கள் உள்ளூர்ப் பிரச்னைகளையும் அவற்றிற்கான தீர்வுகளையும் உண்மையாக உணர்த்தக் கூடியவையாக இருந்தன. உதாரணமாக ஒரு பிரச்னை, அதாவது 'இந்தியா விவசாய நாடு; குடியானவர்கள் அயோக்கியத்தனமாக அதிக விளைச்சல் காண்பதில்லை. உற்பத்தியைப் பெருக்குவதில்லை' என்பதே. இந்தப் பிரச்னைக்குத் தீர்வு என்ன தெரியுமா? குடியானவர்களிடையே சென்று பிரசங்கம் செய்வது, நல்ல படங்களை அவர்களுக்குக் காட்டுவது. இவற்றின் மூலமாக, நீங்கள் உங்களுக்காக வேண்டி இல்லாவிடினும்

நாட்டுக்காகவாவது அதிக உற்பத்தி செய்வதில் ஈடுபடுங்கள் என உணர்த்துவது. குடியானவர்கள் அதிக உற்பத்தி செய்ய வேண்டும் என விரும்பியவர்கள் ஆங்காங்கே பெரிய பெரிய போஸ்டர்களை ஒட்டினார்கள். இப்படிச் சொற்பொழிவுகள், போஸ்டர்கள் பிரச்சாரத்தின் பலன் என்ன ஆயிற்று தெரியுமா? ஒன்றுமறியாத அப்பாவிகளான குடியானவ மக்கள் இதை யெல்லாம் பார்த்துத் திகைத்து, ‘ஓகோ... இதற்குப் பின்னால் ஏதோ... சூது இருக்கிறது’ என்று நினைக்க ஆரம்பித்து விட்டனர்.

சிவபால்கஞ்சில் அச்சமயம் ஒரு விளம்பரம் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தது. நல்ல ஆரோக்கியமான, வாளிப்பான குடியானவன், தலையிலே தலைப்பாகை, காதுகளில் வாளி, உடலிலே பனியன் அணிந்து, உயர வளர்ந்திருக்கும் கோதுமைக் கதிர்களை அரிவாளால் வெட்டிக்கொண் டிருக்கிறான். அவனுக்குப் பின்னால் ஓர் இளம் பெண் உள்ளுக்குள் பொங்கும் மகிழ்ச்சியில், விவசாய இலாக்கா அதிகாரிகளின் பெருமிதமான புன்னகையைப் போல், புன்னகைத்துக் கொண்டு நிற்கிறாள். இந்தப் போஸ்டரின் கீழே, ஆங்கிலத்திலும் இந்தியிலும், ‘உற்பத்தியைப் பெருக்குங்கள்’ என்று எழுதியிருந்தது.

பனியனும், காதிலே வாளியும் அணிந்த குடியானவர்களில் யார் ஆங்கிலப் புலமை பெற்றவர்களோ, அவர்களை ஆங்கில வாசகங்கள் மூலமும், இந்தி வித்வான்களை இந்தி மூலமும் கவருவதற்காகப் போட்டிருந்த இந்தத் திட்டத்தில், இவ்விரு மொழிகளுமே அறியாதவர்கள் இந்த ஆணையும் பெண்ணையும் பார்த்துப் புரிந்துகொள்ளட்டும் என்ற எண்ணம் போலும். மொழி புரியாவிடினும் ஆண், பெண்ணின் படத்திலிருந்து தெரிந்து கொள்வார்கள் அல்லவா? அந்த ஆண்மகனின் பின்னால், மலர்ந்த புன்னகை தவழ நிற்கும் மங்கையைக் கண்டதுமே, பித்தம் கொண்டவர்களாகி உற்பத்தியை அதிகமாக்கி, அதிக விளைச்சல் காண முற்பட்டு விடுவார்கள் என எதிர்பார்த்தார்கள் போலும். ஆனால் இந்தப் போஸ்டர் தற்சமயம் சிவபால்கஞ்சில் அதிகமான சர்ச்சைக் குள்ளாகி இருந்தது. ஏனெனில் விளம்பரத்தில் காட்சி அளித்த அந்த ஆண்மகனின் தோற்றம் இலேசாகப் பயில்வான் பத்ரியை ஒத்திருந்தது. பெண்ணைப் பொருத்தவரையில் மிகுந்த கருத்து வேற்றுமை இருந்தது.

கிராமத்துப் பெண்களில் அது யாரைப் போலிருந்தது' என்பது இன்றும் நிச்சியிக்க முடியாமல் இருந்தது.

இப்படி அதிகமான விளம்பரம் பெற்றிருந்தது விவசாயத் துறை மட்டும் அல்ல; மலேரியாவும் கூடத்தான். ஆங்காங்கே வீட்டுச் சுவர்களில் காவிக்கட்டியால், "மலேரியாவை ஒழிக்க எங்களுக்கு உதவுங்கள்", "கொசுக்களை ஒழியுங்கள்" என்ற வாசகங்கள் காணப்பட்டன. இதிலும், 'குடியானவர்களுக்கு மாடு கன்றை வளர்ப்பதிலுள்ள ஆர்வம்போல், கொசுக்களை வளர்ப்பதிலும் ஆர்வம் உள்ளதுபோல் ஒரு கருத்து நிலவியது. அதனால் அதை ஒழிப்பதற்கு முன் குடியானவர்களிடையே மன மாற்றத்தை ஏற்படுத்துவது அவசியம். மனமாற்றமென்பது எளிது அல்ல. பிறர் மனத்தில் ஒரு விதப் பிரபாவத்தை ஏற்படுத்த வேண்டும். அதற்கு ஆங்கில மொழியின் உதவி தேவை' என்ற இந்திய சித்தாந்தங்களின் அடிப்படையில், கொசுக்களைக் கொல்லுவதற்கும், மலேரியாவை அழிப்பதற்கும் உதவும்படி விண்ணப்பங்களும், கோரிக்கைகளும், ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டிருந்தன. பெரும்பான்மையான மக்கள், இவ்வாசகங்களைக் கவிதையாக ஏற்காவிடினும், ஒவியக்கலை என்று ஏற்றுக் கொண்டிருந்தனர். அதனால் காவிக்கட்டியினால் சுவர்களை அழகுபடுத்துபவர்களைத் தங்கள் விருப்பம்போல் ஆங்கிலத்தில் எழுத அநுமதித்திருந்தனர். சுவர்களில் விளம்பரங்கள் தீட்டப்பட்டன. கொசுக்கள் செத்துக்கொண் டிருந்தன. நாய்கள் குரைத்துக்கொண் டிருந்தன. மக்கள் என்றும் போல் தம் வழியே சென்றுகொண் டிருந்தனர்.

இன்னுமொரு விளம்பரம் அப்பாவித்தனமாக நாம் பணத்தைச் சேமிக்கவேண்டும் என்று சொல்லிற்று. கிராமத்திலுள்ளவர்களுக்கு அவர்கள் பாட்டன், முப்பாட்டன்மார்களே தங்கள் கடைசி மூச்சு நிற்கு முன்னர் நாலு காசு சேர்க்கும்படி சொல்லிக் கொடுத்துவிட்டுத்தான் செத்திருந்தனர். அதனால் கிட்டத்தட்ட ஒவ்வொருவருக்கும் இக்கலை நன்றாகத் தெரிந்தே இருந்தது. ஆனால் இதிலிருந்த புதுமை, சேமிப்பது என்பதில் நாட்டைப் பற்றியும் குறிப்பிட்டிருந்ததுதான். 'நீ உனக்காக இல்லாவிடினும் நாட்டிற்காக வேண்டியாவது சேமித்துவை' என்ற தொனி அதிலிருந்தது. இது மிகவும் நல்ல யோசனைதான். சேட், சாஹூகார்கள், பெரிய பெரிய பதவியிலுள்ளவர்கள், வக்கில்கள், டாக்டர்கள், வியாபாரப் பெரும் புள்ளிகள்

எல்லாரும் தங்களுக்காகவே சேமிப்பைப் பெருக்கிக் கொண்டிருக்கும் நேரத்தில், சின்னஞ் சிறு குடியானவர்கள் நாட்டுக்காகச் சேமிப்பது பற்றி என்ன ஆட்சேபம் இருக்க முடியும்? சித்தாந்த ரீதியாக யாவரும் ஒப்புக்கொள்ளவேண்டிய விஷயம் சேமிக்கவேண்டும் என்பது தான். பணத்தைச் சேமித்து எப்படி, எங்கே போடவேண்டும் என்பது பற்றியும், விளம்பரங்களும், பிரச்சாரங்களும் தெளிவாக, தாராளமாக யோசனைகள் வழங்கின. இதைப் பற்றியும் மக்களுக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை. ஆனால் ஒன்று. நாலு காசு சேமிப்பதற்கு முன்னர் உன் உழைப்பிற்காக, உனக்குக் கிடைக்கவேண்டியது எவ்வளவு என்பது மட்டும் மக்களுக்குத் தெரிவிக்கப்படவில்லை.

ஆனால் ரங்கநாத்தைக் கவர்ந்த விளம்பரங்கள் பொதுத்துறை விளம்பரங்கள் அல்ல. தனியார் துறையினர் விளம்பரங்களே. இதிலிருந்து அவன் அறிந்துகொண்ட விஷயங்கள் பல பல. அந்த வட்டாரத்தில் அதிகமாகப் பரவியுள்ள நோய் அரிப்புதான். இதற்கு ஒரு மருந்து உள்ளது. அதைத் தடவிக் கொண்டால் அரிப்பு வேரொடு அகன்றுவிடும், நிம்மதி கிடைக்கும். வாய் மூலம் அருந்தினால் இருமலும் ஜலதோஷமும் தீரும். தின்பண்டத்துடன் கலந்து விழுங்கினால், காலராவுக்கு நல்ல மருந்து. இத்தகைய அருமருந்து உலகமெங்கும் கிடைப்பதரிது. இதைக் கண்டுபிடித்தவர் இன்றும் உயிருடன்தான் இருக்கிறார். இன்றுவரை அவருக்கு நோபல் பரிசு கிடைக்காமல் இருப்பதற்குக் காரணம் மேல் நாட்டினரின் சூழ்ச்சிதான்.

இந் நாட்டில் இன்றும் பல டாக்டர்கள், நோபல் பரிசு பெற அருகதையுள்ளவர்கள், ஆனால் கிடைக்காதவர்கள் இருக்கிறார்கள். அதிலொருவர் ஜஹானாபாத்தில் இருக்கிறார். அங்கு மின்சாரம் வந்துவிட்டதால் மின்சாரம் மூலமாக ஆண்மையற்றவர்களுக்கு வைத்தியம் செய்கிறார். இனி ஆண்மையின்மை பற்றிக் கவலைப்படவேண்டிய அவசியம் இல்லை. இன்னொரு டாக்டர், குறைந்த பட்சம் உலக முழுவதுமே பிரசித்தி பெற்றிருப்பவர். அறுவைச் சிகிச்சை இல்லாமலேயே, மூல வியாதிக்கு வைத்தியம் செய்கிறார். சிவபால்கஞ்சின் எந்தச் சுவரிலும் தாரிலே கொட்டை எழுத்துக்களிலே காணப்பட்டது, இப்படி: குழந்தைகளின் இளைத்த உடம்புக்கு, கண் நோய்களுக்கு, வயிற்றுப் போக்குக்கு.... எனப் பல விளம்பரங்கள்.

ஆனால் உண்மையில் நோய் என்ற முறையில் மூன்றே மூன்று வியாதிகள்தான் இருந்தன. அரிப்பு, ஆண்மையின்மை, கண் நோய், இந்த நோய்களின் நிவாரண முறைகளைச் சிவாபால் கஞ்சிலுள்ள சிறுவர்கள் எழுத்தறிவு பெற்றதுமே சுவரொட்டி களிலிருந்து தெரிந்துகொள்ளத் துவங்கிவிட்டனர் என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்.

இவ்விளம்பர நெரிசல்களிடையே வைத்தியரின் 'இளைஞர் களுக்கு ஒரு நம்பிக்கையூட்டும் செய்தி' என்ற விளம்பரம் அலாதியாய் விளங்கியது. 'ஆண்மை இழந்தவர்களுக்கு மின் சிகிச்சை' என்பதுபோன்ற ஆபாசச் சுவரொட்டிகளிடையே இது இடம் பெறவில்லை. சிறிய, பெரிய நாற்சந்தி முனைகள், கடைகள், சர்க்கார் காரியாலயக் கட்டடங்களிலும், 'சிறு நீர் கழித்தல் கூடாது, நோட்டீஸ் ஒட்டக்கூடாது' என்ற அறிவிப்பு களுடன் கூடிய இடத்திலும் பளபளக்கும் தகரத் தகடுகளில், சிவப்பு, பச்சை வண்ணங்களில் 'இளைஞர்களுக்கு ஒரு நம்பிக்கை யூட்டும் செய்தி' என்ற வாசகத்துடன் ஒரு விளம்பரம் காண்ப வர்களைக் கவர்ந்தது. இந்த விளம்பரத்தின் கீழே வைத்தியரின் விலாசமும், சந்திக்கவேண்டிய நேரமும் குறிப்பிட்டிருந்தன.

நோய்களுக்கு நிவாரணம் அளிக்க, இன்னுமொரு புதிய துறையின் உதயத்தை ஒரு நாள் ரங்கநாத் காண நேரிட்டது. பொழுது புலர்ந்ததுமே ஒரு சுவரில் சிலர் கொட்டை எழுத்தில், 'மூலரோகம்' என எழுதிக்கொண் டிருந்தனர். இது சிவபால் கஞ்சின் முன்னேற்றத்தின் அறிகுறியல்லவா? இங்கு வயிற்றுக் கடுப்பின் யுகம் முடிந்துவிட்டது. 'நாசூக்கான உடல் நிலை, காரியாலயத்தின் நாற்காலிகள், நாகரிகமான பழக்க வழக் கங்கள், இருபத்திநாலு மணி நேரமும் ஓயாமல் சாப்பிடுவது, அதிகமான உழைப்பின்மை' ஆகியவற்றின் யுகம் மெல் மெல்ல முடிந்துகொண்டே வருகிறது. புதுமையுகத்தின் சின்ன மான 'மூல ரோகம்' எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஆண்மையின்மையுடன் போட்டியிடக் கோதாவில் குதித்துவிட்ட தென்பதைக் கண்கவரும் முறையில் எழுதியிருந்த ஐந் தெழுத்துக்களான 'மூல ரோகம்' அறைகூவிப் பறைசாற்றிக் கொண்டிருந்தது. மாலைக்குள் அந்த மாபெரும் ராட்சத விளம் பரம் ஒரு சுவர் முழுவதும் வண்ணக் கலவையின் பாதிப்பை ஏற்றி விட்டு மூல ரோகத்துக்கு ஓர் உறுதியான நிவாரணம் என்பதை நெடுந்தூரம் வரை அறிவிக்கத் துவங்கிவிட்டது.

விரைவிலேயே நான்கு, ஐந்து நாட்களுக்குள்ளேயே உலகமே இந்த மூலரோகத்துக்கு உறுதியான நிவாரணத்துக்குள் அமிழ்ந்து போய்விட்டது. எங்கே பார்த்தாலும் இந்த விளம்பரம் தகதகத்தது. இதே விளம்பரம் ஒரு தினசரிப் பத்திரிகையில் வெளி வந்ததுமே ரங்கநாத்துக்கு அடங்காத ஆச்சரியம் ஏற்பட்டது. இந்தப் பத்திரிகை காலை சுமார் பத்து மணிக்குத் தான் நகரத்திலிருந்து சிவபால்கஞ்சிற்கு வந்து சேரும்.

எங்கெங்கே ஸ்கூட்டரும், டிரக்கும் மோதிக் கொண்டன? அப்பாசி என்ற போக்கிரி, இர்ஷாத் என்ற அந்தக் காய்கறி வியாபாரியை எங்கே, எந்தக் கத்தியினுல் எதற்காக, ஏன், எப்படிக் கொன்றுன் என்ற விவரங்களோடு நேர்முக வர்ணனை தரும். இந்தப் பத்திரிகை சூடான விஷயங்களைப் பரபரப்புடன் கிராம மக்கள் தெரிந்து கொள்ள உதவியது. ஆனுல் இன்று அந்தப் பத்திரிகையின் முன் பக்கத்தின் பெரும் பகுதியில், கறுப்புப் பின்னணியில் வெள்ளை எழுத்தில் அச்சிட்டிருந்த 'மூலரோகம்' வியாபித்து நின்றதை ரங்கநாத் வியப்புடன் கவனித்தான். சுவரிலே தீட்டியிருந்த விளம்பரங்களைப் போன்ற அதே எழுத்துக்கள், அதே வரி வடிவம், அதே அமைப்பு.

இந்த எழுத்துக்களே 'மூலரோகத்துக்கு' ஓர் அலாதியான வடிவத்தைத் தந்துவிட்டிருந்ததால், சுற்றுமுற்றும் மிகுந்த யாவுமே அதற்குள் ஐக்கியமாகி விட்டன. கறுப்புப் பின்னணியில் வெள்ளை வரி வடிவத்தில் மின்னிய 'மூலரோகம்' தொலைவிலிருந்தே பார்ப்பவர்களைத் தன்பால் கவர்ந்திழுத்தது என்றுல் மிகையில்லை. பெரிய பெரிய எழுத்தைக் கூடக் கூட்டிப் படிக்கத் திணறும் சனிஸ்வரன் கூடப் பத்திரிகையை எடுத்து வைத்துக்கொண்டு விழிகள் நிலை குத்தப் படிக்க முயன்றுன் என்றுல் பார்த்துக் கொள்ளுங்களேன். நெடுநேரம் உற்றுப் பார்த்த பின்பு ரங்கநாத்தின் பக்கம் திரும்பி, "ஹூம், இது அதேதான்" என்றுன் மெதுவாக. இதில் பெருமை தொனித்தது. அதாவது, சிவபால்கஞ்சின் சுவர்களிலே பளிச்சிட்டுக் கொண்டிருக்கும் இந்த எழுத்துக்கள் சாதாரணமானவை அல்ல. நகரத்திலுள்ள பத்திரிகையில் பிரசுரமாகிற விஷயங்கள், அதாவது சிவபால்கஞ்சில் உள்ளதுதான் வெளியூர்ப் பத்திரிகையிலும் வருகிறது என்றதொரு பெருமிதக் கணைப்பு.

ரங்கநாத் அசையாது வீற்றிருந்தான். அவன் முன்னே பத்திரிகையின் பக்கங்கள் கலைந்து கிடந்தன. 'அமெரிக்கா

ஒரு புதிய கோளத்தை வானில் செலுத்தி யிருக்கிறது, இந்திய – பாகிஸ்தான் எல்லையில் துப்பாக்கிச் சூடு நடந்து கொண்டிருக்கிறது, கோதுமை விளைச்சலின் குறைவால் ராஜ்யங்களுக்கு ஒதுக்கப்படும் அளவு குறைக்கப்படக் கூடும், செக்யூரிடி கவுன்சிலில் தென்னாப்பிரிக்கா சம்பந்தப்பட்ட சில விஷயங்கள் பற்றி விவாதம் நடக்கிறது' போன்ற செய்திகளை யெல்லாம், பறவைக் குஞ்சுகளை ஒரு பிரம்மாண்டமான ராட் சதப் பருந்து லபக்கென்று பாய்ந்து வந்து கௌவிச் செல்வது போல், அந்தக் கறுப்பு வெளுப்பு விளம்பரம் ஒரே அமுக்காக அமுக்கிவிட்டு 'மூலரோகம்', 'மூலரோகம்' என்று தொண்டை வரளக் கத்திக் கொண்டிருந்தது. இந்த விளம்பரம் பத்திரிகை யில் அச்சாகியதுமே, மூலரோகம், சிவபால்கஞ்சிற்கும், அகில உலகத்துக்குமிடையே தொடர்பு ஏற்படுத்தும் ஒரு வெற்றிகர மான மீடியமாக ஆகிவிட்டிருந்தது.

கொள்ளையர்களின் உத்தரவு என்னவென்றால், ஒரு குறிப் பிட்ட நாளில், குறிப்பிட்ட இடத்துக்கு வந்து ராமாதீனின் சார்பாகப் பணப்பையை வைத்துவிட்டுப் போய் விடவேண்டும். கொள்ளை யடிப்பதில் இந்த முறை தற்சமயம் நாட்டின் பல பகுதிகளில் வழக்கமாகி விட்டிருந்தது. இது புதிது அல்ல. மத் திய காலத்து முறைதான். அதாவது பணம், வெள்ளி அல்லது வெள்ளி முலாம் பூசிய ரூபாய் நாணயங்களாகக் கொடுக்க வேண்டும். நாணயங்களாக ஒரு பையில் வைக்கவேண்டியது மிகவும் முக்கியம். ஏனென்றால் தற்காலத்தில் ரூபாய் களை நோட்டுகளாகவும் கொடுக்கலாம். ஐந்தாயிரம் ரூபாய் களை ஒரு கட்டாக, காதற் கடிதம்போல் ஒரு கவரில் திணிக்க முடியும். அவசியம் நேர்ந்தால் செக்காகவும் கொடுக்கலாம். மாற்றிக் கொள்ளவும் முடியும். இதனால், 'ரூபாய்ப் பையை ஒரு குறிப்பிட்ட குன்றின் உச்சியில் வைத்துவிட்டுப் பேசாமல் திரும்பி நட' என்ற உத்தரவை அனுஷ்டிப்பதில் நடைமுறையில் சில சிரமங்கள் ஏற்படக் கூடும். குன்றின் மீது வைக்கப்படும் நோட்டுகள் நிறைந்த கவர் காற்றில் பறக்கக்கூடும். செக் போலியானதாகவும் இருக்கலாம். சுருக்கமாகக் கூறப் போனால், கலை, இலக்கியம், நிர்வாகம், கல்வி போன்ற துறை களில் உள்ளதுபோல் கொள்ளையடிக்கும் துறையிலும் மத்திய கால முறைகளைத் தற்காலும் நடைமுறையில் கொண்டு வரு வதில் சில சிரமங்கள் ஏற்படக் கூடும்.

எதுவானாலும் சரி, கொள்ளைக்காரர்கள் இவை யெல்லாம் பற்றி யோசிக்கவில்லை. ஏனெனில் ராமாதீனுக்குப் பயமுறுத்தல் கடிதம் அனுப்பியவர்கள் அசல் கொள்ளைக்காரர்கள் அல்ல. அச்சமயம் கிராமப் பஞ்சாயத்திலிருந்து கல்லூரி அரசியல் வரை, பீகம் கேடவி ராமாதீனுக்கும், உள்ளூர் வைத்தியருக்கும் கொஞ்சம் மோதல் இருந்தது. நகரமாக இருந்தால்,விஷயம் வேறு மாதிரி போயிருக்கும். உயர் மட்ட அரசியலாக இருந்தால் இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் ஏதாவதொரு பெண்ணின் சார்பில் ராமாதீனுக்கு விரோதமாகப் போலீஸில் ரிப்போர்ட் கொடுக்கப்பட்டிருக்கும். அவளை, அவர் மானபங்கப்படுத்த முயன்றதாகவும், ஆனால் அவள் முழு மூச்சுடன் எதிர்த்ததால் அவரால் ஏதும் செய்ய இயலவில்லை என்றும் கூறிய வண்ணம் அந்த அபலைப் பெண், தன் மானத்தையெல்லாம் அப்படியே வாரிச் சுருட்டிக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்திருப்பாள். ஆனால் இது கிராமம். அரசியல் மோதலில், பெண்களின் மானபங்கம் என்ற போர் முறை உத்தியைக் கையாள இன்னும் இங்கு அங்கீகாரம் அளிக்கப்படவில்லை. இதனால் பழைய முறைகளும், தந்திரங்களுமே கையாளப்பட்டு வந்தன. பயமுறுத்தல் கடிதம் மூலம் ராமாதீன் பாபூவைச் சில நாட்கள் வரை தவிக்க, திகிலடையச் செய்தார்கள்.

போலீஸுக்கும் வைத்தியருக்கும் மற்ற யாவருக்குமே இந்த அச்சுறுத்தல் கடிதம் போலி என்பது நன்கு தெரியும். இம் மாதிரி கடிதங்கள் பலருக்கும் பல முறை வந்திருந்தன. இதனால் குறித்த இடத்தில் பணப் பையைக் கொண்டு போய் வைக்க வேண்டிய அவசியம் ஏதும் ராமாதீனுக்கு ஏற்படவில்லை. கடிதம் மட்டும் போலியாக இருந்திராவிட்டால் கூட, ராமாதீன் சத்தமிடாமல் பணப் பையைக் கொண்டுபோய் வைப்பதைவிட, வீட்டைக் கொள்ளை அடிப்பதையே விரும்பி யிருப்பார் எனலாம். ஆனால் ஸ்டேஷனில் புகார் தாக்கலாகி இருந்ததால் அவர்கள் சட்டப்படி நடவடிக்கை எடுக்கவேண்டியவர்களாக இருந்தனர்.

குறிப்பிட்ட தினத்தன்று குன்றிலிருந்து கிராமம் வரையிலுள்ள இடம் போலீசாரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அதில் அவர்கள் திருடன் விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தனர். குன்றின் மீது ஒரு குட்டிக் காவல் நிலையமே உருவாகி விட்டது. சுற்றுமுற்றுமுள்ள நஞ்சை, புஞ்சை நிலங்கள், காடுகள், வயல் வெளிகள் என்று யாவற்றையுமே

சல்லடை போட்டுச் சலித்தனர். கொள்ளையர்கள் எங்குமே தட்டுப்படவில்லை. மரங்களைக் குலுக்கிப் பார்த்தன நரி வளைகள், பொந்துகளிலெல்லாம் குச்சிகளை விட்டுக் குடைந்த னர். வெட்டவெளிகளில், தங்கள் மோப்பப் பார்வையை மேயவிட்டு அங்கிருப்பவை யெல்லாம் கொள்ளையர்கள் அல்ல; வெறும் பறவைகள், குள்ளாநரிகள், புழு பூச்சிகள் தான் என்று உறுதி செய்து கொண்டனர். இரவில் உரத்த கூச்சல் எழும்பியதும் அது கொள்ளையர்களின் கூச்சல் அல்ல, நரியின் ஊளையென்றும், அக்கம்பக்கத்துத் தோப்புத் துரவுகளில் பட படப்பது வௌவால்களென்றும் தெரிந்ததும் நிம்மதி அடைந் தனர். அன்றிரவு ராமாதீனுக்கும் கொள்ளைக்காரர்களுக்கும் நடந்த சரியான போட்டா போட்டி, முடிவில் இருவருக்குமே வெற்றி தோல்வியின்றி முடிந்தது. ஏனெனில் கொள்ளையர்கள் பணத்தைப் பெற்றுக்கொள்ளவோ, ராமாதீன் பணத்தைக் கொடுக்கவோ அங்கு வரவேயில்லை.

போலீஸ் ஸ்டேஷனில் சப் இன்ஸ்பெக்டர் வேலைக்கு வந்து சில நாட்கள்தான் ஆகியிருந்தன. குன்றுக்கு வரப்போகும் கொள்ளையர்களை வளைத்துப் பிடிக்கும் பணி அவரிடம் ஒப் படைக்கப்பட்டிருந்தது. பலத்த முஸ்தீபுக்கள் செய்த பின்னும் பாவம், அவருக்குத் தன் அம்மாவுக்கு எழுதும் அடுத்த கடிதத் தில், 'அம்மா, கொள்ளையர்கள் மெஷின் துப்பாக்கியைக் கூடப் பிரயோகித்தனர். ஆனால் இந்தப் பயங்கரமான குண்டு மாரிக்குப் பின்னும் உன் ஆசீர்வாதத்தினால் உள் பிள்ளையின் மயிரிழைக்குக் கூடத் தீங்கு நேரிடவில்லை' என எழுதச் சந்தர்ப் பம் கிட்டாமல் போய்விட்டது. இரவு ஒரு மணிக்கு அவர் குன்றி லிருந்து இறங்கி வந்தார். குளிர ஆரம்பித்திருந்தது. இருட்டு வேறு. தவிரவும் நகரத்திலிருக்கும் காதலியின் நினைவு வேறு அவரை ஆக்கிரமித்துக்கொண்டுவிட்டது. அதிலும் அவர் பி.ஏ. வில் இந்தி இலக்கியம் படித்தவர். பின் என்ன சொல்ல? தணிந்த குரலில் முணுமுணுக்கத் துவங்கியவர் பிறகு பாடவே ஆரம் பித்து விட்டார். "என் இதயமே....ஆ....ஆ....என் இதயமே..."

அவருக்கு முன்னாலும் பின்னாலும் இரண்டு போலீஸ்காரர்கள் வந்துகொண்டிருந்தனர். 'பரவாயில்லை. எல்லாம் கொஞ்ச நாட் களில் சரியாகிவிடும்' என்று நினைத்தவாறே போலீஸ்காரர்கள் நடந்தனர். மைதானத்தைக் கடந்ததுமே இன்ஸ்பெக்டரின் குரல் பின்னும் உயர்ந்துவிட்டது. வேறு எங்குமே சொல்லிக் கொள்ள

முடியாத இந்த அசட்டுத்தனத்தை மிகக் குஷியாக, மனம் விட்டுப் பாடமுடியும் என்பதை உணர்த்துவது போலிருந்தது.

பிரதான சாலையை நெருங்கியாகி விட்டது. திடீரென ஒரு பள்ளத்திலிருந்து குரல் வந்தது. "கர்போள் சர்பாலா." இன்ஸ்பெக்டரின் கரம் ரிவால்வரைத் தொட்டது. திடுக்கிட்ட போலீஸ்காரர்கள் ரைபிளை உயர்த்தினர். குழியிலிருந்து மறுபடியும் குரல் வந்தது.

"கர்போள், சர்பாலா!"

ஒரு போலீஸ்காரன் இன்ஸ்பெக்டரின் காதில், "சுட்டு விடுவான்! மரத்துக்குப் பின்னால் போங்க சார்" என்றான்,

மரம் அங்கிருந்து கிட்டத்தட்ட ஐந்து கஜத் தூரத்தில் இருந்தது. இன்ஸ்பெக்டர் கிசுகிசுத்தார்: "நீங்களெல்லாம் மரத்துக்குப் பின்னால் போங்க. நான் யாரென்று பார்க்கிறேன்." உடனே உரத்த குரலில், "யாரடா பள்ளத்தில்? யாராக இருந்தாலும் வெளியே வா" என்று கத்தினார். சட்டென ஒரு சினிமாவில் பார்த்த காட்சி நினைவுக்கு வரவே, "நீங்கள் யாவரும் சூழ்ந்து கொள்ளப்பட்டு விட்டீர்கள். அரை நொடியில் வெளியே வரா விட்டால் சுடப்படுவீர்கள்" என்று அதட்டினார்.

பள்ளத்தில் சில நிமிடம் மௌனம் நிலவியது. பின்னர், "மர்பர் கர்பியே, சர்பாலே, கர்போலி சர்பலானேவாலே" என்ற சொற்கள் கேட்டன.

ஒவ்வோர் இந்தியனும் தன் வீட்டைவிட்டு வெளியே காலடி வைத்ததும் மொழி விஷயத்தில் கல்லாகத்தான் போய் விடுகிறான். ஒன்றும் புரிவதில்லை. அவன் காதில் விழும் ஒலியைக் கொண்டு அவனால் அது எந்த மொழி என்றே நிர்ணயிக்க முடிவதில்லை. இது நேபாளியா, குஜராத்தியா என்று மண்டையை உடைத்துக்கொண்டு முடிவில் சிந்திப்பதையே விட்டு விடுகிறான். ஆனால் இந்தப் பாஷை இன்ஸ்பெக்டரை எச்சரித்து விட்டது. 'இது என்ன விஷயம்?' என யோசிக்கலானார். இது ஏதோ வசவு மாரி என்று புரிந்ததே தவிர, என்ன பாஷை எனப் புரியவில்லை. வார்த்தைகள் புரிந்துகொள்ள முடியாமல் அறிவுக் கெட்டாமற் போகும்போது குண்டுகள் பறக்கின்றன என்ற அகில உலகச் சித்தாந்தத்தைச் சிவபால்கஞ்சில் பிரயோகித்துப் பார்க்க நினைத்த சப் இன்ஸ்பெக்டர் ரிவால்வரைக் குறி வைத்தவாறே கடுமையான குரலில், "குழியைவிட்டு வெளியே வா முதலில்! இல்லாவிட்டால் சுட்டு விடுவேன்" என்றார்.

துப்பாக்கித் குண்டைப் பிரயோகிக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. போலீஸ்காரர்களில் ஒருவன் மரத்தின் பின்னாலிருந்து வந்து. "சுடாதீர்கள், இன்ஸ்பெக்டர் சாகப்! இவன் ஜோக்நத்வாதான். குடித்து விட்டுக் குழியில் கிடக்கிறான்" என்றான்.

இதைக் கேட்டதும் மற்றப் போலீஸ்காரர்கள் உற்சாகத்துடன் குழியைச் சூழ்ந்து கொண்டனர்.

"யாரது இந்த ஜோக்நத்வா?" என்று வினவினார் இன்ஸ்பெக்டர்.

ஒரு பழைய போலீஸ்காரன் சொன்னான். "ஸ்ரீ ராம்நாத்னுடைய பிள்ளைதான் ஜோக்நத்வா. தனிக்கட்டை. ரொம்பக் குடிப்பான். குடிகாரப் பயல்."

எல்லாருமாகச் சேர்ந்து அவனைப் பிடித்து வெளியே இழுத்து நிறுத்தினார்கள். தானாக நிற்க முடியாதவனை மற்றவர்கள் எத்தனை நேரம் நிற்க வைக்க முடியும்? தள்ளாடி விழுந்தவனைத் தடுத்து ஒரு வழியாக வெளியே கொண்டு வந்ததும் பரமஹம்சர் மாதிரி அவன் உட்கார்ந்துவிட்டான். உட்கார்ந்த பின், கண்ணை முழித்து முழித்துக் கையை மட்டும் அசைத்து, வௌவால் மாதிரியும், நரி மாதிரியும் பல ஓசைகளை வெளிப்படுத்தினான். பிறகு, ஒருவாறு தன்னை மனித நிலைக்குக் கொணர்ந்ததும் அவன் வாயிலிருந்து வெளிப்பட்டன சொற்கள்.

"கர்போள் சர்பாலா?"

"இவன் சுய நினைவில் இல்லை, அதனால் கண்டபடி வைகிறான்" என்றான் ஒருவன்.

திட்டுவதில் அவனுக்குள்ள ஈடுபாட்டைக் கண்டோ, அல்லது சுய நினைவற்ற நிலையிலும் இதுவாவது பேசுகிறானே என்று நினைத்தோ இன்ஸ்பெக்டர், அவன் தலையைப் பற்றி உலுக்கி, "ஏய்....இந்தா" என்று மிரட்டினார்.

ஆனால் ஜோக்நத்வா சுய நினைவுக்கு வர இசையவில்லை. அவன் சொன்னது இதுதான்.

'சர் பாலா.'

போலீஸ்காரர்களுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"இந்த அயோக்கிய பயல் நம்மைச் 'சாலா' (மச்சான்) என்கிறான்" என்றார் இன்பெக்டர். அவர் அடிக்க கரத்தை ஓங்கியதும் ஒருவன் இடைமறித்து, "போகட்டும், விட்டு விடுங்கள் சார்" என்றான்.

போலீஸ்காரர்களின் இந்த மனிதாபிமானப் போக்கு இன்ஸ்பெக்டருக்குச் சற்றும் ரசிக்கவில்லை. தன் கரத்தைப் பின்னுக் கிழுத்துக் கொண்டவர் உத்தரவிட்டார்: ''இவனை இழுத்துக் கொண்டு போய் ரிமாண்டில் வையுங்கள். நூறுவது சட்டப்படி அடிதடி சண்டை வழக்கில் சார்ஜ் செய்யுங்கள்.''

''இது முடியாது சார்'' என்றான் ஒருவன். ''இவன் உள்ளூர் வாசி. சுவர்களில் விளம்பரங்கள் எழுதுபவன். மகா போக்கிரி. மேலுக்கு ஏதோ வேலை செய்வதுபோல் காட்டிக் கொள்கிறான்.''

எல்லாருமாகச் சேர்ந்து அவனைப் பிடித்து நிற்கவைத்து நடக்கச் செய்தவாறு மேலே இழுத்துச் செல்லலானார்கள். ''குடித்துவிட்டு வைகிறான் போலும். ஏதாவதொரு குற்றத்தில் மாட்டி விடலாம். தற்போதைக்கு ரிமாண்டில் போடுங்கள். நாளைக்குச் சார்ஜ் ஷீட் போடலாம்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''சார், அநாவசியமான சங்கடத்தில் ஏன் மாட்டிக்கொள்ள வேண்டும்? அதனால் என்ன பயன்? கொண்டுபோய் வீட்டில் தள்ளிவிட்டு வருகிறோம். ரிமாண்டில் எப்படிப் போடுவது? இவன் வைத்தியரின் ஆள்'' என்றான் ஒருவன்.

இன்ஸ்பெக்டர் வேலைக்குப் புதியவர். முதலில், போலீஸ்காரர்களின் மனிதாபிமான நோக்கே அவருக்குப் புரியவில்லை. இப்பொழுது புரிந்துவிட்டது. மேலே அவர் ஒன்றுமே பேசவில்லை. அவர்களிடமிருந்து சற்று விலகிச் சென்று இருளில் இலேசான குளிரில், நகரத்திலுள்ள தன் காதலியின் நினைவிலே, 'என் இதய மலரே' என்ற முணுமுணுப்பிலே இதம் காண மீண்டும் முயற்சிக்கலானார்.

## அத்தியாயம் 8

கோவாப்பரேடிவ் யூனியனில் நடந்திருந்த கையாடல் மிகவும் எளிய முறையில் நடந்திருந்தது. தினந்தோறும் நடைபெறும் நூற்றுக் கணக்கான கையாடல்களைவிட இதில் குறிப்பிடத் தக்க விசேஷம் என்னவென்றால், இது தூய்மையான, சுத்த

மான கையாடல், ஒளிவு மறைவு எதுவுமில்லை. கோவாப்ப ரேடிவ் யூனியனுக்குச் சொந்தமான தானியக் கிடங்கு ஒன்றுண்டு. அதில் கோதுமை வைக்கப்பட்டிருந்தது. ஒரு நாள் யூனியனின் சூப்பர்வைசர் இரண்டு டிரக்குகளுடன் கோதுமை மூட்டைகளை ஏற்றி அடுக்கிக் கொண்டார். எட்ட இருந்து பார்த்தவர்கள், 'இது தினசரி நடக்கும் மாமூல்தானே' என்று நினைத்தனர். மூட்டைகளைப் பக்கத்திலிருந்த இன்னொரு கிடங்கிற்கு எடுத்துச் செல்ல ராமஸ்வரூப்பும் டிரைவரின் பக்கத்தில் ஏறி அமர்ந்து கொண்டார். டிரக்குகள் புறப்பட்டன. பிரதான பாட்டையிலிருந்து ஒரு கப்பிப் பாதையில் ஐந்து மைல் சென்றால் அந்த மற்றொரு தானியக் கிடங்கை அடையலாம். ஆனால் டிரக் அந்தப் பாதையில் திரும்பவில்லை. நேராகச் சென்றுவிட்டது. கையாடல் நடந்தது இங்கேதான். டிரக் நேராக நகரத்திலுள்ள கல்லாமண்டியை அடைந்தது. அங்கே கோதுமை மூட்டைகளை இறக்கியபின் இரண்டு டிரக்குகளும், இச்சம்பவத்தை முற்றும் மறந்துவிட்டது போல் மறு நாளிலிருந்து முன்போலவே அக்கம்பக்கத்து இடங்களுக்குக் கரியும், விறகும் ஏற்றிச் செல்லத் துவங்கிவிட்டன. இதன் பின் நீண்ட நாள் வரை ராமஸ்வரூப் இருந்த இடமே தெரியவில்லை. கோதுமையை விற்று, ஆயிரக் கணக்கில் பணம் சம்பாதித்த அவர் பம்பாய்க்கு ஓடி விட்டதாக மக்கள் நம்பினர். இந்த விவரமெல்லாம் உள்ளூர் போலீஸ் ஸ்டேஷனில் கையாடல் வழக்கு பற்றிய விவரமாக ஏட்டில் பதிவாகியதும் வைத்தியருக்கு ஒரு பாரம் குறைந்தது போலாயிற்று.

ஆயினும் யூனியனின் ஒரு டைரெக்டர் முதல் நாள் நகரத்தில் கண்டதொரு காட்சியிலிருந்து ராமஸ்வரூப் பணத்தைச் செலவு செய்யப் பம்பாயை விடத் தன் இலாக்காவுக்கே முதலிடம் கொடுத்திருப்பதாகத் தெரிந்தது. டைரெக்டர், சும்மா பார்த்து விட்டு வரலாமே என்றுதான் நகரத்துக்குச் சென்றிருந்தார். இப்படிச் செல்லும்போதெல்லாம் ஏனைய காரிய திட்டங்களுடன் ஒரு புரோகிராம் நிச்சயமாக இடம் பெற்றிருக்கும். ஏதாவதொரு பார்க்குக்குச் சென்று, ஹாயாக மரத்தடியில் உட்காருவது, வேர்க்கடலை, பட்டாணி தின்பது, வண்ண மலர்களையும், இளம் பெண்களையும் உற்றுப் பார்த்தவாறே அமர்ந்திருப்பது, கடைசியாக ஏதாவதொரு இளம் வயதுப் பையனிடம் மாலிஷ் செய்து கொள்வதென்பதே அந்தப் புரோ

கிராம். அன்றும் இப்படித்தான், தம் நிகழ்ச்சி நிரலில் கடைசி அயிட்டத்தை அவர் ரசித்துக்கொண் டிருந்தபொழுது அந்த நிகழ்ச்சி நிகழ்ந்தது. அவர் மர நிழலில் ஒரு பெஞ்சியின் மீது அமர்ந்திருந்தார். கண்கள் மூடியிருந்தன. அவர் தலையின் மீது அச்சிறுவனின் மென்மையான, மெல்லிய விரல்கள் 'திங்' 'திங்' 'திங்' என்று தாளலயத்தோடு தட்டிக்கொண் டிருந்தன. சிறுவன் மிகுந்த உற்சாகத்துடன் அவர் தலையைத் தபலா தட்டுவதுபோல் தட்டிக்கொண் டிருந்தான். அவரோ, 'இதோ, இவன் மாலிஷ் செய்யும் தனது காரியத்தை விரைவில் முடித்து விடுவானே' என்று அந்தச் சுகத்தை இழக்க விரும் பாதவர்போல் வருத்தப்பட்டுக்கொண் டிருந்தார்.

எதிரே ஒரு மரம். அம்மரத்தின் கீழே சூபர்வைசர் ராம்ஸ் வரூப் அமர்ந்திருப்பது யதேச்சையாக அவர் கண்ணில் பட்டது. அவரும் அவரைப் போலவே ஒரு சிறுவனிடம் மாலிஷ் செய்து கொண்டபடி, 'திங்.... திங்.... திங்'கென்ற அந்தத் தாள லயத்தில் தம்மையும் மறந்து லயித்திருந்தார். இருவருமே அக்கணத்தில் பரமஹம்ச நிலையில் தங்கள் தங்கள் இன்ப உலகத்திலே லயித்திருந்தனர். அமைதியான சுக வாழ் வுக்கு அது ஓர் ஆதர்சமாக விளங்கியது. இதனால் அவர்கள் மற்றொருவர் விஷயத்தில் குறுக்கிடவில்லை. கிட்டத்தட்ட பதினைந்து நிமிடம் தங்கள் தங்கள் பெஞ்சிகளிலே நல்லதொரு அயலார்களைப் போல் ஒருவரையொருவர் பார்த்தும் பாராதது போல் அமர்ந்திருந்தனர். பின்னர் இருவரும் சோம்பல் முறித்தவாறே எழுந்து அவரவர் மாலீஷ்காரனுக்குத் தரவேண் டிய கூலியைத் தந்து மீண்டும் தங்களைச் சந்திக்க இங்கு வரும்படி கூறி உற்சாகப்படுத்தியவாறே பஞ்சசீலக் கொள் கைப்படி தங்கள் தங்கள் வழியே சென்று விட்டனர்.

சிவபால்கஞ்சிற்குத் திரும்பி வரும்பொழுதுதான் டைரெக் டருக்கு மாலீஷ் தந்த இன்பத்தின் மதிமயக்கத்தில் தாம் கோவாப்பரேடிவ் இயக்கத்துக்கே துரோகம் புரிந்துவிட்டது உறைக்கலாயிற்று. ராமஸ்வரூப் தலைமறைவாக இருக்கிறான். போலீஸ் அவனைத் தேடிக்கொண்டிருக்கிறது என்பதும் அப்பொழுதுதான் நினைவு வந்தது. அவர் ராமஸ்வரூப்பைப் பிடித்துக் கொடுத்தால் கையாடல் வழக்கு நடக்கும். ஒருகால் அவருடைய பெயர்கூடப் பத்திரிகைகளில் அடிபடலாம். இதை யெல்லாம் நினைத்து அவர் வருந்தினார். அவருடைய

அந்தராத்மா அவரைக் குத்தியது. தன் மனச்சாட்சியைத் திருப்தி செய்யவேண்டி ஊருக்கு வந்ததும் வராததுமாய் வைத்தியரைச் சந்தித்தார். அஷ்டாங்க சூர்ணம் ஒரு பொட்டலத்தை வாங்கி விழுங்கிவிட்டு, "இன்று பார்க்கிலே நம்ப ராமஸ்வரூப் மாதிரி ஒருத்தனைப் பார்த்தேன்" என்று ஆரம்பித்தார்.

"இருக்கலாம்" என்றார் வைத்தியர். "சில மனிதர்கள் ஜாடையில் பார்ப்பதற்கு ஒரேமாதிரி இருப்பதுண்டு."

இத்துடன் தம் மனச்சாட்சி சும்மா இருந்துவிடாதென்று டைரெக்டருக்குத் தோன்றியது. சற்றுநேரம் இங்குமங்கும் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, "நான் அப்பவே நினைத்தேன்; இது ராமஸ்வரூப்பாகத்தான் இருக்கும் என்று......"

வைத்தியரின் விழிகள் டைரெக்டரின்மீது நிலைத்தன.

டைரெக்டர் தொடர்ந்தார். "அது ராமஸ்வரூப்பேதான். சந்தேகமே இல்லை. களவாணிப்பயல் இங்கே என்ன செய்கிறானென்று நினைத்தேன். மாலீஷ் செய்துகொண்டிருந்தான்."

"நீர் என்ன செய்து கொண்டிருந்தீர்?"

டைரெக்டர் அரைமனத்தோடு கூறினார்: "நானா? நானொரு மரத்தின் நிழலில் இளைப்பாறிக்கொண்டிருந்தேன்."

"அப்பொழுதே போலீஸிற்குத் தகவல் கொடுத்திருக்க வேண்டும்."

டைரெக்டர் சில நிமிடம் யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

"நான் பார்த்துவிட்டது எங்கேயாவது அவருக்குத் தெரிந்துவிடப் போகிறதே என நினைத்தேன். இதனால்தான் போலீஸிற்குத் தகவல் கொடுக்கவில்லை" என்றார் நிதானமாக.

'மோசடி செய்தவன் பம்பாயில் இல்லை, இதோ பதினைந்து மைல் தூரத்தில் தான் இருக்கிறான். எண்ணெய் மாலீஷ் செய்து கொள்ளும் தலை இன்னமும் தோளின்மீது பத்திரமாகத்தான் இருக்கிறது' என்ற செய்தி வைத்தியரைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டது. இனி டைரெக்டர்கள் மீட்டிங்கை அழைப்பது அவசியமாகி விட்டது. வெறும் வயிற்றுடன்தான் அவர் சமாசாரத்தையெல்லாம் கேட்டார் அதைப் பங்கி பானம் அருந்தியவாறே கூடக் கேட்கலாம். இதனால் கூட்டத்தை மாலையில் கூட்டுவதாகத் தீர்மானிக்கப்பட்டது.

சனிஸ்வரனுக்கு, இவ்வுலகைப் பொறுத்தவரை வைத்தியர் தாம் எல்லாம். சுவர்க்கத்தை அதாவது மறு உலகைப்

பொறுத்தவரையில் ஹநுமான்ஜி ஒருவர்தாம் தெய்வம். இவ்விருவராலும் அவன் தனித்தனியே கவரப்பட்டிருந்தான். ஹநுமான்ஜி லங்கோடு மட்டுமே அணிந்திருக்கிறார். அதனால் சனிஸ்வரன் அன்டர்வேர் மட்டுந்தான் போட்டுக் கொண்டான். உடை அணிந்துகொண்டு வெளியே செல்ல நேரிடும்போது பனியன் அணிந்துகொள்வான். இவையே ஹநுமான்ஜியினால் ஏற்பட்டிருந்த பிரபாவம். வைத்தியரால் ஏற்பட்டிருந்த பாதிப்பே அலாதி. தெருவோடு செல்கிற யாரைப் பார்த்தும் நாய்மாதிரி அவனால் வள்ளென்று குரைக்க முடியும். ஆனால் வைத்தியர் வீட்டு நாயானாலும்கூட அதன் முன் வாலைக் குழைத்துக்கொண்டு நின்றுவிடுவான். வைத்தியர் வீட்டில் நாய் இல்லை, சனிஸ்வரனுக்கு வாலில்லை என்பதெல்லாம் வேறு விஷயம்.

நகரத்துப் பொருள்கள்மீது அவனுக்கு அலாதியான மோகம் உண்டு. இதனால்தான் ரங்கநாத்மீது தனி அபிமானம் காட்டினான். ரங்கநாத் வாசலில் வந்து நின்றால் சனிஸ்வரனை அவன் பக்கத்திலே காணலாம். இன்றும் அப்படித்தான் நடந்தது. வைத்தியர் கோவாப்பரேடிவ் யூனியன் கூட்டத்துக்குச் சென்றிருந்தார். வாசலில் ரங்கநாத்தும், சனிஸ்வரன் மட்டுமே இருந்தனர். சூரியன் அத்தமிக்கும் தருணம். குளிர் காலத்து மாலை இருளுடன் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் எழும் கப்பிநிறப் புகை மண்டலம் வீடுகளுக்கு மேலே நிழலாடிக் கொண்டிருந்தது.

தெருவோடு யாரோ டக், டக்கென்ற ஓசையுடன் நடந்தனர். உடற் குறைபாட்டின்பால் நம் இந்தியர்களுக்குள்ள சாத்துவிகமான வெறுப்பை எச்சிலாகத் துப்பி வெளிப்படுத்தியவாறே சனிஸ்வரன், "நொண்டிப்பயல் தான் போகிறான், சாலா" என்றவன், ஒரே பாய்ச்சலில் வெளித் திண்ணைக்குத் தாவித் தவளைபோல் உட்கார்ந்துவிட்டான்.

"யாரது? நொண்டியா?" என்று குரல் கொடுத்தான் ரங்கநாத்.

அவன் சற்றே மேலே நடந்துவிட்டிருந்தான். குரல் கேட்டதும் அங்கேயே நின்று திரும்பிப் பார்த்தவாறே, "ஆமாம் பாபு, நொண்டிதான்" என்றான்.

"காப்பி கிடைத்துவிட்டதா?"

"காப்பி கிடைக்கவில்லை பாபு. ஆனால் இன்று நோட்டீஸ் போர்டில் ஆட்சேபங்கள் கூறப்பட்டிருக்கின்றன."

"ஏன்? என்ன வந்தது? மறுபடியும் கோர்ட் பீஸ் குறைவாக இருக்கிறது என்கிறார்களா?"

"பீஸ் இல்லை பாபு." நொண்டி தான் சொல்லுவது காதில் விழவேண்டுமே என்று உரக்கக் கத்தினான். "இந்தத் தடவை விலாசம் எழுதுவதில் தவறு நேர்ந்துவிட்டது. விண்ணப்ப தாரரின் கையெழுத்து தவறான இடத்தில் போட்டிருக்கிறதாம். தேதிக்கு மேலே இரண்டு நம்பர்கள் ஒன்றாகச் சேர்ந்திருக் கிறதாம். ஓரிடத்தில் கொஞ்சம் கிழிந்திருக்கிற இடத்தில் கையெழுத்து இல்லை. இப்படித் தவறுகள் காட்டப்பட்டிருக் கின்றன பாபு."

"இந்தப் பயல்கள் ரொம்பப் போக்கிரிகள். என்ன என்ன தவறுகளை இழுத்துவிட்டிருக்கிறார்கள் பார்."

காந்திஜி பிரார்த்தனைக் கூட்டத்தில், நாம் ஆங்கிலேயர்களை வெறுக்கக்கூடாது என அறிவுரை கூறியதைப் போன்று நொண்டி, இக் கூற்றை மறுப்பவன்போல் தலை அசைத்தவாறே, "இல்லை பாபு! காரியாலயத்தில் உள்ளவர்கள் தங்கள் கடமை களைச் செய்கிறார்கள். குழப்பமெல்லாம் இந்த விண்ணப்பம் எழுதுபவர்களால் வந்தது. விஷயஞானம் சூனியமாகிக் கொண்டே போகிறது. புதிய புதிய விண்ணப்பம் எழுதுபவர் கள் வருகிறார்கள்; தப்பும் தவறுமாய் எழுதிவிடுகிறார்கள்."

விஷய ஞானம் சூனியமாகிக்கொண்டு வருகிறதென்பதை ரங்கநாத் மனத்துக்குள் ஒப்புக்கொண்டான். ஆனால் நொண்டி கூறிய காரணத்தில் அவனுக்கு உடன்பாடில்லை. அவன் ஏதோ கூற முற்படுதற்குள், "பரவாயில்லை, பாபு, நாளைக்கு விண்ணப்பம் சரியாக எழுதப்பட்டுவிடும்" என்று கூறியவாறே நடக்கலானான்.

கட், கட் என்ற ஓசை எழுப்பியவண்ணம் அவன் சென்ற பிறகு சனிஸ்வரன், "எங்கெங்கோ இருந்த கழிசடைக ளெல்லாம் இந்த ஊரைத் தேடி வராங்க" என்றான்.

"எல்லா இடத்திலும் இப்படித்தான். தில்லியிலும் இதே நிலைமைதான்" என்று சமாதானமாகக் கூறினான் ரங்கநாத். பின்னர் சனிஸ்வரனுக்குத் தில்லியைப் பற்றிய கதையெல் லாம் கூறலானான். ஆங்கில மொழியெனும் சாளரத்தினூடே எட்டிப் பார்ப்பதின் மூலம் இந்தியர்களின் அறிவு உலக ஞானத்தை பெறுகிறது என்பது போல், சனிஸ்வரனின் புத்தி, ரங்கநாத் என்ற சாளரத்தின் மூலம் தில்லி மாநகரத்தைப்

பற்றி அறிந்து கொள்ள முயன்றது. சற்று நேரம் இருவரும் இதிலேயே லயித்திருந்தனர்.

இருட்டிவிட்டதென்ருலும், எதிரே நிற்பவர் மனிதரா அல்லது மிருகமா என்று இனம் கண்டுகொள்ள முடியாதபடி இருள் கனத்துவிட வில்லை. வைத்தியர் வீட்டின் முன்னறையில் ஒரு அரிக்கேன் விளக்கு தொங்க விடப்பட்டன. எதிரே வீதியில் யாரோ இரண்டொரு வாலிபர்கள் உரக்கச் சிரித்தவாறே சென்றனர். அவர்கள் பேச்சு ஏதோ ஒரு சம்பவத்தைப் பற்றியதாக இருந்தது. பகல், பன்ருஷ், சபாஷ், சீட்டு, காசு என்ற வார்த்தைகள் அவர்கள் பேச்சில் அடிபட்டன. ஏதோ திட்டக் கமிஷனின் அதிகாரிகளிடையே, 'எவல்யூஷன்', 'கோஆர்டினேஷன்' என்ற சொற்களைப்போலவும், இலக்கிய வாதிகளிடையே, 'முன்மொழிதல், புதிய ஆய்வுத் துறை, யுக போதம், 'சந்தர்ப்பம்' என்ற வார்த்தைகளைப் போலவும் பேசியபடி அம் மூவரும் வாசல் அருகே வந்து நின்றனர். சனிஸ்வரன் கிசுகிசுத்தான்: "பத்ரி தம்பி, இந்தக் குரங்குகளுக் கெல்லாம் குஸ்தி கற்றுக் கொடுக்கிருர். புலியின் கையிலே துப்பாக்கியைக் கொடுக்கிருர், தெரிந்ததா? இந்தப் பயல்களால் ஊரிலே மக்கள் உறவு முறையோட வாழறதே சங்கடமாகப் போச்சு. இன்னும் தடியடி கற்றுக் கொள்ளட்டும்; அப்புறம் ஊரைவிட்டே ஓடிவிட வேண்டியது தான்." அம் மூவரில் ஒருவன் முன்னறை வாசல் கதவருகே வந்து நின்ருன். வெற்று உடம்பு; சட்டை, பனியன் எதுவும் இல்லை. குஸ்தி மேடையின் புழுதி உடலெங்கும் மண்டிக் கிடந்தது. லங்கோட்டின் நாடா, இடுப்பிலிருந்து கால்வரை யானையின் வால்போல் தொங்கிக் கொண்டிருந்தது. சிவபால்கஞ்சில் அச்சமயம் லங்கோடு அணிபவர்களிடையே இந்த நாகரிகந்தான் பிரபலமாகி இருந்தது.

"சின்ன பயில்வான்! என்ன விஷயம்?" என்று விசாரித்தான் சனிஸ்வரன்.

பயில்வான் முட்டியைச் சொறிந்தவாறே, "பத்ரி அண்ணன் இன்று குஸ்தி மேடைக்கு வரவில்லை. எங்கே மாயமாகி விட்டார்?" என்ருன்.

"மாயமாக எங்கே போவார்? இங்கேதான் எங்கேயாவது இருப்பார்."

"எங்கே இருப்பார்?"

"யூனியன் சூபர்வைசர் கோதுமையைத் தட்டிக் கொண்டு போய்விட்டான் இல்லே, அதற்காக யூனியன் மீட்டிங் நடக்கிறது. அங்கே போயிருப்பார்."

இதற்குள் வாசலில் பல குரல்கள் கேட்டன. கதர் வேட்டி, சட்டை, குல்லா, மேல் வேஷ்டி என்ற கோலத்தில் வைத்தியரின் கம்பீரமான தோற்றம் திண்ணையில் காணப்பட்டது. அவருக்குப் பின் பலர் அவருடைய சீடர்கள், கூஜாக்கள். பயில்வான் பத்ரி யாவருக்கும் கடைசியில் இருந்தார். முகத்தைப் பார்த்தால், கொள்ளு வைக்கும் பை இல்லாமலேயே பை மாதிரி உப்பிக் கிடந்தது. அவரைக் கண்டதுமே குட்டி வஸ்தாது படபடத்தான். "வஸ்தாது, ஒரு பண்டூஷ் விஷயம்! இதைச் சொல்வதற்காக ரொம்ப நேரமாய்க் காத்துக் கொண்டிருக்கிறேன்."

"நின்ருல் என்ன, உருகியா போய்விடப் போகிறே? என்ன விஷயம்?" என்று பத்ரி தன் சீடனை வரவேற்ருன். குருவும், சீடனும் பேசுவதற்காகத் திண்ணை ஓரத்துக்குப் போய் விட்டனர்.

வைத்தியரோடு நாலைந்து பேர்கள் உள்ளே வந்தனர். ஒருவர் நிம்மதியாக விட்ட பெருமூச்சு முடிவில் கேவலாக மாறியது. இன்ெருருவர் ஆசனத்தில் அமர்ந்து கொட்டாவி விட்டார். கொட்டாவியாகத் தொடங்கிய அது முடிவில் விசில் அடிப்பது போல் முடிந்தது. வைத்தியர் திண்டில் சாய்ந்தவாறே தொப்பியையும், குருதாவையும் கழற்றி வீசியெறிந்த பாணி, யாரோ பிரபலமான பாடகன் நீண்ட ஆலாபனைக்குப் பின் சமஸ்வரத்தில் வந்து நிற்பது போலிருந்தது. இருந்ததைப் பார்த்தால் யாவருமே மகத்தான எதையோ சாதித்து விட்டுத் தங்கள் களைப்பையெல்லாம் ஆற்றிக் கொள்ள விரும்பவர்கள் போல் காட்சி தந்தனர்.

"மகராஜ், களைப்பாக இருந்தால் ஒரு தரம் பானம் வடிக்கட்டுமா?" என்ருன் சனிஸ்வரன்.

வைத்தியர் ஒன்றும் பேசவில்லை, டைரெக்டர் ஒருவர் திருவாய் மலர்ந்தருளிஞர். "யூனியனில் இரண்டாம் முறையும் ஆகிவிட்டது. பிரமாதம் போ! பால்தான்! இனிமேல் புறப்பட வேண்டியதுதான் வீட்டுக்கு."

வைத்தியர் முன்போலவே மௌனமாகப் பிறர் பேசுவதைக் கேட்டுக்கொண் டிருந்தார். குறைவாகச் சாப்பிடுகிறவன்

பிறருக்கு நிறையப் பரிமாறுகிருன். அதிகம் பேசாதவன் மற்றவர்களை மனம் கொண்ட மட்டும் பேசவிடுகிருன். தான் முட்டாளாக இல்லாதவன் பிறரை முட்டாளுக்குகிருன் என்பதில் நம்பிக்கை ஏற்பட்டதிலிருந்து அவர் இவ்வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். திடீரென அவர் கேட்டார்: "ரங்கநாத், நீ என்ன சொல்லுகிருய்? உன் அபிப்பிராயம் என்ன?"

விஷயத்தைக் கூருமல் வைத்தியர் அபிப்பிராயம் கேட்டது போலவே விஷயம் யாதெனப் புரியாத நிலையிலேயே ரங்கநாத் பதிலிறுத்தான்.

"நடப்பதெல்லாம் நல்லதற்குத்தான்."

வைத்தியர் அடர்ந்த மீசைக்குள் புன்னகை பூத்தார். "நீ ரொம்பச் சரியாகத்தான் சொன்னுய்! பத்ரி முதலில் தீர்மானத்தை எதிர்த்தான். கடைசியில் அவனும் பேசாமல் இருந்து விட்டான். தீர்மானம் ஒரு மனதாய் நிறைவேறி விட்டது. நடந்ததெல்லாம் நன்மைக்குத்தான்."

ரங்கநாத்துக்கு இப்பொழுதுதான் தன் அருமையான அபிப்பிராயத்தை இப்படி வீணுக்கி விட்டது உறைத்தது. ஆவலுடன் கேட்டான்: "சூபர்வைசரினுல் எங்களுக்கு எட்டாயிரம் ரூபாய்க்கு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறதல்லவா? அதை ஈடுகட்ட அரசாங்கம் உதவி நிதி அளிக்க வேண்டும் என்ற தீர்மானத்தை ஒரு மனதாக நிறைவேற்றி யுள்ளோம்."

ரங்கநாத் ஆடிப் போனுன். "சர்க்காருக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? உங்கள் சூபர்வைசர் களவு செய்தால் நஷ்டஈடு சர்க்கார் கொடுக்க வேண்டுமா?"

"பின் யார் தருவார்கள்? சூபர்வைசர் தலைமறைவாகி விட்டான். நாங்கள் போலீஸில் புகார் கொடுத்தாகிவிட்டது. இனிப் பொறுப்பு சர்க்காருடையது தான். எங்கள் கையில் ஒன்றுமில்லை. முடிந்திருந்தால் அந்தப் பயலைப் பிடித்துக் கோதுமைக்கு உண்டான விலையை வசூலித்திருப்போம். இனிச் செய்ய வேண்டியதைச் சர்க்கார் செய்யட்டும் அல்லது அந்தக் களவாணிப் பயலைப் பிடித்து எங்கள் முன்னுல் கொண்டு வரட்டும். அல்லது என்ன வேண்டுமோ செய்யட்டும். எங்கள் யூனியன் பிழைத்திருக்க வேண்டும். மக்களுக்கு நன்மை புரியட்டுமென்று சர்க்கார் விரும்பினுல் அதுதான் இந்த நஷ்டத்தை ஈடு செய்ய வேண்டும். இல்லாவிடில் யூனியனின் கதி அதோ கதிதான். நாங்கள் எங்கள் கடமை

யைச் செய்தாகிவிட்டது. இனிமேல் சர்க்கார் வேலை. அதன் கையாலாகாத்தனம் தான் தெரிந்து கிடக்கிறதே.''

வைத்தியருடைய நியாயப்படுத்தப்பட்ட தர்க்கத்தைக் கேட்ட ரங்கநாத்துக்குத் தலை சுற்றியது. 'சர்க்காரின் கையாலாகாத்தனம்! மக்களின் நன்மை, பொறுப்பு, கடமை' போன்ற சொற்களை மீண்டும் மீண்டும் அவர் பிரயோகித்தார். புது யுகத்து மனிதர்கள் புரிந்து கொள்ளும் பாஷையைத் தன் மாமா பழைய காலத்தவராக இருந்தாலும் பேசத் தெரிந்தவர் என்பதில் ரங்கநாத்துக்கு நம்பிக்கை ஏற்பட்டதிலும் வியப்பில்லை.

பத்ரி, தம் சீடனுடன் அந்தரங்க சம்பாஷணையை முடித்துக் கொண்டு வந்திருந்தார்: "ராமாதீன் வீட்டில் கொள்ளை நடக்கவில்லை. ஆனால் இங்கு மங்கும் திருட்டு நடந்த சேதிகள் வந்திருக்கின்றன'' என்றார்.

தம் அப்பாவின் முன்னால் பத்ரி மிகுந்த மரியாதையுடன் தான் பேசுவார். இப்பொழுது கூட இச்செய்தியைக் கூறிய விதம் தமக்கும் சீடனுக்குமிடையே நடந்த பேச்சை அவரிடம் கூறுவது தம் கடமை யென்று நினைப்பது போல் அவ்வளவு பவ்யமாக இருந்தது.

"திருட்டு, கொள்ளை! எங்கும் இவை தான் காதில் விழுகின்றன. நாடு அதல பாதாளத்துக்குப் போய்க்கொண்டிருக்கிறது'' என்றார் வைத்தியர்.

பத்ரி இதைக் காதில் போட்டுக் கொள்ளாதவராய், ஹெல்த் இன்ஸ்பெக்டர் காலரா நோயிலிருந்து தற்காத்துக் கொள்ள உபதேசிப்பது போல், "கிராமம் முழுவதும் திருட்டைப் பற்றித் தான் பேச்சு. விழித்துக் கொண்டே தூங்க வேண்டும்'' என்றார்.

பிறகு திண்ணைக்குப் போய் இருளில் அந்தச் சின்ன பயில்வானின் பக்கத்தில் நின்று கொண்டார்.

# அத்தியாயம் 9

நாட்டின் வருங்காலக் குடிமக்களின் இதயத்திலே மகத்தான லட்சியங்களைத் தோற்றுவிக்க, அவர்களுக்குச் சிறந்த கல்வி அளித்து நாட்டின் முன்னேற்றத்துக்கு அடி கோலுவது என்ற உயரிய நோக்கத்துடன் தான் சங்காமல் இன்டர்காலேஜ் வித்யாலயம் துவங்கப்பட்டிருந்தது. இந்திய அரசியல் சாசனத்தில் மூலாதார உரிமைகளைப் பற்றிக் கூறியிருக்கும் அத்தியாயத்தைப் படிக்கும்போது ஏற்படும் தூய்மையான, பவித்திரமான உணர்வுகளே, பளபளவென்ற ஆரஞ்சு வண்ணத் தாளில் அச்சிட்டிருந்த கல்லூரிச் சட்டதிட்டங்கள், அமைப்புகள் பற்றிய விவரங்களைப் படிக்கும்போதும் ஏற்பட்டன. யதார்த்தமென்ற அழுக்கிலே புரண்டுகொண் டிருந்த மனமும் அதைப் படித்ததும் சற்றே தூய்மையுற்றது எனலாம்.

இக் கல்லூரி நாட்டின் நலனைக் கருதி ஏற்பட்டிருந்ததால், அதில் வேறு எது இருந்ததோ இல்லையோ, கட்சிப் பிரதிகட்சிகள் நிறைய இருந்தன. அவை தோன்றியிருந்த அளவைப் பார்த்து அவற்றைச் சிறப்பித்துக் கூற முடியாவிட்டாலும் எவ்வளவு குறுகியகால அளவுக்குள் இவை தோன்றி வளர்ந்திருக்கின்றன என்ற நோக்கில் பார்க்கும்பொழுது பாராட்டத்தான் வேண்டும். இரண்டு மூன்றாண்டுகளுக்குள்ளேயே அக்கம்பக்கத்திலிருந்த கல்லூரிகளை விட இத்துறையில் இது வெகுவாக முன்னேற்றம் கண்டிருந்தது. சில விஷயங்களில் அகில இந்திய ஸ்தாபனங்களுடன் கூடப் போட்டி போடத் துவங்கியிருந்தது என்பதுதான் இதன் விசேஷமான அம்சம்.

நிர்வாகக் குழுவில் வைத்தியரின் செல்வாக்கு மேலோங்கி நின்றது. என்றாலும் சமீபத்தில் பிகம்கேட்வி ராமாதீன் இதில் தமக்கென்ற ஒரு குழுவைத் தம்மிடம் இழுத்துக்கொள்வதில் வெற்றி பெற்றிருந்தார். இதற்காக அவர் மகத்தான சாதனைகள் புரியவேண்டியிருந்தது. நெடு நாள் வரை அவர் தனியாகவே எதிர்த்து நின்றார். பின்னர் இரண்டொரு மெம்பர்கள் அவர் பக்கம் இழுக்கப்பட்டனர். கடினமான உழைப்பின் பேரில் அவர் கல்லூரி பணியாட்களிடையே இரு கட்சிகளைத் தோற்றுவித்திருந்தார். எனினும் இதில் இன்னும் நிறைய

வேலை செய்யவேண்டியிருந்தது. பிரின்ஸ்பால், வைத்தியரையே முழுவதும் சார்ந்து நின்றதுபோல், கன்ன மாஸ்டர் ராமாதீன் குழுவினரை இன்றும் சரணடையாமல் இருந்ததும் இதில் ஒரு முக்கிய விஷயம். கன்ன மாஸ்டரை வலிந்திழுப்பது பாக்கி நின்றது.

மாணவர்களிடையேயும் இவ்விரு கட்சிகளின் ஆதரவாளர்கள் என்ற பெயரில் இன்னமும் தனித் தனிக் கட்சிகள் உருவாகாமல் இருந்தன. அவர்களுக்குள் வசவு திட்டுகளும், அடிதடிச் சண்டைகளும் என்னவோ நடந்துகொண்டிருந்தன. ஆனால் கட்சி விவகாரமாக இன்னும் உருவெடுக்கவில்லை. இச் செயல் திட்டங்களெல்லாம் கட்சிக்காக என்பதன்றித் தனிநபர் சம்பந்தப்பட்டவையாகவே இருந்ததால், மாணவர்களின் ரௌடித்தனமென்ற மகத்தான ஆற்றல் தனிப்பட்ட சுய லாபத்துக்காக வீணாகிக்கொண்டிருந்ததால், நாட்டின் பொதுப்படையான நன்மைக்குப் பயன்படாமல் நீராகிப் போய்க்கொண்டிருந்தது. கோஷ்டியினர் இந்தத் துறையில் ஆற்றவேண்டிய பணி இன்னும் ஏராளமாக இருந்தது.

வைத்தியரைத் தவிர கல்லூரியில் மற்றக் கோஷ்டிகளுக்கு அநுபவம் குறைவு என்பது உண்மைதான். அவர்களிடம் திறமையிருந்தது. ஆனால் அதற்குரிய பக்குவம் இல்லை. இருந்தாலும் வருடத்தில் இரண்டொரு முறை அவர்களுடைய சமத்காரமான செயல்களைப் பற்றிய புகழ் மணம் நகரம்வரை எட்டிவிடும். சில தந்திரங்கள் பிறவிக் கோஷ்டிவாதிகளைக் கூடத் திகைக்க வைத்து விடுவதுண்டு.

சென்ற வருடம் ராமாதீன் வைத்தியரை இப்படித்தான் குறி பார்த்துத் தாக்கினார். குறி என்னவோ தப்பிவிட்டது. ஆனால் செய்தி நெடுந்தூரம் பரவி விட்டது. பத்திரிகைகள் கூட இதைப் பற்றிக் குறிப்பிட்டன. இதன் மகிமையினால் கவரப்பட்ட ஒரு புள்ளி இவ்விரு கட்சியினரையும் பாராட்டி முதுகில் ஷொட்டுக் கொடுப்பதற்காகவே நகரத்திலிருந்து வந்தானென்றால் பார்த்துக்கொள்ளுங்கள்.

அவன் ரொம்ப சீனியர், பெரும் புள்ளி. நகரத்து அரசியல்களில்தான் அநேகமாக இருப்பான். கடந்த நாற்பதாண்டுகளாக, கோஷ்டி பிரிக்கும் கட்சிப் பணிக்கென்றே தன் இருபத்துநான்கு மணி நேரத்தையும் அர்ப்பணித்திருந்த மகா புருஷன். அவன் வாழ்க்கையே கோஷ்டி உருவாக்கும் பணிக்கே

அர்ப்பணிக்கப்பட்டிருந்தது. அகில பாரத முக்கியத்துவம் பெற்றிருந்த பெரிய புள்ளி அவன். தினமும் பத்திரிகைகளின் முதல் பக்கத்தில் அவனது அறிக்கைகள் வெளியாகின. நாட்டுப் பற்று, கோஷ்டி மனப்பான்மை இவ்விரண்டின் இணையற்ற சங்கமத்தை அதில் காணலாம். ஒரு முறை இந்தப் புகழ் பெற்ற புள்ளி கல்லூரிக்கு விஜயம் செய்தார். இனிக் கல்லூரியே அழிந்துபோனாலும் கோஷ்டி மனப்பான்மை அழியவே அழியாது என்ற நம்பிக்கை மக்களிடம் வேரூன்றிவிட்டது.

கேள்வி:—'ஏன் கட்சி, பிரதி கட்சி?'

'இந்தக் கேள்வி, மழை ஏன் பெய்கிறது?' என்று கேட்பது போல் இருக்கிறது. 'எதற்காக உண்மை பேசவேண்டும்?' 'வஸ்து என்பதென்ன?' 'கடவுள் என்பது என்ன?' என்பன போன்ற பல கேள்விகள் எழலாம். உண்மையில் இது சமூக, மனோதத்துவ அல்லது கிட்டத்தட்ட தத்துவரீதியான கேள்வி. இதன் பதிலை அறிந்துகொள்ளத் தத்துவ சாத்திரத்தைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டியதும் அவசியம். வேதாந்த ரீதியான தத்துவத்தின்படி, அதாவது வைத்தியர் ஆயுர்வேதமும், அதுவும் சமஅர்த்தத்தை வெளிப்படுத்தும் சொற்களாக நினைத்து உபயோகிக்கும் கூற்றின்படி, கோஷ்டி மனப்பான்மை என்பதானது பரமாத்மாநுபூதியின் மிக உன்னத, உயர்ந்த நிலையின் ஒரு பெயராகும். அத்தூய நிலையில் ஒவ்வொரு 'நீ'யும் 'நான்' என்பதை, ஒவ்வொரு 'நானும்' 'நீ' என்பதைத் தன்னைவிட உயர்ந்த நல்ல நிலையில் பார்க்கிறது. அத்தூய நிலையை எட்டிவிடவும் விரும்புகிறது. 'நான்' 'நீ'யையும், 'நீ' 'நானை'யும் அழித்து விட்டு 'நான் என்கிற இடத்தில் 'நீ' யையும் 'நீ' என்கிற இடத்தில் 'நானு'வும் ஆகிவிட விரும்புகிறது.

வேதாந்தம் நம்முடைய பாரம்பரியம். இந்தக் கோஷ்டி மனப்பான்மையின் பொருளையும் நாம் வேதாந்த தத்துவங்களையும் அலசிச் சாறாகப் பிழிந்து எடுத்துவிட முடியும். இதனால் கோஷ்டி மனப்பான்மையும் நம்முடைய பாரம்பரியந்தான். இவ்விரண்டுமே நம் பண்பாட்டுப் பாரம்பரியங்களே. நாடு சுதந்தரம் பெற்றபின் நாம், நம்முடைய பல புராதன கலாசாரப் பாரம்பரியங்களை அகழ்ந்தெடுத்திருக்கிறோம். அதனால் தான் ஐரோப்பாவுக்கு விமான யாத்திரை மேற்கொள்ளும் முன்னர் சோதிடர் மூலமாகப் பிரயாணத் திட்டத்தை வரைகின்றோம். அயல்நாட்டுச் செலாவணி, வருமானவரி போன்ற எக்கச்சக்க

மான சிக்கல்களை விலக்கப் பாபாக்கள், சாதுக்களின் ஆசியைக் கோரி நிற்கிறோம். ஸ்காட்ச் விஸ்கியைக் குடித்துவிட்டு ஆசனவாயில் சிரங்கை வரவழைத்துக் கொண்டு, வைத்தியத்துக்காக யோகாசிரமங்களுக்குச் சென்று, பிராணயாமமும், யோகாசனங்களும் பழகுகிறோம். மேல்நாட்டுக் கல்வியறிவின் மூலம் கிடைத்த குடியாட்சியை ஏற்றுக்கொண்டாலும் அதை நடைமுறையில் செயலாக்கப் பாரம்பரிய முறையான கட்சியாட்சியின் உதவியையே நாடுகின்றோம். நம்முடைய வரலாற்றில், நாம் காண்பது அது யுத்தகாலமாக இருப்பினும் சரி, அமைதிக் காலமாக இருந்தாலும் சரி, அரண்மனையிலிருந்து வயல் வெளிவரைக் கட்சி பிரதி கட்சிகளின், 'நானு' 'நீயா,' நீயா?' 'நானு' என்ற வரலாற்றுப் பெருமை மிக்க பரம்பரைதான். ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்தில், அந்நியனை வெளியேற்றவேண்டும் என்ற சங்கடத்தில் இத்தூயப் பரம்பரையை நாம் சிலகாலம் மறந்து விட்டிருந்தோம். சுதந்தரம் பெற்ற பின்போ, நம்முடைய ஏனைய பாரம்பரியங்களுடன் நாம் இதையும் உற்சாகமாக ஆதரித்துவிட்டோம் என்பது மட்டும் அல்ல. இந்த 'நீ' 'நான்' என்பதை இலக்கியம், கலை என்னும் எல்லா வழி முறைகளிலும் முன்னேற்றமடையச் செய்து கொண்டு வருகிறோம். இது கலாசாரத்தில் நமக்குள்ள பற்றைக் காட்டுகிறது. வேதாந்தத்தைப் பெற்றெடுத்த நாடு அடைந்துள்ள செல்வம். சுருக்கமாகக் கூறப் புகுந்தால் இது தான், கோஷ்டி மனப்பான்மையின் தத்துவ தரிசனம், வரலாறு, பூகோளம் எல்லாமாகும்.

இந்த அடிப்படைக் காரணங்களைத் தவிரக் கல்லூரியில் இந்தக் கோஷ்டிப் பிரிவுகளுக்கு இன்னுமொரு காரணம், ஏதாவதொன்று பரபரப்பாய் நடந்துகொண் டிருக்கவேண்டாமா என்று மக்கள் நினைத்ததுதான். இங்கே சினிமா இல்லை, ஹோட்டல் இல்லை, காபி ஹவுஸ் இல்லை. அடிதடி, கத்திக் குத்து, தெரு விபத்துக்கள், புதிய புதிய நாகரிக உடை அணிந்த பெண்கள், பொருட்காட்சிகள், வசைமாரி பொழியும் பொதுக் கூட்டங்கள் இவை எதுவுமே இல்லை. மக்கள் எங்கே போவார்கள்? என்ன பார்ப்பார்கள்? எதைக் கேட்பார்கள்? இதனுல் ஏதாவதொன்று நடந்துகொண் டிருக்க வேண்டாமா?

நான்கு நாட்களுக்கு முன்னர் ஒரு பையன் யாரோ ஒரு பெண்ணுக்கு எழுதிய காதற் கடிதம் சிக்கியது. பையன்

மிகவும் கெட்டிக்காரன். தன் சாமர்த்தியத்தை எல்லாம் காட்டியிருந்தான். அதாவது, அது அவன் எழுதும் கடிதமாக இல்லாமல் அப்பெண்ணின் கடிதத்துக்குப் பதில் எழுதும் முறையில் எழுதப்பட்டிருந்தது. ஆனால் அவனது சாமர்த்தியம் பலிக்கவில்லை. பையனுக்கு அடி, உதை, மிரட்டல் எல்லாம் கிடைத்தன. கல்லூரியிலிருந்தும் வெளியேற்றப்பட்டான். தம் பையன் மீண்டும் காதல் புரியமாட்டான் என்று அவன் தகப்பனார் உத்தரவாதம் கொடுத்து, கல்லூரியின் புதிய பிளாக்கைக் கட்ட ஐம்பதாயிரம் செங்கற்கள் கொடுப்பதாக உறுதியும் தந்தபின்பே பையன் மீண்டும் கல்லூரியில் சேர்த்துக் கொள்ளப்பட்டான். ஆனால் இது நடந்து நாலு நாட்கள் கூட ஆகியிருக்காது. இன்னொரு பையனிடம் நாட்டுத் தோட்டா போடும் கைத்துப்பாக்கி இருந்தது கண்டுபிடிக்கப் பட்டது. பிடிபட்ட சமயம் துப்பாக்கியில் தோட்டா இல்லை. துப்பாக்கியும் பார்க்க விகாரமாய், நம் நாட்டுக் கருமான்களின் கைத்திறமையைக் கண்டு அழவேண்டும் போல் இருந்தது.

இந்தக் குறைபாடுகள் எல்லாம் இருந்துங்கூடக் கல்லூரிக்குப் போலீஸ் வந்தது. அந்தப் பையனையும், வைத்தியரின் ஆளாக இருந்துங்கூட விடாமல் குமாஸ்தாவையும் கையோடு ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றது. ஏதேதோ நடக்கப் போகிறதென்று மக்கள் எதிர்பார்த்தனர். நாலைந்து நாட்களுக்கு விஷயம் பரபரப்பாக இருக்குமே! ஆனால் அன்று மாலையே, 'அது துப்பாக்கி அல்ல. வெறும் இரும்புக் குழாய்த் துண்டு' என்றும், 'குமாஸ்தா, போலீசாரின் கட்டாயத்தின் பேரில் அல்ல; தம் மனத்திருப்திக்காகவே சென்றிருந்தார்' என்றும் செய்தி வெளியாகியது. பையனும் 'ரௌடி அல்ல; மிக நன்றாய்க் குழலூதுவான்' என்றும் தெரிந்தது. அன்று மாலை, குமாஸ்தா மனநிறைவுடனும் அந்தப் பையன் குழல் ஊதிக்கொண்டும் ஸ்டேஷனிலிருந்து வெளிவருவதைக் கண்டதும் மக்களின் உற்சாகமெல்லாம் பொட்டென வடிந்து போயிற்று. அவர்கள் முன்னே சாசுவதமான பிரச்னை மீண்டும் தலைதூக்கியது: "அடுத்தது என்ன?"

இங்கிலையில் மக்களின் கவனமெலலாம் வைத்தியரிடமும் பிரின்ஸ்பாலிடமுமே நிலைத்திருந்தது. வைத்தியர் தம பதவியில், பண்டித மதன்மோகன் மாளவியாவினுடையது போன்ற தலைப்பாகையை அணிந்துகொண்டு, அசையா உறுதி

யுடன் வீற்றிருந்தார். ஆனால் பிரின்ஸ்பால்தான் எந்த உதவியுமின்றி மின்கம்பத்தில் தொத்திக்கொண்டு, தூரத்திலிருக்கும் யாரையோ பார்த்து, "இதோ பார்! பார்! இவன் ஏதோ போக்கிரித்தனம் செய்கிறான் பார்" என்று கூச்சலிடுவதுபோல் பதற்றம் கொண்டிருந்தார். அவருக்கு ஒரே சந்தேகம், பயம். தன் பதவியை விடாமல் ஒட்டிக்கொண்டிருக்கும் ஒவ்வோர் இந்தியனுக்கும், தன்னை யாராவது பலவந்தமாக இழுத்து அப்புறப்படுத்தி விடப் போகிறார்களே என்ற அச்சம் உள்ளது போல் இவருக்கும் பயம். மக்கள் இந்தப் பலவீனத்தைப் புரிந்து கொண்டு விட்டனர். பின் என்ன? அவரையும், அதே வீச்சில் வைத்தியரையும் முட்டாளாக்க முயன்றனர். தாக்கப்படும் முன்னரே, எங்கே தாக்கப்பட்டு விடுவோமோ என்ற பயத்தில் அவர்களும் தாக்கத் தயாராகி விட்டனர்.

இச்சமயத்தில்தான் யாரோ கன்னா மாஸ்டரிடம், ஒவ்வொரு கல்லூரியிலும் பிரின்ஸ்பால், வைஸ் பிரின்ஸ்பால் என இருவர் இருப்பதாக ஓதி வைத்து விட்டனர். கன்னா மாஸ்டர் சரித்திரம் போதித்து வந்தார். கல்லூரியிலேயே அவர்தாம் யாவரையும் விடப் பெரிய லெக்சரர். இந்தப் போதனையினால் அவர் ஒரு நாள் வைத்தியரைச் சந்தித்து, தம்மை வைஸ் பிரின்ஸ்பால் ஆக்கும்படி கேட்டுக்கொண்டார். "இது ஒரு புதிய கருத்து" எனத் தலையசைத்து வரவேற்றார் வைத்தியர். தொடர்ந்து, "இளைஞர்கள் புதிய புதிய கருத்துக்களைச் சிந்தித்துக்கொண்டே இருக்கவேண்டும். அவர்களுடைய ஒவ்வொரு புதுக் கருத்தையும் நான் மனதார வரவேற்கிறேன். ஆனால் நியமினம் பற்றிய விஷயம் நிர்வாகக் கமிட்டியின் பொறுப்பில் உள்ளது. அடுத்த கூட்டத்தில் இக்கேள்வி எழும்போது இது உசிதமான முறையில் கவனிக்கப்படும்" என்றார். நிர்வாகக் கமிட்டியின் அடுத்த கூட்டம் நடக்கவே போவதில்லையென்று கன்னா மாஸ்டருக்கு எப்படித் தெரியும்? அவர் உடனே வைஸ்பிரின்ஸ்பால் பதவிக்கு ஓர் அப்ளிகேஷன் எழுதிப் பிரின்ஸ்பாலிடம் கொடுத்து, நிர்வாகக் கமிட்டியின் அடுத்த கூட்டத்தில் அதைக் கமிட்டியின் முன் வைக்குமாறு கேட்டுக்கொண்டார்.

கன்னா மாஸ்டரின் இச்செயலைக் கண்டு பிரின்ஸ்பால் திகைத்து விட்டார். வைத்தியரிடம் சென்று, "அப்ளிகேஷன் கொடுக்கும்படி நீங்கள்தான் கன்னாவுக்கு யோசனை கூறினீர்களா?" என்று கேட்டார்.

இதற்கு வைத்தியரின் சுருக்கமான பதில் மூன்றே வார்த்தை தான். "இன்னும் சிறுபிள்ளையாக இருக்கிறீர்கள்!"

இதன்பின் சில நாட்கள்வரை, பிரின்ஸ்பால் சாகப், ரோடில் சந்திக்கும் ஒவ்வொருரிடமும் இந்தக் காலத்து மனிதர்கள் எப்படி யெல்லாம் ஆகிவிட்டனர் என்பதை விமர்சித்துக் கொண்டிருந்தார். 'வாயிலே ராமா, ராமா, இடுப்பிலே பட்டாக் கத்தி', 'வளர்த்த கடா மார்பிலே பாய்கிறது', 'முதுகிலே குத்தும் பேடித்தனம்', 'ஆடு நனைகிறதென்று ஓநாய் அழுகிற தாம்' என்பன போன்ற அருமையான பழமொழிகளுடன் கன்னு மாஸ்டரின் இந்தத் துணிகரமான செயலை அலசிக் கொண்டிருந்தார். ஒரு நாள் நாற்சந்தி முனையில் நின்று கொண்டு, உவமைகளுடன் ஒரு கதையும் சொன்னார்: 'ஒரு நாள் ஓரிடத்தில் குதிரைக்கு லாடம் அடித்துக்கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு தவளைக்குத் தானும் லாடம் அடித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை வந்து விட்டது. வெகு தூரம் கெஞ்சிய பின் லாடக்காரன் அதன் காலில் சின்னதோர் ஆணியைத் தான் அடித்தான். அவ்வளவு தான். பாவம், தவளை அங்கேயே தன் உயிரையும் விட்டுவிட நேர்ந்தது. பேராசைப் படுவதின் முடிவு நல்லதல்ல."

இந்தப் பஞ்சதந்திரக் கதைக்குப் பின்னே ஒலிப்பதும் அதே பயந்தான். இன்று வைஸ் பிரின்ஸ்பாலாக ஆசைப்படுகிறவன் நாளைக்குப் பிரின்ஸ்பாலாக ஆசைப்படுவான். இதற்காக நிர்வாகக் கமிட்டி மெம்பர்களைத் தன்வசம் இழுக்கப் பார்ப்பான்; கலைப்பான். மாஸ்டர்களைக் கட்சி சேர்ப்பான். அடிதடி கலகத்துக்கு மாணவர்களை உசுப்பிவிடுவான். மேலிடத்துக்குக் குற்றச்சாட்டுகளைச் சளைக்காமல் அனுப்பி வைப்பான். இவன் அயோக்கியன்.... அயோக்கியனாகத்தானே இருப்பான்!

"உண்மை மறைவதில்லை, பொய்யான சிந்தாந்தங்களில் மணம் வீசுவதில்லை என்றும் காகித மலர்களிலே." இந்தக் கவிதையைத் தாளின் மேலே எழுதிவிட்டுப் பீகம் கேடவி ராமாதீன் வைத்தியருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதன் பொருள், 'நிர்வாகக் கமிட்டியின் கூட்டம், கடந்த மூன்றுண்டுகளாகக் கூட்டப்படவில்லை. அதைப் பத்து நாட்களுக்குள் கூட்டியாக வேண்டும். கல்லூரியின் கமிட்டிக் கூட்டம், அதாவது சாதாரண வருடாந்திரக் கூட்டம், கல்லூரி திறக்கப்பட்ட

ஆண்டிலிருந்து இதுவரைக் கூட்டப்படவில்லை. இதைப் பற்றி யும் யோசிக்க வேண்டும். மேலும் கவனிக்கப்பட வேண்டிய விஷயங்களில் வைஸ் பிரின்ஸ்பாலின் நியமனத்தைப் பற்றிய தும் ஒன்று' என்பதே.

பிரின்ஸ்பால் இந்தக் கடிதத்தைத் தன் ஜேபியில் போட்டுக் கொண்டு வைத்தியரின் வீட்டிலிருந்து வெளியே வந்ததும் உடல் முழுவதும் கொதிப்பது போல் உணர்ந்தார். கல்லூரி முன்வாசலில் ரூப்பனைப் பார்த்தார். பார்த்ததுமே நின்று பேச ஆரம்பித்து விட்டார். "பார்த்தாயா! கன்னு அந்த ராமா தீனைப் பிடித்துக் கொண்டு தொங்குகிறான். வைஸ்பிரின்ஸ் பாலாகும் ஆசை வந்துவிட்டது. இதைக் கேள்: ஒரு முறை ஒரு தவளை வந்து...."

"தெரியும், இந்தத் தவளைக் கதை இப்பொழுது இங்கு எல் லாருக்குமே தெரியும்" என்று இடைமறித்தான் ரூப்பன். அவனுக்கு எங்கோ வெளியே போக வேண்டிய அவசரம். "ஆனால் ஒரு விஷயத்தைத் தெளிவாகச் சொல்லிவிட விரும்பு கிறேன். கன்னு மாஸ்டரிடம் எனக்கு எந்தவிதமான அநு தாபமும் இல்லை. ஆனால் இங்கு ஒரு வைஸ்பிரின்ஸ்பால் அவசியம் என்பதை நான் உணருகிறேன். நீங்கள் இல்லா விட்டால் இங்குள்ள எல்லா மாஸ்டர்களும் நாயும் பூனையுமாய் உறுமுகிறார்கள்.. ஆசிரியர்களின் ஓய்வறையில் நடக்கும் அடாவடித்தனத்தை என்ன வென்று சொல்ல? நான் நீ என்று ஒரே சண்டை, ரகளை." சில நிமிஷ மௌனத்துக்குப் பின் கம்பீரத்துடன் ஏதோ உத்தரவிடுபவன் போல், "பிரின்ஸ் பால் சாகப், நம் கல்லூரிக்கு ஒரு வைஸ் பிரின்ஸ்பால் தேவை என்று நான் கருதுகிறேன். கன்னு மாஸ்டர்தான் எல்லோருக் கும் ஸீனியர். அவரே இந்தப் பதவியில் இருந்துவிட்டுப் போகட் டும். அதனால் என்ன? சம்பளம் என்னவோ உயரப் போவ தில்லை. பெயரளவில், பதவி, அவ்வளவுதானே?" என்றான் ரூப்பன்.

பிரின்ஸ்பாலின் நெஞ்சு அடித்துக் கொண்ட வேகத்தைப் பார்த்தால் அது எழும்பி விலாக் கூட்டுக்குள் குதித்துவிடும் போலிருந்தது. "ரூப்பன், மறந்து போய்க்கூட இதை உரக்கச் சொல்லிவிடாதே. இந்தக் கன்னு வன்னு வெல்லாம் நீ அவர்கள் பக்கம் இருப்பதாகக் கூச்சல் போடத் துவங்கிவிடுவார்கள். நினைவு இருக்கட்டும். இது சிவபால் கஞ்ச். வேடிக்கைக்காகக்

கூட யோசிக்காமல் எதையும் பேசிவிடக் கூடாது" என்ருர் அவர்.

"நான் உண்மையைத் தான் சொல்லுகிறேன். நல்லது பிறகு பார்க்கலாம்" என்றவாறே ரூப்பன் மேலே நடந்து விட்டான்.

பிரின்ஸ்பால் தன் அறைக்கு விரைந்தார். குளிர்தான். இருந்தாலும் கோட்டைக் கழற்றிவிட்டார். கல்வித் துறை சம்பந்தமான பொருள்களைச் சப்ளை செய்யும் ஒரு கம்பெனியின் காலண்டர் அவர் முகத்துக்கு நேரே சுவரில் தொங்கியது. வெற்றுடம்பில் சருகு போன்ற மெல்லிய சேலையைச் சுற்றிக் கொண்டிருந்த யாரோ ஒரு திரை நடிகை மெய்ம்மறந்த நிலையில் லட்டுமாதிரி ஆடவன் ஒருவனை நெருங்கிக் கொண்டிருந்தாள். அந்த ஆடவனின் முகத்திலே ரோமக்காடு. ஒரு கரத்தை உயர்த்திக் கண்களை மறைத்துக்கொண் டிருந்தான். லட்டைத் தின்று தின்று அஜீர்ணம் வந்து விட்டது போன்ற பாவம்....இவர்கள்தான் மேனகையும் விசுவாமித்திரரும். அவர் சில நிமிஷம் இவர்களையே இமையாது பார்த்துக்கொண்டு நின்ருர். பின்பு மணி அடிப்பதற்குப் பதில் உரக்கக் கத்திப் பியூனை அழைத்தார். வந்ததும், "கன்ஞைவை அழைத்து வா" என்ருர்.

பியூன் ரகசியம் போல் தாழ்ந்த குரலில், "பீல்ட் பக்கம் போயிருக்கிருர். மாளவியாவும் கூட இருக்கிருர்" என்ருன்.

பிரின்ஸ்பால் சலிப்படைந்தவராய் எதிரே இருந்த பேஞக் கூட்டை இழுத்து ஓர் ஓரத்தில் தள்ளிவைத்தார். அத்தக் கூடு ஓர் எஜுகேஷன் எம்போரியம் பரிசுப் பொருளாக வழங்கி இருந்தது. பிரின்ஸ்பால் அதை ஒதுக்கித் தள்ளிய வேகத்தைப் பார்த்தால், இந்த வருஷம் கல்லூரிக்காக எந்தப் பொருளும் அந்த எம்போரியத்தில் வாங்கமாட்டார் எனத் தோன்றியது. ஆஞல் பிரின்ஸ்பாலின் எண்ணம் உண்மையில் அது அல்ல. 'உன்னுடைய ரகசிய ரிப்போர்ட்டைக் கேட்க நான் இப்பொழுது தயாராக இல்லை' என்பதைப் பியூனுக்கு உணர்த்த விரும்பிஞர். அவ்வளவுதான். "நான் சொல்லுகிறேன். போய்க் கன்ஞைவை இப்பொழுதே கையோடு அழைத்துவா" என்ருர் கடுமையாக.

நல்ல வெளுப்பான சட்டையும், வேட்டியும், காலில் மரக்கட்டைச் செருப்பும், நெற்றியில் திலகமும் அணிந்திருந்த பியூன்

நிதானமாகக் கூறினான்: "இதோ போய்க் கன்னா மாஸ்டரை அழைத்து வருகிறேன். எதற்காக இத்தனைக் கோபப் படறீங்க?"

பிரின்ஸ்பால் பல்லைக் கடித்துக் கொண்டு மேஜையின் மீதிருந்த தகரத் துண்டொன்றை வெறித்துப் பார்த்தவாறு நின்றார். தகரத்தின் மீது பாலிஷ் பூசி, சிவப்பு நிற ரோஜா மலர் வரைந்திருந்தது. அதன் கீழே, தேதியையும், மாதத்தை யும் குறிக்கும் காலண்டர் பொருத்தியிருந்தது. பிரசித்தி பெற்ற சாராயக் கம்பெனி ஒன்று பண்டித ஜவாஹர்லாலின் நினைவாக இதைச் செய்து, இது இருக்குமிடங்களில் எல்லாம் நேருஜியின் லட்சியங்களையும், தங்களது குடிவகைகளையும் மறவாதிருக்கச் செய்யும் என்ற நம்பிக்கையுடன் இனாமாகவே யாவருக்கும் அனுப்பி வைத்திருந்தது. ஆனால் இந்தச் சமயம் இது பிரின்ஸ்பாலிடம் எத்தகைய பாதிப்பையும் விளைவிக்க வில்லை. நேருவின் சிவப்பு ரோஜா அவருக்கு அமைதியைத் தரவில்லை. நுரை பொங்கும் பீரின் கற்பனையும் மெய்ம் மறக்கச் செய்யவில்லை.

பாதக் குறடுகளின் கட்கட் ஓசை தேய்ந்து கரைவதைக் கேட்டுக் கொண்டே நின்றார் அவர். அவரது பார்வை இப் பொழுது இன்னொரு காலண்டர் மீது நிலைத்திருந்தது. ஐந்து வயது மதிக்கக் கூடிய இரு குழந்தைகள் பெரிய பெரிய ரை∴பிளை ஏந்தியவாறு பனிப்பாறைகளின் மீது கவிழ்ந்து கொண்டிருந்தனர். சீனப்படைகளை எதிர்பார்த்துக் கொண் டிருந்தார்களோ என்னவோ? எந்தத் தொழிலகத்தின் சணற் பைகள் சிறந்தவை என்பதை இப்படிக் கலைத்தன்மையோடு வெளிப்படுத்தியிருந்தார்கள்.

கன்னாவை எதிர்பார்த்த வண்ணம், நிலை குத்திய பார்வை யுடன் அமர்ந்திருந்த பிரின்ஸ்பால், கன்னாவுக்கு மட்டும் இந்த வைஸ் பிரின்ஸ்பால் ஆசை வராமல் இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்று யோசித்துக்கொண் டிருந்தார். அங்கு நடைபெறப் போகும் சம்பவத்தை வரலாற்று முக்கியத் துவம் உள்ளதாக ஆக்கவேண்டி, குமாஸ்தா முன்கூட்டியே வராந்தாவில் வந்து நின்றுகொண்டு விட்டார். அவருக்குப் பின்னால் ஜன்னலுக்குக் கீழே காலை அகட்டிக் கொண்டு சிறுநீர் கழிப்பதற்காக நின்ற டிரில் மாஸ்டர் அதற்குப் பதிலா கப் பீடி குடிக்கலானார். கன்னாவுக்கும் பிரின்ஸ்பாலுக்கும்

இடையே நடக்கப் போகும் உரையாடல் மக்களின் காதுகளுக் கெட்டாமல் காற்றிலே கரைந்துவிடுமே என்ற அச்சம் எழ இப்பொழுது நியாயம் இல்லை.

இரவு மாடியறையில் பத்ரியும், ரங்கநாத்தும் படுத்துக் கொண்டிருந்தனர். உறக்கம் வருவதற்கு முன் ஏதேதோ பேசியவாறே இருந்தனர். முடிவில் ரங்கநாத் சொன்னான்: "பிரின்ஸ்பாலுக்கும் கன்னு மாஸ்டருக்குமிடையே என்ன பேச்சு வார்த்தை நடந்ததோ தெரியவில்லை. கன்னு மாஸ்டர் உரத்த குரலில், 'இது தான் உங்கள் மனிதத்தன்மையா?' என்று கேட்டது மட்டுமே வெளியே நின்றுகொண் டிருந்த டிரில் மாஸ்டரின் காதில் விழுந்ததாம்."

கொட்டாவி விட்டவாறே பத்ரி சொன்னான்: "பிரின்ஸ்பால் திட்டியிருப்பார். அதற்குப் பதிலாகத்தான் இப்படி மனிதத் தன்மை அது இது என்று பேச்சு வந்திருக்கும். கன்னு இப்படித் தான் பேசுவான்; வடி கட்டின முட்டாள்."

"திட்டுக்குச் சரியான பதில் செருப்புதான்" என்றான் ரங்கநாத்.

பத்ரி இதற்குப் பதிலேதும் கூறவில்லை. ரங்கநாத் மீண்டும் தொடர்ந்தான்: "நான் தான் பார்த்துக் கொண்டிருக் கிறேனே. இங்கு மனிதத் தன்மையைப் பற்றிப் பேசுவதே வீண்."

பத்ரி திரும்பிப் படுத்துக் கொண்டான். 'குட் நைட்' என்று சொல்லும் ஸ்டைலில் கூறினான்: "அது சரி. இங்கு அ, ஆ, இ, ஈ, படிப்பவன் கூட உர்தூவில் உளற ஆரம்பித்து விடு கிறான், பேச்சுக்குப் பேச்சு மனிதத் தன்மை என்று. என்ன அது மனிதத்தன்மை! பேசத் திராணி இல்லையென்றால், வந்து விடு கிறது பிரலாபம், மனிதத்தன்மை, அது, இது என்று."

பத்ரி உறங்கிவிட்டான் போலும். ரங்கநாத் கம்பளியை இழுத்துப் போர்த்திக்கொண்டு கூரையைப் பார்த்தவண்ணம் படுத்திருந்தான். கதவு திறந்திருந்தது. வெளியே நல்ல நிலா. சற்று நேரம் சோபியா லாரேன், எலிசபெத் டெயி லரைப் பற்றியும் நினைத்துக்கொண் டிருந்தான். பின்பு, 'சீசீ, இது ரொம்பவும் ஒழுக்கக் குறைவான செயல்' என்று எண்ணு பவன்போல் பட்டணத்து வண்ணான் மகளைப் பற்றி நினைக் கலானான். இப்பொழுதெல்லாம் வெளுப்பதற்காக வந்துள்ள துணிகளில் கையில்லாத 'ரவிக்கை' க்குத்தான் அவள் முதலிடம்

கொடுத்து அணிந்துகொள்ளத் துவங்கியிருந்தாள். சற்றைக் குப் பின், 'இதுவும் ரொம்ப மோசமானது, மட்டமானது' என்று நினைப்பவன்போல் அந்த நினைவை உதறிவிட்டு, சினிமா நடிகைகளின் நினைவிலே மிதக்கலானான். இம் முறை தேசிய உணர்வு. தேசபக்தியின் காரணமாய் லிச் டெயிலரின் நினைவைத் துரத்தியடித்துவிட்டு வகீதா ரஹ்மான், சாய்ராபானுவின் உதவியை நாடினான். சில நிமிடங்களுக்குப் பின், ஒவ்வொரு விஷயத்திலும் மேல் நாட்டிடமிருந்து தூண்டுதல் பெறுவது சரியல்ல என்ற முடிவுக்கு வந்தான். முழுமனத்துடன் ஈடுபட்டால் தேசபக்தியும் மிக ருசிகர விஷயமாகத்தான் இருக்கும் என்ற நினைப்பு மேலோங்கியது. திடீரென அவனுக்குத் தூக்கமாய் வந்தது. மிக மிக முயன்றும் சாய்ரா பானுவின் தோற்றத்தின் முன்னே அவனது நினைவு வட்டம் குறுகிக்கொண்டே வரலாயிற்று. வட்டத்துக்குள் சிங்கங்களும், கரடிகளும் குறுக்கும் நெடுக்குமாய் ஓடலாயின. சாய்ரா பானுவை அப்படியே பற்றி இழுக்க ஒரு முறை முயன்றான். ஆனால் அவள் அவன் பிடியிலிருந்து நழுவி விட்டாள். அதே வேகத்தில் சிங்கமும் கரடிகளும் கூட ஓடிவிட்டன. அப்பொழுது தான் கன்னா மாஸ்டரின் உருவம் தாறுமாறாய்க் கண்முன்னே தோன்றித்தோன்றி மறைந்தது. எங்கோ ஒரு குரல் ஒலித்தது, 'மனிதத்தன்மை', 'மனிதத்தன்மை' என்று. முதலில் யாரோ இந்தச் சொல்லைக் கிசுகிசுப்பது போலிருந்தது. பின்னர் யாரோ மேடையின் மீதேறிக் கம்பீரமான குரலில் கூறுவது போலிருந்தது. இதன்பின் பெரும் முழக்கமே துவங்கிவிட்டது. நாற்புறமிருந்தும், 'மனிதத்தன்மை, மனிதத்தன்மை' என்று மக்கள் கூச்சலிடலானார்கள்.

அவன் விழித்துக்கொண்டான். கண்ணைத் திறந்ததுமே, "திருடன், திருடன், விட்டு விடாதீர்கள். பிடியுங்கள், திருடன், திருடன்!" என்ற கூச்சல் கேட்டது.

இரண்டொரு கணங்களுக்குப் பின்னர், கிராமபோன் ரிக்கார்டில் ஊசி ஒரே இடத்தில் கர்-கர் என்று சுழலுவதுபோல் 'திருடன், திருடன்' என்ற கூச்சலைத் தவிர வேறு எதுவுமே கேட்கவில்லை.

கிராமத்தின் மறு கோடியிலிருந்து இந்தக் கூச்சல் வருவதாக ரங்கநாத்துக்குத் தோன்றியது. பத்ரி கட்டிலிலிருந்து குதித்துக் கீழே தயாராக நின்றுகொண்டிருந்தான். ரங்கநாத்தும்

எழுந்து உட்கார்ந்துகொண்டான். பத்ரி சொன்னான்: "சின்னவன் அப்போதே சொன்னான்; திருடர் கூட்டமொன்று அக்கம்பக்கத்திலே சுற்றிக் கொண்டிருக்கிறது என்று. கிராமத்துக்குள்ளே வந்து விட்டார்கள் என்று தோன்றுகிறது."

இருவரும் அவசர அவசரமாக உடை அணிந்துகொண்டு வெளியே வந்தனர். கதவருகில் சென்றதுமே அவர்கள் நடையில் வேகம் பிறந்துவிட்டது. அதற்குள்ளேயே நாலாபக்கமிருந்தும், "திருடன், திருடன்!" என்ற கூக்குரல் உயர்ந்துவிட்டது. கூச்சல் அதிகரித்த வேகத்தைப் பார்த்தால், ஆங்கிலேயர்கள் மட்டும் 1921-க்கு முன் இதைக் கேட்டிருந்தால் அப்பொழுதே இந்தியாவை விட்டுத் தங்கள் நாட்டுக்கு ஓடிப் போயிருப்பார்கள் என்று தோன்றியது.

இருவரும் மாடியிலிருந்து கீழே வந்தனர். முன்னறைக்கு வந்ததுமே பத்ரி ரங்கநாத்தை நோக்கி, "நீ இங்கேயே கதவைத் தாழிட்டுக்கொண்டு உட்கார்ந்துகொள். நான் வெளியே போய்ப் பார்த்து விட்டு வருகிறேன்" என்றான்.

இதற்குள் ரூப்பன் வீட்டினுள்ளே இருந்து, வேட்டி முனையைத் தூக்கிப் பிடித்தவாறே, பட பட வென்று நடந்து வந்து, "நீங்கள் இருவருமே வீட்டில் இருங்கள். நான் போய்ப் பார்க்கிறேன்" என்றான்.

வெளியே போய்ப் பார்ப்பது என்பது, தன் வீரத்தைக் காட்டுவது அல்லது சக்ரவியூகத்தைப் பிளப்பது என்று தோன்றியது. ரங்கநாத் பெரிய தியாகிபோல் பேசினான்: "அப்படியென்றால் நீங்கள் இருவருமே வெளியில் போங்கள். நான் வீட்டிலேயே இருக்கிறேன்."

நிலா வெளிச்சத்தில் எதிரேயிருந்த பாதையில் யாரோ மூவர் "திருடன், திருடன், திருடன்!" என்று கத்திக்கொண்டே போனார்கள். அவர்களுக்குப் பின்னால் இன்னும் இருவர் மேலும் உரக்க, "திருடன் திருடன்" எனக் கூவிக்கொண்டே ஓடினர். அவர்களுக்குப் பின்னாலும் ஒருவன் இதே பல்லவியுடன் தொடர்ந்தான். மேலும் இரண்டொருவரும் சென்றனர். எல்லோர் கையிலும் குண்டாந்தடி. எல்லோரும் ஓடிக்கொண்டிருந்தனர். எல்லாரும் திருடர்களைத் துரத்திக் கொண்டிருந்தனர்.

இந்த ஊர்வலத்தில் கடைசியாகச் சென்றவர்களைப் பத்ரி சற்றே அடையாளம் கண்டுகொண்டார். உடனே ஓடிப் போய்

அவர்களுடன் கலந்துகொண்டார். உரத்த குரலில், "யாரது? சின்னவனா? திருடர்களா? எங்கே?" என்று கேட்டார்.

சின்னவன் மூச்சிறைக்க, "முன்னால் ... அதோ முன்னால் போய்விட்டனர்" என்றான்.

சற்று நேரம் மௌனம்.

ரூப்பனும் ரங்கநாத்தும் முன்னறைக் கதவைத் தாளிட்டுக் கொண்டு மீண்டும் மாடிக்குச் சென்று விட்டனர். கீழேயிருந்து வைத்தியர் கனைத்துக்கொண்டே கேட்டார்: "யாரது?"

ரூப்பன் பதில் அளித்தான்: "திருடர்கள் அப்பா." திகிலுடன் கர்ஜித்தார் வைத்தியர். "யாரது! ரூப்பனா? நீ மாடியிலா இருக்கிறாய்?"

ரூப்பன் கிராமத்திலிருந்து வரும் கூச்சலை முடிந்தவரை தன் சார்பிலும் பிரதிபலித்தவாறே கூவினான்: "ஆமாம். நாங்கள்தான். ஏன் தெரிந்துகொண்டே கேட்கிறீர்கள்? நிம்மதியாகத் தூங்குவது தானே?"

தன் சின்னப்பிள்ளையின் மரியாதை நிரம்பிய இந்தப் பதிலைக் கேட்டதும் வைத்தியர் வாயை மூடிக்கொண்டுவிட்டார். மாடியிலிருந்த ரூப்பனும் ரங்கநாத்தும் கிராமம் முழுவதிலும் எதிரொலித்த கூச்சலை, களேபரத்தைக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

வீட்டின் பின் பக்கத்திலிருந்து குரல் வந்தது: "ஐயோ! செத்தேன்."

இன்னும் அதிகமான கூச்சல்; யாரோ உரக்கக் கத்தினார்கள்: "அரே! சின்னவனே! இது பகோதிடா!"

"விடு,விடு, இவனை! அதோ, அதோ பார் திருடர்கள், அந்தப் பக்கமாய்ப் போயிருக்கிறார்கள்."

யாரோ அழுதான். யாரோ ஒருவன் சமாதானம் சொன்னான்: "அடேய்! ஏன்டா பொம்மனாட்டி மாதிரி அழறே? ஓர் அடி விழுந்தா என்ன? ஹோ ஹோவென்று கத்தறியே?"

அழுதுகொண்டிருந்தவன், "இரு. இதற்குப் பழி வாங்காமல் இருக்கப் போவதில்லை" என்றான்.

ரங்கநாத்துக்கு உற்சாகம், ஆவலுடன் கூட இதெல்லாம் ரொம்பத் தமாஷாவாகவும் இருந்தது.

"பகோதிக்கும் சின்னவனுக்கும் மனஸ்தாபம். இந்தச் சமயம் பார்த்து இரண்டு போடு போட்டுவிட்டான் போலிருக்கிறது" என்றான் ரூப்பன்.

"என்ன விஷயம்?" என்றான் ரங்கநாத். ரூப்பன் அலட்சியமாகக் கூறினான்: "வேறு என்ன? பந்தயம் போடற விஷயந்தான். போட்டா போட்டி. பார்த்தால் அசடுமாதிரி இருக்கிறானே, சின்னவன்! ஆனால் ஆள் நல்ல ஆழம். பக்கா போக்கிரி."

இதன் பின் இருவரும் நாற்புறமிருந்தும் எழும் கூச்சலையும், கூக்குரலையும் கேட்ட வண்ணம் அமர்ந்திருந்தனர். ரங்கநாத் கூறினான்: "திருடர்கள் ஓடி விட்டார்கள் போல் இருக்கிறது."

"இங்கு எப்பொழுதும் நடப்பது இது தான்."

பேச்சு இத்துடன் நின்றுவிட்டது. கூச்சலின் கடைசிச் சுற்றுப் போலும். வானத்தையே பிளந்துவிடும் எண்ணத்துடன் மக்கள், 'பஜ்ரங்க் பலிக்கி ஜய்' என்று கூவத் துவங்கிவிட்டனர்.

"யாரோ ஒருத்தன் அகப்பட்டுக் கொண்டுவிட்டான் போல் இருக்கிறது" என்றான் ரங்கநாத்.

"இல்லை. இந்தப் பங்கியடிக்கும் ஆசாமிகளை எனக்கு நன்றாகத் தெரியும். திருடர்களைக் கிராமத்துக்கு வெளியே துரத்தி விட்டிருப்பார்கள், அவ்வளவுதான். திருடர்கள், இவர்களையெல்லாம் ஊரை விட்டே துரத்தாமல் இருக்கிறார்களே அதுவே பெரிதில்லையா? இந்த மகிழ்ச்சியில்தான் இந்த ஜே ஜே எல்லாம்" என்றான் ரூப்பன்.

நிலா வெளிச்சத்தில் இரண்டிரண்டு பேராய், நான்கு பேராய்ச் சள சள வென்று பேசியவாறே பிரதான சாலையிலும், குறுக்கு ரோடுகளிலும் மக்கள் வீடுகளுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தனர். ரூப்பன் மொட்டை மாடிச் சுவர் அருகே வந்து நின்று பார்த்தான். யாரோ ஒருவன் கீழேயிருந்து, "ரூப்பன் பாபு! விழித்துக்கொண் டிருங்கள்" என்றான்.

சற்றைக்கெல்லாம் ஊர் முழுவதும் ஒவ்வொரு மூலை முடுக்கிலும், "விழித்துக்கொண் டிருங்கள், விழித்துக்கொண் டிருங்கள்" என்ற குரல் எதிரொலித்தது.

கூச்சல் இன்னும் இடையிடையே கேட்டுக்கொண்டிருந்தது. நாலாப்பக்கத்திலிருந்தும் விசிலின் ஒலி கேட்க ஆரம்பித்தது.

"இதென்ன, விசில் சத்தம்?" என்றான் ரங்கநாத்.

"பட்டணத்தில் எல்லாம் போலீஸ் ரோந்து சுற்றுதா?" என்றான் ரூப்பன்.

"ஓகோ! போலீஸும் சமயத்துக்கு வந்துவிட்டதா?"

"ஆமாம்! போலீஸ்தான் ஊர் மக்களின் உதவியுடன் கொள்ளைக்காரர்களைச் சமாளித்திருக்கிறது. போலீஸ்காரர்கள் தான் அவர்களை விரட்டியும் இருக்கிருர்கள்."

ரங்கநாத் வியப்புடன் ரூப்பனை நோக்கினுன்: "கொள்ளைக் காரர்களா?"

"பின் என்ன? நிலாக் காலத்தில் எங்கேயாவது திருடர்கள் வருவார்களா? இவர்கள் கொள்ளைக்காரர்கள்தான்." ரூப்பன் உரக்கச் சிரித்தான். "அண்ணு, இதெல்லாம் வேறு விஷயம். உங்களுக்குப் புரிவது கடினம். பத்திரிகையில் என்ன வரப் போகிறதோ அதைத்தான் சொன்னேன், புரிகிறதா?"

வீட்டுக்கு எதிரே பாதையிலிருந்து ஒரு விசில் சத்தம் கேட்டது. "மாஸ்டர் மோதிராமைப் பார்த்திருக்கிறீர்களா? பழைய காலத்து ஆசாமி. இன்ஸ்பெக்டருக்கு அவரிடம் ரொம்பவும் மரியாதை. அவருக்கும் இன்ஸ்பெக்டரிடம் மதிப்பு. இவ்விருவரிடமும் பிரின்ஸ்பாலுக்கு மரியாதை. எந்தப் பயலும் வேலை செய்வதில்லை. ஒருத்தனுக்கு ஒருத்தன் மரியாதை செய்துகொண்டிருக்கிருர்கள்" என்ருன் ரூப்பன்.

"இந்த மாஸ்டர் மோதிராம் இருக்கிருரே இவர்தாம் நகரத்திலுள்ள பத்திரிகைக்கு நிருபர். திருடர்களை, கொள்ளைக்காரர்கள் என்று கூறுவிட்டால் மாஸ்டர் மோதிராம் நிருபராக இருந்து என்ன பயன்?"

விசிலின் ஓசையும், 'விழித்துக்கொண்டிருங்கள்' என்ற அறை கூவலும் மெள்ள மெள்ளத் தொலைவிலே கேட்கலாயின. மக்கள் அவரவர் வீட்டின் கதவைத் தட்டித் திறக்கும்படி கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தனர்.

வைத்தியர் வீட்டிலும் நடைக்கதவின் தாழ்ப்பாளை யாரோ ஓசைப்படுத்தினுர்கள். வெளியே படுத்துக்கொண்டிருந்த சமையற்காரன் இருமினுன் பலமாக. நாதாங்கி மீண்டும் ஓசைப் பட்டது.

"பத்ரியாக இருக்கும். வா, போய்க் கதவைத் திறக்கலாம்" என்ருன் ரங்கநாத்.

இருவரும் கீழே வந்தனர். தாழ்ப்பாளை நீக்கியவாறே ரூப்பன் கேட்டான். "என்ன நடந்தது அண்ணு? எல்லாத் திருடர்களும் ஓடிவிட்டார்களா?"

பத்ரி பதிலேதும் கூறவில்லை. மௌனமாய்ப் படிகளில் ஏறி மாடிக்கு வந்தார். ரூப்பன் கீழேயே தன்னறைக்குப் போய்

விட்டான். பத்ரியும் ரங்கநாத்தும் தங்கள் தங்கள் கட்டிலில் படுத்ததும் கீழே தெருவிலிருந்து யாரோ குரல் கொடுத்தனர்: "வஸ்தாது! சற்று இறங்கி வாருங்கள். விஷயம் ரொம்ப மோசமாகப் போய்விட்டது."

பத்ரி கதவருகே நின்றவாறே கேட்டார்: "என்ன நடந்தது? இராத்திரியெல்லாம் இப்படி அமர்க்களம் செய்து கொண்டே தான் இருக்கப் போகிறீர்களா? தூங்க விடமாட்டீர்களா?"

சின்னவன் தெருவிலிருந்தே பதில் கொடுத்தான். "வஸ்தாது தூங்குவதாவது? மண்ணாங்கட்டி! விடுங்க அதை. இப்பொழுது ரிப்போர்ட் கொடுத்தாகவேண்டும். இங்கே தெருத் தெருவாய் 'திருடன் திருடன்' என்று கூச்சல் போட்டுக்கொண்டு பயல்கள் திரிந்திருக்கிறார்கள். அங்கே இந்தக் களேபரத்தில் யாரோ ஒருத்தன் ஒரு கை பார்த்துவிட்டான். கயாதீன் வீட்டில் திருட்டு நடந்துவிட்டது. கீழே இறங்கி வாருங்கள்."

# அத்தியாயம் 10

அந்த ஊரில் கயாதீன் என்ற பெயருடைய ஒருவர் இருந்தார். கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தலில் மிகவும் கெட்டிக்காரர். ஏனென்றால் அவர் தொழில் லேவாதேவி. அவருக்கு ஒரு கடை இருந்தது. அதில் துணிமணிகளும் விற்கப்படும்; பண லேவாதேவியும் நடக்கும். அவருக்கு வயதுக்கு வந்த பெண்ணொருத்தி இருந்தாள். அவள் பெயர் பேலா. அவருக்கு ஒரு தங்கை; விதவை. இருந்த மனைவியும் காலமாகி விட்டாள். தற்சமயம் மனைவியில்லை. பேலா நல்ல ஆரோக்கியமுள்ள பெண். அழகானவள். வீட்டுக் காரியங்களில் கெட்டிக்காரி. ராமாயணம், மாயா மனோகர் முதலிய கதைப் பத்திரிகைகள் படிக்கும் அளவுக்குப் படித்தவள். அவளுக்கு ஒரு நல்ல, அழகான, யோக்கியமான வரன் தேடிக்கொண்டிருந்

தனர். பேலாவின் உள்ளம், உடல் இரண்டுமே காதலிக்கத் தகுந்ததாகவே இருந்தன. அதனால் ரூப்பன் அவளைக் காதலித்தான். ஆனால் பேலாவுக்கு இது தெரியாது. ரூப்பன் தினமும் இரவு படுக்கச் செல்லுமுன் அவளது உடலைப் பற்றிய தியானத்தில் ஆழ்ந்துவிடுவான். தியானம் தூய்மையாக இருக்கவேண்டும் அல்லவா? அதனால் அவளைப் பிறந்தமேனி யாக்கி உடைகள் ஏதுமின்றியே கற்பனை செய்துகொள்ளு வது வழக்கம். பேலாவின் விதவை அத்தைதான் வீட்டை நிர் வகித்தாள். பேலாவை வாசல் தாண்ட விடமாட்டாள். பெரி யவர்கள் சொல்வதைக் கேட்கும் பழக்கமுடைய பேலா வாசற் படியைத் தாண்டமாட்டாள். ஆனால் வெளியே போகவேண்டு மென்றால் மேலே மொட்டை மாடியின் குட்டைச் சுவரைத் தாண்டி, அடுத்த வீட்டுக்கோ அல்லது இப்படிப் பல மொட்டை மாடிகளைத் தாண்டியோ போய் வருவது வழக்கம். ரூப்பன் பாவம், பேலாவுக்காக மிகவும் ஏங்கிப் போனான். வாரத்துக்கு இரண்டு மூன்று கடிதமாவது எழுதிக் கிழித்துப் போட்டு விடுவான்.

இந்த விஷயங்களெல்லாம் இப்பொழுது அவ்வளவு முக்கியம் இல்லை. முக்கியமான விஷயம், கயாதீன் வட்டிக்கடை நடத்து வதும், துணி வியாபாரம் செய்வதுந்தான். கோவாப்பரேடிவ் யூனியனும் வட்டிக்குக் கடன் கொடுத்தது; துணி வியாபாரம் நடத்தியது. இரண்டுமே சமாதான சகவாழ்வு முறையைக் கடைப்பிடித்து இயங்கின. வைத்தியருடன் அவருக்கு நல்ல விதமான உறவு இருந்தது. கல்லூரி நிர்வாகக் கமிட்டியில் அவர் உப தலைவர்; அவரிடம் பணம் இருந்தது; மரியாதை இருந்தது. வைத்தியர், காவல் துறையினர், ரூப்பன், உள்ளூர் எம். எல். ஏ., ஜில்லா போர்டுத் தலைவர், வரி வசூலிப்பவர் ஆகிய யாவருடைய தயவும் அவருக்கு இருந்தது.

இத்தனை யிருந்தும் அவர் தெம்பில்லாதவராய் இருந்தார். மிகவும் நிதானித்துதான் நடப்பார். தம் விஷயத்தில் மிகுந்த எச்சரிக்கையுடன் இருப்பார். உளுத்தம்பருப்பைக் கூடச் சேர்த்துக்கொள்ள மாட்டார். ஒரு முறை நகரத்துக்கு ஏதோ காரியமாகப் போயிருந்தார். அங்கே உறவினர் வீட்டில் சாப்பிடுகையில் சாப்பாட்டில் உளுத்தம்பருப்பு இருந்தது. கயாதீன் மெதுவாகத் தட்டை நகர்த்திவிட்டுத் தண்ணீரை மட்டும் குடித்துவிட்டு எழுந்துவிட்டார். சாப்பிடவில்லை.

பின்பு அவருக்குப் பருப்புடன் வேறு உணவு தயாரிக்கப் பட்டது. இம்முறை ஆசமனம் செய்துவிட்டு எழுந்திருக்காமல் சாப்பிட்டார். மாலையில் அந்த உறவினர், 'உளுத்தம்பருப்பை ஏன் சேர்த்துக்கொள்ளுவதில்லை?' என்பது பற்றிச் சொல்லும் படி கட்டாயப்படுத்தினர். சற்று நேரம் இப்படியும் அப்படி யும் பார்த்துவிட்டு, 'உளுந்து சாப்பிட்டால் வயிற்றில் வாயு சேர்ந்து கொள்கிறது; அதனுல் ,கோபம் வருகிறது' என்பதை மெள்ள வெளியிட்டார் அவர்.

உறவினர் இத்துடன் விடவில்லை. "கோபம் வந்தால் என்ன? அதனுல் என்ன ஆகிவிடும்?" என்று வினவினர். "கோபம் என்ன சிங்கமா! புலியா? அதனிடம் இவ்வளவு பயப்படவேண் டிய அவசியமென்ன?" என்று கேட்டார்.

அந்த உறவினர் ஒரு காரியாலயத்தில் வேலை பார்த்து வந்தார். கயாதீன் அவர் கூறுவதை ஏற்றுக்கொண்டார். பின்பு கூறினர்: "நீங்கள் கூறுவது சரிதான். ஆனல் கோபம் எல்லோருக்கும் சோறு போடாது. அதிகாரிகளுக்குத்தான் இது அழகு. நாங்கள் வியாபாரிகள். எங்களுக்குக் கோபம் வந்தால் எவனும் மறந்து போய்க்கூட எங்கள் கடைப்பக்கம் வரமாட்டான். எப்பொழுது என்ன ரகளை ஏற்படும் என்று கூடச் சொல்லமுடியாது."

கயாதீன் வீட்டில் திருட்டு நடந்துவிட்டது. கொஞ்சம் நகை கள், துணிமணிகள் மட்டுந் தான் களவு போயிருந்தன. அன்றிரவு திருடர்களைத் துரத்திக்கொண்டு போனவர்கள் யாரோ ஒருவன்தான் இடையில் இங்கே நுழைந்து அகப் பட்டதைச் சுருட்டிக்கொண்டு போயிருக்கிறன் என்பதில் போலீஸிற்குச் சந்தேகம் இருக்கவில்லை. திருடன் மொட்டை மாடி வழியாக முற்றத்தில் குதித்தபோது பேலாவோ, அவள் அத்தையோ அவனைப் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் அடை யாளம் தெரிந்திருக்கும். ஆனல் திருடன் கம்பை ஊன்றிக் கொண்டு சுவருக்குத் தாவி, மாடியில் ஏறும்பொழுதுதான் அவர்கள் பார்த்தார்கள். அப்பொழுது அவனுடைய முதுகே அவர்களுக்குத் தெரிந்தது. இது பற்றிப் போலீசாருக்கு அவர்களிடம் ஒரே கோபம். கடந்த மூன்று நாட்களாக எத் தனையோ திருடர்களைப் போலீசார் அவர்கள் முன்னே கொணர்ந்து நிறுத்தியாயிற்று. முகத்தை மட்டும் அல்ல, முது கைக்கூடக் காட்டியாகிவிட்டது. அவர்களில் ஒருவனின் கழுத்

தில் கூடப் பேலாவோ அவன் அத்தையோ வெற்றிமாலை சூட்டி, "இன்ஸ்பெக்டர் சாகப், இவன் தான் அன்றிரவு எங்கள் வீட்டில் திருடிய மாவீரன்" என்று சொல்லும்படியான வாய்ப் பைப் பெறவில்லை. போலீசாருக்கு இதனால் ஏற்பட்ட ஏமாற் றத்துக்கும் ஆத்திரத்துக்கும் அளவே இல்லை. கயாதீன் வீட்டுப் பெண்கள் திருடனைப் பிடிப்பதற்கு ஒத்துழைக்க மறுப்பதாக இன்ஸ்பெக்டர் முணுமுணுக்கத் தொடங்கி விட்டார். 'வேண்டுமென்றே செய்கிறார்கள், என்ன கார ணமோ தெரியவில்லை' என்ற பேச்சுக்கூட எழுந்து விட்டது.

கயாதீனின் முகத்திலே சோகத்தின் ரேகைகள் பின்னும் ஆழமாகப் பதிந்துவிட்டன. கிராமத்தில் இவ்வளவு வீடுகள் இருக்கையில் திருடனை அவர் வீடு மட்டுமா கவரவேண்டும்? திருடன் இறங்குகையில் பேலாவும் அவர் தங்கையும் அவன் முகத்தை நிச்சயமாகப் பார்த்திருக்க முடியும். ஆனால் அவர் கள் கண்கள் முதுகைத்தானே பார்த்திருக்கின்றன? எல்லா ரிடமும் சிரித்துப் பழகிக்கொண் டிருந்த இன்ஸ்பெக்டர் எரிந்து விழுவதற்குத் தாம் கிடைத்துவிட்டோமே என்று அவருக்கு ஒரே வருத்தம்.

சில மாஸ்டர்கள் அந்த ஊரிலேயே இருந்தார்கள். அவர் களில் ஒருவரான கன்னுமாஸ்டர் பெரிய முட்டாள். இரண்டா வது மாளவியா, அவரும் மண்டுதான். மூன்றாவது, நான்கா வது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது, எல்லார் பெயரும் கயா தீனுக்குத் தெரியும்; எல்லாரும் வடிகட்டின முட்டாள்கள் என் பதும் தெரியும். இப்பொழுது அந்த ஏழு பேரும், தன் வீட்டை நோக்கி வருவதைக் கண்ணுற்றதும் கயாதீனின் துயரம் மேலும் அதிகரித்துவிட்டது. இந்த ஏழு பேரும் திருட்டு நடந்தது பற்றித் தங்கள் அநுதாபத்தைத் தெரிவித்து விட்டு, கல்லூரி யைப் பற்றி அசட்டுத்தனமாகப் பேசத் துவங்கிவிடுவார்கள் என்பதை அறிந்திருந்ததால் அவரது சோகம் கரைகாணாமல் பெருகியது.

நடந்ததும் அதுவேதான். சுமார் அரைமணி நேரம் அவர்கள் அவரை விடவில்லை. கல்லூரி நிர்வாகக் கமிட்டியின் தலைவர் பம்பாயிலேயே பல வருடங்களாக இருந்து வருகிறார், இனியும் இருப்பார். அதனால் கல்லூரி நிர்வாகக் கமிட்டியின் உப தலைவர் என்ற முறையில், கல்லூரி மானேஜர், பிரின்ஸ்பால்

ஆகிய இருவருடைய அத்துமீறிய செயல்களைப் பற்றி இவர் தாம் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று வற்புறுத்தினர்.

கயாதீன் மிகவும் அமைதியாக, சர்வோதயப் பண்புடன் தம் நிலையை எடுத்துரைத்தார். "உப தலைவர் பதவி என்பது பெய ரளவுக்குத்தான். உண்மையில் இது ஒரு பதவியே இல்லை. இந்த விளையாட்டை நீங்களே விளையாடுங்கள். என்னை நடுவிலே இழுக்காதீர்கள். எனக்கு இதற்கேற்ற சக்தியில்லை."

இதைக் கேட்டபின், தேசபரிபாலன முறையைப் போதிக்கும் மாஸ்டர், 'உபதலைவர் பதவி என்பது என்ன? அதற்கு எத்துணை அதிகாரமுள்ளது?' என்பதைக் கம்பீரமாக எடுத்துரைத்தார். கயாதீனுக்கு இதைப் பற்றியெல்லாம் ஒன்றும் தெரியாது என்ற நம்பிக்கையுடன் இந்திய அரசியல் சாசனச் சட்டப்படி உப தலைவர் பதவி, அதன் அதிகாரங்கள் பற்றி அவர் விரிவாக எடுத்துரைக்க முற்பட்டபோது, கயாதீன் செருப்பின் நுனியால் தரையிலே ஒரு வட்டத்தை வரைந்துகொண் டிருந்தார். இதன் பொருள் அவர் க்ஷேத்திர கணிதம் அறிந்தவர் என்பதல்ல. இதில் ஏதோவொரு 'சுருக்கு' அல்லது சூழ்ச்சி இருப்பதாக நினைக்கிறார் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

திடீரென அவர் இடைமறித்தார்: "மாஸ்டர் சாகப், இந்தியா வின் உப தலைவர் யார்?"

இதைக் கேட்டதுமே அவர்கள் கலவரமடைந்தனர். ஒருத் தன் கிழக்கேயும், ஒருத்தன் மேற்கேயும் பார்க்கலானான். ஆனால் இந்தியாவின் உப தலைவ (உப ஜனாதிபதி)ரின் பெயர் எந்தத் திசையிலும் காணக் கிடைக்கவில்லை. முடிவில் தேசபரி பாலன முறை போதிக்கும் ஆசிரியர் முணுமுணுத்தார். "முன்னர் ராதாகிருஷ்ணஜீ இருந்தார். இப்பொழுது அவரை மாற்றி விட்டார்கள்."

கயாதீன் தணிந்த குரலில் கூறினார்: "உபதலைவரின் நிலை யென்ன என்பதை இப்பொழுது புரிந்துகொள்ளுங்கள்."

ஆனால் அவர்கள் இதை ஏற்கவில்லை. குறைந்தபட்சம் கல் லூரியின் நிர்வாகக் கமிட்டியின் ஒரு கூட்டத்தையாவது கயா தீன் கூட்டவேண்டும் என்று அவர்களில் ஒருவர் பிடிவாதமாக வற்புறுத்தினார். கயாதீன் அந்தக் கிராமத்துப் பெரிய புள்ளி களில் ஒருவர், லேவாதேவி செய்பவர் என்பது உண்மைதான். ஆனால் துணிவாகத் தமக்கென ஒரு வழியை அமைத்துக் கொண்டு தனிவழியே நடந்து அதையே பிறர் பின்பற்றும் ஒரு

மார்க்கமாக அமைத்துவிடக் கூடிய திறன் பெற்றவர்களில் அவர் ஒருவர் இல்லை. முன்பின் அறியாத பாதையிலே அடியெடுத்து வைக்குமுன், 'பாதை சரியாக இருக்கிறதா, எங்கேயாவது கால் புதைந்துவிடுமா? சறுக்கிவிடுமா?' என்று அறிய கூலிக்கு ஆட்களை அனுப்பி, சோதித்துப் பார்த்துவிட்டு, பின்னர் மெள்ளத் தடியை ஊன்றிக்கொண்டு பாதையைக் கடந்துவிடும் பெரிய மனிதர்களிலும் அவர் ஒருவராக இல்லை. இதனால் மாஸ்டர்களின் வற்புறுத்தல் அவரிடம் பலிக்கவில்லை. "கூட்டம் கூட்டவேண்டுமென்றால் ராமாதீனைப் பிடியுங்கள். இப்படிப் பட்ட காரியங்களில் அவர் கெட்டிக்காரர்" என்று மெதுவாகக் கூறிவிட்டார் கயாதீன்.

"அவரைப் பிடித்தாகிவிட்டது."

"பின் என்ன? பிடித்துக்கொள்ளுங்கள் கெட்டியாக, நழுவ விட்டு விடாதீர்கள்" எனக் கூறிய கயாதீன் சுற்றியிருந்த மற்றவர்களிடம் தம் கவனத்தைத் திருப்பலானார். அக்கம்பக்கத்திலிருந்த கிராமங்களிலிருந்து பழைய புரோநோட்டைப் புதுப்பிக்க, புதிய புரோநோட்டு எழுத, எப்படியாவது புரோநோட்டிலிருந்து விடுபட்டால் போதுமென்று பலரும் வந்திருந்தனர். எப்படியாவது கயாதீன் மூலமாக இந்த நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்வதென்ற முடிவுடன் கன்னா மாஸ்டர் வந்திருந்தார். அதனால் அவர் மீண்டும் அவருக்கு நிலைமையை விளக்குவதில் முழுமூச்சுடன் இறங்கி விட்டார்.

"மாளவியாஜீ! நீங்களாவது இவருக்கு எடுத்துச் சொல்லுங்களேன். இந்தப் பிரின்ஸ்பால் நம்மையெல்லாம் கசக்கிப் பிழிந்துகொண்டிருக்கிறார்" என்றார் கன்னா.

கயாதீன் நீண்ட பெருமூச்செறிந்தார். இதுதான் நம் தலைவிதி என்று நினைத்தார் போலும். இந்த உதவாக்கரை ஆசிரியர்கள் அவரை விட்டு நகரப் போவதில்லை. உடம்பை நெளித்து, உட்கார்ந்திருக்கும் நிலையை மாற்றி, சற்றுச் சாய்ந்து உட்கார்ந்த பின் அங்கிருந்தவர்களை நோக்கி, "அப்போ நீங்கள் எல்லாம் போங்கப்பா! நாளைக் காலையில் சற்றுச் சீக்கிரமாகவே வாருங்கள்."

கயாதீன் இன்னொரு பெருமூச்சுவிட்டவாறே கன்னா மாஸ்டரின் பக்கம் திரும்பி உட்கார்ந்துகொண்டார்.

"நீங்கள் அநுமதி கொடுத்தால் நான் விஷயத்தை ஆரம்பத்திலிருந்தே சொல்லுகிறேன்" என்று ஆரம்பித்தார் கன்னு மாஸ்டர்.

"என்ன சொல்லப் போகிறீர்கள் மாஸ்டர் சாகப்?" கயாதீன் சலித்துக்கொண்டார். "தனியார் பள்ளியில் ஆசிரியர் என்றால் இப்படித்தான். கடுமையாக வேலை வாங்குவார்கள். தப்புவது எப்படி?"

"கல்லூரி ஜெனரல் பாடி மீட்டிங் கடந்த ஐந்து வருடங்களாகவே நடக்கவில்லை. வைத்தியரே மானேஜராக இருந்து வருகிறார். ஒவ்வொரு வருடமும் தேர்தல் நடக்கவேண்டும். புதிய பொதுக் குழுத் தேர்வு டக்கவேயில்லை" என்றார் கன்னு.

ராம்லீலாவில் வரும் ராமலட்சுமணர்களைப் போல் முகத்தை உணர்ச்சியற்றதாய் வைத்துக்கொண்டு கயாதீன் சற்று நேரம் மௌனமாக விற்றிருந்தார். பிறகு கூறினார்: "நீங்கள் எல்லாம் படித்தவர்கள், நான் என்ன சொல்ல? வருடக் கணக்காக, வருடாந்திரக் கூட்டமும், தேர்தலும் நடைபெறாத ஸ்தாபனங்கள் நூற்றுக் கணக்காக இருக்கின்றன. இந்த ஊர் ஜில்லா போர்டை எடுத்துக்கொள்ளுங்கள். ஒரு காலத்தில் தேர்தல் கீர்தல் இல்லாமலேயே வருடக் கணக்காக இது நடந்திருக்கிறது." கன்னங்கள் உப்ப, தொண்டை தழுதழுக்க அவர் தொடர்ந்தார்: "நாடெங்கும் இதே நிலைமைதான்." தேச பக்தியினால் அவர் இப்படி உணர்ச்சி வசப்பட்டுப் போகவில்லை. இருமல் வந்து விட்டது, அவ்வளவுதான்.

"பிரின்ஸ்பால் இஷ்டம் போல் ஆயிரக்கணக்காக ரூபாய்களைச் செலவு செய்கிறாரே, ஒவ்வொரு வருஷமும் ஆடிட்டர்கள் ஆட்சேபிக்கிறார்கள். ஒவ்வொரு வருஷமும் இந்த ஏமாற்று வித்தை நடக்கிறது" என்றார் மாளவியா.

கயாதீன் அப்பாவித்தனமாகக் கேட்டார்: "நீங்கள் ஆடிட் இன் சார்ஜா என்ன?"

மாளவியா குரலை உயர்த்திவிட்டார்: "இல்லை, நான் சொல்ல வந்தது மக்களுடைய பணம் இப்படி நாசமாவதை எங்களால் பார்த்துச் சகித்துக்கொண் டிருக்கமுடியவில்லை என்பதே."

கயாதீன் இடைமறித்து முன்போலவே தணிந்த குரலில் கேட்டார்: "மக்களுடைய பணம் பின் எப்படி நாசமாகவேண்டுமெனத் தாங்கள் விரும்புகிறீர்கள்? பெரிய பெரிய கட்டடங்கள் கட்டியா? கூட்டங்கள் போட்டா? விருந்துகள் நடத்தியா?"

மாளவியா இந்த அபார அறிவுக்குமுன் சரணடைந்து விட்டார்.

கயாதீன் தொடர்ந்தார்: ''மாஸ்டர் சாகப், நான் அதிகம் படித்தவன் அல்ல. ஆனால் பம்பாய், கல்கத்தா எல்லாம் சுற்றிப் பார்த்திருக்கிறேன். எனக்கும் எல்லாம் கொஞ்சம் புரிகிறது. மக்களுடைய பணத்துக்காக இத்தனை வேதனைப்படுவது சரியல்ல. எப்படியும் அது நாசமாகித்தான் போகும்.'' சில நிமிட மௌனத்துக்குப் பிறகு கன்னுவைத் தட்டிக் கொடுப்பதுபோல் பேசினார்: ''மாஸ்டர் சாகப், மக்களுடைய பணத்தைப் பற்றி இவ்வளவு கவலைப்படாதீர். இல்லாவிட்டால் ரொம்பக் கஷ்டப் பட நேரிடும்.''

மாளவியாவுக்குக் கயாதீனின் சிந்தனை ஓட்டம் மிக்க ஆழமுள்ளதாகத் தோன்றியது. தோன்றுவது என்ன? ஆழமானது தான். அவர் என்னவோ இன்னமும் கரையோர மணலில்தான் புரண்டுகொண்டிருந்தார். ''கயாதீன் ஜீ, இந்த விஷயங்களுக்கும் எங்களுக்கும் சம்பந்தம் இல்லைதான். கல்லூரிக்குப் பதிலாக வைத்தியர் மாவு மிஷின் வைத்தால் என்ன? பிரின்ஸ்பால் தம் பெண்ணுக்குக் கல்யாணம் செய்தால் என்ன? இந்த ஸ்தாபனம் எப்படியானாலும் உங்கள் யாவருடையதுந்தானே? ஊரறிய இத்தனை ஊழல் இருந்தால் என்ன? பெயருக்குக்கூட நேர்மை, நியாயம் இல்லாவிட்டால் என்ன, சொல்லுங்கள்?'' என்றார்.

இத்தனை நேரத்துக்குப் பின் இப்பொழுது தான் முதல் முறையாகக் கயாதீனின் முகத்தில் லேசாகக் கவலைக் குறிகள் படர்ந்தன. முன்னைவிடக் குரல் தொய்ந்து சன்னமாக ஒலித்தது. ''நேர்மை, நியாயம் என்று பேசாதீர்கள் மாஸ்டர் சாகப். யார் காதிலாவது விழுந்தால், விபரீதமாகிவிடும்.''

எல்லாரும் மௌனமாகி விட்டனர். கயாதீனுக்கு என்ன தோன்றியதோ என்னவோ அவருடைய் பார்வை ஒரு மூலையை நோக்கிச் சென்றது. ஒடிந்து கிடந்த மரமேஜையொன்று கிடந்தது அங்கே. விரலால் அதைச் சுட்டிக்காட்டியவாறு அவர் கூறினார். ''நேர்மை நியாயமென்பது இதோ பாருங்கள், இது தான். ஒடிந்து மூலையில் கிடக்கிறது. கூட்டம், கமிட்டி என்கிற சமயத்தில் இதன் மீது அழகிய விரிப்பு விரிக்கப்பட்டு விடுகிறது. அந்தச் சமயத்தில் இது மிகப் பிரமாதமாய், உயர்ந்ததாய்க் காட்சி தருகிறது. இதன் மீது ஏறி

நின்று பிரமாதமாகச் சொற்பொழிவுகள் ஆற்றப்படுகின்றன. இதன் பிரயோஜனம் அவ்வளவுதான். அதற்காகத் தான் இது இருக்கிறது."

இந்த வாதம் மாஸ்டர்களை முற்றும் மௌனமாக்கி விட்டது. கயாதீன் தான் இப்பொழுது அவர்களைத் தேற்றினார். "சொல்லுங்கள்! தனிப்பட்ட முறையில் உங்களுக்கு என்ன சிரமம்? என்ன குறை? இது வரை நீங்கள் மக்களுடைய கஷ்டங்களைப் பற்றித் தான் பேசிக்கொண்டிருந்தீர்கள்?"

கன்னு மாஸ்டர் ஆத்திரமடைந்தார். "உங்களிடம் எந்தச் சிரமத்தைப் பற்றிக் கூறுவதும் அர்த்தமற்றது. எதையுமே நீங்கள் சிரமமெனக் கருதுவதாகத் தெரியவில்லை" என்றார் கடுமையாக.

"கருதாமல் என்ன?" கயாதீன் தட்டிக் கொடுத்தார்: "நிச்சயம் கவனிக்கிறேன். நீங்கள் சொன்னால்தானே?"

"பிரின்ஸ்பால் எங்களிடமிருந்து எல்லா வேலைகளையும் எடுத்துக்கொண்டு விட்டார். கன்னுவை ஹாஸ்டல் மேற்பார்வையிலிருந்து விலக்கி விட்டார். 'கேம்ஸ் சார்ஜை' என்னிடமிருந்து எடுத்தாகி விட்டது. ராய் சாகப் தான் எப்பொழுதும் பரீட்சைகளுக்குச் சூபரின்டென்டென்ட். அதிலிருந்து அவரை விலக்கியாகி விட்டது. இந்த வேலைகளை எல்லாம் தமக்கு வேண்டியவர்களாகப் பார்த்துக் கொடுக்கிறார்."

கயாதீன் தயங்குவதாகத் தோன்றியது. பிறகு கூறினார். "நான் சொன்னால் உங்களுக்குக் கோபம் வரும். பிரின்ஸ்பாலுக்குத் தன்னிஷ்டம் போல் 'இன்சார்ஜு'களைத் தேர்ந்தெடுக்க உரிமையுண்டு. இதை எப்படித் தவறாக எண்ணுவது?"

மாஸ்டர்கள் கலவரம் அடைந்தனர். "உலகத்தில் எல்லாக் காரியமும் உங்கள் விருப்பப்படியா நடக்க முடியும்? போன வருடத்தை நினைத்துப் பாருங்கள்! அந்தப் பைஜேகாவ் லால் சாகப்பை, லாட் சாகப் வைஸ்சான்ஸலராக நியமித்து விடவில்லையா? ஜனங்களெல்லாம் குதிகுதி யென்று குதித்தார்கள். யாரால் என்ன செய்ய முடிந்தது? அப்புறம் எல்லோரும் வாயை மூடிக்கொண்டு விட்டார்கள். நீங்களும் வாயை மூடிக் கொண்டிருங்கள். கத்துவதனால் ஒன்றும் நடக்கப் போவதில்லை. ஜனங்கள் பிறகு உங்களைத் தான் அயோக்கியப் பயல்கள் என்பார்கள்" என்றார் கயாதீன்.

ஒரு மாஸ்டர் பின்னுலிருந்து எழுந்து குரல் கொடுத்தார். "பிரின்ஸ்பால் பையன்களை எங்களுக்கெதிராகத் தூண்டி விடுகிறுரே, அதற்கென்ன செய்வது? எங்கள் உடன் பிறந்த வளையும், பெற்ற தாயையும் கண்டபடி திட்டுகிறுர்கள். பொய் ரிப்போர்ட் எழுதுகிறுர் அவர். நாங்கள் ஏதாவது எழுதிக் கொடுத்தால் அதைத் தொலைத்துவிடுகிறுர். பிறகு எக்ஸ்ப்ளனேஷன் கேட்கிறுர். இதற்கெல்லாம் என்ன சொல்லு கிறீர்கள்?"

கயாதீன் தம் ஆசனத்தில் சற்றே அசைந்து கொடுத்தார். அது சர் புர்ரென்று ஓசை எழுப்பியதும் சற்றே வெட்கமடைந் தார். ஏதோ யோசித்தவர்போல், "காரியாலய முறைகளைப் பற்றியும், ஆபீஸ் விஷயங்களைப் பற்றியும் சொல்லுகிறீர்கள் போலிருக்கிறது. அதெல்லாம் அப்படித்தான் நடக்கும்" என்றுர் சாவதானமாக.

அந்த மாஸ்டருக்கு ஆவேசமே வந்து விட்டது. "ஏழெட்டுப் பிணங்கள் விழுந்தால் தான் விஷயம் புதிதென்று உங்களுக்குப் புரியும்" என்றுர்.

கயாதீன் அவருடைய கோபத்தை அநுதாபத்துடன் நோக் கிஞர். இன்றைக்கு இவன் உளுத்தம்பருப்பு சாப்பிட்டிருக் கிறுன் என்பதைப் புரிந்து கொண்டு விட்டார். மெள்ளக் கூறிஞர்: "இது என்ன புதிய விஷயம்? இப்பொழுது எங்கே பார்த்தாலும் படபடவென்று பிணங்கள் விழுந்து கொண்டு தானே இருக்கின்றன!"

கன்னு மாஸ்டர் நிலைமையைச் சமாளிக்க முன்வந்தார். "இவர் கோபத்தைத் தவருகக் கருதாதீர்கள் கயாதீன் சாகப்! நாங்கள் யாவரும் உண்மையிலேயே மிகவும் நிலை குலைந்து போயிருக்கிறேும். ரொம்பச் சிரமமான நிலை. நீங்களே பாருங் களேன், இந்த ஜூலையில் தம் உறவுக்காரர் மூவரை வேலைக்கு அமர்த்திக் கொண்டிருக்கிறுர். அவர்களை எங்களுக்குச் சீனி யர்களாக்கி அவர்கள் மூலம் தம் காரியத்தை நடத்திக் கொண் டிருக்கிறுர். எல்லாரும் அவரவர்களுக்கு வேண்டியவர்கள், சொந்தக்காரர்கள், குடும்பம் என்ருகி விட்டதே! எங்களுக்கு ஆத்திரம் வராதா?"

"ஆத்திரம் எதற்காக வரவேண்டும்?" கயாதீன் தொண்டை யைக் கனைத்துக் கொண்டார். "நீயே தான் சொல்லிவிட் டாயே, சொந்தக்காரர்கள், 'வேண்டியவர்களின் காலம் இது

வென்று. பின் என்ன? வைத்தியருடைய உறவு முறையில் ஒருவரும் இல்லை போலிருக்கிறது. அதனால் தம் உறவுக்காரர்களை இழுத்துப் போட்டுக் கொண்டு விட்டார்!''

இரண்டொரு மாஸ்டர்களுக்குச் சிரிப்பு வந்து விட்டது. சிரித்து விட்டார்கள். கயாதீன் தம் பாட்டில் பேசிக்கொண்டே போனார்: ''இது சிரிக்கவேண்டிய விஷயம் அல்ல. இன்றைய யுக தர்மம் இது தான். நாட்டில் எல்லோரும் செய்வதைத் தான் பிரின்ஸ்பாலும் செய்கிறார். பாவம், தம் உறவினர்களை வேறு எங்கே கொண்டு போய் வேலையில் அமர்த்த முடியும்?''

பின்பு கன்னாவின் பக்கம் திரும்பிக் கேட்டார். ''நீங்கள் தான் சரித்திரம் கற்பிக்கிறீர்களே. சிம்மகட் கோட்டை எப்படிக் கைப்பற்றப்பட்டது?''

கன்னா பதிலைத் தேட முற்பட்டார். கயாதீன் தாமே கூறலானார். ''நானே சொல்லுகிறேன், கேளுங்கள்! தானாஜீ என்ன எடுத்துக் கொண்டு போனார்? ஓர் உடும்பு, அவ்வளவு தான். அதைக் கயிற்றிலே கட்டிக் கோட்டைச் சுவற்றின் மீது எறிந்து விட்டார். உடும்பு எந்த இடத்தில் போய் விழுந்ததோ அதை அப்படியே கெட்டியாக இறுகப் பற்றிக் கொண்டு விட்டது. அப்புறம் என்ன? வீரர்கள் கயிற்றைப் பிடித்துக் கொண்டு மடமடவென மேலே ஏறிவிட்டனர்.'' இதைக் கூறி முடிப்பதற்குள் அவருக்கு ஆயாசம் மேலிட்டுவிட்டது. சூழ்ந்து நின்ற ஆசிரியர்கள் இதன் தொனியைக் கொஞ்சமாவது புரிந்து கொண்டிருப்பார்களா என்ற நம்பிக்கையுடன் அவர்கள் முகத்தைப் பார்த்தார். அவர்கள் நிர்விகாரமாய், நிச்சலனமாக இருந்தனர். கயாதீன் மேலும் விளக்க முற்பட்டார்: ''நம் நாட்டின் நிலைமை இது தான், மாஸ்டர் சாகப்! யார் எங்கே எந்தப் பதவியில் இருக்கிறாரோ அந்த இடத்தை அப்படியே உடும்பு மாதிரி பற்றிக் கொண்டிருக்கிறான். கொஞ்சங்கூட அசைவதில்லை. எத்தனை சீண்டினாலும், ஏசினாலும் நகருவதில்லை. உடும்புப் பிடிதான். பின் என்ன? அவருக்கு வேண்டியவர்கள், அண்ணன், தம்பி, உறவுமுறைக்காரர்கள் எல்லாரும் அவன் வாலைப் பிடித்துக்கொண்டு மடமட வென்று மேலே ஏறி உச்சநிலை வரைக்கும் போய் விடுவார்கள், தயங்கமாட்டார்கள். கல்லூரியை மட்டும் ஏன் குறை கூறவேண்டும்? எல்லா இடங்களிலும் இதே நிலைமைதான்.'' கயாதீன் பெரு

மூச்செறிந்தவாறே கேட்டார்: "சொல்லுங்கள்! இந்த நிலைமை எங்கே இல்லை?"

மாஸ்டர்களின் குழு சக்கிலியத் தெரு வழியாகத் திரும்பிச் சென்றபொழுது எல்லாருடைய முகமும் தொங்கிக் கிடந்தது. நடையைப் பார்த்தால் தொய்ந்து அப்படியே அவர்கள் கீழே விழுந்து விடுவார்கள் போல் தோன்றியது.

சக்கிலியத் தெரு கிராமத்தின் ஒரு பகுதி. அதில் சக்கிலியர்கள் வசித்து வந்தனர். சக்கிலி என்பது ஒரு சாதி. தீண்டத்தகாத இனமென்பது அதன் பொருள். தீண்டத் தகாதது என்பது இரண்டு கால்களுடைய ஓர் உயிர்ப் பிராணியின் பெயர். அரசியல் சாசனம் ஏற்படுமுன் எவரும் அதைத் தீண்டியதில்லை. அரசியல் சாசனம் என்பது ஒரு காவியம். அதன் 17-ஆவது அத்தியாயத்தில், தீண்டாமை என்பது அழிக்கப்பட்டு விட்டது. அதாவது தீண்டாமை வதம் செய்யப்பட்டு விட்டது. ஆனால் இந்த நாடும், நாட்டு மக்களும் காவியத்தின் துணைகொண்டு உயிர் வாழ்பவர்கள் அல்ல. தர்மந்தான் இவர்களின் உயிர் நாடி. தீண்டாமை என்பதும் இந்த நாட்டின் தொன்மை வாய்ந்த தர்மங்களில் ஒன்றாய் இருப்பதால், சிவபால்கஞ்சிலும், மற்றும் ஏனைய கிராமங்களிலும் உயிர் வாழ்ந்து கொண்டிருந்தது. தீண்டத் தகாதவர்களுக்குத் தனியான பகுதிகள் இருந்தன. அதில் இந்தச் சக்கிலியத் தெரு முக்கியமானது. இதை இங்கு மிகுந்த ஆர்வத்துடன் ஏற்படுத்தியவர்கள் ஜமீன்தார்கள்தாம். அவர்களுடைய ஆர்வத்தின் காரணம், தோல் வியாபாரத் துறையை விரிவாக்கவேண்டும் என்பதில்லை. சக்கிலியர்களை இங்குக் குடியமர்த்தியதன் மறைமுகமான காரணம் அவர்கள் சிலம்பு வீசுவதில் கெட்டிக்காரர்கள் என்பதுதான்.

அரசியல் சாசனம் அமலுக்கு வந்த பின் இந்தப் பகுதிக்கும் சிவபால்கஞ்சின் ஏனைய பகுதிகளுக்கு மிடையே நல்லதொரு தொடர்பு ஏற்பட்டிருந்தது. அதாவது, இந்தப் பகுதியில் மேடையொன்று அமைக்கப்பட்டது. அதற்குக் 'காந்திச் சதுக்கம்' என்று பெயரிட்டனர். இன்னுங்கூடச் சிலருக்கு நினைவிருக்கலாம். காந்தி என்பவர் பாரத நாட்டில் பிறந்தவர், இந்த மண்ணிலே தோன்றியவர். அவருடைய அஸ்திகளுடன் அவரது கொள்கைகளையும், திரிவேணி சங்கமத்தில் கரைத்தபின், அந்த மகானின் நினைவாக இனிப் பெரிய கட்டடங்களும், சதுக்கங்

களும் எழுப்பப்படும் என்ற முடிவெடுத்தபின் சிவபால்கஞ்சில் தோன்றியது இந்தச் சதுக்கந் தான். குளிர் நாட்களில் வெயி லில் உட்கார இந்த மேடை மிகவும் சௌகரியமாக, வசதியாக இருந்தது. பெரும்பாலும் தெரு நாய்கள் அங்கு ஓய்வெடுத்துக் கொண்டன. அவற்றுக்கென்று தனியாகக் கக்கூஸ் கட்டப் படாததால் வெயில் காய்ந்தவாறே அங்கேயே தங்கள் மல மூத்திரத்தைக் கழிக்கவும் இம்மேடை வசதியாகவே இருந்தது. இவற்றைப் பார்த்து, இரண்டு கால் பிராணிகளான மனிதர்கள் சற்றே மறைவாகத் தங்கள் உபாதைகளைத் தீர்த்துக்கொள்ள ஆரம்பித்து விட்டிருந்தனர்.

இன்று அந்த மேடையில் கணப்பை மூட்டிக்கொண்டு அதில் எதையோ வாட்டியவாறு நொண்டி அமர்ந்திருப்பதை ஆசிரியர் குழாம் கண்டது. அருகில் நெருங்கியதும் அது வட்டமான ரொட்டி என்பதும், அருகில் திரியும் நாய்களுக்காக அதை அவன் வாட்டிக்கொண் டிருக்கவில்லை என்பதும் புரிந்தது. நொண்டியைப் பார்த்ததுமே அவர்களின் இதய பாரம் இறங்கி யது போலிருந்தது. அங்கேயே நின்று அவனுடன் பேசியதும், தாலுக்கா ஆபீசிலிருந்து எந்த நகலைப் பெற நொண்டி பெரு முயற்சி செய்துகொண்டிருக்கிறானோ அது ஒழுங்காக, ஒரு தம்பிடிகூடத் தவறான முறையில் பணம் செலுத்தாமல் அவனுக் குக் கிடைக்கப் போகிறது என்பதும் தெரிந்தது.

ஆசிரியர் குழாத்துக்குத் தங்கள் காதுகளை நம்பவே முடிய வில்லை.

இன்று நொண்டியின் குரலில், அவன் பேச்சில் நிராசையோ, தோல்வியின் கழிவிரக்கமோ, ஆத்திரமோ, மனக்குமைச் சலோ எதுவுமே தொனிக்கவில்லை. "உண்மை தான் பாபு. இன்று நான் எல்லாவற்றையும் சரி செய்துவிட்டு வந் திருக்கிறேன். விண்ணப்பத் தாளில் மீண்டும் இரண்டு தவறுகள் இருந்தன. அதைத் திருத்திவிட்டு வந்தேன்" என்றான் அவன்.

"முன்பு கூட உன் விண்ணப்பத்தில் தவறுகள் கண்டுபிடிக்கப் பட்டன. அந்தக் காப்பிஸ்ட் எதற்காக மீண்டும் மீண்டும் தவறுகளைக் கண்டுபிடித்துக் கொண்டே போகிறான். சுத்த அயோக்கியன்" என்றார் ஒருவர் எரிச்சலுடன்.

"திட்டாதீர்கள் பாபூ!" என்றான் நொண்டி. "இது தர்மப் போராட்டம். திட்டுவதினால் பயன் இல்லை. காப்பிஸ்ட், பாவம்

என்ன செய்வார்? எழுதுகிறவனின் தவறு இது. அவர்களே இப்படித்தான்."

"நகல் எப்பொழுது கிடைக்குமாம்?"

"கிடைத்து விட்டது போல் தான் பாபு. பத்து இருபது நாட்களுக்குள் வந்து விடும். பத்திரம் மேலிடத்துக்குப் போயிருக்கிறது. இனி விண்ணப்பமும் அனுப்பப்படும். நகல் அங்கேதான் எடுக்கப்படும். அங்கிருந்து இங்கு வரும். பிறகு ரெஜிஸ்டர் செய்து..." நொண்டி தன் பாட்டில் தனது திட்டத்தை எடுத்துரைத்துக் கொண்டே இருந்தான். ஆசிரியர் குழாம் அவன் பேச்சிலும் காந்திச் சதுக்கத்திலிருந்து வீசிய வாடையிலும் மனம் சலித்தவர்களாய் எப்போதோ மேலே நகர்ந்து விட்டனர். அவன் தலை நிமிர்ந்து பார்த்த சமயம் அவனைச் சுற்றிலும் அவனுக்குப் பரிச்சயமான நாய்களும், பன்றிகளும், குப்பை கூளங்களுமே கண்களில் பட்டன. இவற்றின் கூட்டுறவிலே தான் அவன் தாலுக்கா ஆபீஸிற்கு எதிராகத் தர்ம யுத்தம் நடத்திக்கொண் டிருந்தான்.

அந்தி வேளை. கன்றுக்குட்டி ஒன்று உக்கிரகத்துடன் கொம்புகளை ஆட்டிக் கொண்டு, நாலு கால் பாய்ச்சலில் எட்டித் தாவி, துள்ளிக் குதித்த வண்ணம் சதுக்கத்தைக் கடந்து சென்றது. சற்றுத் தூரம் விரைந்தோடிய அது எதிரே இருந்த பசுமையான கோதுமை வயலைக் கண்டதும் சீற்றமும், வேகமும் தணியத் தளர்ச்சியுடன் நின்று விட்டது.

நொண்டி இரு கரத்தையும் உயர்த்திக் கூப்பிய நிலையில், "நன்றி! கடவுளே!" என்றான்.

# அத்தியாயம் 11

தாலுக்காவின் தலைமை அலுவலகம் இருந்தபோதிலும் நகரமாகும் வாய்ப்பு கிட்டும்படியான அளவில் சிவபால்கஞ்ச் பெரிய கிராமம் அல்ல. சிவபால்கஞ்சில் கிராம மக்களின் சபை ஒன்று இருந்தது. டவுன்கிவிட்டால் அதற்குரிய வரியைக்

கொடுக்கவேண் டியிருக்குமே என்று கிராம மக்கள் இதைக் கலைக்க விரும்பவில்லை. கிராம சபையின் தலைவர், ராமாதீன் பீகம் கேட்வியின் சகோதரர். இதில் என்ன விசேஷம் என்றால் இத்தனை ஆண்டுகளாகச் சபைத் தலைவராக இருந்தாலும், அவர் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கோ, சிறைக்கோ போக வில்லை. அவர் வடிகட்டின முட்டாள் என்பது பிரசித்தம். அதனால் தான் சபைத் தலைவர் ஆவதற்கு முன்வரை எல்லாரு டைய பேரன்புக்கும் பாத்திரமாக இருந்தார். வெளியூரிலிருந்து அதிகாரிகள் வந்தால், ஊரார் ஒரு மாதிரி இவரை முகஸ்துதி செய்து இவரை அவர்கள் முன்னே கொண்டுபோய் நிறுத்தி விடுவார்கள். "நகரத்தில், தேர்தலில் தேர்ந்தெடுக்கப்படும் ஆசாமிகளை ஆயிரம் தரம் பார்த்திருப்பீர்கள். இந்த முறை இந்த ஊரின் சரக்கையுந்தான் கொஞ்சம் பாருமே" என்றும் சில சமயம் சொல்லுவதுண்டு.

கிராம சபையின் தேர்தல், பிரதி வருடமும் ஜனவரி மாதத் தில் நடக்கும். நவம்பர் மாதம் வந்தாகிவிட்டது. இன்னமும் யாரைத் தலைவராக்குவது என்பது பிரச்னையாக இருந்தது. சென்ற தேர்தலில் வைத்தியர் அதிகமாக அக்கறை காட்ட வில்லை. ஏனென்றால் கிராமசபைப் பதவியை அவர் ஒரு விதத்தில் தாழ்வாகக் கருதினார். உண்மையும் அதுதான். ஏனென்றால் சொற்ப முதல் போட்ட வியாபாரி மாதிரிதான் கிராமசபைத் தலைவர் பதவி. போலீஸ் மாதிரி அதிகாரமோ, தாசில்தார் மாதிரி செல்வாக்கோ கிடையாது. இவ்விருவரும் சபையின் அலுவல்களை, வரவு செலவுகளைத் தணிக்கை செய்ய முற்படும்போது, இருக்கும் கொஞ்ச நஞ்ச கௌரவமும் போய் விடும். இது மட்டுமா? கிராமசபையின் சொத்து, பண விவ காரங்களுக்காகக் கோர்ட் படி ஏறவேண்டும். கோர்ட்டுக்குப் போனால் ஒரு திருடன் மற்றொரு திருடனை நடத்துவதுபோல் வக்கீல்களும், அதிகாரிகளும் நடந்துகொள்வார்கள். இத்தனை கெடிபிடியையும், வழக்கின் காரணமாக எல்லாருடைய விரோ தத்தையும் சம்பாதித்துக் கொள்ளவேண்டும். ஆபத்து சமயத்தில் போலீசார் உதவ முன்வரமாட்டார்கள். சிரித்து விட்டுப் பேசாமல் இருந்து விடுவார்கள். சில சமயம், 'தலைவர் அவர்களே' என்று வார்த்தைக்கு வார்த்தை அழுத்தம் கொடுத்து ஸ்டேஷன் வாசலுக்கு வழிகாட்டி விடுவதுமுண்டு.

ஆனால் இப்பொழுது சில நாட்களாக வைத்தியருக்குக் கிராம சபை விஷயத்தில் சற்றே ருசி தட்ட ஆரம்பித்திருந்தது. அதற்குக் காரணம், பிரதம மந்திரியின் ஒரு பிரசங்கத்தை அவர் பத்திரிகையில் படிக்க நேர்ந்ததுதான். இதில் கிராமங்களின் முன்னேற்றம், பள்ளிக்கூடங்கள், கூட்டுறவுச் சங்கங்கள், கிராமப் பஞ்சாயத்துக்கள் மூலமாகவே ஏற்படமுடியும் என்று கூறப்பட்டிருந்தது. இதைப் படித்ததுமே, 'அடடா, இது வரையில் கூட்டுறவுச் சங்கம், கல்லூரி ஆகிய இரண்டின் மூலமாகத்தானே கிராம முன்னேற்றத்துக்குப் பாடுபட்டு வருகிறேன். கிராமப் பஞ்சாயத்தைக் கவனிக்கவில்லையே?' என்று சட்டென்று அவருக்கு ஞானோதயமாயிற்று. 'இதனால் தான் சிவபால்கஞ்ச் சரிவர முன்னேற்றம் அடையமுடியவில்லையோ? இதுதான் விஷயமோ?' என்றும் அவர் நினைத்திருக்கலாம்.

அவர் அக்கறை காட்டத் தொடங்கியதும் பல விஷயங்கள் புலனாகின. ராமாதீனின் சகோதரன் கிராமப் பஞ்சாயத்தை ஒரு வழியாகத் தீர்த்துக் கட்டியிருந்தான். கிராமத்துப் புறம்போக்கு நிலங்களை, மக்கள் தங்கள் விருப்பத்துக்கு ஆக்கிரமித்துக்கொண் டிருந்தனர். நிச்சயமாகப் பஞ்சாயத்துத் தலைவன் இதற்கு லஞ்சம் வாங்கி இருப்பார். பஞ்சாயத்தின் கையிருப்பு பூஜ்யம். அதாவது, பஞ்சாயத்துத் தலைவர் பணத்தைக் கையாடிவிட்டார். கிராமத்தில் எங்கே பார்த்தாலும் குப்பையும் கூளமும் குவிந்து கிடந்தன. தலைவர் பன்றிப்பயல் என்பதில் சந்தேகம் இல்லை. போலிசார் பஞ்சாயத்துத் தலைவர் கொடுத்த ரிப்போர்ட்டின்படி பலர் மீது வழக்குப் பதிவு செய்திருக்கின்றனர். இப்பொழுது போலீஸ் அவருக்குக் கையாள் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. பஞ்சாயத்துத் தலைவனுக்குத் துப்பாக்கி லைசென்ஸ் வழங்கப்பட்டிருக்கிறது. நிச்சயமாக இது கொள்ளைக் கூட்டத்தினருக்கு இரவல் போகிறது. போன வருடம் கிராமத்தில் பஜரங்கி கொலை செய்யப்பட்டான் அல்லவா? அதன் காரணத்தைக் கண்டறிய வேண்டும் இப்பொழுது.

பங்கி பானம் தயாரிப்பு இருக்கிறதே, அது ஒரு தனிக் கலை, தனிக் கவிதை, தனிச் சாமர்த்தியம், தனித் திறமை, கைப் பழக்கம் என்றுதான் சொல்லவேண்டும். அப்படியே இலையை வாயில் போட்டு மென்று சுவைத்துத் தண்ணீரைக் குடித்தாலே நல்ல போதை வந்துவிடும். ஆனால் போதை ஏற்றிக்கொள்ள

இந்த முறை மிக்க மலிவான சாதாரணமான முறையாகக் கருதப்படும். கஞ்சா இலையுடன், பாதாம், பிஸ்தா, குல்கந்து, பால், பாலாடை போன்றவற்றைக் கலந்து தயாரிக்கும் பானம் மிக உயர்ந்தது. கல்லும் குழவியும் தேயத் தேய ஓட்டி ஓட்டி அரைத்துக் கலக்கிவிட்டு, குடிப்பதற்கு முன்னர், சிவ பிரானைக் குறித்து இரண்டொரு சுலோகங்களைச் சொல்லிவிட்டு நிகழ்ச்சியைத் தனிப்பட்ட முறையில் செயல்படுத்தாமல், அதற்கு ஒரு பொதுப்படையான அமைப்பையும் தரவேண்டும். அதில்தான் இதன் சிறப்பே உள்ளது.

வைத்தியரின் இல்லத்தில் பங்கி பானத்துக்கு இத்தகைய தொரு பொதுவுடைமைத் தன்மையை உருவாக்கும் பணி சனிஸ்வரனுடையது. இன்றும் என்றும் போல் அவன் பங்கி அரைத்துக்கொண் டிருந்தான். யாரோ கூப்பிட்டார்கள், "சனிஸ்வரா" என்று.

புஸ்ஸென்று பாம்பு படம் எடுப்பதுபோல, தலையை உசுப்பிக்கொண்டு நிமிர்ந்து பார்த்தான் அவன்.

"அரைக்கிற வேலையை யாரிடமாவது கொடுத்துவிட்டு உள்ளே வா" என்றார் வைத்தியர்.

அமைச்சர் பதவியிலிருந்து ராஜீநாமாச் செய்துவிடு என்று யாரோ சொல்லிவிட்டதுபோல், "யாரிடம் கொடுப்பது? இந்த வேலையைச் செய்யத் தகுந்தவர்கள் யாராவது இருக்கிறார்களா என்ன? இந்தக் காலத்துப் பயல்களுக்கு இதெல்லாம் என்ன தெரியும்? மஞ்சளும், மிளகாயும் மாதிரி அரைத்து வைத்து விடுவார்கள்" என்று முணுமுணுத்தான் சனிஸ்வரன். ஆனாலும் அவன் செய்த அடுத்த காரியம், அம்மி, குழவியின் பொறுப்பை ஓர் இளவட்டத்திடம் ஒப்படைத்துவிட்டுக் கையைக் கழுவிக் கொண்டு, அண்டர்வேரில் துடைத்துக்கொண்டே வைத்தியரின் அருகே போய் நின்றதுதான்.

வைத்தியர், ரங்கநாத், பத்ரி, பிரின்ஸ்பால் யாவரும் அமர்ந்திருந்தனர். பிரின்ஸ்பால் சற்றே நகர்ந்துகொண்டு, "உட்காரப்பா" என்றார்.

சனிஸ்வரன் உஷாராகிவிட்டான். மார்பில் அடர்ந்திருந்த ரோமங்களைச் சொறிந்தவாறே உடைந்த பற்களைக் காட்டினான். தந்திரமான தாக்குதலை எப்படிச் சமாளிக்கவேண்டுமென்று அவனுக்குத் தெரியும். இதனால் எதுவும் அறியாத அப்பாவிபோல் நின்றவன், "பிரின்ஸ்பால் சாகப்! உங்களுக்குச்

சமமாக உட்காரச் சொல்லி என்னை நரகத்தில் தள்ளி விடாதீர்கள்'' என்றான் மெள்ள.

பயில்வான் பத்ரி சிரித்தார். ''அடே பயலே! மரியாதை இல்லாமலா பேசுகிறாய்? பிரின்ஸ்பால் சாகப்பின் அருகே உட்கார்ந்தால் நரகத்துக்கா போவாய்?'' என்றவர், குரலை மாற்றி, ''சரி, அங்கே உட்கார்'' என்றார்.

ஏதோ அழியாத ஓர் உண்மையைப் பறைசாற்றுகிறவர் போன்ற பாவனையில் வைத்தியர் இயம்பினார்: ''பத்ரி, இப்படியெல்லாம் பேசாதே! மங்கள் தாஸ்ஜி என்ன நிலைமைக்கு உயரப் போகிறாரென்று உனக்கு என்ன தெரியும்?''

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு இன்றுதான் சனிஸ்வரன் தன் இயற்பெயரைக் காதால் கேட்கிறான். இதனால் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு பெருமையுடன், ''நம்ப பயில்வானை ஒன்றும் சொல்லாதீர்கள். சிறிய பிள்ளைதானே? அப்படி என்ன வயதாகிவிட்டது? சமயம் வரும்போது தெரிந்து கொள்ளுவார்'' என்றான்.

''சரி, பிரின்ஸ்பால் சாகப்! என்ன சொல்லவேண்டுமோ சொல்லுங்கள்'' என்றார் வைத்தியர்.

பிரின்ஸ்பால் தம் மொழியில் பேச ஆரம்பித்தார். ''என்னத்தைச் சொல்ல? எல்லாம் தெரிந்ததுதானே?'' என்றவர், சட்டென்று தமது மொழியின் தரத்தை மாற்றிக்கொண்டு, ''கிராமப் பஞ்சாயத்துத் தேர்தல் நடக்கப்போகிறது. பஞ்சாயத்துத் தலைவர்தான் ஊருக்குப் பெரியவர். காலேஜ் கமிட்டியில் மெம்பர், ஒரு விதத்தில் எனக்கும் அதிகாரி'' என்றார்.

வைத்தியர் இடைமறித்தார்: ''மங்கள்தாஸ்! இந்த முறை உன்னைத்தான் நாங்கள் பஞ்சாயத்துத் தலைவராக்கப் போகிறோம்.''

சனிஸ்வரனின் முகம் எப்படியோ மாறியது. உடலெல்லாம் சிலிர்க்க, கண்களில் நீர் மல்கி நிற்க அவன் கை எடுத்துக் கும்பிட்டான். ஏதோ ரகசிய நோயினால் பீடிக்கப்பட்டு எல்லாராலும் புறக்கணிக்கப்பட்ட ஓர் ஊழியனுக்கு மெடிக்கல் அசோசியேஷனின் சேர்மன் பதவிக்கு ஆர்டர் வந்ததென்றால் அவனது நிலைமை எப்படி இருக்கும்? அப்படித்தான் இருந்தது சனிஸ்வரனின் நிலைமை. சிரமப்பட்டுத் தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''ஐயா! கவைக்குதவாதவனைத் தாங்கள் இதற்குத்

தகுதியென்று நினைக்கிறீர்களே, அதுவே போதும். இந்தக் கௌரவத்துக்கு நான் தகுந்தவன் அல்ல'' என்றான் அவன்.

ஆரம்பித்துவிட்டார், பிரின்ஸ்பால். "எவனெவனோ பஞ் சாயத்துத் தலைவனாகிவிட முடியுமா? பெரிய பதவி அது! கிராமத் துச் சொத்துக்கே அவன்தான் எஜமானன். வேணுமென்றால் ஒரே நாளில் லட்சக்கணக்காகப் பைசல் செய்துவிடமுடியும். ஊருக்கே அவன்தானே அதிகாரி. ஒரு 107 உத்தரவு போட்டுக் கிராமத்தை அப்படியே கட்டிப் போட்டுவிடலாம். பெரிய பெரிய அதிகாரிகளெல்லாம் வாசலில் வந்து நிற்பார்கள். யாராவது கோள் சொன்னால் வந்துவிடும் ஆபத்து. காகிதத் திலே சும்மா முத்திரை குத்தினால் போதும், இஷ்டம்போல் சர்க் கரை என்ன, எண்ணெய் என்ன எடுத்துக்கொள்ளலாம். கிராமத்திலே அவன் உத்தரவு இல்லாமல் ஒருவனும் குப் பைக் குழியிலே குப்பைகூடக் கொட்டமுடியாது. எல்லாரும் அவனிடந்தான் யோசனை கேட்பார்கள். எல்லார் குடுமியும் அவன் கையிலே. வாரிசு இல்லாதவனுக்கெல்லாம் அவன் தான் வாரிசு! என்ன சனிஸ்வரர், புரிந்ததா?'

சனிஸ்வர் மீண்டும் பவ்யமாகக் கை கூப்பினான். "எனக்கு என்ன? உலகம் அல்லவா சொல்லும்! நீங்களெல்லாம் இருக்கும் போது சிவபால்கஞ்சிலே ஓர் உபயோக மற்றவனை ..."

பிரின்ஸ்பால் தமக்கே உரித்தான, 'ஹோ, ஹோ, ஹோ ...' வை உதிர்த்தவாறே கூறினார். "திரும்பவும் உளற ஆரம்பித்து விட் டீர்களே சனிஸ்வர்ஜீ! நம்ப ராஜாப்பூர் பஞ்சாயத்திலே அந்த ஊர் ஜமீன்தார் தம் குடியானவனைப் பஞ்சாயத்துத் தலைவராக நியமித்திருக்கிறார், தெரியுமா? பெரிய மனிதர்கள் எல்லாம் இந்த அடிதடிச் சண்டையிலே தாங்கள் நேரடியாக இறங்கு வார்களா?"

எவ்விதத் தயக்கமுமின்றி அவர் பேசிக்கொண்டேபோனார். "கேளுங்கள், மானேஜர் சாகப்! அந்தக் குடியானவன், தலை வனானதும் ரொம்பப் பிரமாதமாகிவிட்டான். ஒரு முறை தாலுக் காவில் ஒரு விழா நடைபெற்றது. டிப்டி சாகப் வந்திருக்கிறார். எல்லாப் பஞ்சாயத்துத் தலைவர்களும் வந்திருக்கிறார்கள். எல் லாரையும் கீழே ஜமக்காளத்தை விரித்து உட்கார வைத்திருக் கிறார்கள். டிப்டி மட்டும் நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறார். இந்தக் குடியானவப் பயல் ஆரம்பித்துவிட்டான். 'எங்களை அழைத்து விட்டுத் தரையில் உட்கார்த்தி வைத்திருக்கிறீர்கள்.

டிப்டிக்கு மட்டும் நாற்காலி. இது என்ன நியாயம்?' என்று கேட்டிருக்கிறான். டிப்டி, புதிதாய் வேலைக்கு வந்தவர். இளவட்டம். அவ்வளவுதான், கோபித்துக்கொண்டுவிட்டார். பிறகு என்ன? இருபக்கத்தார்களுக்கும் இது கௌரவப் பிரச்னையாகிவிட்டது. எல்லாப் பஞ்சாயத்துத் தலைவர்களும் குடியானவப் பயல் பக்கம் சேர்ந்துவிட்டார்கள். 'இன்கலாப் ஜிந்தாபாத்' என்ற கோஷங்கள் எழ ஆரம்பித்துவிட்டன. டிப்டி சாகப், பாவம், நாற்காலியைப் பிடித்துக்கொண்டு 'அமைதி' 'அமைதி' என்று தொண்டை வறளக் கத்தியிருக்கிறார். அமைதியாவது மண்ணாங்கட்டியாவது! பஞ்சாயத்துத் தலைவர்கள் கூட்டத்தில் கலந்து கொள்ள மறுத்துவிட்டனர். நம்ப குடியானவப் பயல் அந்த வட்டாரத்துக்கே தலைவனாகிவிட்டான். மறு நாளே மூன்று கட்சிகளிலிருந்து தங்கள் கட்சியில் சேர்ந்து கொள்ளும்படி அழைப்புகள் வந்து விட்டனவாம். ஆனால் ஜமீன்தார் சாகப், 'ஜாக்கிரதை, இதெல்லாம் இப்பொழுது ஒன்றும் வேண்டாம். நான் எப்பொழுது எந்தப் பார்ட்டியைச் சொல்லுகிறேனோ அதிலே மெம்பர் ஆகலாம். சும்மா இரு' என்று கூறிவிட்டாராம். எப்படிக் கதை?''

'இன்கலாப் - ஜிந்தாபாத்' என்ற முழக்கம் சனிஸ்வரனின் காதுகளிலே ஒலித்தது. அவனது கற்பனையில், வெற்றுடம்புடன், அன்டர்வேர் மட்டும் அணிந்த ஒருவனின் பின்னால் நூறு இருநூறு பேர் கரத்தை உயர்த்தி உயர்த்தி, 'இன்கலாப் - ஜிந்தாபாத்' என்று கூச்சலிட்டுக்கொண்டிருந்தனர். வைத்தியர், ''இது மரியாதையான செயல் அல்ல. நான் தலைவனாக இருந்தால் பேசாமல் எழுந்து வந்திருப்பேன். இரண்டொரு மாதங்களுக்குப் பின்னால் எனது கிராமப் பஞ்சாயத்தில் ஒரு விழா நடத்தியிருப்பேன். டிப்டி சாகப்பையும் அழைத்திருப்பேன். அவரைத் தரையில் உட்கார வைத்திருப்பேன். நான் நாற்காலியில் அமர்ந்துகொண்டு, 'சகோதரர்களே! நாற்காலியில் அமர்ந்துகொள்வதென்பது எனக்குக் கஷ்டமான காரியம் ஆனால் அதிதிகளை இப்படி உபசரிக்கும் முறையை டிப்டி சாகப் அவர்கள் தம் இலாக்காவுக்கு என்னை அழைத்திருந்தபோது கற்றுக் கொடுத்திருந்தார். அதனால் அவர் கற்றுக் கொடுத்தபடி நடக்க நான் இந்தச் சிரமத்தை மேற்கொள்ள வேண்டி வந்துள்ளது' என்று ஒரு குட்டிப் பிரசங்கமும் செய்திருப்பேன்'' என்று கூறிமுடித்தவுடன் பெரிதும் மனநிறைவு பெற்றவராய்ச்

சிரித்தார். ரங்கநாத்தின் சம்மதத்தைப் பெறவிரும்புபவர் போல், "என்னப்பா! நான் சொன்னது சரிதானே?" என்றார்.

"சரிதான்" என்றான் ரங்கநாத், "எனக்குக் கொக்கும், நரியும் கதை நினைவு வந்துவிட்டது."

"சரி, நீ போய்ப் பார்! அந்த முட்டாள் எங்கேயாவது மஞ்சள், மிளகாய் அரைப்பது போல் இதையும் அரைத்து வைத்திருக்கப் போகிறான்" என்றார் வைத்தியர் சனிஸ்வரனிடம்.

பயில்வான் பத்ரி கதவருகே இருந்து புன்சிரிப்புடன் கூறினார். "போ... போ... மறுபடியும் பங்கியை அரைத்துக் கொண்டிரு போ."

சற்று நேரம் மௌனம் நிலவியது. பிரின்ஸ்பால் மெதுவாக ஆரம்பித்தார். "உத்தரவிருந்தால் கன்னா மாஸ்டரைப் பற்றி ஒரு வார்த்தை."

வைத்தியரின் புருவங்கள் நெற்றி வரை உயர்ந்தன. அதாவது உத்தரவு கிடைத்து விட்டது. "ஒரு சம்பவம் நடந்திருக்கிறது. முந்தாநாள் மாலை கயாதீன் வீட்டு முற்றத்தில் ஒரு கல் வந்து விழுந்திருக்கிறது. கயாதீன் அப்போது வீட்டில் இல்லை. பேலாவின் அத்தைதான் கல்லைப் பார்த்திருக்கிறாள். எடுத்தாள். ஏதோ காகிதம் சுற்றி இருந்ததாம். அத்தை, பேலாவைக் கூப்பிட்டுப் படிக்கச் சொல்லியிருக்கிறாள். பேலாவினால் படிக்க முடியவில்லையாம்........"

ரங்கநாத் மிகவும் கவனத்துடன் கேட்டுக்கொண்டிருந்தான். "ஏன் ஆங்கிலத்தில் எழுதியிருந்ததா?" என்று கேட்டான்.

"ஆங்கிலத்தில் ஒருவன் என்னத்தை எழுதுவான்? எல்லாம் இந்தியில் தான் எழுதி யிருந்ததாம். கல்யாணமாகாத பெண், பாவம், அதை எப்படிப் படிப்பாள்? காதற் கடிதமாம்!"

வைத்தியர் மௌனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தார். யார் எழுதி யிருந்தார்கள் என்று கேட்க ரங்கநாத்துக்குத் துணிவு இல்லை.

"யார் எழுதியதோ தெரியவில்லை. இது கன்னா மாஸ்டர் குழுவினர் வேலையாகத் தான் இருக்குமென்று எனக்குத் தோன்றுகிறது. அயோக்கியப் பயல்கள்! ஆனால் கன்னா மாஸ்டர் உங்களுக்கு எதிராகப் பிரச்சாரம் செய்து கொண்டிருக்கிறான். இந்தக் கடிதம் ரூப்பன் பாபு எழுதியதாகச் சொல்லுகிறான். உங்கள் குடும்பத்துக்குக் களங்கம் ஏற்படுத்த இப்பொழுது அவனுக்குத் துணிச்சல் வந்து விட்டது" என்றார் பிரின்ஸ்பால்.

வைத்தியரிடம் எவ்வித மாற்றமும் ஏற்பட்டதாகத் தெரிய வில்லை. பின்பு, "என் குடும்பத்தை அவன் என்ன களங்கப் படுத்த முடியும்? கயாதீன் குடும்பத்தை யல்லவா களங்கப் படுத்திக்கொண் டிருக்கிறுன்! கயாதீனின் பெண் தானே அவள்" என்ருர் நிதானமாக.

# அத்தியாயம் 12

கார்த்திகைப் பௌர்ணமி அன்று சிவபால்கஞ்சிலிருந்து சுமார் ஐந்து மைல் தூரத்தில் திருவிழா நடக்கும். அது ஒரு காடு. காட்டினிடையேயுள்ள குன்றின்மீது தேவியின் ஓர் ஆலயம் உண்டு. அதைச் சுற்றிலும் நாலாப் பக்கமும் பழைய கட்டடத்தின் இடிபாடுகளைக் காணலாம். கருவேலமரம், காட்டு மணத்தக்காளி, இலந்தை மரங்கள் ஆகியவை புதர்களாக மண்டிக் கிடக்கும். மேடும், பள்ளமும், ஏற்றமும், இறக்கமு மான பூமி. முயலிலிருந்து ஓநாய் வரை, சோளக் கதிர் திருடனி லிருந்து வழிப்பறிக் கொள்ளைக்காரன் வரை இந்தக் காடு களிலே எளிதாக ஒளிந்து கொள்ள முடியும். அக்கம்பக்கத்துக் கிராமங்களில் உள்ளத்தளவில் ஏற்படும் காதல் உறவுகளின் விளக்கத்தை இந்தக் காட்டில் உடலளவில் காணலாம். பட்ட ணத்திலிருந்து பிக்னிக் கோஷ்டிகள் வரும். காதல் ஜோடிகள் உல்லாசமாக இருக்க இங்கு வருவதுண்டு, தாங்கள் வெறும் வாய்ச் சொல் வீரர்கள் மட்டும் அல்ல, செயலிலும் தீரர்கள் தான் என்பதை நிரூபிக்க. சில சமயம், கையோடு கையாய்க் கோவிலுக்கும் வந்து விட்டு, கூசிய உடலும் பூரித்த உள்ளமு மாய்த் திரும்பிச் செல்லுவார்கள்.

இந்த வட்டாரத்தில் உள்ளவர்களுக்கு இந்தக் குன்றைப் பற்றி ஒரே பெருமை. இது தானே அவர்களுடைய அஜந்தா, எல்லோரா, கஜுராஹோ, மகாபலிபுரம்! தேவாசுர யுத்தத்

துக்குப் பின்பு இந்த ஆலயத்தில் தேவியைத் தேவர்கள் தங்கள் கையினுல் பிரதிஷ்டை செய்ததாக இவ்வட்டாரத்து மக்கள் நம்பிக்கை. இந்தக் குன்றின் அடியில் ஒரு பெருத்த பொக்கிஷம் புதையுண்டிருப்பதாகவும் சொல்லுவார்கள். இப்படி வரலாற்றுப் பெருமை, செல்வம், தார்மிகச் சிறப்புக் கொண்டதாக அந்தக் குன்றும், அதன் மேலுள்ள ஆலயமும் பெரும் புகழ் பெற்றிருந்தன. வரலாறு, தொல்பொருள் விசேஷம் காரணமாக ரங்கநாத் இந்தக் குன்றைப் பற்றி ஆராய்ச்சி செய்ய விரும்பினுன். அங்குள்ள சிலேகள், குப்தர் காலத்தைச் சேர்ந்தவை, சிதறிக் கிடக்கும் மண்பாண்டங்களான 'டெர்ரகோட்டா'க்கள் மௌரியக் காலத்தவை என்றும் கூறினுர்கள்.

பெண்களின் கூட்டத்துக்கு முன்னும் பின்னும் குழந்தைகள், பெரியவர்கள், ஆண்களென ஒரே கும்பல். வெகு வேகமாய்ப் புழுதிப் படலத்தைக் கிளப்பிக் கொண்டு யாவரும் விரைந்தனர். மாட்டு வண்டிகள் ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்ளுவது போல் வியக்கத் தக்க முறையில் வேகமாகச் சென்று கொண்டிருந்தன. வண்டியில் அரைபடாமல் ஒதுங்கிச் சென்ற பாதசாரிகளேக் காணும்போது, நாற்சந்தி முனேயில் எதிரும் புதிருமாய் வரும் மோட்டார் கார்கள் மோதி வெடித்துத் தூளாகாமல் இருப்பது, போலீஸ்காரனின் திறமையால் அல்ல; தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுவதிலுள்ள மக்கள் அக்கறையை வெளிப்படுத்துவது போலவே இருந்தது. இது மட்டும் அல்ல. போலீஸின் உதவியின்றியே, ஏனேய மிருகங்களிலிருந்து முயலுக்குத் தன்னேத் தானே காத்துக்கொள்ளும் நுண்ணறிவு இருப்பது போல, நகரத்துப் பாதைகளில் செல்லும் பாதசாரிகளே டிரக் டிரைவர்களிடமிருந்து காப்பாற்றும் உணர்வுகளே இன்றும் திருவிழாவுக்குச் செல்லும் பாதசாரிகளேயும் மாட்டு வண்டிகளிலிருந்து காப்பாற்றிக் கொண்டிருந்தன.

திருவிழாவில் உற்சாகம் கரை புரண்டு ஓடியது. அகில இந்திய ரேடியோ மட்டும், இந்தத் திருவிழாவுக்கு ரன்னிங் காமென்டிரி கொடுத்தால், 'சர்க்காரின் ஐந்து வருடத் திட்டத்தின் பயனுகத்தான் மக்கள் இத்தகைய பெருவாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கிருர்கள்; ஆடிப் பாடிக் களித்து, பரஸ்பரம் அன்பும் நட்பும் கொண்டவர்களாய், இன்ப வாரிதியில் திளேத்த வண்ணம் திருவிழாவுக்குச் சென்று கொண்டிருக்கின்றனர்' என்று வர்ணித்திருப்பார்கள்.

ரங்கநாத் கிராமத்துக்கு வந்து கிட்டத்தட்ட ஒன்றரை மாத மாகி விட்டது. பனியனும், அன்டர்வேரும் தரித்த சனிஸ்வரன், 'தனக்குச் சிரிக்கத் தெரிவதால் மட்டும் பிர்லா, டால்மியா வைவிடப் பெரிய மனிதனுகிவிட முடியாது. ஏனென்ருல் சிரிப்பது ஒன்றும் பெரிய விஷயமில்லே' என்பதைப் புரிந்து கொண்டிருந்தான். நல்ல திறமை மட்டுமிருந்தால் அவனுக்குப் பிறரைச் சிரிக்க வைக்கும் வேலே கிடைத்துவிடும். பாட்டு விஷயமும் இப்படித் தான் என்று நினேத்தான் அவன்.

திருவிழாவின் கோலாகலத்தை ஊன்றிக் கவனித்தபின் சட் டென்று அவனுக்கு இந்த உற்சாக வெள்ளத்தின் ரகசியம் புலப்பட்டு விட்டது. குளிர்காலம் தொடங்கி விட்டபோதும் யாருடைய உடம்பிலும் சரியாக ஒரு கம்பளிக் கோட்டுக் கிடை யாது. சில குழந்தைகள் இரண்டொரு கிழிந்த ஸ்வைட்டரைப் போட்டுக்கொண் டிருந்தனர். பெண்கள் மலிவான, வண்ண வண்ணப் புடவைகளே அணிந்திருந்தனர். ஆனல் பெரும் பாலானவர் கால்களில் செருப்பு இல்லே. போதிய கம்பளி உடைகளும் கிடையாது. ஆண் பிள்ளேகளேப் பற்றி என்ன சொல்ல? இந்திய அழகர்கள், பாதி வெளுப்பு, பாதி அழுக்கு.

இவற்றை எல்லாம் பார்த்துப் புரிந்து கொள்ள முயற்சி செய் வதைவிட, தொல்பொருள் ஆராய்ச்சி மிக அழகான, சுவையான வேலே என்று நினேத்த ரங்கநாத், ருப்பனின் பக்கம் திரும்பிப் பார்த்தான். ருப்பன் கூச்சலிட்டவாறே மூன்று பேரைச் சைக் கிளிலிருந்து இறக்கி விட்டான். பின்பு நால்வருமாய்க் கூட் டத்திலிருந்து விலகி ஓர் ஓரமாய்த் தங்கள் சைக்கிளே வைத்துக் கொண்டு நின்றனர். அவர்களில் ஒருவன், இவர்களுக்குத் தலேவனுகத் தோன்றியவன், தன் தலேயிலிருந்து வெளிறிக் கிடந்த தொப்பியைக் கழற்றி விசிறிக் கொள்ளலானுன். நல்ல குளிரிலும் அவன் நெற்றி யெல்லாம் வேர்வை அரும்பி நின்றது, ஹாஃப் பாண்ட், ஷர்ட், திறந்த கழுத்துக் கோட்டு அணிந்திருந்தான். முன்னுக்குத் தள்ளியிருந்த வயிற்றிலிருந்து ஹாஃப் பாண்ட் சரிந்து விடாமலிருக்கப் பெல்ட்டினுல் இறுகக் கட்டிக்கொண் டிருந்ததால் வயிற்றின் பரப்பளவு இரு சமபாகங் களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவனுடன் இருந்த மற்ற இரு வரும் வேட்டி, சட்டை, தொப்பி அணிந்து, பார்ப்பதற்குக் கண் ணியம் அற்றவர்களாகத் தோன்றினுலும் தங்கள் தலேவனே விட மரியாதை தெரிந்தவர்களாகத் தோன்றினர்.

"இன்று திருவிழாவில் எங்கே பார்த்தாலும் நல்ல பணம், பணம் தான்..." என்றான் ரூப்பன் சிரித்துக்கொண்டே. கண்களை மூடியவாறு தலையசைத்த அந்தத் தலைவன் மாபெரும் சிந்தனையாளன் போல், "இருக்கலாம். ஆனால் தற்சமயம் பணத்துக்கு மதிப்பே கிடையாது ரூப்பன் பாபு" என்றான்.

இதன் பின் அவர்களின் பேச்சில் அதிகமாக அடிபட்ட விஷயம், பட்சணங்களும், இனிப்புகளுமே. அதிலும் முக்கியமாகத் திரட்டுப்பால் தான். திடீரென்று அந்த மனிதன் ரூப்பன் கூறியவற்றைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. "கொஞ்சம் இருங்கள் ரூப்பன் பாபு" என்றவன், சைக்கிளைப் பக்கத்தில் நின்றவனைப் பிடித்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, தொப்பியை இன்னொருவனின் கரத்திலே திணித்துவிட்டு, பருத்த துடைகள் உராய ஆடி அசைந்து நடந்தவாறே, பக்கத்திலிருந்த துவரை வயலுக்குள் நுழைந்துவிட்டான். வயல் அவ்வளவு அடர்த்தியாக இல்லை. வயல் வழியாக ஒற்றையடிப் பாதையில் பலர் வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கூடக் கவனியாமல் அவன் ஓடினான். கோட்டு, ஷர்ட்டின் பட்டன்களை மிகுந்த சிரமத்துடன் கழற்றி, உள்ளே இருந்த பூணூலை இழுத்தான். இழுத்தும் அதன் நீளம் போதாமல் போகவே தலையைக் குனிந்து, கழுத்தை ஒருபுறமாகச் சாய்த்துக் கொண்டு, எப்படியோ பூணூலைக் காதிலே சுற்றிக்கொண்டு விட்டான். பின்பு ஹாஃப் பாண்டுடன் போராட ஆரம்பித்தவன், முழுங்கால் வரை குனிந்து, துவரை வயலில் சிறுநீர் தாரையைப் பாய்ச்சலானான்.

இதற்குள் அந்தத் தொப்பித் துரையின் பெயர் 'சிங் சாகப்' என்பது ரங்கநாத்துக்குத் தெரிந்துவிட்டது. அவர் தாம் அந்த வட்டாரத்துச் சானிடரி இன்ஸ்பெக்டர். சைக்கிளைப் பிடித்துக் கொண்டு நின்றவன் ஜில்லா போர்ட் சேர்மன். தொப்பியை ஏந்திக் கொண்டிருந்தவன் ஜில்லா போர்ட் டாக்ஸ் கலெக்டர் என்பதையும் அவன் தெரிந்துகொண்டான். சானிடரி இன்ஸ்பெக்டர் திரும்பி வந்த பின் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தனர். இம்முறை விஷயம், இனிப்புகள் அல்லாமல், ஜில்லா போர்ட் சேர்மன், இன்ஸ்பெக்டரின் ரிடையர்மெண்ட், மற்றும். 'காலம் ரொம்ப மோசமாகி விட்டது' பற்றியதாகவே இருந்தது

ஜோக்நாத்தின் மீது போலீசாருக்கு ஒரு கண். அது மாறாமல் நிலைத்தே போய்விட்டது. இந்தக் குற்றவாளிகளின் மீது போலீசாரின் பார்வை விழுவதிருக்கிறதே அது பெரும்பாலும்

கண்டதும் காதல் போன்றது தான். எங்கேயாவது கொள்ளை, திருட்டு நடந்துவிட்டால் பத்து நாட்கள் வரை, கொள்ளையைப் பற்றிப் பேச்சு மூச்சே இராது. பதினோராவது நாள் திடீரென்று யாரோ ஒருவனை வளைத்துக் கட்டி வீழ்த்தி, முத்தத்தின் முதல் முத்திரையைப் போல் முகத்தில் திருடன் என்ற சொல்லைப் பதித்துவிடுவார்கள். ஆனால் ஜோக்நாத் வைத்தியரின் ஆள் என்பதால் கயாதீன் வீட்டில் நடந்த திருட்டுச் சம்பந்தமாய்ப் போலீஸ் அவனிடம் இந்த முறையைக் கையாளாமல் இருந்தது. ஆனால் நமது திரைப்படங்களில் கட்டிளங்காளையான ஹீரோ தன் பக்கத்து வீட்டுக் குமரிப் பெண்ணை வட்டமிடுவது போல் போலீசார் அவனைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டே இருந்தனர். ஆனால் பலாத்காரமாகக் கட்டிப் பிடித்தோ, அல்லது கண்டதும் காதல் என்ற முறையிலோ சிக்க வைக்க விரும்பவில்லை. மிகவும் சாமர்த்தியமாக மனத்தை மாற்றிக் குற்றவாளி தானாகவே, ஒப்புக்கொண்டு கையை நீட்டி விடும்படியான ஒரு நிலையை உருவாக்க முயன்றுகொண்டிருந்தனர்.

இன்று திருவிழாவுக்கு இதனால் தான் ஜோக்நாத், ரூப்பன் பாபுடன் வந்திருந்தான். தனியாக வந்தால் போலீஸ் எங்கே தன்னைச் சீண்டுமோ, தன் மேல் காதல் வேகத்தில் எங்கே தன்னைக் கட்டிப் பிடித்துவிடுமோ என்று அவனுக்கு ஒரே பயம். அவர்கள் இருவரும் திருவிழாப் பார்க்கும் குஷியில் கிளம்பி வந்திருந்தனர். ரூப்பன் ஷர்ட் காலருக்கு அடியிலே புதிய பட்டுக் கைக்குட்டையை மடித்துச் செருகிக்கொண்டிருந்தான். தன் வனப்பை அதிகரிக்கச் செய்ய கறுப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தான். சனிஸ்வரன் அண்டர்வேருக்குமேல், வீட்டிலே பின்னிய வலைப் பனியனைப் போட்டுக்கொண்டிருந்தான். அது அண்டர்வேருக்கு இரண்டு இஞ்ச்மேல் வரை தொங்கியது. சின்ன பயில்வான் இன்று லங்கோட்டின் பட்டியை யானையின் துதிக்கை மாதிரி தொங்கவிட்டுக் கொண்டிருக்கவில்லை. அதற்குப் பதிலாக அதைப் பின்பக்கமாக இழுத்து வரிந்து கட்டியிருந்தான். பட்டியின் இந்த முனை நார் நாராகக் கிழிந்து போயிருந்தாலும் கூடப் பின்புறம் வால் மாதிரி ஒட்டிக் கொண்டிருந்தது. இது மட்டுமல்ல, பனியன் போடாமல் மெல்லிய துணியிலான குர்தாவும், முரட்டுத் துணியிலான மேல் வேட்டியை லுங்கி போல இடையிலும் அணிந்திருந்தான். ஜோக்

நாத், ரூப்பன் பாபுவுடனேயே நிழல் மாதிரி சென்று கொண்டிருந்தான். அவன் ஓர் ஒற்றைநாடிச் சரீரம் கொண்ட இளைஞன். கிராமத்துக்குத் திருடர்கள் வந்த தினத்திலிருந்து, ஊரார் ஜோக்நாத்தை ஒரு மாதிரியாகப் பார்க்க ஆரம்பித்திருந்தனர். கயாதீன் வீட்டில் திருடு போனதிலிருந்து தனக்கு முன்னைவிட அதிகக் கௌரவம் கிடைப்பதாக ஜோக்நாத்துக்குத் தோன்றியது. மாந்தோப்பில் ஆடு மாடு மேய்ப்பவர்கள் சோழியை வைத்துச் சூதாடிக் கொண்டிருப்பார்கள். ஜோக்நாத்தின் தலையைக் கண்டதுமே, அவனைப் பாராதது போல் காசை எடுத்து, முதலில் மடியில் செருகிக்கொண்டு விடுவார்கள். அதற்குப் பிறகு தான் அவனை உட்காரும்படி கூறுவார்கள். பாபு ராமாதீனின் வீட்டு வாசலில் நடக்கும் பங்கிப் பார்ட்டியில் ஜோக்நாத்தை எத்தனையோ கரங்கள் அன்புடன் முதுகில் தடவிக் கொடுத்தன.

சிவபால்கஞ்ச் முழுவதிலும் ஜோக்நாத்துக்கு இணையாக 'ஃப்ளஷ்' ஆடுபவர்களே கிடையாது. ஒரு முறை வெறும் 'பேர்' (ஜோடி) வைத்துக்கொண்டே அவன் கன்னா மாஸ்டரின் 'டிரேலை' வீழ்த்திவிட்டான். அன்றிலிருந்து ஜோக்நாத்தின் கையில் மூன்று சீட்டுகளைப் பார்த்ததுமே, கைதேர்ந்த ஆட்டக்காரர்கள் கூடக் கையிலிருக்கும் சீட்டைப் பார்க்காமல் அவன் முகத்தையே பார்க்கலானார்கள். முதல் ஆட்டத்தில் அவன் பந்தயக் காசைப் போட்டதுமே, பாதிக்கு மேற்பட்ட ஆட்டக்காரர்கள் பயந்து போய்ச் சீட்டைக் கீழே போட்டுவிடுவார்கள். ராணா பிரதாப்பின் குதிரை சேத்தக் முகலாயப் படையின் எந்தப் பகுதியில் நுழைந்தாலும் படைகள் நாற்புறமும் சிதறி ஓடி அதற்கு வழி விட்டு விடுமாம். முகலாய சிப்பாய்கள் தலை தெறிக்க ஓடி விடுவார்களாம். இது போலவே ஜோக்நாத்தின் வருகை சீட்டாட்டக் களத்தில் பரபரப்பை ஏற்படுத்தியது. ஆனால் கயாதீன் வீட்டில் திருட்டு நடந்தபின், ஜோக்நாத்தைக் கண்டதுமே, மக்கள் 'ஃப்ளஷ்' ஆட்டத்தின் துர்க் குணங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டனர். அவனைப் பார்த்த மாத்திரத்திலேயே கள் வெறிகொண்டு ஒரு ஹீரோவைப்போல் ஆரவாரத்துடன் வரவேற்ற சூதாடிகள், பசி தாகத்தையே மறந்து அவனுடன் ஆடியவர்கள், இப்போதெல்லாம் அவனைக் கண்டவுடன் மிகுந்த பொறுப்புணர்ச்சியுடன், 'கடைக்குப் போகவேண்டும், புல் வெட்டவேண்டும், மாடு கறக்க

வேண்டும்' என்று தங்கள் வேலைகளை நினைவு படுத்திக் கொள்ள லானார்கள்.

இவை எல்லாம் ஜோக்நாத்தின் நிம்மதியைக் குலைத்துவிட்டன. சில நாட்களுக்கு முன்தான் இன்ஸ்பெக்டர் அவனை ஸ்டேஷனுக்கு அழைத்திருந்தார். தனியாகப் போகாமல் அவன் ரூப்பன் பாபுவையும் கூட அழைத்துக்கொண்டு சென்றிருந் தான்.

"ரூப்பன் பாபு, மக்களின் ஒத்துழைப்பின்றி எந்த வேலையும் நடக்காது" என்றார் இன்ஸ்பெக்டர். தொடர்ந்து, "கயாதீனின் வீட்டில் திருட்டு நடந்தது பற்றித் துப்பு ஏதும் கிடைக்கவில்லை. நீங்கள் எல்லாம் ஒத்துழைக்காவிடில் கண்டு பிடிப்பது கஷ்டம்" என்று தீவிரமான முனைப்புடன் கூறினார்.

"எங்களுடைய பூரண ஒத்துழைப்பும் உண்டு. நம்பிக்கை யில்லாவிடில் கல்லூரியின் யாராவதொரு மாணவனைக் கைது செய்து பாருங்கள்" என்றான் ரூப்பன்.

இன்ஸ்பெக்டர் சற்று நேரம் இங்குமங்கும் உலவிக் கொண் டிருந்தார். பின்பு, "இந்த விஷயத்தில் மேல் நாட்டு முறை தான் மிகச் சிறந்தது. எண்பது சதவீதக் குற்றவாளிகள் தங்கள் குற்றத்தைத் தாங்களே ஒப்புக்கொண்டு விடு கின்றனர். நம் நாட்டிலோ..." என்றவர் பேசுவதை நிறுத்திக் கொண்டு ஜோக்நாத்தை நிலைத்த பார்வையுடன் பார்க்கலானார். 'ஃப்ளஷ்' ஆட்டத்தில் 'பிளஃப்' செய்யும் தேர்ந்த ஆட்டக் காரனின் பார்வையுடன் ஜோக்நாத்தும் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். பேசவில்லை. பதில் கூறியது ரூப்பன் தான். "அந்த மேல் நாட்டு முறையெல்லாம் இங்கே கொண்டுவரா தீர்கள். எண்பது சதவீதக் குற்றவாளிகள் தங்கள், தங்கள் குற்றத்தை ஒத்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டால் போலீஸ் காரர்கள் பத்துப் பேரில் இரண்டு பேர்தான் டியூட்டி செய்ய மிஞ்சுவார்கள். பாக்கிப் பேர் லாக்கப்பில் தான் இருப் பார்கள்."

இப்படியே கிண்டல், கேலியுடன் அந்த விஷயம் முடிந்து விட்டது. எதற்காக ஜோக்நாத்தை வரச்சொன்னார் என்ற விஷயம் தெளிவுபடவில்லை. அந்த விஷயத்தை நினைவுபடுத்திய வாறே ரூப்பன் பெருமையுடன் இன்று கூறினான். "ஏய், ஜோக் நாத்! செத்த வௌவால் மாதிரி எதற்காகடா முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு திரிகிறாய்? இதனால் என்ன நடக்

கப்போகிறது? குஷியாக இரு. இன்ஸ்பெக்டர் சிறுத்தைப் புலி இல்லை. உன்னை அப்படியே விழுங்கிவிடமாட்டார்.''

ஆனால் சின்ன பயில்வான் எரிச்சலுடன் கூறினான். ''ஜோக்நாத் என்ன, வைத்தியரின் ஆலோசனையைக் கேட்டுக்கொண்டா கயாதீனின் வீட்டில் எட்டிக் குதித்தான்? இப்பொழுது எதற்காக அவரைப் பிடித்துக்கொண்டு தொங்குகிறான்?''

ஜோக்நாத்தைப் பற்றி அவன் இப்படிக் கூறிக்கொண்டிருந்த போதே பின்னாலிருந்து கடகடவென ஒரு மாட்டு வண்டி விரைந்து வந்து புழுதியை வாரி இறைத்து விட்டு மேலே நகர்ந்தது. ரங்கநாத் முகத்தில் வாரி அடித்த புழுதியைத் துடைத்துக்கொண்டான். ஆனால் சின்ன பயில்வான் கண்ணைக் கூட இமைக்கவில்லை. கீதோபதேசத்தைக் கேட்டபின் பதினெட்டு நாட்கள் அர்ஜுனன் போர்க்களத்தில் எத்தகைய மன உறுதியுடன் போராடி நின்றானோ அதுபோல் சின்ன பயில்வானும் கிளப்பிவிடப்பட்ட புழுதி வாரியில் திளைத்து நின்றான். பின்பு ஆத்திரத்துடன் கூறினான். ''உண்மையையும், கழுதை கொடுக்கிற உதையையும் தாங்கிக்கொள்ள ஒரு சிலரால்தான் முடியும். ஊர் முழுவதும் ஜோக்நாத் பற்றிக் காதோடு காதாக என்ன பேசிக்கொள்கிறார்களோ அதையே நான் உரக்கச் சொல்லுகிறேன்.''

சனிஸ்வரன் அமைதியை நிலை நாட்ட விரும்பினான்போலும். பஞ்சாயத்துத் தலைவன் விஷயம் அடிபட்டதிலிருந்து, நம்பிக்கையுடன் வைத்தியர் கூறிய நிலையான சத்தியத்தைப் பேசும் முறையைப் பழக்கப் படுத்திக்கொள்ளும் முயற்சியில் இறங்கி இருந்தான். ''நமக்குள்ளே கசமுசா வென்று பேசுவதெல்லாம் சரியில்லை. உலகம் ஜோக்நாத்தை என்ன வேண்டுமென்றாலும் சொல்லிக்கொள்ளட்டும். அவனை நாம் ஒரு முறை நல்லவனென்று சொல்லிவிட்டால், சொன்னது சொன்னதுதானே? ஆண் பிள்ளைக்கு நாக்கு ஒன்றா? இரண்டா?''

சின்ன பயில்வான் வெறுப்பைக் கக்கினான். ''அப்படியென்றால் நீ ஆண்பிள்ளையா?''

வழியில் நொண்டி தென்பட்டான். ''இவன் இங்கேயும் வந்து விட்டானே!'' என்றான் ரங்கநாத்.

நொண்டி ஒரு புதரின் கீழே துணியை விரித்து உட்கார்ந்து இளைப்பாறியவாறு தனக்குள்ளே ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தான்.

"நொண்டிக்கு என்ன? ஜாலியான மனிதன். எங்கு வேண்டுமோ அங்கே டேராப் போட்டுவிடுவான்" என்றான் சனிஸ்வரன்.

சின்ன பயில்வான் பத்திரிகைக்குப் போஸ் கொடுக்கும் முறையில் நின்றான். அதாவது, அவனது அந்தப் போட்டோ மட்டும் பத்திரிகைகளில் வெளி வந்தால் அதன் மூலமாக, தனது உண்மையான ரூபத்தில் வாசகர்களின் முன் நின்றிருப்பான். எல்லையற்ற சுகாநுபவத்துடன், கீழுதட்டை விரித்து, பற்களைக் கடித்தவண்ணம், கண்களைச் சுருக்கிக்கொண்டு, அடித்துடையை வெகு சுவாரசியமாகச் சொறிந்துகொண்டிருந்த சின்ன பயில்வான், இந்தச் சுகாநுபவத்தில் நொண்டியினால் தடங்கல் ஏற்படவே எரிந்து விழுந்தான். "ஜாலியான மனிதனா? பாவம், ஆசாமி, நெருப்பின் மேலே உட்கார்ந்திருக்கிறான். முந்தா நாள் தாசீல்தாருடன் வாக்குவாதம் நடத்திவிட்டு வந்திருக்கிறான். எங்கிருந்து ஜாலியாக இருப்பான்?"

அருகில் வந்ததும் ரூப்பன் உரக்கக் கேட்டான்: "நொண்டி மாஸ்டர்? எப்படி இருக்கிறீர்கள்? நகல் கிடைத்ததா?"

நொண்டி முணுமுணுப்பதை நிறுத்திவிட்டான். உள்ளங்கையைக் கண்களுக்கு மேலே உயர்த்தி வெயிலை மறைத்துக் கொண்டு ரூப்பனை அடையாளம் கண்டுகொண்டவனாய், "எங்கே கிடைத்தது பாபு? ஒருவழியா விண்ணப்பம் மேல் ஆபீஸிற்குப் போயிற்று. அங்கிருந்து பத்திரம் இங்கே வந்திருக்குது. இன்னம் பதினைந்து நாளைக்கு ஒன்றும் நடக்காது."

"தாசீல்தாரோடு ஒரே ரகளை ஆகிவிட்டது என்று கேள்விப் பட்டேனே" என்றான் சனிஸ்வரன்.

"இதென்ன பாபு?" நொண்டியின் உதடுகள் மீண்டும் எதையோ முணுமுணுக்கத் தயாராய்த் துடித்தன. "சட்டத்தைப் பற்றிய விஷயத்தில் ரகளை செய்வதால் என்ன நடக்கும்?"

சின்ன பயில்வான் வெறுப்புடன் அவனை நோக்கினான். பின்பு, ஏதோ மரம் செடி கொடிகளிடம் கூறுபவன் போல், "முள் எடுக்கக் கோடாலியா? இந்தப் பயல் போய், அந்தக் காப்பிஸ்ட்க்கு ஐந்து ரூபாய் அழுது விட்டுவந்தால் என்ன?" என்றான்.

"உனக்கு இதெல்லாம் புரியாது பயில்வான். இதெல்லாம் கொள்கை சம்பந்தப்பட்ட விஷயம்" என்றான் ரங்கநாத்.

தன் திரண்ட தோள்களை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துக் கொண்ட சின்ன பயில்வான், "அப்படியானால், இப்படியே அலைந்துகொண்டு கிடக்கட்டும்" என்றான் வெறுப்புடன்.

# அத்தியாயம் 13

"எனக்கொன்றும் தரிசனம், கிரிசனமெல்லாம் வேண்டாம். சிவப்பு லங்கோடு அணிந்தவருக்கு இங்கே சேவை செய்கிறேன், அது போதும். இந்தத் தேவி, தேவதைகளையெல்லாம் மண்ணாங்கட்டி என்று நினைக்கிறேன்" என்றான் சின்ன பயில்வான்.

முதலில் கோவிலுக்குப் போய்த்தேவியைத் தரிசனம் செய்யலாமா என்பது பற்றிச் சர்ச்சை நடந்தது. சின்ன பயில்வானின் இந்தக் கூற்றுக்கு யாரும் பதில் சொல்லவில்லை. அவனுக்கு எதையும் அறிவுறுத்தவும் முயலவில்லை. அவனுக்குப் புரியவைக்கவேண்டுமென்றால் அவனைக் கீழே தள்ளி, அவன் மார்பின் மேலே ஏறி உட்கார்ந்து, அவனுடைய எலும்பை நொறுக்கவேண்டும். இந்த ஒரு வழிதான் உண்டு என்பது எல்லாருக்கும் தெரியும். தான் நாஸ்திகன் அல்ல என்பதைக் காண்பிப்பதற்காகச் சின்ன பயில்வான் எழுந்து நின்று தன் துடையில் டோலக் மாதிரி தாளம் கொட்டவும் ஆரம்பித்து விட்டான். இதன் மூலம் தன் ஆஸ்திகத் தன்மை நிரூபிக்கப் படவில்லை என்பதை உணர்ந்ததும் ஒரு பாட்டை முணுமுணுக்க ஆரம்பித்துவிட்டான்.

"வாயு குமாரா! படகைக் கரையேற்ற அருள் புரிவாய், அஞ்சனி புதல்வா!"

பின்பு ஒரு பட்சணக் கடையைக் காட்டி, "நான் அங்கே போய் வயிற்றுக்கு ஏதாவது நிவேதனம் போட்டுக்கொள்கிறேன். நீங்கள் அங்கே வந்து சேருங்கள்" என்றவன், தனக்குள்ளே கூறிக்கொண்டான். 'காலையிலிருந்து வாயைக் கட்டிக்கொண்டு சுற்றுகிறோம், வயிறு கடபுடா என்கிறது.'

இந்தக் கோவில் சத்திய யுகத்தில் கட்டியது என்று ரங்கநாத்துக்கு அறிவித்திருந்ததால் அவன் புறப்படும் முன்பே, தான் அந்தக் கோவில் சிலாசாசனங்களில் பிராம்மி எழுத்துக்களைப் பார்த்துப் படித்தறிய முயலப் போவதாகக் கற்பனை செய்து கொண்டிருந்தான். ஆனால் தூரத்திலிருந்து கோவிலைப் பார்த்ததுமே நம் நாட்டு மக்களுக்குக் காலத்தைப் பற்றி, அவர்கள் ஞானத்தின்படி, 'அநாதி', 'அனந்தம்' என்ற

இரண்டே வார்த்தைகள்தான் சரியாகத் தெரியும் என்பதில் அவனுக்குச் சந்தேகம் இருக்கவில்லை. இது மட்டும் அல்ல. சுமார் 75 வருஷங்களுக்கு முன் கட்டிய கோவிலைக் கூட வெகு எளிதாக, குப்தர் காலத்துக்கோ, மௌரியர் காலத்துக்கோ கொண்டு போய்விடுவார்கள்.

ஆலயத்தின் மேற்பகுதியின் சித்திர வேலைப்பாடுகளுக் கிடையே, 'சம்வத் 1650, விக்ரம ஆண்டு, கார்த்திகை மாதம் த்சமி, பீகம்பூர் ஜமீன் ராஜ்யம் இக்பால் பகாதுர்சிங் என்பவ ருடைய புதல்வர், நரேந்திர பகாதுர்சிங் என்பவரால் மகிஷா சுரமர்த்தனிக்காக இந்த மண்டபம் கட்டப்பட்டது' என்று செதுக்கியிருந்ததைக் கண்டதும், ரங்கநாத்தின் புதைபொருள் ஆராய்ச்சி பற்றிய ஆர்வமெல்லாம் காற்றிலே பறந்துவிட்டது.

பீகம்பூர் ராஜ்யம் என்றால் ஏதோ சிதாரா, புறு போன்ற பெரிய சம்ஸ்தானம் என்று நினைத்துவிடாதீர்கள். அவுத் ராஜ்யத்தில் இப்படி லட்சக்கணக்கான ஜமீன்தார்களின் வீடு களில் உடைந்துபோன சிம்மாசனங்களைக் காணலாம். ஒடிந்த சிதிலமான இந்த ஆசனத்திலே கம்பீரமாக வீற்றிருந்து இந்தக் குட்டி ஜமீன்தார்கள் (ராஜாக்கள்) தங்களுடைய பிரஜைகள் அதாவது இரண்டொரு குடியானவர்களின் வணக்கத்தையும், மரியாதைகளையும் ஹோலி, தசராப் பண்டிகைச் சமயங்களில் மனமுவந்து ஏற்றுக்கொண்டு வந்தனர். இந்த ஆலயத் திருப் பணிக்காக அவர்கள் செலவிட்டிருந்த தொகையை ஒருவாறு அநுமானித்த ரங்கநாத்தால் இந்த ராஜ்யமும் அந்த லட்சக் கணக்கான ஜமீன்களில் ஒன்றுதான் என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. கோவில் கட்டடமும் கிட்டத்தட்ட அந்தச் சிம்மாசனத்தின் நிலையில்தான் இருந்தது. ஒரே ஓர் அறை, அதற்கு ஒரே ஒரு கதவு, உட்புறச் சுவரில் நாற்புறமும் பிறை அலமாரிகள்போல் கட்டப்பட்டிருந்தன. அவற்றில் பலவேறு தெய்வங்களும் வீற்றிருக்க ஏற்பாடு செய்திருந்தது.

கதவின் வழியாக உள்ளே நுழைந்ததுமே எதிரே பிறை அலமாரியில் வீற்றிருந்த தெய்வங்களே கண்ணில் படும். அவற்றினிடையேதான் தேவியின் விக்கிரகமும் இருந்தது. உண்மையிலேயே தேவியின் விக்கிரகம் மிக மிகப் புராதன மானதுதான். சந்தேகம் இல்லை.

ஆலயத்துக்குள் நுழைந்ததும் ஜோக்நாத் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டான். போர்க்களத்தில் பீரங்கி ஓசை கேட்

புதுமே போர்வீரர்கள் தரையோடு தரையாய்ப் படுத்துவிடு வார்களே, அப்படி நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கிடந்தான் பின்பு உள்ளங்கைகளை ஊன்றியவாறு மெள்ள எழுந்த அவன் மிகுந்த உணர்ச்சிப் பெருக்குடன் பஜனைப் பாடல் ஒன்றைப் பாட ஆரம்பித்தான். உருப்படியாகச் சொற்கள் விளங்கவில்லை. ஆனால் அவன் அழவில்லை, பாடுகிறான் என்பது மட்டும் புரிந்தது. ஜோக்நாத்தின் இந்த உணர்ச்சிப் பெருக்குக் குக் காரணம், கஞ்சாப் புகையோ சாராயப் போதையோ அல்ல. அவன் தலையின் மீது கவிந்திருந்த போலீஸ் பற்றிய பயந்தான். பஜனைப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்த இரண் டொருவர் கூடத் தாங்கள் பாடுவதை நிறுத்திவிட்டு அவன் பாடுவதைக் கேட்கலாயினர்.

சனிஸ்வரனுக்கும் பஞ்சாயத்துத் தலைவராகவேண்டும் அல்லவா? அதனால் அவனும் எப்படியோ கூட்டத்தினிடையே நெருக்கி அடித்து உட்கார்ந்துகொண்டு, "ஜகதம்பிகே ஜக தம்பிகே!" என்று ஜபிக்கலானான். மண்டபத்தில் ஒரே திரு விழாக் கும்பல்; யார் பேசுவதும் யார் காதிலும் விழாது. அத்தனைக் கூட்டம். இந்தச் சனிஸ்வரன் எங்கே போனாலும் தன் பண்பற்ற போக்கினால் சுற்றுமுற்றும் தன் கீர்த்தியைப் பரப்பாமல் இருக்கமாட்டான். மக்கள் அவனை விட்டுச் சற்று விலகியே நின்றனர். ரூப்பன் கண்களை மூடிக் கொண்டவன் சட்டெனத் தேவியிடம் ஒரு வரம் கேட்டுவிட்டுப் பட்டெனக் கண்களைத் திறந்துவிட்டான். பிறகே அவன் உண்மையாகத் திருவிழாவைப் பார்க்க ஆரம்பித்தான் எனலாம். அவன் அருகில் ஒரு பெண் ஏதோ ஒரு தெய்வத்தின் முன்னே குனிந்து முணுமுணுத்துக்கொண்டிருந்தாள். இதுதான் உண்மையில் திருவிழா என்று ரூப்பனுக்குத் தோன்றியது.

கரம் குவித்தவாறே தேவியின் அருகே போய் நின்ற ரங்க நாத், தேவியின் திருவுருவத்தைப் பார்த்தான். பார்த்துக் கொண்டே இருந்தான்.

பழமையான சிற்பக் கலையின் சிறப்பைப் பற்றி அவன் படித்திருந்ததெல்லாம் அர்த்தமற்றவை என்று அவனுக்குத் தோன்றியது. இதுதான் தேவியின் சிலாவடிவம் என்றால் அவன் கஜுராஹோ, புவனேசுவர், எல்லோரா முதலிய ஆல யங்களில் பார்த்த சிலைகளெல்லாம் என்ன? ஒரு முறைக் கண்களை இறுக மூடிக்கொண்டு அவன் தான் படித்தவற்றை

எல்லாம் முற்றும் மறந்துவிட முயற்சி செய்தான். "என்னைக் காப்பாற்று! என்னைக் காப்பாற்று! அறிவு பூர்வமான என் தர்க்கபுத்தி என் பக்தியைத் தாக்கிக்கொண் டிருக்கிறது. என்னைக் காப்பாற்று' என்று மனத்துக்குள்ளேயே அலறினன். ஆனுல் அவன் கண்களைத் திறந்ததும், தன் பக்தியெல்லாம் மாயமாக மறைந்துவிட்டதையும், வரலாற்றில் அவன் படித்த, மனப்பாடம் செய்த விஷயங்கள் அவனைக் கதிகலங்க அடிப் பதையுமே அவனுல் உணரமுடிந்தது.

விஷயம் என்னவென்ருல், அந்தச் சிலையின் அமைப்பே நூதனமாக இருந்தது. சிலையின் தலைப்பகுதியில் போர் வீரர் கள் அணிவதுபோன்ற தலைக் கவசம் இருந்தது. கழுத்துக்குக் கீழே அகன்ற தட்டையான மார்பகம் இருந்தது. மார்புக்குக் கீழ்ப்பகுதியையே காணேம். சிலை மார்பளவுதான். பக்தி பூர்வ மான நோக்கில் அல்லாமல், ஆங்கில வரலாற்று ஆசிரியர் களின் நூல்களைப் பயின்றவர்கள் இந்த ஆலயத்துக்கு வந்தால் 'இந்தச் சிலையை நாங்கள் பார்த்தவரையில், இது பன்னிரண் டாம் நூற்ருண்டைச் சேர்ந்த ஒரு போர்வீரனின் சிலை என்று அத்தாட்சி பூர்வமாகக் கூறுவதில் எங்களுக்கு எவ்விதத் தயக்க மும் இல்லை' என்றே கூறுவார்கள். நம் நாட்டுச் சிற்பக் கலை யைப்பற்றி, சிலாவடிவங்களைப் பற்றி என்ன சொன்னுலும் சரி, நம் நாட்டுச் சிலைகளில் ஆண், பெண் வடிவங்களில் வேறு பாடில்லை என்று யாரும் கூறிவிட முடியாது. தலைமயிரை வெட்டி விட்டுக்கொண்டு, பாண்ட்டும், ஷர்ட்டும் அணிந்து 'கோல்ப்' மைதானத்தில் திரியும் பெண்களைப் பார்த்து, ஆணு, பெண்ணு என்று ஏமாந்து போனுலும், சிலைகள் சம்பந்தப்பட்ட வரையில் நிச்சயம் இந்த ஏமாற்றம் ஏற்பட நியாயமே இல்லை.

தொல்பொருள் ஆராய்ச்சி மாணவர்கள் கழுத்துக்குக் கீழே இரண்டு மலைகளைப் பார்த்துப் பார்த்துப் பழக்கப்பட்டவர்க ளாயிற்றே! சற்றுக் கீழே இறங்கியதும் இந்த மலைகள் திசை திரும்பிப் பின்பக்கம் போய்விடும். இவற்றையெல்லாம் ஆய்ந் தறியும் 'திவ்ய திருஷ்டி' தொல்பொருள் ஆராய்ச்சிப் பிரிவின் பரம முட்டாளான மாணவனுக்கும் ஏற்பட்டுவிடுவது இயல்பு தான். பௌத்த விகாரத்தைக் கோபுரமென்றும், கோபுரத் தைப் பௌத்தவிகாரம் என்றும் முடிவு செய்வதில் தவறு செய்ய நேரிட்டாலும், பெண் சிலையை, ஆண்சிலை என்று நினைக் கும் பிழையை மட்டும் அவர்களால் செய்துவிடமுடியாது.

"இது எந்தத் தெய்வத்தின் சிலை?" என்று பூசாரியிடம் வினவினான் ரங்கநாத்.

பூசாரி மிகவும் மும்முரமாய் இருந்தார். "எதையாவது ஜேபியிலிருந்து எடுத்துக் காணிக்கையாகப் போடு. அப்புறம் தன்னாலேயே அது எந்தத் தேவதை என்று தெரிந்துவிடும்" என்று கத்தினார் அவர்.

மெய்ப்பொருளைக் கண்டறியும் ஆவலுள்ளவன்போல் ரங்கநாத் முன்னே சென்று சிலையின் கழுத்தைத் தீண்டினான். பூசாரி அவனைச் சந்தேகத்துடன் பார்த்தார். பின் கற்றறிந்த பெரியார்போல், "சிலையைத் தீண்டுவது தடை செய்யப்பட்டிருக்கிறது" என்றார்.

அந்தப் பெண் தரிசனத்தை முடித்துக்கொண்டு வெளியேறிவிட்டாள். ரூப்பனைப் பொறுத்தவரையில் திருவிழா முடிந்துவிட்டது. ரங்கநாத்தின் கரத்தைப் பற்றி இழுத்து, "தரிசனம்தான் செய்தாகிவிட்டதே! வா போகலாம்" என்றான். வரலாறு இருக்கிறதே, அது மிகப் பெரிய விரோதி சிலைகளுக்கு. சிலைகளைத் தகர்த்தெறிவது அது என்று கூடச் சொல்லலாம். அதுதான் இப்பொழுது ரங்கநாத்தின் தலைக்கேறிக் கொண்டிருந்தது, வெறியாக. "தரிசனமா? இந்தச் சிலை தேவியே அல்ல" என்றான் முனைப்புடன்.

இதைக் கேட்டதுமே பங்கியடிக்கும் மூன்று நான்கு பேர் அவனைச் சூழ்ந்துகொண்டு விட்டனர். இரண்டொருவர் அவனை வியப்புடன் நோக்கினர். பொருட்காட்சிச் சாலையின் நிர்வாக அதிகாரி போன்ற பெருமிதத்துடன் ரங்கநாத், ரூப்பனை நோக்கி, "பார்த்தாயல்லவா? இது யாரோ ஒரு போர்வீரனின் சிலை. இதோ பார்! இதுதான் அவனது தலைக் கவசம். இதோ இங்கே பார்! பின்னால் அம்புறாத் தூணி...இங்கே பார், தட்டையான..." என்று விளக்கிக் கூறியவன், போர்வீரனின் அகன்ற மார்பைப் பற்றிய வர்ணனையை முடிப்பதற்குள், பூசாரி அவனைப் பிடித்துத் தள்ளிய வேகத்தில் கூட்டத்தைப் பிளந்து கொண்டு கதவு அருகில் வந்து நின்றான் ரங்கநாத்.

பூசை செய்வதையும், காசு திரட்டும் வியாபாரத்தையும் நிறுத்திவிட்டு, பூசாரி மனம் கொண்ட மட்டும் ரங்கநாத்தை வசை பாடலானான். சின்ன வாய்தான் அவனுக்கு. ஆனால் பிரம்மாண்டமான வசவுகள் ஒன்றோடொன்று மோதியடித்துக் கொண்டு வந்து விழலாயின. சற்றைக்கெல்லாம் ஆலயம்

முழுதும் வசைமாரியினுல் நிரம்பிவிட்டது. குழுமியிருந்த பக்த கோடிகள் பூசாரியின் சார்பில் கங்கு கரையற்ற வசவுகளை உற்பத்தி செய்யலானுர்கள்.

திக்பிரமை அடைந்தவர்களாய் மூவரும் வெளியே வந்து விட்டனர். பூசாரி கதவு அருகில் வந்து கூச்சலிட்டார்: "ஆளைப் பார்த்ததுமே தெரிந்துவிட்டது எனக்கு. அவன் மிலேச்சன். மிலேச்சர்களின் வம்சம். ஏதோ தாட்பூட்டென்று நாலு எழுத்துக் கற்றுக்கொண்டதும் இதைத் 'தேவியின் சிலை அல்ல' என்கிருனே! நாலு நாட்களுக்குப் பிறகு தன் அப்பனையே, தனக்கு அப்பன் இல்லை என்பான்." சனிஸ்வரனுக்கும் ஜோக்நாத்துக்கும் விஷயம் என்ன வென்றே புரியவில்லை. இருந்தாலும் கையையும், காலையும் ஆட்டிக்கொண்டு கூச்சல் போடத் தொடங்கிவிட்டனர். இதற்குள் ரூப்பனின் சமயோசித புத்தி வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது. ரங்கநாத்தின் கரத்தைப் பற்றி இழுத்தவாறே, "வாங்க அண்ணு போகலாம்" என்றவன், பூசாரியை நோக்கி உயர்ந்த, ஆனுல் அமைதியான குரலில் கூறினுன். "இதோ, பாருங்கள், மகராஜ்! திருவிழாச் சமயங்களில் எல்லாம் இவ்வளவு தம் அடிக்காதீர்கள். வயதாகிவிட்டதல்லவா? கஞ்சா போதை தலைக்கேறி விடுகிறது."

வெகுண்டெழுந்த பூசாரி ஏதோ கூற வாய் திறந்தார். அதற்குள் ரூப்பன், "போதும்! போதும்! ரொம்ப அதிகமாகவே போய் விட்டது. ரொம்பவும் வீராவேசம் காட்டாதீர்கள். நாங்கள் சிவபால்கஞ்சைச் சேர்ந்தவர்கள். நாக்கைக் கொஞ்சம் அடக்கி வைத்துக்கொள்ளுங்கள்" என்ருன்.

சற்றுத் தூரம் சென்றபின் ரங்கநாத், "தவறு என்னுடையது தான். நான் அப்படிச் சொல்லி இருக்கக் கூடாது" என்ருன்.

"அது சரி" என்ருன் ரூப்பன். பின்பு தேறுதல் கூறுவது போல், "குற்றம் உன்னுடையது கூட அல்ல, உன் படிப்பினுடையது" என்ருன் தொடர்ந்து.

"படித்து விட்டு மனிதன் மனம்போனபடி பேச ஆரம்பித்து விடுகிருன். எப்படிப் பேசவேண்டுமென்பது கூட மறந்து விடுகிறது. இல்லையோ ஜோகேன்?" என்ருன் சனிஸ்வரன்.

ஜோக்நாத் பதிலேதும் கூறவில்லை. ஏனென்ருல் இதற்குள் அவன் கூட்டத்தில் புகுந்து இளம் பெண்களுடன் மோதி உராய்ந்து, இடித்துக்கொண்டு செல்லுவதில் மும்முரமாய் ஈடுபட்டிருந்தான். அவன் முகபாவத்திலிருந்து அவன் இதில்

மிகவும் ரசனையுடன் ஈடுபட்டிருப்பதுபோல் தோன்றியது. ரூப்பன், சிங் சாகப்பின் அருகே வந்து நின்றுகொண்டான். சிங் சாகப்பின் முகத்திலே நாலைந்து நாட்களாய் க்ஷவரம் செய்து கொள்ளாததால் தாடியும் மீசையும் மண்டிக் கிடந்தன. வெற்றிலைச் சாறு உதட்டின் கோடியில் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. இந்தக் கோலத்திலும், சோலோ ஹாட்டின் காரணமாய்ச் சற்றே கம்பீரமாய்த் தோற்றமளித்தார் அவர்.

"என்ன சிங்சாகப்? எப்படி இருக்கிறது?" என்றான் ரூப்பன்.

"என்ன சொல்வது தம்பி? ரொம்ப மோசந்தான். பத்துப் பதினைந்து பேரைச் சார்ஜ் பண்ணினேன். இதோ பாரு, ரூப்பன்! இந்த வயதிலே என் நிலைமை இப்படியாகிவிட்டது. சாட்சிக் காகக் கோர்ட்டுக்கு நடந்து நடந்து கால் தேய்ந்து விட்டது."

கூட்டத்தின் கூச்சலையும் மீறிக் குரலை உயர்த்திய ரூப்பன், "சார்ஜ் செய்வதில் என்ன இருக்கிறது சாகப்? ஐந்து, பத்து வாங்கிக்கொண்டு விட்டுவிடுவதானே?" என்றான்.

சிங் சாகப்பும் அதே ஸ்தாயிக்கு குரலை உயர்த்தி, "எந்தப் பயல் ஐந்தும் பத்தும் தருகிறான்? அதோ, அந்தப் பட்சண வண்டிக்காரர்களைச் சார்ஜ் செய்தேன். களவாணிப் பயலுக, 'இரண்டு ரூபாய் தருகிறேன்' என்கிறார்கள். சரி, போ சார்ஜ் தான் செய்யவேண்டும் என்றால் அதையே செய்து விடுகிறேன் பயல்களா என்று சொல்லிவிட்டேன்."

ரூப்பன் கரத்தை உயர்த்தி, "யார் அந்தப் பயல்கள்? அயோக்கியப் பசங்க" என்றான்.

அவர்கள் எதிரே தடித்த, வாட்டசாட்டமான மனிதன் ஒருவன் நின்றுகொண்டிருந்தான். பார்ப்பதற்கு ஆள் மிகவும் திடகாத்திரமாய்த் தோன்றினாலும் அழுகிய தர்பீஸ் பழம்மாதிரி குரல் தளதளத்தது. "பாபூ சாகப்! ரோஹ்புர்க்காரனுங்க நான் இத்தனை நேரமாய் இன்ஸ்பெக்டர் சாகப்பைக் கெஞ்சிக்கிட்டு நிற்கிறேன். இவரு பத்து ரூபாய் நோட்டுக்குக் கீழே இறங்க மாட்டேன் என்கிறாரு" என்று கையைப் பிசைந்தான் அவன்.

"ஒத்துக்கொள்ளுங்கள் சிங் சாகப். தலைக்கு இரண்டு ரூபாய் என்றாலும் இருபது ரூபாய் வந்துவிடுமே! இது கொஞ்சமா என்ன? இதில் உங்களுக்கு என்ன நஷ்டம்?" என்றான் ரூப்பன்.

"இரண்டு ரூபாயா?" என்று தொண்டை கிழியக் கத்தினார் சிங் சாகப். "ரூப்பன் பாபு, என்னை இவ்வளவு அவமானப்படுத்தாதீர்கள்."

ரூப்பனின் வார்த்தைகளால் உற்சாகம் பெற்ற அந்தப் பருமனை மனிதன், "பாபு சாகப்! கொஞ்சம் எங்க நிலைமைகளையும் கவனியுங்க. ஒரு வருஷத்துக்குப் பிறகு இங்கே கடை போட்டிருக்கிறோம். பத்து ரூபாய் போயிட்டா எங்களுக்கு என்ன மிஞ்சும்?" என்றான்.

வேடிக்கையாகத் தொடங்கிய விஷயத்தில் இப்பொழுது ரூப்பனுக்குப் பட்சண வண்டிக்காரர்களின் சார்பிலே வாதாடுவது உண்மையிலேயே சுவையாக இருந்தது. "அவன் சொல்லுவதும் சரிதான். அப்புறம் அவனுக்கு என்ன மிஞ்சும்? இரண்டரை ரூபாண்ணு விஷயத்தை முடியுங்க, சிங்சாகப்! உங்களுக்கும் வேண்டாம் அவனுக்கும் வேண்டாம். என்ன நான் சொல்லுவது?" என்று உரத்த குரலில் கூறிய ரூப்பன் அந்தப் பருமனை ஆசாமியைப் பார்த்து, "போப்பா, போய் இப்பவே இருபத்தைந்து ரூபாயைக் கொண்டு வந்து ஐயா கையிலே கொடுத்துவிடு. அப்புறம் கொஞ்சம் பட்சணம் 'கிட்சணம்..." என்று இழுத்தான்.

அம்புபோல் பறந்தோடியவனைப் பார்த்துச் சிங் சாகப் கூவினார். "ஏய்....இதோ பார்...பட்சணம் கிட்சணமெல்லாம் வேண்டாம். கொண்டு வராதே!" பின்பு பொதுமக்களுக்குரிய முறையில் அமைதியாக விளக்கம் கூறினார்: "கழுதைப் பயல்கள், விளக்கெண்ணெயில் பண்ணினார்களோ, இலுப்பை எண்ணெயில் பண்ணினார்களோ? யார் கண்டது? ஆட்டுப் புழுக்கை மாதிரியல்லவா நாற்றம் வருகிறது."

ரூப்பன் இன்னும் நெருங்கி வந்தான். அந்தரங்கமான வீட்டுச் சமாசாரங்களைப் பேசினர். "பங்களா எதுவரையிலும் வந்திருக்கிறது?" என்று விசாரித்தான் ரூப்பன். மிகுந்த வருத்தத்துடன் அவர் கூறினார். "பங்களா என்னப்பா? வீடு என்று சொல்லு." இதன்பின் அவர் மௌனமாகிவிட்டார். சற்றைக்கெல்லாம் உற்சாகமற்ற குரலில், "அரைகுறையாய் அப்படியே நிற்கிறது. ஏலம் போட்டுவிடலாமா என்று பார்க்கிறேன்" என்றார்.

ரங்கநாத் உள்ளூறக் கொதித்துக்கொண்டிருந்தான். கோவிலில் வசைமாறிகளுக்கு ஆளானபின் அவன் மனம் யாருடனாவது சண்டை போடத் துடித்துக்கொண்டிருந்தது. "இத்தனை லஞ்சம் வாங்கியும் கூடவா உங்களால் பங்களா கட்டமுடியவில்லை?" என்றான் பட்டென்று.

சிங் சாகப் இதைக் கேட்டுக் கோபமடைய வில்லை. லேசாகப் புருவத்தை உயர்த்தி ரூப்பனிடம், "யார் இந்த நபர்?" என்று விசாரித்தார். "என் அண்ணா மாதிரி இவர்; அத்தை பிள்ளை" என்றான் ரூப்பன். "இவர் பேசுவதைத் தவறாக எடுத்துக்கொள்ளாதீர்கள். கொஞ்சம் அதிகம் படித்தவர். அதனால் கொஞ்சம் அப்படித் தாறுமாறாய்ப் பேசுவார்" என்று அவருக்கு ஆறுதல் அளித்தவாறே, "கவலைப்படாதீர்கள். எப்படியிருந்தாலும் நம்ப ஆள்தான்" என்றான்.

ரங்கநாத் உதட்டைக் கடித்தவாறே பெருமூச்செறிந்தான்.

"அந்தக் காலமெல்லாம் மலையேறிவிட்டது தம்பி. பங்களா காலமெல்லாம் போச்சு. லஞ்சம் வாங்கி இப்போ பங்களா கட்டமுடியாது. கூரை வீடு நிலைச்சு நின்றால் அதுவே போதும். பார்த்தாயல்லவா? ரேட் எவ்வளவு விழுந்து போச்சு? பத்துச் சார்ஜ் ஷீட் எழுதிக் கைதான் தேய்ந்துபோச்சு. என்ன கிடைத்தது இப்பொ? மலையைக் கெல்லி எலியைப் பிடிச்ச மாதிரி!" என்று விளக்கினார் சிங்சாகப்.

அந்தப் பருத்த மனிதன் திரும்பி வந்தான். வந்தவன் இருபத்தைந்து ரூபாயைச் சிங்சாகப்பின் கையில் கொடுத்தான். எல்லாம் ஒரு ரூபாய் நோட்டுகள். பேசுவதை நிறுத்திவிட்டுச் சிங் சாகப் ஒருமுறைக்கு இருமுறை ஒவ்வொரு நோட்டாக எண்ணினார். ஒரு நோட்டு அழுக்காக இருந்தது. அதை மாற்றிக்கொண்டார். பின்பு ஷர்ட்டுக்கு உள்ளே பனியனின் பாக்கெட்டில் அதைப் பத்திரமாக வைத்துக்கொண்டார். ரங்கநாத் வைத்தவிழி வாங்காமல் அவரையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"காலத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள் அல்லவா? முன்பெல்லாம் லஞ்சம் வாங்குகிற ஆசாமி என்று தெரிந்துகொண்டால் ஆயிரம் பேர் வந்து சூழ்ந்து கொள்வார்கள். பணத்தையும் கொடுத்துவிட்டு ஏதோ அவர்களிடம் தயவு பண்ணச் சொல்லிக் கேட்பதாகவும் வேண்டிக்கொள்வார்கள். இப்போ ஒரு பயல் கிட்டே நெருங்குவது இல்லை. அப்படி எவனாவது வந்தாலும் நம்ம ரூப்பன்பாபு மாதிரி யாரையாவது அழைத்துக்கொண்டு வருகிறான். பழக்கதோஷத்தில் விஷயம் கெட்டுவிடுகிறது" என்றார் சிங் அவனிடம்.

பின்பு ரூப்பனை நோக்கி, "தாசில்தார் தீனாநாத் விஷயம் என்னவாயிற்று, தெரியுமா உங்களுக்கு? எப்பொழுதாவது

வைத்தியரிடம் கேட்டுப் பாருங்கள். நாலு மாதம் இங்கேயே சிவபால்கஞ்சில் வந்து உட்கார்ந்திருந்தார். ஒரு பயல் ஒரு காசு கொடுக்கவில்லை. ஒரு நாளைக்குக் கோர்ட்டிலேயே கோபம் வந்து விட்டது அவருக்கு. இரண்டொரு வக்கீல்கள் எதிரே நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களிடமே, 'என்ன விஷயம்? இவர்களெல்லாம் நான் பணத்தையே தொடுவதில்லை என்று நினைத்துவிட்டார்களா? அப்படியானால் நீங்கள் இந்தத் தாலுக்கா முழுவதும் நான் லஞ்சம் வாங்குவேன் என்பதை அறிவித்து விடுங்கள். தவறான நம்பிக்கையில் இருக்கப் போகிறார்கள்' என்று கூறிவிட்டார். அப்படியும் ஜனங்கள் நம்ப வில்லை. அவர் வேடிக்கை செய்வதாகவே நினைத்தனர். அவர் முகத்தைப் பார்த்தாலே பரமயோக்கியர் மாதிரிதான் இருக்கும். அவர் லஞ்சம் வாங்க ஆசைப்படுகிறார் என்பதை யாருமே நம்பவில்லை. அப்புறம் பல பெரிய மனிதர்கள் இடையிலே புகுந்து விஷயத்தை விளக்கினர். நம்ப வைத்தியரும் நாலு இடத்தில் சொல்லி வைத்தார். அப்புறம் ஜனங்கள் சிபாரிசை விட்டு விட்டு நோட்டுக்கற்றையை எடுத்துக்கொண்டு அவரை நெருங்க ஆரம்பித்தனர். சொல்லுங்க ரூப்பன் பாபு! இப்படி எங்கே பணம் சம்பாதிக்க முடியும்? ஏதோ உப்புக்கும் பருப்புக்கும் கிடைத்தால் சரி; அதுவே அதிகம். இந்தக் காலத்திலே லஞ்சம் வாங்குவது ஒன்றும் பிரயோஜனம் இல்லை. அதிலே ஒன்றும் மிச்சமாவதில்லை. லஞ்சம் வாங்குகிறவன், வாங்காதவன் இரண்டு பேர் நிலைமையும் ஒன்றாகவே இருக்கிறது. பொதுவாக எல்லார் நிலைமையும் மோசம்'' என்றார் அவர்.

ஒரு குழு இப்பொழுது மூன்று குழுவாகப் பிரிந்துவிட்டது. ஜோக்நாத் சாராயக் கடைப்பக்கம் போய்விட்டான். தெரிந்தவர்கள் இரண்டொருவர் பங்கிபானம் தயாரித்துக் கொண்டிருந்தனர். சனிஸ்வரனும், சின்ன பயில்வானும் அந்தப் பக்கம் நடையைக் கட்டிவிட்டனர். ரங்கநாத்தும் ரூப்பனும் வீடு திரும்பிக்கொண்டிருந்தனர்.

ரங்கநாத் மௌனமாக இருந்தான்; களைத்தும் போயிருந்தான் அவன். ஒரு கிணற்றடியில் மேடையின் மீது சற்றே இளைப்பாற உட்கார்ந்தான். ரூப்பன் அருகில் நின்றவாறே சற்றுத் தூரத்தில் நடைபெறும் கௌதாரிச் சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

கிணற்றிலிருந்து சற்றுத் தூரத்தில் ஓர் இடிந்த கட்டிடம் இருந்தது. இங்கே ஒரு கம்பத்தின் அருகே ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். வாதுமை நிறம், இளமையின் தளதளப்பு. பகட்டான புடைவை அணிந்திருந்தாள். மூக்கில் தங்க நத்து அணிந்திருந்தாள். திருவிழாவின் குப்பை கூளங்களுக்கிடையே இந்தக் காட்சி ரங்கநாத்தின் கண்களுக்கு ரம்மியமாக இருந்தது. அந்தப் பக்கமே பார்த்துக்கொண்டிருந்தான்.

அழுக்கு லுங்கியும், பளபளவென்ற போலி சில்க் ஷர்ட்டும் அணிந்த ஒருவன் அந்தப் பெண்ணிடமிருந்து சற்றுத் தூரம் தள்ளி நின்று பீடியைப் புகைத்துக் கொண்டிருந்தான். தலையில் எண்ணெய் பளபளத்தது. மெதுவாக அவன் அந்தப் பெண்ணின் அருகே வந்து நின்றான். பிறகு சுமார் ஒரு கஜ தூரத்தில் போய் அமர்ந்துகொண்டான். அவன் ஏதோ சொல்ல அந்தப் பெண் சிரித்தாள். ரங்கநாத்துக்கு இந்தக் காட்சி பிடித்தது. அந்தப் பெண் தன்னைப் பார்க்கவேண்டுமென்று நினைத்தான். அந்தப் பெண் அவனைப் பார்த்தாள். அவள் முன்போலச் சிரிக்கவேண்டுமென்று நினைத்தான். அவளும் அவனைப் பார்த்து முகம் மலர முறுவலித்தாள். எண்ணெய் சொட்டப் படியப் படியத் தலையை வாரிக்கொண்டிருந்த அந்த மனிதன் இன்னொரு பீடியைப் பற்ற வைத்துக்கொண்டான்.

ரங்கநாத்தின் அருகே ஒருவன் வந்து நின்றான். வேட்டி, சட்டை, தொப்பி அணிந்திருந்தான் அவன். கிராமத்தாரின் நோக்கின்படி ஜமேதார்போல் இருந்தான். ரங்கநாத் அவனை லேசாக ஒரு தரம் பார்த்துவிட்டு, மீண்டும் எதிரே பார்வையைத் திருப்பினான். அந்தப் பெண் முறுவலிப்பதை நிறுத்தி விட்டாள். இந்தித் திரைப் படங்களில் கதாநாயகி 'கஜல்' பாடுவதற்கு முன் முகத்தைச் சோகமயமாக வைத்துக்கொள்வாளே அப்படி ஒரு பாவம் அவள் முகத்திலே மிளிர்ந்தது.

"நீ இந்த ஊர்க்காரரா?" என்று மெள்ள வினவினான் அந்த மனிதன்.

தலை அசைத்த ரங்கநாத் "இல்லை" என்றான். அந்த மனிதன் சட்டென ரங்கநாத்தின் அருகே அமர்ந்துகொண்டான். "இந்தப் பட்டிக்காட்டு மக்களுக்கு எதுவுமே புரிவதில்லை. இந்தப் பாட்டுப் பாடு, அந்தப் பாட்டுப் பாடு என்கிறார்கள்!" என்றான் அவன்.

ரங்கநாத் அவன் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்தானே தவிர அவனுக்குத் தலை கால் புரியவில்லை. அவன் பேசிக்

கொண்டே போனான்: "சும்மா இவக்கிட்ட தில்லானா கேட்டுப் பாருங்கள்; தாதரா பாடச் சொல்லுங்கள், தும்ரி பாடச் சொல்லுங்கள்; அப்படியே உயிரைப் பிழிந்து வைத்துவிடுவாள்!" என்றான். அப்படியே உணர்ச்சி வயப்பட்டவனாய், கண்கள் கிறங்கக் காதல் போதையுடன் அவன் மேலும் சொன்னான்: "ரோஹாபுர்ப் போயிருந்தாள்; இப்பொழுது பைஜேகாவ் போகப் போகிறாள்."

நகரத்தில் ஒரு சங்கீத சபையில் ரவிசங்கரைப் பற்றி இப்படிக் கூறியதை ரங்கநாத் கேட்டிருக்கிறான். அறிவிப்பாளர் கூறினார்: 'ரவிசங்கர் அவர்கள் எடின்பரோவிலிருந்து சமீபத்தில் தான் வந்தார். குளிர் காலத்தின்போது நியூ யார்க் போகப் போகிறார்.'

அவனுடைய கூற்றை ஆமோதிப்பவன்போல் ரங்கநாத் தலை அசைத்தான். இப்பொழுதுதான் அவனுக்கு விஷயத்தின் தலையும் காலும் புரியத் தொடங்கியிருந்தது.

சற்றுப் பொறுத்து அந்த மனிதன் கூறினான்: "சும்மா சாதாரணப் பாட்டு இல்லே. வீட்டுக்கு வாங்க, வந்து கேளுங்க. அப்போதுதான் உண்மையான வித்தையா போலியா என்று தெரியும்."

ரங்கநாத்தின் பார்வை எதிரே இருந்தது. வழிய வழிய எண்ணெய் தடவி வாரிக்கொண்டிருந்தவன் இப்பொழுது அந்தப் பெண்ணுக்கு மிக மிக அருகில் வந்து அமர்ந்திருந்தான். இருவரும் பேசிக்கொண்டும், சிரித்துக்கொண்டும் இடையிடையே ரங்கநாத்தைப் பார்த்துக் கொண்டும் இருந்தனர். இத்தனை நேரத்துக்குப் பிறகே ரங்கநாத்துக்கு அவர்கள் தன்னை ஏதேதோ நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறார்கள் என்பது புரிந்தது.

அவள் அருகில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தவனைத் தூரத்திலிருந்து பார்த்தால் ஏதோ இருவர், நாட்டின் பிரச்னைகளைக் குறித்து, தீவிர முனைப்புடன் விவாதித்துக்கொண்டிருப்பது போலவே தோன்றும். தன் புருவங்களை நெறித்தவாறே அவன் கம்பீரத்துடன் கூறினான்: "இந்தப் புதிய சட்டம் வந்து எல்லாவற்றையும் நாசமாக்கிவிட்டது. பெரிய பெரிய தனவந்தர்கள், செல்வச் சீமான்கள் எல்லாரும் நல்ல சங்கீதத்துக்காக ஏங்கிக் கொண்டிருக்கின்றனர். இப்பொழுது போலீசார் அநுமதி கொடுத்துவிட்டனர். சபையில் பாட்டு, கீட்டு நடக்க ஆரம்பித்திருக்கிறது."

ரங்கநாத் எழுந்து நின்ருன். அவனும் கூடவே எழுந்தான். "நான் இவளுக்காகப் பத்து வருடம் உயிரையே விட்டிருக்கிறேன். அப்படியே மயில் மாதிரி குரல்; நூற்றில் ஒருத்தி இவள்!" என்ருன் மீண்டும்.

ரங்கநாத் ரூப்பனைத் தேடினன். அவன் கெளதாரிச் சண்டையைப் பார்க்க மெள்ள நழுவி யிருந்தான்.

"ரூப்பன்!" என்று குரல் கொடுத்தான் ரங்கநாத். அந்த மனிதன் ஏதோ யோசித்தவாறே நின்ருன். பின்பு, "நம்ப ஜாதிதான், இந்து. ரொம்ப நல்லவள்" என்ருன் தொடர்ந்து. சற்றே பெருமிதத்துடன், "பாட்டு மட்டுந்தான் பாடுகிருள். நல்லவர்கள் மத்தியிலே தான் வாழ்கிருள். தொழில் செய்வதில்லை" என்ருன்.

"ரொம்ப நல்லது. பாடகிகள் தொழில் செய்வதால்தான் இசைக் கலையே கெட்டுப்போகிறது. இசைக் கலை என்பதே ஒரு சாதனை. அதிலேயே அவளை ஈடுபடுத்துங்கள்" என்ருன் ரங்கநாத்.

அந்த மனிதன் திகைத்துக் குழம்பியவனுய், "உங்களுக்கே எல்லாம் தெரியும். நான் என்ன சொல்ல? எப்போதாவது வீட்டுக்கு வாருங்கள்" என்று கூறியவன், ரூப்பனைக் கண்டவுடன் பேச்சைப் பாதியிலேயே நிறுத்திவிட்டான். சற்றும் எதிர்பாராமல் அவன் பின்னுலிருந்து அவர்கள் முன்னே வந்து நின்றவன் அந்த மனிதனைக் கண்டதும் கடுமையான குரலில், "ஒகோ, கட்டாயம் வருகிருேம்! ஆமாம், யாரிடம் பேசுகிருேம் என்பது தெரிகிறதா? உன் அப்பன் யாருன்னு தெரியுமா?" என்ருன் ரூப்பன்.

அந்த மனிதன் கரங்களைக் குவித்து வணக்கம் தெரிவித்தான். போக்கிரி மாதிரி உதட்டில் சிரிப்புத் தவழ, "எஜமான், என் அப்பன் பெயர் ரூபியா" என்ருன்.

ரங்கநாத்துக்குச் சிரிப்பு வந்து விட்டது. ஓரக்கண்ணுல் பார்த்தான். அந்தப் பெண்ணின் மென்முறுவல், முகமெல்லாம் சிரிப்பாக மலர்ந்திருந்தது.

நெடு நேரம் இருவரும் பேசவே இல்லை. பேசாமல் நடந்து கொண்டே இருந்தார்கள். முடிவில் ரூப்பன்தான் பேசினுன்: "என்ன சொல்லக்கொண் டிருந்தான் அவன்? தொழிலை ஆரம்பித்து விட்டாளா இல்லையா அவள்?"

ரங்கநாத் ஒன்றும் பேசவில்லை. "நாலாபக்கமும் ஒரே புரட்டும் மோசடியுந்தான். நடத்தை கெட்ட பெண்ணைச்

சின்ன வயசிலிருந்தே பார்த்துக்கொண் டிருக்கிறேன்." வயது முதிர்ந்த அநுபவஸ்தன்போல் ரூப்பன் தொடர்ந்து பேசினன்:- "வருடக்கணக்காகப் படகில் அங்குமிங்கும் அலேந்துகொண் டிருந்தாள் இவள். பெரிய தும்ரி, தாதரா என்று அளக்கிருளைக்கும். எருமை மாதிரி தொண்டை! இதிலே பெரிய பாடகியாம் பாடகி. இந்த இலாக்காவிலே இவள் மகாமோசமான பெண். யாரும் காலணவுக்கு இவளேச் சிந்துவதில்லே."

களேத்துச் சோர்ந்தவனுய் ரங்கநாத் நடந்துகொண் டிருந்தான்.

"நான் வரவில்லே என்ருல் அவன் சும்மா இருந்திருக்க மாட்டான். கிட்டத்தட்ட உன்னே வலேக்குள் இழுத்து விட்டிருந்தானே" என்ருன் ரூப்பன். சட்டென, ரங்கநாத் கேட்டான்: "ரூப்பன்! நீ பேலாவுக்குக் காதற் கடிதம் ஏன் எழுதினய்?"

ரூப்பனின் சவடால் சட்டென ஆட்டம் கண்டுவிட்டது. ஒரு நொடி தடுமாறி விட்டான். பின்பு தன்னேச் சமாளித்துக் கொண்டு, "இத்தனே நாட்களாக நகரத்தில் இருக்கிருய். ஒருவன் எதற்காக ஒருத்திக்குக் காதற் கடிதம் எழுதுகிருன் என்பது கூட உனக்குப் புரியாதா?" என்ருன்.

இதற்கு என்ன பதில் கூறுவதென்று ரங்கநாத்துக்குப் புரியவில்லே. "மாமா ரொம்பக் கோபமாக இருக்கிருர்" என்ருன்.

ரூப்பன் வெகுண்டெழுந்தான். "அப்பா கோபப்பட இதில் என்ன இருக்கிறது? அவரை என்னிடம் நேராகப் பேசச் சொல். பதினறு வயதிலே அவருக்குத் திருமணம். முதல் மனேவி செத்த பின் 17 வயதிலேயே இன்னெரு திருமணம். ஒரு வருஷங்கூட அவரால் தனித்திருக்க முடியவில்லே. இதெல்லாம் ஒழுங்கு முறையுடன் நடந்தவை. தகாத முறையில் என்ன என்ன செய்தார் என்பதைச் சொல்லட்டுமா? கேட்கிருயா?"

ரங்கநாத் சுருக்கமாய்ப் பதில் கூறினன்: "நான் கேட்க விரும்பவில்லே."

# அத்தியாயம் 14

இரவின் பிற்பகுதியில் வைத்தியருக்குக் குளிர் எடுத்து விட்டதும் தூக்கமும் கலைந்துவிட்டது. சியவனப் பிராசம், ஸ்வர்ண பஸ்பம், பாதாம் லேகியம் என்ற தற்காப்புச் சாதனங்கள் என்ற கோட்டைச் சுவரைப்பிளந்துகொண்டு வந்து விட்ட குளிர், தோலுக்குள்ளே பிரவேசித்து, கொழுத்த சதைப் பகுதிகளையும் ஊடுருவிக்கொண்டு எலும்புவரை சென்றுவிட்டது. அவர் போர்வையை நன்றாக இழுத்துப் போர்த்திக்கொண்டார். தனியாகப் படுத்துக்கொள்வதால் படுக்கை கூட உஷ்ணமாக, கதகதப்பாக இல்லை என்பதையும் நினைவுபடுத்திக்கொண்டார் அவர். இந்த நினைவுடன் அடுக்கடுக்காகப் பல நினைவுகள் தொடர்ந்து வந்து முற்றுகையிட்டதும், ஒரு விதத்தில் லாபமாகவே இருந்தது. ஏனெனில் லேசான தூக்க மயக்கமும் அவரைச் சூழ்ந்துகொண்டது. சற்று நேரம் அமைதியாகக் கழிந்தது. ஆனால் அதன் பின் வயிற்றிலே வாயு உபத்திரவம் ஆரம்பித்துவிட்டது. உடலின் மேல் பகுதியிலும், கீழ்ப் பகுதியிலும் இருந்து அடிக்கடி வெடிச் சத்தம்போல் கேட்க ஆரம்பித்துவிட்டது. போர்வையை இறுகச் சுற்றிக்கொண்டு திரும்பிப் படுத்த வைத்தியர் கடைசி வெடிச் சத்தத்தைக் கேட்டவாறே தூக்கமயக்கத்தில் ஆழ்ந்துவிட்டார். சற்றைக்கெல்லாம் புரட்சி செய்த காற்று, நாயைப்போல் வாலைக் குழைத்துக்கொண்டு. இப்பொழுது அவருடைய நாசித் துவாரங்களின் வழியே மட்டும் குறட்டையாக வெளியேற ஆரம்பித்தது. வைத்தியர் உறங்கிவிட்டார். அப்பொழுதுதான் மக்களாட்சி பற்றி அவர் ஒரு கனவு கண்டார்.

அவர் அமர்ந்திருந்த இடத்துக்கு அருகே தரையில் மக்கள் ஆட்சி அமர்ந்திருக்கிறது. இரு கரங்களையும் குவித்து, கும்பிட்டவாறு அமர்ந்திருந்த அதன் தோற்றம் கிட்டத்தட்ட குடியானவனைப் போலவே இருந்தது. ஆங்கிலமென்ன ஆங்கிலம், அதற்குச் சுத்தமான இந்தி கூடப் பேச வரவில்லை. ஆயினும் ஏதோ கெஞ்சும் குரலில் கூறிக்கொண்டே இருக்கிறது. வைத்தியர் அதைக் கேட்டுக்கொண்டிருக்கிறார். அடிக்கடி தன்னருகே வந்து அமரும்படி சொல்லுகிறார். "நீ ஏழையாக இருந்தால் என்ன, நாம் உறவினர்கள்தாமே!" என்று

கூறுகிறார். ஆனால் மக்களாட்சி கேட்பதாக இல்லை. அடிக்கடி, 'ஐயா', 'சர்க்கார்' என்று விளித்துப் பேசுகிறது. பல முறை சொன்ன பிறகு மெள்ள எழுந்து அவரது இருப்பிடத்தின் ஒரு மூலையில் வந்து அமர்கிறது. இனி ஏதாவது ஒரு வார்த்தை பேசலாம் என்ற துணிவு சற்றே பிறந்ததும் மெள்ள வைத்தியரிடம், "என் உடைகளெல்லாம் கிழிந்துவிட்டன. உடையின்றி இருக்கிறேன் நான். இந்த நிலையில் யார் முன்னாலும் வர எனக்குக் கூச்சமாக இருக்கிறது. அதனால், மகராஜ்! எனக்கு ஒரு நல்ல, அழுக்கில்லாத வேட்டி உடுத்திக்கொள்ளத் தாருங்கள்" என்று இறைஞ்சுகிறது.

பயில்வான் பத்ரியிடம், உள்ளேயிருந்து ஒரு நல்ல வேட்டி எடுத்துத் தரும்படி வைத்தியர் கூறியதும், மக்கள் ஆட்சி தலை அசைத்து இதை மறுக்கிறது. தொடர்ந்து, "நான் தான் உங்கள் கல்லூரியின் மக்கள் ஆட்சி. வருஷக்கணக்காகத் தாங்கள் வருடாந்தரக் கூட்டத்தைக் கூட்டவே இல்லை. கல்லூரி திறந்த தினத்திலிருந்து இன்றுவரை மானேஜர் தேர்தல் நடக்கவேயில்லை. இத்தனை வருஷங்களில் கல்லூரியின் ஒவ்வோர் அம்சமும் நன்கு செழித்து வளர்ந்துவிட்டது. நான் மட்டுந்தான் ஒரு மூலையில் கிடக்கிறேன். ஒரு முறையாவது தாங்கள் சட்டப்படி தேர்தலை நடத்துங்கள். அதன் மூலம் என் உடலுக்குத் துணி கிடைத்து விடும். என் மானம் காப்பாற்றப் பட்டுவிடும்" என்று கூறிய அது, அறையை விட்டு வெளியேறிவிட்டது.

வைத்தியரின் உறக்கமும் இரண்டாம் முறையாகக் கலைந்து விட்டது. விழித்துக்கொண்டதும் உடலுக்குள்ளே நடைபெற்ற புரட்சியின் வெடி ஓசை போர்வைக்குள்ளேயே கால்மாட்டுப் பக்கம் கேட்டதும், பார்ப்பதற்குப் பட்டிக்காட்டானைத் தோன்றினாலும், 'மக்களாட்சி நல்ல மனிதன். நம்முடையவன். அவனுக்கு உதவி செய்யவேண்டும். அதிகம் இல்லாவிட்டாலும், நாலுபேர் மத்தியில் கௌரவமாக உட்காரத் தகுந்த மாதிரி குறைந்த பட்சம் ஒரு நல்ல உடையாவது தரவேண்டும்' என்று முடிவு செய்துகொண்டார் வைத்தியர்.

மறு நாள் பிரின்ஸ்பாலுக்கு, கல்லூரியின் வருடாந்தரக் கூட்டத்தைக் கூட்டி, மற்ற உறுப்பினர்களுடன் கூடவே மானேஜர் தேர்தலையும் நடத்தவேண்டும் என்ற உத்தரவு அனுப்பினார். 'புதிய தேர்தல் நடத்துவது அவ்வளவு அவசியமும் இல்லை. உசிதமும் இல்லை' என்று பிரின்ஸ்பால் வெகுதூரம் வாதாடினார்.

ஆனால் வைத்தியர், "நீங்கள் ஒன்றும் பேசாதீர்கள். இது கொள்கை சம்பந்தப்பட்ட விஷயம்" என்று கூறிவிட்டார். ஆனாலும் பிரின்ஸ்பால் விடவில்லை. "இதுவரை எந்தப் பத்திரிகையும் நமக்கு விரோதமாக எழுதவில்லை. எந்தப் புகாரும் வரவல்லை. ஊர்வலமோ, மறியலோ, பட்டினி கிடப்பதோ நடக்கவில்லை. எல்லாப் பயல்களும் தங்கள் தங்கள் இடத்திலே வாயை மூடிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். ஒருத்தன் கூட வருடாந்தர மீட்டிங்பற்றி மூச்சு விடவில்லை. சொல்லுகிறவர்கள் வேறு யார்? இந்தக் கன்னு மாஸ்டர், ராமாதீன் பீமசேடவி, இன்னும் இரண்டொரு தவளைகள்; அவ்வளவுதானே? இவர்கள் சொல்லுவதைக் கேட்டுக் கூட்டத்தைக் கூட்டுவது நல்லதல்ல" என்றார். அவர் கூறியதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த வைத்தியர் முடிவில், "நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான். ஆனால் உங்களுக்கு இது புரியாது. இது சித்தாந்தம், கொள்கை பற்றிய விஷயம். போங்கள், போய்க் கூட்டத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனியுங்கள்" என்றார்.

சங்காமல் வித்யாலய, இன்டர்காலேஜின் மாணவ சமுதாயம் விளையாட்டு உலகத்தைப் பற்றி நிறையத் தெரிந்து வைத்திருந்தது. ஏனெனில் ஒவ்வொரு மாதமும், விளையாட்டுக்காகக் கட்டணம் கட்டாயமாக அவர்களிடம் வசூலிக்கப்பட்டு வந்தது. கல்லூரிக்கென்று விளையாட்டு மைதானம் கிடையாது என்பது வேறு விஷயம். ஆனால் இதனால் யாருக்கும் எவ்விதச் சிரமமும் இல்லை. இரு தரப்பாரும் திருப்தியாகவே இருந்தனர். விளையாட்டு ஆசிரியருக்கு விளையாட்டுகளை நடத்த, பயிற்சி தர வேண்டிய அவசியம் இல்லாததால், இருதரப்பாகப் பிரிந்துள்ள ஆசிரியர்களிடையே புகுந்து விளையாடி, இருதரப்பாரின் நம்பிக்கைக்கும் பாத்திரமாக நிறைய வாய்ப்பு இருந்தது. பிரின்ஸ்பாலுக்கும் இதனால் பெரும் நிம்மதி. அவர் கல்லூரியில் ஹாக்கி டீம்களுக்கிடையே அடிதடி சண்டை வராது. (ஏனென்றால் ஹாக்கி டீமே கிடையாது.) இதனால் கல்லூரியின் ஒழுங்கு, கட்டுப்பாடு பற்றிய பிரச்னை எழவில்லை. மாணவர்களின் தந்தைமார்களுக்கும் மகிழ்ச்சிதான்; ஏதோ பீஸ் கட்டுவதுடன் தீர்ந்தது தொந்தரவு. பையன்கள் உண்மையிலேயே கில்லாடி ஆகாமல் தப்புவார்கள். பையன்களைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை. ஒரு கோலிலிருந்து இன்னொரு கோல்வரை, பாறாங்கல் போன்ற பந்துக்குப் பின்னால் கையில் மட்டையுடன்

ஓடவேண்டிய தில்லை. அந்த நேரத்தில் அவர்கள் ஒரு கலயம் கள்ளை முழுவதையும் உள்ளே தள்ளலாம், அல்லது முடிந்தால் ஓர் ஆட்டம் போட்டு நாலைந்து ரூபாய் சம்பாதிக்கலாம் அல்லவா?

ஆனால் இன்று இதே மாணவர்கள் கையில் ஹாக்கி மட்டையோ, கிரிக்கெட் மட்டையோ தயாராக இருந்தது. கையில் யாரோ ரைபிளைக் கொடுத்துவிட்ட மாதிரி சந்தேகத்துடன் அதைப் பிடித்துக்கொண்டு அவர்கள் திரிந்தனர். கிட்டத்தட்ட ஐம்பது மாணவர்கள், இப்படி ஆட்டக்காரர்களுக்குரிய அலங்காரங்களுடன் கல்லூரியின் வாயிலுக்கருகே திரிந்துகொண்டிருந்தனர்.

இத்தகைய வேஷத்தில் அவர்களைக் கண்ணுற்ற ரங்கநாத் வியப்புடன், "என்ன விஷயம்? இன்று இன்ஸ்பெக்டர் வருகிறாரா?" என்று வினவினான்.

சின்ன பயில்வான் இதற்குப் பதில் கூறத் தன்னைத் தயார்ப்படுத்திக்கொண்டான். அதாவது இடுப்பிலிருந்து நழுவும் லுங்கியைச் சரியாமல் பிடித்தவாறே, "இந்த அமர்க்களத்தில் யார் இன்ஸ்பெக்ஷன் நடத்துவார்கள்? வருடாந்தரக் கூட்டத்துக்காக இந்த ஏற்பாடு" என்றான்.

சின்ன பயில்வானும் காலேஜ் கமிட்டியில் ஓர் அங்கத்தினர். அதனால் அவரைக் கண்டதும் மாணவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். முன் வாசலிலேயே பிரின்ஸ்பால் அவரைச் சந்தித்தார். "வாங்க, சின்ன வஸ்தாது! உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்" என்றார்.

"வந்தவன் திரும்பியாப் போகப் போகிறேன்? நடங்க முன்னால்" என்று சின்ன பயில்வான், பெரிய மனத்துடன் கூறியதும் பிரின்ஸ்பால் வெட்கத்துடன் சிரித்த சிரிப்பு, மழையில் நனைந்த நாய் ஒரு விதமாக தும்முமே அது மாதிரி இருந்தது. அவர் முன்னால் நடந்தார்; நடந்துகொண்டே கூறினார். "ராமாதீன் கோஷ்டி ரொம்பவும் மும்முரமாய் இருக்கிறது. நிறையச் சிபாரிசு கொண்டு வந்திருக்கிறது. பைஜ்நாத் லாலாசாகப்பின் உதவிகொண்டு பல ஆட்களைத் தன் பக்கமாய் இழுத்துக் கொண்டுவிட்டார்கள். லாலாசாகப் ஏன் இந்த வம்பில் மாட்டிக் கொள்கிறாரோ தெரியவில்லை. அவர் இருப்பதென்னவோ நகரத்தில். ஆனால் கிராமத்து விஷயம் ஒவ்வொன்றிலும் குறுக்கிடுகிறார். ராமாதீனுக்கு ரொம்பவும் துணிச்சல் வந்து

விட்டது. மண்டை கனம் ஏறிவிட்டது. அந்தப் பக்கம் எத்தனை பேர். இந்தப் பக்கம் எத்தனை பேர் என்று விவரமாக ஒன்றும் புரியவில்லை."

சின்ன பயில்வான், கல்லூரிக் கட்டடத்தின் முகப்பில் அமைத்திருந்த மலர்ப் பாத்திகளைப் பார்த்த வண்ணம் இருந்தார். "வைத்திய மகராஜ், ஏன் தான் சில சமயம் இப்படிக் காரியம் செய்கிறாரோ தெரியவில்லை. இப்பொழுது தேர்தலுக்கு என்ன அவசியம்?" என்று பிரின்ஸ்பால் மீண்டும் ஆரம்பித்ததும், அப்போது பிரபலமாயிருந்த ஒரு பாடலின் ஓர் அடியைச் சின்ன பயில்வான் கூறினார்: "கவலையென்ன எனக்கு உலகத்தைப் பற்றி? கண்ணன் என் காதலன்."

கேட்டிலிருந்து உள்ளே நுழைந்த சமயம் பிரின்ஸ்பால் ரங்கநாத்தை நோக்கி, "நீங்களும் வாருங்கள் ரங்கநாத்பாபு, உங்களுக்குத் தடை கிடை ஏதுமில்லை" என்றார். தான் பின்னால் வருவதாகத் தலை அசைத்துத் தெரிவித்த ரங்கநாத் உள்ளே போகவில்லை.

மெள்ள மெள்ளக் கல்லூரிக் கமிட்டியின் அங்கத்தினர்கள் ஒவ்வொருவராகப் பல திசைகளாக, பல வழியாக வந்தார்கள். கூட்டுறவுச் சங்கத்தின் டைரக்டர்களில் ஒருவர் நடந்து வந்தாலும் அவர் நடந்து வந்த வேகத்தையும், உள்ளே நுழைந்த வேகத்தையும் கண்டு, அவரைப் பார்க்காமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர் மக்கள். சில நிமிஷங்களுக்கெல்லாம் கல்லூரியின் வயல்களின் பயிரை மிதித்துக்கொண்டு கான் டிராக்டர் செல்வது தெரிந்தது. கூலியாட்கள் வேலை செய்துகொண்டிருந்த இடத்தில் நின்று ஏதோ ஒரு பொருளை வானத்துக்கு உயர்த்தி, கீழே வீசி எறிவதுபோல் கைகளை உயர்த்திய அவர் திடீரென அந்தர்த்தியானமாகி விட்டார். சற்று நேரத்துக்கெல்லாம் பாபு கயாதீன் மெதுவாக நடந்து வந்தவர், கல்லூரியின் கேட்டை அடைந்ததும் அங்கேயே திண்ணையில் உட்கார்ந்து விட்டார். பின்பு துயரத்துடன் மாணவர்களின் கரத்திலிருந்த மட்டைகளைப் பார்த்தார். பிறகு ஒரு மாணவனின் கையிலிருந்த பந்தின் மீது பார்வையைச் செலுத்தி அதை 'மெஸ்மரைஸ்' செய்யத் துவங்கினார். பிரின்ஸ்பால் வாசலுக்கு வந்து, "வாருங்கள், எல்லாரும் வந்து விட்டனர்" என்று அழைத்தார்.

கொள்ளைக் குற்றத்தில் கைது செய்யப்பட்டபின், சாட்சிகளின் முன் அடையாளம் காட்டப்படுவதற்காக அழைத்துச்

செல்லப்படுபவர்போல் கயாதீன், உற்சாகம் அற்றவராய், "ஊம் நடங்கள்" என்று சொல்லி, பெங்குவின் பறவை மாதிரி கால்களை அகட்டி அகட்டி நடந்தவராய் மெள்ளக் கட்டடங்களிடையே மறைந்து போனார்.

சற்றைக்கெல்லாம் குதிரைமீது யாரோ வருவது தெரிந்தது. தலைப்பாகை அணிந்த அவனைப் பார்க்கையில் பன்னிரண்டாம் நூற்றாண்டின் சரித்திர ஏடுகளிலிருந்து யாரோ படபடவென்று கீழே குதித்து வருவதுபோல் இருந்தது. மாணவர்களில் ஒருவன் சொன்னான். "இனி வைத்தியரை ஒருவனும் அசைக்க முடியாது. டாக்குர் பல்ராம் சிங் வந்தாகிவிட்டது."

பல்ராம் சிங் வந்ததுமே, குதிரையின் லகானை ஒரு மாணவனிடம் வீசினார். இப்பொழுது அவர் பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு வீரனைக் காட்சி அளித்தார். தெற்கே ஏற்பட்டுவிட்ட கலகத்தைப் பற்றிய சேதி சொல்ல, குதிரை வீரன் ஒருவன் ஆக்ராக் கோட்டை வாயிலில் வந்து நிற்பதுபோல், அத்தனை வேகத்துடன் கல்லூரி வாசலில் நுழைந்த அவர் ஒரு மாணவனை நோக்கி, "அடிதடி ஏதுமில்லையே?" என்று வினவினார்.

"அடிதடியா? நாங்களெல்லாம் பிரின்ஸ்பாலின் கட்சியைச் சேர்ந்தவர்கள், அகிம்சாவாதிகள்" என்றான் ஒருவன்.

பல்ராம்சிங் மீசையை முறுக்கிவிட்டுக்கொண்டார். பிறகு புன்சிரிப்புடன், "நீங்களும் எதிலும் குறைந்தவர்களாகத் தெரியவில்லையே. கையில் மட்டையும், தடியும் வைத்துக்கொண்டு காந்திஜீயின் சீடர்களாகச் சுற்றுகிறீர்களா?" என்றார்.

"காந்தியடிகள்கூடக் கையில் தடியுடன் இருந்தார் சார்! நாங்கள் நிராயுதபாணிகள். இது வெறும் ஹாக்கி மட்டை. இதனால் அந்தப் பந்தைக் கூட அடிக்கமுடியாது சரியாக. மனிதன் சாவானா இதனால்?" என்றான் இன்னொரு மாணவன்.

இதற்குள் பிரின்ஸ்பால் வெளியே வந்து விட்டார். "வாருங்கள், உள்ளே வாருங்கள். கோரம் வந்தாகிவிட்டது. கூட்டம் ஆரம்பமாகிவிட்டது" என்றார்.

பல்ராம் சிங் தலைப்பாகையின் நுனியினால் வேர்வையைத் துடைத்துக்கொண்டார். "யாராவது ஒரு சிஷ்யனிடம், குதிரைக்குக் கொள்ளும் தண்ணீரும் காட்டச் சொல்லுங்கள். கூட்டத்துக்கு வந்து நான் செய்ய என்ன இருக்கிறது? என்னுடைய கோரம் இங்கே தான்" என்றார்.

பிரின்ஸ்பால் மகிழ்ச்சியுடன் தலையசைத்தார். பல்ராம் சிங் தம் ஷர்ட்டின் ஜேபியை ஒரு கையால் பற்றிய வண்ணம் கூறினார். "நம்பிக்கை இல்லாவிட்டால் தொட்டுப் பாருங்கள், ஜேபி எப்படிப் புடைத்துக்கொண்டிருக்கிறதென்று! இதுதான் நிஜமான கோரம்."

பிரின்ஸ்பால் ஜேபியைத் தொட்டுப் பாராமலேயே கூறினார்: "தொட்டுப் பார்த்துவிட்டேன் என்று நினைத்துக்கொள்ளுங்கள். அதுவும் உங்கள் வார்த்தை பொய்யாகுமா?"

"அசல் வெளி நாட்டுச் சரக்கு, ஆறு குண்டு பிஸ்டல். நாட்டு மருந்து வெடிக்கும் நாட்டுத் துப்பாக்கி அல்ல, ஒரு தரம் பட்டென்று வெடித்துவிட்டுச் சும்மா இருக்க. டைய் டைய் என்று பறக்க ஆரம்பித்தால் ராமாதீன் கோஷ்டியின் ஆறு மெம்பரும் குருவிமாதிரி பட்டென்று விழுந்து புரளுவார்கள் மண்ணில்" என்றார் பல்ராம் சிங்.

"உங்களைப் பற்றி என்ன சொல்ல? என்ன சொல்ல?" என்று அரற்றினார் பிரின்ஸ்பால். ஏதோ உண்மையான கவிதையொன்றைப் பல்ராம் சிங்கின் வாயால் கேட்டுவிட்டது போன்ற ஆனந்தம் அவருக்கு. மேலே நடந்துகொண்டே, "நான் உள்ளே கூட்டத்துக்குப் போகிறேன். வெளியே நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள்" என்றார். பிறகு தொடர்ந்து மகாத்மா விதுரர் போன்ற பாவனையில், "அமைதியாகக் காரியத்தை நடத்துங்கள்" என்றார்.

பல்ராம் மீண்டும் மீசையை முறுக்கிவிட்டுக் கொண்டவாறே, "இங்கு எல்லாம் அமைதிதான்" என்றார்.

பிரின்ஸ்பால் போய்விட்டார். பல்ராம்சிங் வாராவதியில் உட்கார்ந்துகொண்டார். சற்றைக் கொருதரம், 'பசக், பசக்' கென்று புகையிலைச் சாறை உமிழ்ந்துகொண்டே இருந்தவர், தம்மை அகிம்சாவாதி என்று பறைசாற்றிக்கொண்ட மாணவனை அருகே அழைத்து, "கொஞ்சம் காலேஜை ஒரு பிரதட்சணம் வந்து நம்ப ஆட்களெல்லாம் ஜரூராக இருக்கிறார்களா இல்லையா என்று பார்த்துவா. ரமேசராவிடம் பயலை யாரிடமும் மோதிக்கொள்ள வேண்டாமென்று சொல்லிவை. யாராவது சொல்லிக் கேட்காவிட்டால் அவனை இங்கே அனுப்பிவை" என்றார்.

போரில் ஒரு நாட்டின் வெற்றியே தம்மைச் சார்ந்திருப்பது போன்ற பாவனையுடன் அந்த மாணவன் ஒரு சாரண வீரனைப்

போல நிலைமையைக் கண்டறிந்துவரப் புறப்பட்டான். சுற்றும் முற்றும் உலவிக்கொண் டிருந்த மாணவர்களிடையே கசமுசா வென்று பேச்சுக் கிளம்பியதும் பல்ராம் சிங், "இன்னும் கொஞ்சம் எட்டி நடை போடுங்களடா பையன்களா! கவலையே படாதீர்கள்! நான் இங்கே வாராவதிமேல் உட்கார்ந்திருக்கும் வரையில் எதிரிகள் அண்டக்கூட மாட்டார்கள்" என்றார்.

பகல் மூன்று மணியாகிவிட்டது. தெருவில் டிரக்குகளும், மாட்டு வண்டிகளும் போக ஆரம்பித்து விட்டன. பலராம்சிங் வாரா வதியில் நன்றாகச் சம்மணம் போட்டு உட்கார்ந்து, வாகனங் களின் போக்குவரத்தைக் கனவு மயக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார். குதிரை ஒரு முறை கனைத்ததும், "சபாஷ் சேத்தக்! கொஞ்சம் பொறுமையாக இரு. வேளைக்குக் கொள் ளும் தண்ணியும் கிடைக்கும் உனக்கு" என்று உரக்கக் கூவினார். சேத்தக் பொறுத்துக் கொண்டுவிட்டது என்பதற்குச் சாட்சி யாகச் சடசடவென்று மூத்திரம் பெய்ய ஆரம்பித்துவிட்டது.

திடீரென்று ஒரு டிரக் வந்து கல்லூரிக்கு எதிரே சாலையில் நின்றது. சுத்தமான சட்டை, வேட்டி, குல்லாய் அணிந்த ஒருவன், கையில் தடியுடன், டிரக்கிலிருந்து கீழே குதித்து இறங் கிக் கல்லூரியை நோக்கி வேகமாய் வந்தான். டிரக் நிற்பதைக் கண்டதுமே மாணவர்கள் எல்லாரும் திரண்டு வந்து வாரா வதியை நெருங்கினர். பல்ராம்சிங் இடைமறித்தார், "வணக் கம் பண்டித்ஜீ!"

வாய்க்குள்ளேயே ஏதோ முணு முணுத்தவாறே அந்த மனிதன் மேலே நடந்தான்.

"பண்டித்ஜீ! கொஞ்சம் மெள்ள நடவுங்கள். உங்களைத் துரத் திக்கொண்டு ஒருவரும் பின்னால் வரவில்லை" என்றார் பலராம் சிங் மீண்டும்.

பண்டித்ஜீ வெட்கப்பட்டுகொண்டு சிரித்தார். "மீட்டிங் ஆரம்பமாகிவிட்டதா?" என்று கேட்டார்.

பலராம் சிங் எழுந்து நின்றார். பிறகு மெதுவாகப் பண்டிதரை நெருங்கினார். மாணவர்கள் வட்டமாக அணிவகுத்து நெருங்கி வரலாயினர். "ஓடிப் போங்கடா பையன்களா! போய் விளை யாடுங்க, சாப்பிடுங்க" என்று அதட்டிய பலராம் சிங் அந்த மனிதனை நெருங்கி, "பண்டித்ஜி, கூட்டத்தில் 'நீங்கள். ஆஜர் கொடுத்தாகிவிட்டது. இனித் திரும்பிப் போகலாம்" என்றார்.

பண்டிதருக்குத் தன் தொடையில் ஏதோ கடினமாக உராய்வது போல் இருந்தது. பலராம் சிங்கின் ஷர்ட் பாக்கெட்டின் மீது அவரது பார்வை சென்றதும் அரண்டு போய் இரண்டடி பின்னே நகர்ந்தார்.

அவருக்கு விடை கொடுத்தவாறே பலராம்சிங் மீண்டும் கூறினர். "பண்டித்ஜி வணக்கம்."

அந்த மனிதன் சத்தமிடாமல் திரும்பி நடந்தான். சாலையில் எந்த வண்டியும் இல்லை. அவனை இறக்கிவிட்ட டிரக்கும் போய் விட்டது. அவன் வேகமாய், ஓட்டமும் நடையுமாய்ப் பறந்து விட்டான்.

ஒரு மாணவன் சொன்னன், "போய்விட்டார்" என்று.

"பண்டித்ஜி ரொம்பப் புத்திசாலி, புரிந்துகொண்டு விட்டார்" என்ருர் பலராம்சிங்.

"புரிந்துகொண்டது இருக்கட்டும். எதற்காக இப்படித் தலை தெறிக்க ஓடவேண்டும்?" என்ருன் ஒரு மாணவன். "இப்போது நீ சிறு பையன்தான் மகனே! இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் புத்திசாலி மனிதன் இப்படித்தான் நடந்துகொள்வான்."

ஒரு மாணவன் குதிரைக்குக் கொள்ளும் தண்ணீரும் வைத்தான். குதிரை மீண்டும் கனைத்தது. "ஏய்! சும்மா இரு சேத்தக்!" என்று அதட்டினர் பலராம் சிங்.

அந்தச் சாரணப் பையன் திரும்பி வந்தான். குதிரையுடன் பேசுகிற மும்முரத்திலே பல்ராம் சிங் உரக்கக் கேட்டார்: "என்னப்பா, என்ன விஷயம்?"

பையன் பயந்துவிட்டான். பயந்து போய்விட்ட ஒரு சராசரி மாணவனைப் போல் பல்லைக் காட்டியவாறே, "எல்லாம் சரியாக இருக்கிறது, டாக்குர் சாகப்!" என்ருன்.

"எத்தனை பேர் வந்தார்கள்?"

"ஐந்து."

"எல்லாரும் புரிந்துகொண்டார்களா? இல்லையா?"

"புரிந்துகொண்டார்கள்." பையனுக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. தூரத்தில் விரைந்து சென்று கொண்டிருந்த பண்டிதரைச் சுட்டிக் காட்டி, "இவரைப் போலத்தான் அவர்களும் மடமடவென்று திரும்பி நடந்துவிட்டார்கள்."

கூடி நின்ற மாணவர்கள் உரக்கச் சிரித்தனர்.

கல்லூரியில் ஒரே ஜய கோஷம். "சியாவர் ராமசந்திர கி ஜெய்" என்று முழங்கியது.

'ஜெய்' போடுவதில் இந்தியர்களுக்கு இணையாக யாருமே இல்லை. 'ராமசந்திர கி ஜெய்'; பின்பு 'பவனசுத ஹனுமான் கி ஜெய்'; பிறகு எப்படித் தடாலென்று பாய்ந்ததோ, 'மகாத்மா காந்தி கி ஜெய்' என்ற பெருமுழக்கம் தொடர்ந்தது.

'போல் — மகாத்மா காந்தி கி ஜெய்!' பச்சைக் கொடி காட்டியாகிவிட்டது. இனி என்ன? 'ஜவாஹர்லால் நேரு கி ஜெய்!' பிறகு மாநிலத் தலைவர்கள் ஒவ்வொருக்கும் 'ஜெய்'! அதன் பின் ஜில்லாத் தலைவர்கள்! கடைசியில் 'ஜெய் வைத்திய மகாராஜ் கி ஜெய் — ஜெய்!' கூர்மையான வேலினால் துளைத்த பன்றி மாதிரி கூச்சலிட்டுக்கொண்டு கட்டடத்துக்கு வெளியே பாய்ந்து வந்த பிரின்ஸ்பால் உரக்கக் கத்தினார். "போலோ! வைத்திய மகராஜ் கி ஜெய்!"

ஜய கோஷம் போட அடுத்த தலைமுறை முகப்பு வாயிலில் கூடி நின்றது.

ஒரு தேர்த் திருவிழாப் போலாகிவிட்டது. பிரின்ஸ்பால் ரங்கநாத்தை நோக்கி, 'வைத்திய மகாராஜ் மீண்டும் எல்லாருடைய சம்மதத்தின் பேரில் மானேஜராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டார். இனிப் பாருங்கள், கல்லூரி எப்படி முன்னேறுகிறதென்று. தடதடதடவென்று தூஃபான் மெயில் வேகத்தில் முன்னேறிவிடும்'' என்றார். உணர்ச்சி வேகத்தில் அவர் முகமெல்லாம் சிவந்து போயிருந்தது.

சின்ன பயில்வான் சொன்னான்: "ஓய், பிரின்ஸ்பால்! அதிகமாகப் படபடக்காதீர். நான் சொல்லுவது ஒன்றையாவது புரிந்துகொள்ளுங்கள். இந்தப் பசங்கள் கையில் மட்டையுடன் திரிந்துகொண் டிருக்கிறார்கள் அல்லவா? இவர்கள் கையிலே ஒவ்வொரு பந்தையும் கொடுத்துக் கொஞ்சம் குறி பார்த்து அடிக்கவாவது கற்றுக்கொள்ளச் சொல்லுங்கள். இவர்களில் ஒருவனால் கூட மட்டையால் பந்தைக் குறி பார்த்து அடிக்க முடியாது. புழுதியிலே பாம்பை அடிக்கிறமாதிரி அடிக்கிறாங்க இவங்க."

"ஓ, கட்டாயம் செய்கிறேன் அங்கத்தினர் அவர்களே! விளையாட்டுக்கான ஏற்பாடுகள் இனி செய்யப்படும். இந்தத் தொந்தரவை ஒருவாறு கடந்தாயிற்று."

சின்ன பயில்வான் இடைமறித்தான்: "கடந்துவிட்டீர்கள்! சரி! நானும் என் எண்ணத்தைச் சொல்லுகிறேன், கேளும். எது சொன்னாலும் 'சரி' என்று சொல்லுகிறீர்கள். ஆனால்

உங்களால் ஒன்றும் செய்யமுடியாது. விளையாட்டு விஷயமும் இப்படித்தான். பசங்க, மட்டையை எடுத்துக்கொண்டு திரிகிறார்கள். இன்று அவசியம் ஏற்பட்டிருந்தால் கைவரிசையைக் காட்டி இதனால் யார் மண்டையையாவது இல்லை, தங்கள் காலையாவது உடைத்துக்கொண்டிருப்பார்கள். குறி பார்த்து அடிக்கப் பழகுவதும் சமயத்துக்குப் பயன்படுமே!''

"விளையாட்டும் முக்கியந்தான் பிரின்ஸ்பால் சாகப். சின்ன வஸ்தாது சொல்வதும் சரிதான்'' என்றார் பின்னாலிருந்து வைத்தியர்.

'ஹாம் ஹாம்' என்ற பிரின்ஸ்பால் பயில்வானின் உடலை ஒரு காதலியின் கண்ணோடு பார்த்தார். "பயில்வான் என்றால் சும்மாவா? அவர் ஏதாவது அர்த்தம் இல்லாமல் சொல்லுவாரா?'' என்றார் மெதுவாக.

# அத்தியாயம் 15

கிராமத்துக்கு வெளியே நீண்டகன்ற மைதானம் ஒன்று நாளுக்கு நாள் தரிசாக மாறிக்கொண்டிருந்தது. தற்சமயம் அதில் புல்பூண்டுகூட முளைப்பதில்லை. அதைப் பார்த்ததுமே ஆசாரிய விநோபா பாவேயிடம் தானமாகக் கொடுப்பதற்கு ஏற்ற லட்சிய நிலப்பரப்பு என்று தோன்றும். உண்மையில் நடந்ததும் இதுதான். இரண்டாண்டுகளுக்கு முன்பு, இந்த நிலப் பகுதியைப் பூதான இயக்கத்துக்குத் தானமாக வழங்கிவிட்டிருந்தனர். அது இப்போது மீண்டும் கிராமப் பஞ்சாயத்துக்குத் தானமாகக் கிடைத்திருந்தது. பஞ்சாயத்து, இதைப் பஞ்சாயத்துத் தலைவருக்குத் தானமாக அளிக்க, அவர் இதை முதலில் தம் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் இனாமாக வழங்கியிருந்தார். எஞ்சியிருந்த பூமி, கிரயத்துக்கும் கடனுக்கும், சில ஏழைகளுக்கும், நிலமற்றவர்களுக்கும் வழங்கப்பட்டு

விட்டது. பின்னால்தான், ஏழைகளுக்கும், நிலமற்றவர்களுக்கும் வழங்கிய நிலம், 'இந்தப் பெரும் நிலப்பரப்பைச் சேர்ந்ததல்ல. வேறொரு குடியானவனின் நிலத்தைச் சேர்ந்தது' என்று தெரிந்தது. இதைத் தொடர்ந்து ஏற்பட்ட வழக்கு இன்னமும் முடிவு பெறாமலேயே நடந்துகொண் டிருந்தது. இன்னமும் நடக்கும் போலத் தோன்றியது.

விஷயம் எதுவானாலும் பூமிதான இயக்கத்தின் நிழல் இம்மைதானம் முழுவதும் பரவி நின்றது. மைதானத்தில் வயல்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதற்கு அடையாளமாக, நாலடிக் கொருதரம் வரப்புகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் மீது கருவேலமரக் கிளைகளைக் கொண்டு வேலி போடப்பட்டிருந்தது. தண்ணீர், எரு, விதை ஆகிய எந்தப் பொருள்களின் உதவியின்றி, வெறும் இச்சா சக்தியின் வலுவைக் கொண்டு, இந்நிலங்களில் சென்ற வருடத்திலிருந்து விவசாயம் நடந்து கொண்டிருந்தது. ஆம். வெகு மும்முரமாய் நடந்து கொண் டிருந்தது. இக்கிராமப் பஞ்சாயத்தில் ஏனைய வருஷங்களைவிடச் சென்ற வருடம் விளைச்சல் கூடியிருக்கிறது என்பதைக் கணக்கு காட்டியது. கிராமத்துக் கால்நடை ஜீவன்கள் இதைத் தங்கள் பழைய மேய்ச்சல் நிலமாகவே இப்பொழுதும் கருதி, சில சமயம் இதில் பிரவேசித்து விடுவதுண்டு. அவற்றினுடைய அத்துமீறிய செயல்களால், விவசாயிகளிடையே சண்டை, சச்சரவு, அடிதடி, வசவு, திட்டு, பவுண்டில் அடைத்தல், போலீஸ் ஸ்டேஷன், கோர்ட் என்று சலசலப்பு ஏற்பட்டிருந்தது. இதனால் கால்நடைகள் அந்தப் பக்கம் செல்லுவது தடை செய்யப்பட்டிருந்தது. அந்தப் பரந்த வெளியிலே பெரும்பாலும் மௌனம் வியாபித்து நின்றது. நம்பிக்கையுடைய மனிதனுக்கு அந்த வெட்டவெளியை அடைந்ததுமே, அந்தப் பரந்த பாழ் வெளியில், முன்னேற்றத்தின் மங்கல ஒலி கேட்கப் போவதாகவே தோன்றியது.

மைதானத்தின் ஒரு மூலையில், வனநலப் பாதுகாப்பு, மரம் நடுதல் ஆகிய திட்டங்கள் துவக்கப்பட்டிருந்தன. அவை முன்னேறியதா இல்லையா என்பது சர்ச்சைக்குரிய விஷயம். குழிகளும், பள்ளங்களும் தோண்டப்பட்டிருந்தது தெளிவாகத் தெரிந்தது. அதில் கருவேலமரத்தின் விதைகள் விதைக்கப் பட்டிருப்பதாகப் பேசிக் கொண்டார்கள். இந்த ஊர்க்காரர்கள் மட்டும் பக்கத்து ஊர்க்காரர்கள் மாதிரி உழைப்பாளிகளாக

இருந்திருந்தால், இந்த மைதானத்திலும் கருவேலமரக் காடே தழைத்தோங்கி நின்றிருக்கும் என்றும் கூறப்பட்டது. பள்ளங்களில் கருவேல மரங்கள் முளைக்கவே யில்லை. ஒருவேளை அந்த மண் அவ்வளவு மோசமோ என்னவோ? ஆனால் அந்தப் பள்ளங்கள் எல்லாம் சிவபால்களுசிற்கு மிகவும் பயன்பட்டன; மக்கள் அவற்றைப் பொதுக் கக்கூஸாகப் பயன்படுத்தினர். இவ்வாறு வனவளத்துக்காகப் போட்ட திட்டம் மக்களுக்குப் பயன்பட்டது.

மைதானத்தின் இன்னொரு மூலையில் ஓர் ஆலமரம் இருந்தது. அதைப் பார்த்தால் அந்தப் பரந்த பாழ்வெளியைப் பலாத்காரம் செய்வது போலிருந்தது. அதன் அருகே ஒரு கிணறு. அந்தக் கிணற்றடி மேடையின் மீது தான் தற்சமயம் ரங்கநாத் நின்றுகொண் டிருந்தான்.

இந்தியாவில் படித்தவர்களுக்குச் சிற்சில சமயம் ஒரு வியாதி வந்து விடும். அதன் பெயர் மனச்சாட்சியின் நெருக்கடி (Crisis of Conscience). சில டாக்டர்கள் இதை இன்னும் நுட்பமாக இழை பிரித்து நம்பிக்கையின் நெருக்கடி (Crisis of faith) என்றதொரு புது வியாதியை இனம் காட்டுகின்றனர். இந்த நோய் பெரும்பாலும் தன்னை அறிவு ஜீவியாக நினைத்துக் கொண்டு உண்மையில் அறிவினால் அல்லாமல், ஆகாரம், தூக்கம், பயம், செக்ஸினால் மட்டுமே உயிர் வாழ்ந்து வருபவர்களைத் துன்புறுத்துவதுண்டு. (ஏனெனில் அறிவினால் மட்டும் உயிர் வாழ்வது இயலாத காரியம்.) இந்த நோயினால் பீடிக்கப்பட்ட நோயாளி, மன இறுக்கத்தினாலும் (டென்ஷன்), நிராசையினாலும் உந்தப்பட்டவாய் நீண்ட பிரசங்கங்கள் செய்கிறான். பலத்த சர்ச்சையும், விவாதமும் நடத்துகிறான். அறிவு ஜீவியாக இருப்பதால் தன்னை நோயாளியாகவும், நோயாளியாக இருப்பதால் தன்னை அறிவுஜீவியாகவும் நிரூபித்துக்கொள்கிறான், முடிவில். இந்த நோய், காபி ஹவுஸ் விவாதங்களிலும், மதுப் புட்டிகளிலும், தெரு சுற்றும் பெண்களின் அணைப்பிலும், சர்க்கார் வேலையிலும் தலைகாட்டும்; சிற்சில சமயம் தற்கொலையில் முடிந்து விடுவதும் உண்டு.

கல்லூரி மானேஜர் தேர்தலைக் கண்ணால் கண்ட தினத்திலிருந்து ரங்கநாத்துக்குத் தனக்கு இந்த நோயிருப்பதாகச் சந்தேகம் ஏற்பட்டது. வைத்தியரைப் பார்த்தாலே ஈட்டியால் குத்திய பன்றி மாதிரி அலறிக்கொண்டு ஜய

கோஷம் எழுப்பியவாறு வெளியே வந்த பிரின்ஸ்பால் சட்டெனக் கண் முன்னே வரலானார். வைத்தியருடன் கூட இருப்பதால் தானும் அக்கொள்ளையர்களின் ஏதோ ஒரு குழுவில் மெம்பராகிவிட்டதாக அவனுக்குத் தோன்றியது. அவன் முன் பல்லைக் காட்டிக்கொண்டு, பிரின்ஸ்பால் சாகப் ஏதாவதொரு சுவையான கதையைச் சொல்ல ஆரம்பிக்குபோதெல்லாம், (இத்தகைய கதைகளுக்கு அவரிடம் பஞ்சமே இல்லை.) 'இந்த மனிதன் எப்பொழுது வேண்டுமானாலும் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, யார் கழுத்தை வேண்டுமானாலும் அமுக்கிவிடுவான்' என்று அவனுக்குத் தோன்றியது.

நகரத்தில் இருந்திருந்தால் ஏதாவதொரு காபி ஹவுஸில் உட்கார்ந்து நண்பர்களிடையே இந்தத் தேர்தலைப் பற்றி ஒரு சொற்பொழிவே ஆற்றியிருப்பான். எவ்வாறு கைத்துப்பாக்கியின் பலத்தில் சங்காமல் வித்யாலய இன்டர் காலேஜின் மானேஜர் பதவியை அடைவது என்பது பற்றி விளக்கி இருப்பான். எந்த நாட்டில் இதுபோன்ற சிறு சிறு பதவிகளுக்குக் கூட இப்படியெல்லாம் நடக்கிறதோ, அந்த நாட்டில் உயர் பதவிகளுக்காக என்னதான் நடக்காது, நடந்திருக்காது என்று மேஜையை ஓங்கி ஓங்கித் தட்டியவாறு கேட்டிருப்பான். இதையெல்லாம் கூறி முடித்தபின், முடிவுரையாக ஆங்கிலத்தில் நாலு வார்த்தை, தப்பும் தவறுமாய்க் கூறிவிட்டுக் காபிக் கோப்பையைக் காலி செய்திருப்பான். தானொரு அறிவு ஜீவி, குடிமகனுக் குரிய உரிமையுடன் ஒரு நல்ல பிரசங்கம் செய்து, நாலு உபயோகமற்றவர்களின் முன்னால் நெஞ்சத்துக் குமைச்சலையெல்லாம் கொட்டி அளந்து, 'நம்பிக்கையின் நெருக்கடி'யை அழித்துவிட்டோம் என்ற நிம்மதியையும் உணர்ந்திருப்பான்.

ஆனால் இது நகரம் அல்ல, கிராமம். இங்கு ரூப்பனைத் தவிர சொந்த அப்பாவைக் கூட நம்பமுடியாது. சனிஸ்வரனைத் தவிர உதவி செய்பவர்கள் யாரும் இல்லை. இதனால் ரங்கநாத்துக்குத் தன் நோய்க்குத் தீர்வுகாண இயலவில்லை. நாளுக்கு நாள், 'தான் ஏதோ ஒரு கொள்ளையர் கூட்டத்தில் வந்து சேர்ந்துகொண்டு விட்டோம், அவர்கள் கல்லூரியை முற்றுகையிட்டு, கொள்ளையடித்துவிட்டனர். அடுத்த தாக்குதலுக்கு வேறிடம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்' என்ற எண்ணம் மனத்திலே வலுத்துக் கொண்டே போயிற்று. வைத்தியரைத் திட்டி நொறுக்க அவன்

உள்ளம் பரபரத்தது. அதையும் விடச் சற்றும் பயமில்லாமல் மனம் கொண்டமட்டும் திட்டுவதைக் கேட்க ஓர் ஆசாமியைத் தேடி உள்ளம் பரபரத்தது.

அப்படிப்பட்ட ஆள் எங்கே கிடைப்பான்? கன்னு மாஸ்டர் ஓட்டை வாய், மகாமோசம். அவன் முன்னுல் எதையாவது பேசி விட்டால் மறுநாளே கிராமம் முழுவதும் பரவிவிடும். வைத்தியரின் மருமானே தன் மாமாவைத் திட்டுகிருன் என்று ஊரெல்லாம் பேசுவார்கள். இதுதான் படித்தவர்களின் லட்சணம், மரியாதை என்பார்கள். மாளவியாவிடம் இதைப் பற்றிப் பேசலாம்; அவன் கோஷ்டியில் இருந்தாலும் வெறும் அப்பாவி. அவனிடம் பேசுவதில் எந்த இன்பமும் கிடையாது.

பிறகு யார் இருக்கிருர்கள்? ரூப்பன்தான்! அவன் மீது ரங்கநாத்துக்குக் கொஞ்சம் நம்பிக்கை இருந்தது. ஏனென்ருல் சில சமயம் பிரின்ஸ்பாலைத் திட்டுவான், கல்லூரியின் துர்ப்பாக்கியத்தை நொந்துகொள்ளுவான். படிப்பில் முட்டாள்தான் என்ருலும் உலக ஞானத்தில் சூரன். மிகத் தந்திரசாலி; தன் காரியம் ஒவ்வொன்றும் தன்னிச்சைப்படி நடக்கும் அளவுக்குத் தன் தந்தையைப் போட்டு மடக்கி வைத்திருக்கிருன். ஆனுல் அவர் என்னவோ தம் விருப்பப்படிதான் எல்லாம் நடப்பதாக நினைக்கிருர். கன்னு மாஸ்டரிடம் கொஞ்சம் வரம்பு மீறியே நடந்துகொண்டிருந்தான். அவர் எத்தனை முட்டாளாக இருந்தாலும், அவரை இவ்வளவு தூரம் கேவலப்படுத்தி இருக்கக்கூடாது. ஏனென்ருல் தன் அப்பாவின் உதவி கொண்டு ஒரு முட்டாள் இன்னெரு முட்டாளை அடிப்பதா? இது சரியில்லை என்று நினைத்தான் ரங்கநாத்.

கிணற்றுமேட்டு ஆலமரத்தினடியில் அமர்ந்திருந்த ரங்கநாத் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டான். ஏனென்ருல் எத்தனையோ நாட்களுக்குப் பின் அவனைப் பிடித்திருந்த நோய் முதல் முறையாக அவனைத் தொந்தரவு செய்யாமல் இருந்தது. இன்று தைரியமாக, துணிச்சலுடன் ரூப்பனிடம் அவன் தன் மனத்தில் இருந்ததையெல்லாம் கொட்டித் தீர்த்துவிட்டான். 'மாமா செய்தது சரியல்ல, துப்பாக்கி பலத்தில் மானேஜர் பதவியை அடைந்துவிட்டாலும் நாலாபக்கமும் கெட்ட பெயர்தானே?' என்று வெளிப்படையாகவே கூறிவிட்டான்.

ரூப்பன் தன் வழக்கப்படி, மண்டையில் அடித்தாற்போல் பதில் கூறிவிட்டான்.

"இதோ பார் அண்ணு! இதெல்லாம் பாலிடிக்ஸ். இதில் மகா மோசமான அயோக்கியத்தனமெல்லாம் நடக்கிறது. அதைப் பார்த்தால் இது ஒன்றுமே யில்லே. அப்பா இருக்கிற துறை யிலே, மேலும் என்னென்னவோ செய்யவேண்டியிருக்கிறது. எதிரியை, எப்படியாஞலும் சரி, அடித்து வீழ்த்த வேண்டும்; அடித்து வீழ்த்த முடியாவிட்டால் இவர்கள் விழுந்து விட வேண்டியதுதான். அப்புறம் சூரணம், பொட்டலம் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கவேண்டியதுதான். ஒருத்தனும் ஒரு காசுக்கு மதிக்கமாட்டான்.

"ஆஞல் காலேஜைப் பொறுத்தவரையில் சீர்திருத்தங்கள் செய்யவேண்டியது அவசியம். பிரின்ஸ்பால் இருக்கிருனே மகா அயோக்கியன். இரவு பகல், ஆட்சிக்கு ஆள் சேர்ப்பதும், கோஷ்டி சேர்ப்பதுமே வேலே. கன்ஞ மாஸ்டர் அயோக்கியன் அல்ல, ஆஞல் வடிகட்டின முட்டாள். இந்த அயோக்கியப் பயல் அவரை அமுக்கிவைத்துவிட்டான். இனிமேல் கன்ஞ மாஸ்டர் எதிர்த்துக்கொண்டு கிளம்பவேண்டும். அப்பாவிடம் கூட நான் இதைப் பற்றிப் பேசினேன். ஆஞல் அவர் பிரின்ஸ் பாலேக் கிளை பிடிங்கி எறிய விரும்பவில்லே. இருக்கட்டும், கொஞ்ச நாட்கள் அப்பாவிடம் ஒன்றும் பேசவேண்டாம் என்று நினேக்கிறேன். இந்தப் பக்கம் மெள்ளக் கன்ஞ மாஸ்டரைத் தூண்டிவிடவேண்டும். அவ்வளவுதான், பிரின்ஸ்பால் கவிழ்ந்து விடுவான். ஆள் ரொம்ப ஊதிவிட்டான். இனி கட்டாயம் வெடிக்க வேண்டியதுதான். ஒரு தரம் பல்டி அடிச்சான்ஞ ஆள் எத்தனே கெட்டிக்காரன் என்று அப்பாவும் தெரிந்துகொள்வார்."

ரங்கநாத்தின் நிம்மதியான பெருமூச்சுக்குக் காரணமே இதுதான். இனி ரூப்பனிடம் இந்த விஷயமாக மனம் விட்டுப் பேசலாம் என்ருகிவிட்டது. ரூப்பனுடன் கூட அவனும் சேர்ந்து கன்ஞ மாஸ்டருக்கு அநுதாபம் காண்பிக்கலாம், வீழ்ந்து விட்டவருக்குக் கைகொடுத்து உதவித் தூக்கி நிறுத்தலாம். உப்பி விட்டவனே உடைத்தெறியலாம். சுருக்கமாகக் கூறிஞல் அநியாயத்தை நேரிடையாக, நேருக்கு நேர் நின்று எதிர்க்க முடியாவிட்டாலும் மறைந்து நின்று எதிர்க்கமுடியும். பழைய ஆரோக்கியத்தையும் திரும்பிப் பெறமுடியும் என்பது தெளிவாகிவிட்டது.

ஜனவரி மாதம் பாதிக்குமேல் கழிந்துவிட்டது. இனி பிப்ரவரி வரப்போகிறது. கிராமப் பஞ்சாயத்துத் தேர்தல் இருக்

கிறது. பிறகு மார்ச்சில் உயர் நிலைப்பள்ளி, இன்டர்மீடியட் வகுப்புப் பரீட்சைகள் துவங்கவேண்டும். ஒரு புறம் சனிஸ்வர னும் பயில்வானும் தேர்தல் மேடையில் வரிந்து கட்டிக்கொண்டு நின்றனர். அவர்களது அறைகூவலுக்குப் பதிலளிக்க, இன்னொரு புறம், ராமாதீன் பீகம்கேடவியும் அவரது சூதாடி நண்பர்களும் குடியாட்சியில் மக்கள் நலனுக்காகப் பணியாற்றத் தோள் தட்டி நின்றனர். இதுவரை அவர்கள் ஆற்றி வந்த பணி, மறைமுகமாக, முதுகுக்குப் பின்னால் காரசாரமாகத் திட்டிக் கொண்டிருந்துதான். பிப்ரவரி மாதத்தில் இந்தப் பணி நேருக்கு நேர் நடைபெறலாமென எதிர்பார்க்கப்பட்டது. மார்ச்சு மாதம் நடைபெற விருக்கும் பரீட்சைகளைப் பொறுத்த வரையில் அது இதுவரை எவரையும் பாதித்ததாகவே தெரிய வில்லை. மாணவர்கள், ஆசிரியர்கள், பிரின்ஸ்பால் யாவரும் கவலையற்றிருந்தனர்.

பிரின்ஸ்பால் இன்னொரு விஷயத்தில் மிக மும்முரமாய் ஈடுபட்டிருந்தார். சில நாட்களுக்கு முன் கல்லூரியின் வருடாந்தரக் கமிட்டி மீட்டிங் நடைபெற்று, வைத்தியர் இரண் டாம் முறையாக, மானேஜர் பதவிக்கு ஒருமனதாகக் தேர்ந் தெடுக்கப்பட்டிருந்தார். இதைக் குறித்துச் சில கமிட்டி மெம்பர்கள் ஆட்சேபம் தெரிவித்து மேலிடத்துக்குப் புகார் அனுப்பியிருந்தனர். வைத்தியர் மீண்டும் பதவிக்கு வருவதை ஆட்சேபித்த கமிட்டி மெம்பர்கள் கூட்டத்துக்கு வர அநுமதிக் கப்படவில்லை. துப்பாக்கியைக் காட்டி அவர்கள் மிரட்டப் பட்டார்கள் என்று கல்வி மந்திரிக்குப் புகார்க் கடிதம் போயி ருந்தது. குற்றச்சாட்டை இத்தனை விரிவாக, விஸ்தாரப் படுத்தி எழுதியிருந்ததால் அதை முழுதும் படிப்பதென்பது இயலாததாக இருந்தது. அப்படியே படித்தாலும் அதில் கூறப் பட்டிருந்த குற்றங்களும், புகார்களும் நம்பமுடியாதவையாக இருந்தன. அதன்படி பார்த்தால், 'சிவபால்கஞ்சில் சட்டமும் ஒழுங்கும் நிலை குலைந்தே போய்விட்டன; போலீஸ், போலீஸ் ஸ்டேஷன் என்றெல்லாம் ஒன்றுமே இல்லை. தடி எடுத்தவன் தண்டல்காரனாய் எதை வேண்டுமானாலும் செய்யலாம்' என்ற நினைப்பு ஏற்படும். அதில் கூறப்பட்டுள்ள குற்றச்சாட்டுப் பட்டியல் தவறானது என்பதை ஆராயவேண்டிய அவசியம் இல்லை. அது தெளிவாகவே தெரிந்தது. இருந்தாலும் எதிர்க் கட்சி உறுப்பினர்களில் சிலர் நகரத்துக்குச் சென்று குற்றச்

சாட்டுப் பட்டியல்களின் நகல்களைக் கல்வி இலாக்காவின் உயர் அதிகாரிகள் பலருக்கும் வழங்கிவிட்டு வந்ததுமன்றி வட்டாரம் முழுவதிலும், 'இந்த விஷயத்தைப் பற்றி விசாரணை செய்ய, டெபுடி டைரெக்டர் ஆப் எஜுகேஷன் என்று உயர் அதிகாரி வரப்போகிறார்; பார்ப்பதற்குச் சாதுவாய்ப் பசுவைப் போலிருந்தாலும், வைத்தியருடைய அப்பாவினாலும் அவரைக் கறந்துவிடமுடியாது. ஏனெனில் மேலிடத்திலிருந்து உண்மையாக விசாரணை நடத்தும்படி உத்தரவு வந்திருக்கிறது' என்று பிரச்சாரம் செய்தனர்.

பிரின்ஸ்பாலுக்கு இது போதுமே! விசாரணை சம்பந்தப்பட்ட விஷயங்களை வைத்தியர் கவனித்துக் கொள்ளுவார் என்பது அவருக்குத் தெரியும். ஆனால் விசாரணை சம்பந்தமாக அதிகாரிகள் வருவார்களே, அந்த விஷயத்தைப் பிரின்ஸ்பால் தாமே கவனித்துக் கொள்ளவேண்டும். அதிகாரிகள் கல்லூரிக்கு வந்தால் முதலில் எதைக் கவனிப்பார்கள்? பிரின்ஸ்பால் இந்தக் கேள்விக்குத் தாமே பதில் கூறிக்கொண்டார்: 'கட்டடங்களை!'

இதனால் கட்டிடங்களின் வனப்பை அதிகரிக்கச் செய்வதில் அவர் தற்சமயம் ஈடுபட்டிருந்தார். அவர் நகரத்தில் பார்த்திருந்தார். அதாவது ஒரு சின்னஞ்சிறு செடியை நட்டு, அதன் நாற்புறமும் செங்கல்லால் சுற்றிக் கட்டி, அதற்குச் சிவப்பு, மஞ்சள், வெள்ளை நிறமடித்துவிட்டால் வேறு எவ்வித முயற்சியும் இல்லாமலே மைதானம் தோட்டம்போல் காட்சி தந்துவிடுகிறது! பின் என்ன? கல்லூரிக் கட்டடங்களின் முகப்பிலே ஒரு வரிசை, குல்மோகர், அமல்தாஸ் மரங்களை நட்டுவிட்டார். அதிகாரிகள் வருவதற்குள் செங்கல் கட்டடத்தை எழுப்பி, சிவப்பு மஞ்சள், வெள்ளை வர்ணமடித்து விடவேண்டும், அவ்வளவுதானே! 'கல்லூரிக்குள் நுழையும்போதே கண்களுக்கெதிரே, சுத்தமான, பளிச்சென்ற பலவேறு வண்ணக் கட்டடங்கள் இருந்தால், போகும்போது வயிற்றுக்குள்ளே முதல் தரமான தேநீரும், டி.ஃபனும் இருந்தால் நமக்கு விரோதமாக யார் என்ன எழுதுவான்?' என்று நினைத்த பிரின்ஸ்பால் ஜனவரி மாதத்துப் பனியும், குளிரும் மரம் நடுவதற்கு ஏற்றதல்ல என்ற நினைவை ஒழித்து, எல்லாப் பருவ காலங்களும் மரம் செடி கொடிகள் பயிரிட ஏற்றவையே என்ற [விஞ்ஞான ரீதியான தர்க்கங்களுடன் வேலையில் இறங்கிவிட்டார்.

கல்லூரி மதிற்சுவருக்கு அருகே நின்று அவர் குழிகளை வெட்டச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் கரத்திலிருந்த மழமழ வென்ற தடித்த புத்தகம், பார்வைக்கு மிக விலையுயர்ந்ததாகத் தென்பட்டது. வேலை செய்யும்போது அரை நிஜார், சட்டை, மேஜோடு இல்லாமல், செருப்பு, இத்யாதிகளுடன் பார்ப்பவர்கள் அவர் எவ்வளவு சுறுசுறுப்பாக, கெட்டிக்காரராக வேலை செய்கிறார் என்று நினைக்கும்படியாக நின்றுகொண்டிருந்தார். புத்தகத்தைத் தனது அன்பான பூனைக்குட்டியை அணைப்பதுபோல் அணைத்துக் கொண்டிருந்தார்.

அப்போது திடுதிடுவென ஓடிவந்த கன்னு மாஸ்டர் பிரின்ஸ்பாலிடம் ஒரு காகிதத்தை நீட்டி, "இந்தாருங்கள் பிடியுங்கள்" என்றார்.

பிரின்ஸ்பால் அருகிலே நின்ற இன்னொரு மாஸ்டரைப் பார்த்த பார்வை 'எனக்கு உதவி செய்' என்பது போலிருந்தது. அவரை, அவருக்கு முன்னரே தெரியும். ஏனென்றால் அவருடைய ஒன்றுவிட்ட தம்பிதான் அவர். பின் குழிக்கருகே நின்றுகொண்டிருந்த அவர் சடாலென்று அதிகாரியாக மாறிவிட்டார். "இது என்ன?" என்றார், அதிகாரத் தோரணையுடன்.

"என்னவா? கடிதம்."

நிமிர்ந்து நின்ற அவர் முன்னுக்குத் தள்ளிய மார்பு, குழி விழுந்த கண்களுடன் அந்தக் காகிதத்தை உற்றுப் பார்த்த வண்ணமிருந்தார். நண்பரைப் போல் கன்னு மாஸ்டர் கூறினார்: "தாருங்கள், படித்துக் காண்பிக்கிறேன்."

"உங்கள் வேலையைப் பார்த்துக்கொண்டு போங்கள். எனக்குச் சொல்லித் தரவேண்டிய அவசியமில்லை" என்று வெறுப்பை உமிழ்ந்தார் பிரின்ஸ்பால்.

நீண்ட பெருமூச்செறிந்தவராய்க் கன்னு மாஸ்டர், "இந்த ஜன்மத்தில் சொல்லித் தருவதிலிருந்து மீளுவது எங்கே?" என்றார்.

பிரின்ஸ்பாலின் ஒன்றுவிட்ட தம்பி, கன்னு மாஸ்டரின் முகத்தில் விழியைப் பதித்தவண்ணம் நின்றான். அவன் பார்த்த பார்வை, பங்களாவின் காம்பௌண்டுக்குள் நிற்கும் அல்சேஷியன், தெருவிலே நிற்கும் நாட்டு நாயைப் பார்த்து முறைப்பது போலிருந்தது. பிரின்ஸ்பால் நெடு நேரம் அந்தக் காகிதத்தை உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தார். அவர் மட்டும் புராதன காலத்து ரிஷியாக இருந்திருந்தால் அந்தக்

கடிதம் இதற்குள் எரிந்து சாம்பலாகி இருக்கும். நெடு நேரத்துக்குப் பிறகு அவர் அதைக் கன்னு மாஸ்டரிடமே திருப்பிக் கொடுத்தார்.

“இது என்ன?” என்ருர் கன்னு ஆத்திரத்துடன்.

“இது என்ன? காகிதம்” என்ற பிரின்ஸ்பால் குழி வெட்டப் படுவதை மேற்பார்வையிடலானுர்.

கன்னு மாஸ்டர் உதட்டைக் கடித்துக்கொண்டார். மிகுந்த முயற்சியுடன் தம்மை அடக்கிக்கொண்டு, “எதுவாக இருந்தாலும் எழுதிக் கொடுத்த விண்ணப்பத்துக்கு எழுத்து மூலமே பதில் கூறவேண்டும்.”

பிரின்ஸ்பால் ஒரு கூலியுடன் பேசவாரம்பித்தார். “சரி, சரி. நிறுத்து....டேய்!, நீ வெட்டறது குழிதாண்டா! கிணறு அல்ல. போதும், நிறுத்து.”

கன்னு மாஸ்டர் சற்று நேரம் மௌனமாய் நின்ருர், “நான் நாலு நாட்கள் வெளியூர் போக லீவு வேண்டும். தாங்கள் எழுத்து மூலம் எனக்கு உத்தரவு தரவேண்டும்.”

பார்க்கிறவர்கள், 'பாவம், பிரின்ஸ்பால் கல்லூரியின் நன்மைக்காக எவ்வளவு பாடுபடுகிருர்! சாக்கடையில் புரளக் கூடத் தயாராக இருக்கிருரே!' என்று நினைத்துக்கொள்ளும் படி பிரின்ஸ்பால் அந்த ஈரமண்ணின்மீது குத்திட்டு அமர்ந்து, கூலியாட்கள் குழிக்கு எப்படி வரப்பு கட்டவேண்டுமென்பதை விரிவாக விளக்கலானுர்.

கன்னு மாஸ்டரின் குரல் பின்னணி இசைபோல் உயர்ந்தது. அவரும் குழியின் எதிர்ப்பக்கத்தில் போய்க் குத்திட்டு அமர்ந்து, “என் கேள்விக்கு முதலில் பதில் கூறுங்கள். பிறகு குழியில் குதிக்கலாம்” என்ருர்.

பிரின்ஸ்பால் இப்பொழுதுதான் அவரை நேருக்கு நேர் நோக்கிஞர்: “குழியில் கட்டாயம் குதிக்கத்தான் போகிறேன். ஆனல் முதலில் உன்னைத் தள்ளிவிட்டுத்தான் குதிப்பேன். புரிந்ததா, கன்னு மாஸ்டர்?” என்றவாறே தன் ஒன்றுவிட்ட தம்பியை ஒரு பார்வை பார்த்தார். அவர் உடனே பணிவுள்ள ஊழியனைப் போல், “நான் போய்ப் பியூன்களை அழைத்து வருகிறேன். சண்டைக்காக வந்திருக்கிருர் போலிருக்கிறது. நான் வரும்வரை தாங்கள் ஒன்றும் பேசாதீர்கள்” என்ருர்.

“நான் என்ன செய்யட்டும்? எல்லாவற்றையும் மௌனமாகச் சகித்துக்கொண்டுதான் இருக்கிறேன். என்றைக்கு இவர்

குடம் நிறையுமோ அன்றைக்குத் தானாகவே படாரென்று வெடித்து விடும், அவ்வளவுதான்!" என்றார் பிரின்ஸ்பால்.

அவர் இதைக் கூறிய தொனி கன்னுமாஸ்டரைச் சபிப்பது போலிருந்தது. கன்னு பயந்துவிட்டார். 'கன்னு, என்னை அடிக்கிறான்' என்று பிரின்ஸ்பால் எங்கே கூச்சல் போடுவாரோ என்று அஞ்சினார். வழக்கென்று மாட்டிக்கொண்டுவிடக் கூடாதே! இதனால், ஒன்றும் பேசாமல் குழியைவிட்டு நகர்ந்து, சற்றுத் தூரத்தில் நின்ற இன்னொரு மாஸ்டரின் அருகே போய் நின்றுகொண்டு உரக்க, உலகத்துக்கெல்லாம் கேட்கக் கத்தினார். "மிரட்டாதீர்கள் பிரின்ஸ்பால் சாகப்! இது நவாப்கள் காலமல்ல. அவ்வளவு சுலபமாக நீங்கள் கன்னுவைக் கொன்றுவிடமுடியாது. என் உடம்பின் மீது கைவைத்தால் தெரியும், கொலை விழும். சொல்லிவிட்டேன், தெரிந்து கொள்ளுங்கள்."

உண்மையில் கன்னு கூச்சலிட விரும்பவில்லை அவர் எங்கே அமர்க்களம் செய்துவிடுவாரோ என்று அஞ்சி, தாமே கூட்டத்தைக் கூட்டிவிட்டார். நாலைந்து மாஸ்டர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டுவிட்டனர்.

திடீரென அவர் மீண்டும் கத்தினார். "அடிக்காதீர்கள், என்னை அடிக்காதீர்கள். பியூன்களைக் கூப்பிடுங்கள். அவர்களின் மூலம் என்னை அவமானப்படுத்துங்கள். ஏன் நிற்கிறீர்கள்?"

வேடிக்கை நடக்கிறது என்ற விஷயம் தெரிந்ததும் இப்பக்கத்தைச் சார்ந்த மாஸ்டர்களும் வந்து விட்டனர். மாணவர்கள் அதிகம் வரவில்லை; வந்தவர்களையும் பியூன்கள் மிரட்டித் துரத்திவிட்டனர். அவர்கள் வராந்தாவில் நின்றவாறே நடப்பனவற்றை வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றனர். 'வயது வந்தவர்களுக்கு மட்டும்' என்ற நிலையில் இந்த வேடிக்கை நடந்துகொண்டிருந்தது.

இந்த ஆர்ப்பாட்டத்தைக் கண்டு பிரின்ஸ்பால் முதலில் சற்றே பயந்தாலும் பொங்கி எழுந்த பின்பு சினத்தை அடக்கிக்கொண்டு, கன்னு மாஸ்டரை நோக்கி வந்தார். வந்ததும் அவர் கரத்திலிருந்த லீவு மனுவைப் பிடுங்கிக்கொண்டு, சில்லிட்ட குரலில், "கூச்சல் போடாதீர் மிஸ்டர் கன்னு. நீங்கள் தவறாக ஏதோ நினைத்துவிட்டீர். இதோ உங்களது மனுவின் பேரில் உத்தரவு எழுதித் தருகிறேன்" என்றார்.

ஜாடையை அறிந்துகொண்டு அவரது ஒன்றுவிட்ட தம்பி அவர் கரத்தில் ஒரு பேனாவைக் கொடுத்தான். தம் கரத்தி

விருந்த தோட்டக்கலை பற்றிய புத்தகத்தின் மீது விண்ணப் தாளை மடித்து வைத்து ஏதோ எழுதிய அவர், எழுதிக் கொண்டே, "நமக்குள் நடப்பது கொள்கைப் போராட்டம். இதில் அடிதடி எங்கே வந்தது? அமைதியாகக் காரியத்தை நடத்துங்கள்" என்றார்.

கன்னா மாஸ்டருக்கே தாம் நடத்திய நாடகம் அலுப்புத் தட்டியது. "இந்த மனுவின் மீது உத்தரவு போடாவிட்டால் நடப்பதே வேறாக இருக்கும்" என்றார்.

"அதைத் தானே செய்துகொண்டிருக்கிறேன்" என்று புன் சிரிப்புடன் கூறிய பிரின்ஸ்பால், "இந்தா" என்று தாளை நீட்டினார். விண்ணப்பத் தாளில் பல சொற்களின் கீழே அடிக் கோடிட்டு அடித்திருந்தார். சிலவற்றின் மீது வட்டம் போட்டிருந்தார். கடைசியில் ஆங்கிலத்தில் எழுதியிருந்தார், "ரிஜெக்டெட்" என்று.

கன்னாமாஸ்டர் ஏதும் கூற வாயெடுப்பதற்குள் விண்ணப்பத் தாளை அவர் கையில் திணித்தவாறே, "ஸ்பெல்லிங் ரொம்ப மோசம். 'ஹாலிடே'வில் (L) 'எல்'க்குப் பிறகு 'ஒய்' (Y) எழுதி விட்டீர். 'கன்னா' என்பதில் 'க' கேபிடல் எழுத்தா, ஸ்மால் எழுத்தா என்பது புரியவில்லை, இதையெல்லாம் கவனியும்" என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.

சற்று நேரம் திக்பிரமை பிடித்தவர்போல் நின்ற கன்னா மாஸ்டர், காண்டாமிருகம் மாதிரி வாயைப் பிளந்துகொண்டு கத்தினார். "கல்லூரிக்கு வெளியே இனி வா பார்க்கலாம்! ஸ்பெல்லிங்கெல்லாம் நினைவுபடுத்து கிறேன்."

இதன் பின் ரகளை மூண்டுவிட்டது.

இது காலையில் நடந்த விஷயம். பகலுக்குள் பொலீஸ் ஸ்டேஷனில் இருதரப்பினரும் ரிப்போர்ட் தாக்கல் செய்து விட்டனர். கல்லூரி ஆசிரியர்கள் ரகளை செய்ததாகவும், ஒருவரை யொருவர் கொல்ல விரும்பியதாகவும் தெரிந்தது. கொலை செய்வதிலிருந்து அவர்களைத் தடுக்க யாரும் இல்லாதிருந்ததால் அவர்கள் உண்மையிலேயே தம் எதிரிகளை ஏன் கொலை செய்யவில்லை என்ற விஷயம் இதில் தெளிவுபடுத்தப்படவில்லை. இதைப் பிடித்துக்கொண்டு போலீசார் விஷயத்தை முற்றும் எதிர்த்தரப்பிலிருந்து தங்கள் புலன் விசாரணையைத் தொடங்கினர்.

அன்றைய தினமே பகலில் வைத்தியரின் முன்னறையில் இந்த விஷயம் குறித்து விவாதங்கள் நடைபெற்றன. அங்கிருந்த சாதாரண குடிமக்களின் முக்கியமான எதிர்விளைவு இன்னும் சற்று ருசிகரமானதாக இருந்திருக்கவேண்டும். 'ஒருவருடைய எலும்பும் உடையவில்லை. அதுவாவது போகட்டும். குறைந்தபட்சம் அடியாவது பட்டதா? ரத்தம் கூட வரவில்லையே' என்பதுதான். அப்படி ஏதேனும் இருந்தால்தானே எதிரிகள்மேல் வழக்குத் தொடுக்கலாம். கிராமப் பஞ்சாயத்துத் தலைவன் ஆவதற்கு முன்பே, தலைமைப் பதவிக்குரிய செயல் எதையேனும் செய்து காட்டலாமா என்ற நினைப்பில் சனிஸ்வரன், பீஸ் இல்லாமலேயே தன் அரிய சேவையை அர்ப்பிக்க முன்வந்தான். "இப்பொழுதும் ஒன்றும் மோசமாகிவிடவில்லை. பிரின்ஸ்பால் விரும்பினால் நான் அவர் கரத்தைக் கட்டாரியால் கீறி ரத்தம் வரச் செய்கிறேன். அதையும் கன்னா மாஸ்டர் பேரில் புகார் எழுதிவிடலாம்" என்றதும் சின்ன பயில்வான் அவனைத் திட்டி உட்காரவைத்தான்.

ரங்கநாத்தும். ரூப்பனும் எல்லாவற்றையும் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தனரே தவிர ஏதும் பேசவில்லை; மனத்துக்குள் பிரின்ஸ்பாலைப் பற்றிப் பொருமிக் கொண்டிருந்தனர். வெளியே வந்த பின் ரூப்பன், "இந்த அயோக்கியப் பயல் அப்பாவைக் கோர்ட்டுக்கு இழுத்துக்கொண்டிருக்கிறான். முடிவில் ஜெயிலில் தள்ளி விட்டுத்தான் விடுவான் போலிருக்கிறது" என்றான்.

பிரின்ஸ்பாலின் வாய் மூலமாகக் கன்னாமாஸ்டர் நடத்திய நாடகத்தை வைத்தியர் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார். முழுவதும் கேட்டபின் அவர் சொன்னதற்கும் இந்த விஷயத்துக்கும் சம்பந்தமே இல்லை. மனிதனை ஒரேயடியாகக் குணப்படுத்திவிடக் கூடிய சாத்துவிக விஷயம் அது.

அவர் நிதானமாகச் சொன்னார்.

"ஜில்லாக் கல்வி அதிகாரியின் பக்தியைக் கண்டு நான் அசந்தே போய்விட்டேன். போன செவ்வாய்க்கிழமை நான் நகரத்துக்குப் போயிருந்தேன். பார்த்தால் ஹநுமான் ஜீ ஆலயத்தில் ஒருத்தர் பகவானின் முன் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கிக்கொண்டிருந்தார். அவர் எழுந்ததும் நான் அப்படியே பிரமித்துப் போய்விட்டேன். அவர் தாம் நமது கல்வி அதிகாரி, நமது கல்லூரியின் ஆய்வாளர். அவர் கண்

களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் மாலை மாலையாக வடிந்து கொண்டிருந்தது. நான் வணக்கம் தெரிவித்ததும் பதில் வணக்கம் தெரிவித்தபோது அவரது தழுதழுத்த குரல் 'ஹாவு…ஹாவு' என்று ஏதோபோல் ஒலித்தது. பிறகு அவர் கண்களை மூடிக் கொண்டுவிட்டார்."

"நல்ல எருமை மாட்டு நெய்யாக நாலைந்து சேர் எடுத்துக் கொண்டு போங்கள். பாவம், இத்தனை தர்மிஷ்டரான மனிதர் வனஸ்பதியைச் சாப்பிட்டுச் சாப்பிட்டுத் தம் தர்மத்தை வீணாக்கிக்கொண் டிருக்கிறார்."

"காலத்தின் லீலை."

ஒரு பழைய சுலோகத்தில் பூகோளத்தைப் பற்றி ஒரு விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது, அதாவது சூரியன் திசைகளுக்குட்பட்டு உதிப்பதில்லை. அது எங்கு உதிக்கிறதோ, அதுதான் கிழக்குத் திசையாகிவிடுகிறது. அதேபோல் உயர் சர்க்கார் அதிகாரி, வேலையின் நியதிக்குட்பட்டுச் சுற்றுப் பயணம் செய்வதில்லை. அவர் எங்கே போகிறாரோ அதுதான் அவரது சுற்றுப் பயணத் திட்டம்.

இந்தச் சூரியமண்டலச் சித்தாந்தத்துக்குட்பட்டு, ஒரு மகா புருஷர் அன்று மாலையே, கிட்டத்தட்ட நான்கு மணிக்கு, நகரத்திலிருந்து மோட்டார்காரை விரட்டியடித்துக்கொண்டு கிராமத்துக்கு வந்து சேர்ந்தார். வரும் வழியில் சாலையின் இரு புறமும் தம் குடி மக்களின் வயல்களைப் பார்த்து, சென்ற ஆண்டு செய்த பிரசங்கத்தின் பலனாக இந்த வருஷம் 'ராபி' பருவப் பயிர் நன்றாக விளைந்திருக்கிறதென்று தம்மைத் தாமே பாராட்டிக் கொண்டார். விவசாயிகள் அவர் கூறிய முறைப்படி விவசாயம் செய்கின்றனர். அவர்களுக்கு வயலை உழுதால் மட்டும் போதாது, எரு போடவேண்டும். அது மட்டும் போதாது; விதை விதைக்கவேண்டும் என்றெல்லாம் இப்பொழுது தெரிந்திருக்கிறது. இப்படி எல்லா விஷயங்களையும் புரிந்துகொள்ளத் தொடங்கியதிலிருந்து, புதிய விஷயங்களைப் பற்றிய அச்சம் அகன்றுள்ளது. குடியானவர்கள் முற்போக்குவாதிகளாகி விட்டனர். முன்னேற்றப் பாதையில் செல்கின்றனர். சுருங்கக் கூறினால் அவர்கள் இன்னும் குடியானவர்களாக இருக்கும் விஷயத்தில்தான் பின் தங்கியவர்களாக இருக்கின்றனர்.

மோட்டார் விரைந்து சென்றுகொண் டிருந்தது. பாதையில் மனம்போல் நடந்த பாதசாரிகள் புயலில் பறக்கும் சருகு

-களைப் போல் இங்கு மங்கும் சிதறி ஓடிச் சாலையின் ஓரத்தில் ஒதுங்கிக் கொண்டனர். இந்தச் சோம்பேறிக் குடி மக்கள் தம் மோட்டாரின் விரைவினால் இத்தனை சுறுசுறுப்பாவதற்காகத் தம்மைத் தாமே பாராட்டிக் கொண்டார். இது மட்டுமா? இவ்வளவு வேகமாகப் பறக்கும் மோட்டாரில் ஒரு கால் கட்டை விரலை நசுங்கவிடாமல் தப்பித்துக்கொள்ளவும் தெரிந்து கொண்டுவிட்டார்களே! சந்தோஷத்தினால் அவர் அடிக்கடி தமக்குள்ளே, பிறகு பாரத நாட்டினிடம் சொல்லிக் கொண் டார்: "சபாஷ், உனது எதிர்காலம் மிகப் பிரகாசமானது!"

வண்டி, சங்காமல் வித்தியாலத்தைக் கடந்து சென்றது. அன்டர்வேர், புஷ் ஷர்ட், கோடுகள் போட்ட பைஜாமா, மேலே பனியனில்லாத ஷர்ட்டும் அணிந்த மாணவர்கள் பலர் வாராவதி யில் உட்கார்ந்திருந்தனர். இரண்டு பக்கங்களிலிருந்தும் கௌதாரியின் கூக்குரல்போல் சத்தம் கேட்டுக்கொண் டிருந் தது. ஒரு விநாடியிலும் குறைவான நேரத்தில் அவர்களைப் பார்த்த அதிகாரி அவர்களது நடையுடை பாவனைகளிலிருந்து இவர்கள் மாணவர்களே என்ற முடிவுக்கு வந்துவிட்டார்.

வண்டி கிட்டத்தட்ட ஒரு பர்லாங்கு சென்றிருக்கும். அப் பொழுதுதான் அந்த மகா புருஷருக்குக் கடந்த நாற்பத்தெட்டு மணி நேரமாகத் தாம் இளைஞர்களிடையே எந்தச் சொற்பொழி வும் ஆற்றவில்லை என்பதும், இந்த இளைஞர்களுக்காகத் தாம் எத்தகைய கஷ்டங்களை யெல்லாம் மேற்கொண்டோம் என் பதும் நினைவில் எழுந்தன. 'இவர்களுக்காகக் கிராமத்து வீட்டைத் துறந்து சென்று நகரத்தில் பங்களா கட்டிக் கொண்டேன். குளத்தங்கரையில் உட்காருவதை விட்டு, காலையும், மாலையும் ஒரு சின்னஞ்சிறு அறையில் உட்காரும் வழக்கத்தை மேற்கொண்டேன்; என்னையே எவ்வளவு தூரம் மாற்றிக்கொண் டிருக்கிறேன்' என்று நினைத்தார் அவர்.

'அன்பான இளைஞர்களிடையே நாற்பத்தெட்டு மணி நேரம் பேசவில்லையே! ஹூம்! இவ்வளவு நேரம் லெக்சர் செய்யா மலேயே இருந்துவிட்டேனே! என் மனத்தில் எத்தனையோ உயரிய எண்ணங்கள் தோன்றின. ஆனால் நான் சுயநலவாதி யாக என்னுள்ளேயே அவற்றை வைத்துக் கொண்டிருந்து விட் டேனே! நான் எவ்வளவு பெரிய கஞ்சன்! இந்த நாட்டில் பிறந் திருந்தும் இவ்வளவு நேரம் வாயை மூடிக்கொண் டிருந்து விட்டேனே! சீசீ..."

நாற்பத்தெட்டு மணி நேரம்! அவர் வியப்புடன் நினைத்தார்–2880 நிமிஷங்கள். இதனை அறுபதால் பெருக்கினால் அத்தனை மடங்கு விநாடிகள் எனக்கு என்னவாயிற்று? பாரிசவாயு ஏதாவது வந்துவிட்டதா எனக்கு? கண் இமைப்பதற்குள் இத்தனை எண்ணங்களும் ஓடிவிட்டன மனத்தில். டிரைவரை நோக்கி, "வண்டியைத் திருப்பு" என்றார். திடீரென, "கல்லூரியை இன்ஸ்பெக்ட் செய்யப் போகிறேன்" என்றார்.

அவர் கல்லூரிக்குள் நுழையும்போது கல்லூரி விட்டாகி விட்டது. பையன்கள் வகுப்பிலிருந்து வெளியே வந்து மைதானத்தில் அமர்ந்திருந்தனர். உள்ளூர் அதிகாரிகள், தோட்டங்களில் சோழி விளையாடும் சூதாடிகள், கள்ளுக்கடையில் உட்கார்ந்திருக்கும் ரௌடிகள் ஆகிய யாவரும் சற்றைக்கெல்லாம் வந்து கூடி விட்டனர். பெரிய கூட்டம் கூடி விட்டது. அவர்கள் வராமலிருந்தாலும் கூட்டம் நடந்திருக்கும். வெட்கம் கெட்ட பேச்சாளர்களுக்கு அவர்கள் பேச்சைக் கேட்க ஆள் இல்லாவிட்டாலும் விளக்குக் கம்பம் போதும். தனியாகவே கூட்டத்தை நடத்திவிடுவார்கள். இன்றோ உண்மையிலேயே நல்ல கூட்டம் கூடிவிட்டது. பையன்களால் கண்கூடாகத் தெரிந்த நன்மை இது. பையன்கள் கட்டடத்துக்குள் இருந்தால் கல்லூரி, வெளியே வந்தால் கூட்டம் இரண்டும் நடக்கும்.

அதிகாரி பேசினார்: 'மாணவர்களே, நீங்கள் தாம் நாட்டின் எதிர்காலம்' என்றார். ஆசிரியர்களை நோக்கி, 'நீங்கள் தாம் நாட்டின் எதிர்காலத்தைச் சமைப்பவர்கள்' என்றார். ஆசிரியர், மாணவர்கள் இருவருக்குமே இது தெரிந்த உண்மை. மாணவர்களிடம் ஒழுக்கம், கட்டுப்பாடு குறைந்துவிட்டது என்று அதட்டி, அவர் ஆசிரியர்களை நோக்கி, 'நீங்கள் அவர்களுக்கு ஒழுக்கத்தையும், கட்டுப்பாட்டையும் போதிக்கவில்லை' என்று குற்றம் சாட்டினார். 'தேசியகீதம். தேசியக் கொடியின் மகத்துவத்தைப்பற்றி மாணவர்கள் ஒன்றுமே அறியாதவர்களாக இருக்கின்றனர். இந்தக் குறையெல்லாம் அறிந்திருக்கும் ஆசிரியர்களோ, சம்பள உயர்வும், கிராக்கிப்படி உயர்வும் கேட்டுக்கொண்டிருக்கின்றனர்.'

இப்படியெல்லாம் கூறிக்கொண்டே போன அதிகாரி, மாணவர்களும், ஆசிரியர்களும், தங்களைப் பற்றிக் கூறிய விஷயங்களைப் பற்றிச் சிந்திப்பதற்கு முன்பே, ஒவ்வொரு சொற்பொழி

வாளரும், கல்வி நிலையங்களில் மறக்காமல் கூறும் விஷயத்துக்கு வந்து விட்டார்.

'நமது கல்வி முறை மோசமானது. இந்தக் கல்வியைப் பெறுபவர்களின் குறிக்கோள் குமாஸ்தாவாகவேண்டும் என்பதுதான்' என்றவர், மாணவர்களிடம், 'இக் கல்வித் திட்டத்தில் அடியோடு மாற்றம் காணவேண்டியது அவசியம்' என்பதை வற்புறுத்தினர். நூற்றுக்கணக்கான வித்வான்களையும், ஆயிரக்கணக்கான கமிட்டிகளையும் உதாரணம் காட்டி, 'நமது கல்வி மோசமானது' என்பதை நிரூபித்தார். விநோபா பாவே, காந்தியடிகளைக் கூட மேற்கோள் காட்டினர். கல்லூரியின் மானேஜர், வைத்தியர் தலை அசைத்து ஆமோதித்து, 'நமது கல்வி முறை மிக மோசமானதுதான்' என்றார். தொடர்ந்து பிரின்ஸ்பாலும் ஆசிரியர்களும், தெருவில் போகிற குண்டர்களுங்கூட இந்தக் கூற்றை ஆமோதித்தனர். அவரது சொற்பொழிவினால், கள் குடியர்கள், சூதாடிகளுக்குக் கூட நமது கல்வி முறை மோசமானது என்பதில் முழு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது.

'கல்வித் துறையில் கடந்த நூற்றாண்டில் நாம் அடைந்த மகத்தான விஷயம், நமது கல்விமுறை மோசமானது என்பதை நாம் முழுமையாக விரைவாக அறிந்துகொண்டதுதான்' என்றார் அவர். இதன் பின், 'மாணவர்கள் விவசாயத்தில் ஈடுபடவேண்டும், நல்ல பால் அருந்தவேண்டும், தேக நலனைப் பாதுகாக்கவேண்டும். எதிர்காலத்தில் காந்தியாக, நேருவாக விளங்கத் தங்களைத் தயார் செய்துகொள்ளவேண்டும்' என்று பல விஷயங்களை, மாணவர்களே அவருக்குச் சொல்லக் கூடிய விஷயங்களை விரிவாகக் கூறினர்.

அத்துடன் விடவில்லை அவர். ஒற்றுமை, தேசீயமொழிப் பற்று, சகவாழ்வு போன்ற பல விஷயங்களைப்பற்றிப் பொன்மொழிகளாக உதிர்த்தார். முடிவில் கல்லூரியின் பிரச்னைகளைப் பற்றித் தாம் கவனிப்பதாக வழக்கம்போல் வாக்களித்துவிட்டு, சேவைக்குக் கை மேல் பலனைக் கிடைத்த இனிப்பைச் சாப்பிட்டு, தேநீரைக் குடித்துவிட்டு, மீண்டும் அறுபது மைல் வேகத்தில் பிரயாணத்தைத் தொடர்ந்தார்.

"சகோதரர்களே! சகோதரிகளே!" என்று அவர் கூறியதைக் கேலி செய்தபடி மாணவர்கள் தங்கள் தங்கள் இல்லம் திரும்பினர். கல்வித் துறையில் அடியோடு மாற்றம் காணப் பியூன்கள், தோட்டக்காரர்கள், கூலியாட்கள் மட்டும் அந்த யோச

லையை அமல் நடத்தத் தங்கிவிட்டனர். குமாஸ்தா, இனிப்புப் பண்டம் இருந்த தட்டில் எஞ்சியிருந்த முந்திரிப் பருப்பை வாயில் போட்டுக்கொள்ள எடுத்தவர், ஏதோ நினைத்தவராய் அதைச் சாக்கடையில் எறிந்துவிட்டார்.

## அத்தியாயம் 16

பயில்வான் பத்ரி எங்கோ வெளியே போயிருந்ததால் மாடியில் ரங்கநாத் மட்டும் தனியே இருந்தான். நல்ல குளிர் காலம். குளிரின் ஆனந்தத்தை அநுபவிக்கவேண்டி, பத்ரி தம் கட்டிலை அறைக்கு வெளியே போட்டுக்கொண்டிருந்தார். ரங்கநாத் மட்டும் அறைக்குள் தூங்கினான்.

இரவு மணி பன்னிரண்டு இருக்கும். அவனுக்குத் தூக்கமே வரவில்லை. கட்டிலுக்கு அருகே, ஒரு மரப்பெட்டியில் பாட்டிரியால் இயங்கும் ரேடியோ ஒன்றிருந்தது. கல்லூரிக்கான புத்தகங்கள் வந்த மரப்பெட்டி அது. புத்தகங்கள், பிரின்ஸ்பால் வீட்டுக்கும், பெட்டி, ரிப்பேர் செய்தபின் வைத்தியரின் வீட்டுக்கும் வந்து சேர்ந்திருந்தன. ரேடியோகூடக் கல்லூரியினுடையதுதான். ரங்கநாத் வந்த பிறகு வைத்தியர் அதைக் கல்லூரியிலிருந்து வரவழைத்திருந்தார். இது வந்ததுமே ரூப்பனின் திறமையால் உருவாகியிருந்த, காதிலே வைத்துக் கொண்டால் உள்ளூர் ஸ்டேஷன் மட்டும் கேட்கும் கருவிக்கு வேலையில்லாமல் போயிற்று. இரவு சிலமணி நேரங்களைத் தவிர, யார் கேட்டாலும் கேட்காவிட்டாலும் எப்போது பார்த்தாலும் ரேடியோ முழங்கியது.

இப்போது ரேடியோவில் சாஸ்திரீய சங்கீத நிகழ்ச்சி தன் முடிவை நெருங்கிக்கொண்டிருந்தது என்பது அதன் களேபரத்திலிருந்து தெரிந்தது. வயலினும், தபலாவும் மணிக்கு இருநூறு மைல் வேகத்தில் பாய்ந்துகொண்டிருந்தன. இரு மோட்டார்

களும் ஒன்றோடொன்று மோதி தவிடுபொடியாகிவிடும் என்று தோன்றியது. உச்சகட்டத்தில் வயலின் வாசிப்பவர் திடீரென்று உரத்த ஸ்வரத்தில் கிர்....ர்....ர்.... என்று இழுத்தது ரங்கநாத்தின் இதயத்தில் கூர் வேலாகிப் பாய்ந்தது. தொடர்ந்து சங்கீத நாடக அகாதமியின் அஸ்திவாரத்தையே கலகலக்கச் செய்யப் போதுமானது என்று தோன்றும்படியாக, தபலா, தடாலென்று இடியாக இடித்தது. ரேடியோ எங்கேயாவது வெடித்துச் சிதறிவிட்டதோ என்று ரங்கநாத் துள்ளி ஓடி வந்து பார்த்தான். ஆனால் அதுவோ, 'காஸபிளாங்கா' போல் அசையாமல் உறுதியுடன் நின்றவாறு சங்கீத உலகத்தின் பயங்கரமான மோதல்களின் இசையை முன்போலவே ஒலிபரப்பிக்கொண் டிருந்தது.

இப்பொழுது வயலின் வாசிப்பவர் குழைந்தார். ஆனால் தபலாக்காரர் வீராவேசத்துடன் பாய்ந்து பாய்ந்து தாக்கினார். நீண்டதொரு பெருமூச்சுடன் ரங்கநாத் ரேடியோவைப் பட்டென்று நிறுத்தினான்.

இருட்டு! குளிர்காலத்து இரவு தனது ஆதிக்கம் முழுதையும் செலுத்திய கனத்த இருள். இத்தகைய சந்தர்ப்பங்களில் கடவுள் என்று ஒருவர் இருக்கிறார் என்ற நம்பிக்கை ஏற்படுகிறதோ இல்லையோ, பிசாசுகளைப்பற்றிய நம்பிக்கை ஏற்பட்டுவிடுவதுண்டு. ரங்கநாத்துக்கு அப்படியொன்றும் பயம் இல்லை. ஆனால் எப்படியோ இருந்தது. உண்மையாகப் பார்த்தால் பயத்தின் இன்னொரு பெயர்தான், எப்படியோ இருக்கிறது.

பயத்தால், தன் முழுவேகத்தை அவன்மீது பிரயோகிக்க முடியவில்லை. ஏனெனில் அப்போது அவன் ரூப்பனைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்திருந்தான். ரூப்பனின் நினைவு வந்ததும், பேலா என்ற பெண்ணின் நினைவும் வந்தது. ரங்கநாத் அவளைப் பார்த்ததில்லை. ரூப்பன் அவளுக்குக் காதற் கடிதம் எழுதியதாகக் கேள்விப்பட்டிருந்தான். அந்தக் காதற் கடிதத்தின் நீளம், அகலம், ஆழத்தைப்பற்றி அவனுக்குத் தெரியாது. ஆனால் திரைப்பாடல்களின் சில வரிகளை இணைத்து வாக்கியங்கள் அமைக்கப்பட்டிருந்ததாக மட்டும் வதந்தி அவன் காதுகளுக்கு எட்டியிருந்தது. பேலாவின் அத்தையே வீட்டின் ஒரு மூலையில் கிடந்த அதைப் பார்த்து எடுத்தாள் என்பது பிரசித்தம். பிறகு அவள் அதைக் கயாதீனையே படித்துக்

காண்பிக்கச் சொல்லியிருக்கிருள். முதல் இரண்டு வாக்கியங் கள்வரை கயாதீனுக்கு ஒன்றுமே தலைகால் புரியவில்லையாம். பிறகு, 'என்னை உனது நெஞ்சாரத் தழுவிக்கொள், என் வழித் துணைவியே' என்ற வரியைப் படித்த பிறகே, அவரது மூளையின் கதவுகள் தடாலெனத் திறந்துகொண்டன. இது யாரோ பேலாவைக் குறித்து எழுதி இருக்கிருர்கள் என்பதைப் புரிந்து கொண்டார். கடைசி வரியை நெருங்க நெருங்க, விஷயம் முற்றும் தெளிவாகிவிட்டது. ஏனென்ருல், 'என் காதற் கடிதத் தைப் பார்த்துக் கோபம் கொள்ளாதே. நீதான் என் வாழ்க்கை, நீயேதான் என் உயிர்மூச்சு' என்று எழுதி இருந்ததாம். இதை எழுதியவர், ஸ்ரீ. ரூ. என்பவர்.

கயாதீனைத் தவிர, பிரின்ஸ்பாலும் இதைப் படித்தார் என்று காதில் விழுந்தது. அதுவுங்கூடக் கயாதீன், ரூப்ப னின் ஒழுங்கீனமான நடத்தையைப் பிரின்ஸ்பாலுடன் இணைத்திருந்ததே காரணம். ஏன் அப்படிச் செய்தார் என்று தெரியவில்லை.

'இது காதற் கடிதம் இல்லை. சிறந்த கவிதைகளின் தொகுப்பு. எழுதியவர் 'ரூ' என்பதால் இதன் இலக்கிய மதிப்பு குறைந்து விடாது' என்று பலவாறு எடுத்துரைத்துச் சமாதானங்கள் கூறிய பின்னும், கயாதீன் இந்தக் கடிதத்தைத் தரங்கெட்ட ஒழுக்கத்துக்கு ஒரு பிரமாணமாகவே கருதிஞர். இதற்குப் பின் பிரின்ஸ்பால் பல கவிதைகளிலிருந்து இதுபோன்ற பல வரி களைப் படித்து மேற்கோள் காட்டி, இலக்கியத்தில் இவ்விதக் கருத்துக்கள் தாராளமாக, பரவலாகக் கிடைக்கும் என்பதை விளக்கப் பெரிதும் முயன்ருர். கயாதீன், "உமது இலக்கியம் உமது அயோக்கியத்தனத்துக்குச் சாட்சி" என்று கூறிவிட்டார்.

முடிவில் இருவருமாகச் சேர்ந்து செய்த முடிவு: 'இந்தக் காதல் கடிதம் பற்றிய விஷயம் இத்துடன் நிற்கவேண்டும். வெளியே தெரியக்கூடாது' என்பதே.

இதற்கு மறுநாளே சிவபால்கஞ்சில் பலவிதமான வதந்திகள் பரவின. ஒன்று, கன்ஞ மாஸ்டர் கட்சியைச் சேர்ந்த யாரோ ஒரு மாணவனே பேலாவுக்குக் காதற் கடிதம் எழுதிஞன் என்பது. மற்ருென்று வேண்டுமென்றே இதில் ரூப்பனின் பெயர் இழுத்துவிடப்பட்டிருக்கிறது என்பது. போலாவே முத லில் ரூப்பனுக்குக் காதல் கடிதம் எழுதிஞள். ரூப்பன் அதற் குப் பதில் எழுதிய கடிதம் கயாதீனின் கையில் சிக்கிவிட்டது;

பாவம்! இப்படியும் ஒரு செய்தி பரவியது. மிகவும் பிரசித்த மாகப் பரவிய செய்தி பேலா நடத்தை கெட்ட பெண் என்பதே.

இந்த மூன்றாவது செய்தி விளைவித்த அற்புதம் என்ன வென்றால் தற்சமயம் ரங்கநாத் பயத்தை விரட்டியடித்துவிட்டுப் பேலாவைப்பற்றிச் சிந்திக்க ஆரம்பித்துவிட்டான். ஆமாம், அவனுக்குக் குளிர்விட்டுப் போய்விட்டது.

அன்று திருவிழாவிலிருந்து திரும்பி வந்தபோது இந்தக் காதற் கடிதத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்ததும் ரூப்பன் கூறிய பதிலிலிருந்து மீண்டும் இதைப் பற்றிப் பேசும் துணிவு ரங்க நாத்துக்கு ஏற்படவில்லை. இன்றோ இந்த ஏகாந்தமான இரவு வேளையில், பேலாவைப்பற்றி அறியும் ஆவலைத் தணித்துக் கொள்ள கற்பனையும், கைச் சேட்டையினால் புலன் இன்பம் காணும் மகிழ்வும் அடக்கப்பட்ட உணர்ச்சிகளும் பெரிதும் உதவின. இவை பெரும்பாலும் நம்முடைய கலைகளுக்குத் தூண்டுகோல்களாக இருப்பதால் ரங்கநாத் இந்த விநாடிகளை ஒரு கலைஞன் என்ற முறையில் உயிர்ப்பித்துக் கொண் டிருந்தான்.

அவள் எப்படி இருப்பாள்? 'மதுமதி'யில் வைஜயந்திமாலா மாதிரியா? 'கோதானி'ல் சபா கோடே மாதிரியா? 'அபி ஜானி'ல் வஹீதா ரஹ்மான் மாதிரியா? இல்லை இல்லை. இவர் கள் எல்லாரும் இந்தியத் தாய்மார்கள் போலாகிவிட்டனர். பேலா இன்னமும் இளமையாக, பசுமையாக இருப்பாள். எப்படி இருப்பாள் அவள்? தெரியாது. எப்படி இருந்தாலும், என்னவானாலும் கடவுள்மீது ஆணையாக, அவள் ஒப்பற்ற வளாய், இணையற்றவளாகவே இருப்பாள். "குதா கி கசம் லாஜவாப்" என்ற திரைப்படப் பாடலின் ஓர் அடி ரங்கநாத் தின் தொண்டையில் எலும்புத் துண்டு மாதிரி சிக்கிக் கொண்டது. ஆனாலும் அவன் தனக்குள் சிரித்துக்கொண்டான். இருட்டிலே அவன் மிக மிக அழகான, கிட்டத்தட்ட ஒன்னரை அங்குல நீளமுள்ள இனிய புன்னகை பூத்தான்.

மறுநாள் ரங்கநாத் மாடியறையில் தனியாகப் படுத்திருந்த போது பேலாவின் நினைவு வரவில்லை. கோபத்தினால் ஜிவுஜிவு வென்றிருந்த வைத்தியரின் தேஜஸ் நிறைந்த முகமண்டலமே அடிக்கடி கண்முன்னே வந்தது.

அன்று பகலில் சனிஸ்வரன், மற்றும் காளிகா பிரசாதின் முயற்சியினால் உருவாக்கப்பட்ட கூட்டுறவுப் பண்ணையின்

திறப்பு விழா நடைபெற்றது. திறப்பு விழாவுக்காக வந்திருந்த அதிகாரியிடம் வைத்தியர், கூட்டுறவுச் சங்கத்தில் நடைபெற்றுவிட்ட கையாடலைக் குறிப்பிட்டு, ஒரு விண்ணப்பத்தையும் கொடுத்தார். அதில் கையாடல் செய்யப்பட்டுவிட்ட தொகையைச் சர்க்கார் உதவிப் பணமாகத் தந்து உதவும்படி கோரப்பட்டிருந்தது. சர்க்கார் இந்த உதவி செய்யாவிடில், சர்க்கார் அதிகாரிகள், கூட்டுறவு இயக்கம் முன்னேறுவதை விரும்பவில்லை என்பதே அர்த்தம் என்று வைத்தியர் மிகவும் அமைதியான குரலில் எடுத்துரைத்தார்.

இதைக் கேட்டதுமே, துர்வாசர் போன்ற வைத்தியரின் கோபம், ஹிட்லரின் சர்வாதிகாரத்தனம், ஜவாஹர்லாலின் ஆத்திரம் எல்லாம் ஒன்ருகச் சேர்ந்து சீறிப் பாய்ந்தது. "நீங்கள் எல்லாம் நாட்டை இந்த முறையில்தான் முன்னேற்றப் போகிறீர்களா? இந்த, ஆனல், கீனல், வந்து, அதாவது இதெல்லாம் என்ன ஐயா? இது கையாலாகாதவன் பேசுகிற பேச்சல்லவா? எதையும் செய்யத் தகுதியற்றவர்கள், இம் மாதிரி தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டு நாட்டையும் ஏமாற்றுகின்றனர். உங்களுடைய முடிவு தெளிவாகத் தெரிய வேண்டும். இந்த, ஆனல். கீனல், வந்து... தூ. தூ."

இதைத் தொடர்ந்து, நாட்டின் மோசமான நிலை குறித்து வைத்தியர் ஒரு பிரசங்கமே செய்து விட்டார். பிரசங்கம் செய்த பின்பும் அவர் அமைதி அடையவில்லை. சற்று நேரம் முணுமுணுத்துக் கொண்டே இருந்தார். அந்த அதிகாரியின் பணிவுள்ள தன்மையையும் மீறி முணுமுணுத்தார். தொடர்ந்து மற்றவர்கள் முணுமுணுக்கலாயினர். சனிஜ்வரனின் நிகழ்ச்சி முன்பே முடிந்து போய்விட்டதால் இந்த முணுமுணுப்பு அவனது வெற்றிப் பெருமிதத்தை எந்த விதத்திலும் பாதித்ததாகத் தெரியவில்லை. ஆயினும் முடிவில் எங்கும் முணுமுணுப்பே மேலோங்கி நின்றது.

ரங்கநாத் இத்தகைய முணுமுணுப்பை நகரத்தில் எல்லா இடங்களிலும், எல்லாச் சமயங்களிலும் கேட்டதுண்டு. நம் நாடு முணுமுணுக்கும் நாடு என்பதை அவன் அறிவான். காரியாலயங்களில், கடைகளில், தொழிற்சாலைகளில், பார்க்குகளில், ஹோட்டல்களில், பத்திரிகைகளில், கதைகளில், கதையில்லாக் கதைகளில், நாலா பக்கங்களிலும், எல்லாத் துறைகளிலும் மக்கள் முணுமுணுத்துக் கொண்டே இருக்கிறனர்.

இன்றைய யுகத்தின் விழிப்பு இதுதான் என்பதை ரங்கநாத் நன்கறிவான். இங்கே கிராமத்திலும் அவன் அதே முணுமுணுப்பைக் கேட்கிறான். குடியானவர்களும், அரசாங்க ஊழியர்களும், அதிகாரிகளைப்பற்றி முணுமுணுக்கிறார்கள். அரசாங்க ஊழியர்களோ மக்களிடமிருந்து விலகி நின்று, மக்களுக்கும், அரசாங்கத்துக்கும் தங்களுக்கும் தொடர்பில்லை என்பது போல் அரசாங்கத்திடமும் அதிருப்தியைக் காட்டி முணுமுணுக்கின்றனர். கிட்டத்தட்ட எல்லாருக்குமே ஏதோ ஒரு துன்பம். ஏதோவொரு கஷ்டம். ஆனால் யாருக்குமே அத்துன்பத்தின் மூலகாரணம் எதுவென்று தெரியாது. கஷ்டத்தில் அந்த அந்தச் சமயத்தில் எந்த எந்தக் காரணம் கிடைக்கிறதோ அதைப்பற்றி முணுமுணுக்கிறார்கள்; அவ்வளவுதான்.

வைத்தியரிடமிருந்த சிறப்பு அவர் முணுமுணுத்ததில்லை. ஆனால் அவர் முணுமுணுத்ததைக் கண்டதும் ரங்கநாத் மனம் ஒடிந்துபோனான். முதலில் இடியாக இடித்து, பின் சொல் மாரியாகப் பொழிவார் என்று அவன் எதிர்பார்த்தான். ஆனால் அவரோ முதலில் கர்ஜித்தார். பின் அந்த அதிகாரி குழைவதும் முணுமுணுப்பதுமாய்த் தம் காரியத்தை நடத்தியவாறு, 'கூட்டுறவுச் சங்கத்தின் கணக்குவழக்குகளை ஸ்பெஷல் ஆடிட் செய்வது அவசியம்' என்று ஜாடையாகக் குறிப்பிட்டதும் முணுமுணுத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்.

ரங்கநாத் நினைத்தான்: 'இது கர்ஜனை புரிபவர்களின் நாடல்ல: முணுமுணுப்பவர்களின் நாடு.'

இரவின் அமைதியைக் கிழித்துக்கொண்டு யாருடைய காட்டுமிராண்டித்தனமான குரலோ ரங்கநாத்தின் செவிப்பறையை வந்து தாக்கியது. குஸ்ஹார் பிரசாத் தன் வீட்டு வாசலில் உட்கார்ந்துகொண்டு யாரையோ திட்ட ஆரம்பித்தான். முணுமுணுப்பவர்களின் வயது முதிர்ந்த தலைவர். ஆனால் அவர் அழவில்லை. இதிலுருந்து இந்தத் திட்டுகள் சின்ன பயில்வானைக் குறித்தல்ல என்பது தெரிந்தது. யாருக்காக? யாரை நோக்கி எதற்காக, இந்த வசை மாறி என்பதைப் புரிந்து கொள்வது கஷ்டமாக இருந்தது. ஏனென்றால் குஸ்ஹார் பிரசாத் சின்னவனைத் திட்டாமல், வேறு யாரையேனும் அவர் திட்டினால் அதற்கு அர்த்தம் எதுவும் இருக்காது. காட்டிலே மயில் ஆடுவதுபோல, திறப்பு விழாக்களில் தலைவர்கள் சொற்பொழிவாற்றுவது போல் ஓர் உணர்ச்சி வயப்பட்ட நிலை. அவ்வளவுதான்.

குரல்கள். வெறும் குரல்கள். குஸ்ஹுர் பிரசாத் இடையிடையே கர்ஜிக்கிருர். பின் மௌனமாகிவிடுகிருர். கிராமத்தின் இன்னெரு கோடியிலிருந்து நாய் குரைப்பது கேட்கிறது. அது திடீரென்று 'கேய் — க் கேய்' என ஊளையாக மாறியதும், பின்னங் கால்களிடையே வாலைச் சுருட்டிக் கொண்டு, முகத்தைத் திருப்பிப் பின்ஞல் பார்த்தவாறு, இடது புறத்திலிருந்து வரும் தடியடியை ஏற்றவண்ணம் தறி கெட்டு ஓடும் ஒரு நாயின் உருவத்தைக் கண்ணெதிரே கொணர்ந்தது. இதைத் தொடர்ந்து பல நாய்கள் குரைத்து ஊளையிட்டன. ராமாதீன் பீகம் கேடவியின் வீட்டுவாசலில், யாரோ இளைஞன் ஒருவன் கீச்சுக் குரலில் கத்துவது கேட்கிறது. கூர்ந்து கவனித்தால் தெருக்கூத்தின் ஒரு பாடலெனத் தெரிகிறது.

"நானறிந் தேன், உன் வாய் மொழியால்
காதலித்தாய் முன்னெரு ஏழையை யென"

இந்த அடிகளையே அவன் திரும்பத் திரும்பப் பாடுகிருன். பாடிப் பாடி அவனுக்குத் தொண்டையை அடைத்துக் கொள்கிறது. குரல் நடுங்குகிறது. தன் காதலி முன்னெரு ஏழையைக் காதலிக்க நேர்ந்த துர்ப்பாக்கியத்துக்காக அவன் கண்ணீர் விடுவதாகத் தோன்றியது. கிராமத்தைச் சேர்ந்த நாலைந்து சோம்பேறிகள் கீழே தெருவிலே நடந்து போகிருர்கள். கயாதீனின் வீட்டில், திருட்டு நடந்த பின் தினமும் பின்னிரவில் இவர்களே காவல் பணி புரிகின்றனர். 'விழித்துக் கொண்டிரு' என்ற எச்சரிக்கைக் குரலுடன் இன்னும் சில கோஷங்களைக்கூட எழுப்புகின்றனர்.

இந்தக் கோஷமும், மற்றெல்லாக் கோஷங்களைப் போல, அர்த்தமற்றதாய், பயனற்றதாய் இருக்கிறது. இப்போது நாலணு புழக்கத்தில் இல்லை. இருபத்தைந்து பைசா வந்து விட்டது. நாலணுவின் சகாப்தம், வெள்ளியின் சகாப்தம் முடிந்து விட்டது போல் காந்திஜியின் சகாப்தமும் முடிந்துவிட்டது. ஆயினும் யோசிக்காமல், தயங்காமல், புரிந்து கொள்ளாமல் கோஷங்கள் போடுகின்றனர்.

"ஒரு நாலணு வெள்ளிக்கு!
ஜய்! மகாத்மா காந்திக்கு!"

எங்கோ ஒரு ரெயில் போகிறது. இன்ஜினின் விசிலடிக்கும் ஓசை-இந்தக் குரல்கள், சத்தங்களை யெல்லாம் சில விநாடிகளுக்குப் பின்னே தள்ளிவிடுகின்றன. தெளிவற்ற ஓசைகள், சத்தங்கள்.

இருளின் ஆட்சியினிடையே அவன் எப்பொழுது கண்ணயர்ந்தானே அவனுக்கே தெரியாது. உறக்கத்தினிடையே அவன் எங்கோ லிப்டில் உயர உயரப் போவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. திடீரென்று மூன்று நான்கு மாடிகளை ஒரே யடியாய்த் தாவி மேலே போய்விடுகிறுன். ரங்கநாத் தனக்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டான். புரண்டு படுத்தான். தேங்காய் எண்ணெயின் வாசனையுடன் மலிவான செண்டின் நெடியும் கலந்து அவன் நாசியில் ஏறியது. அது வாசனையும் அல்ல, நாற்றமும் அல்ல. வாசனை நெடி, அவ்வளவுதான். வளையல்களின் மெல்லொலி அவனது உறக்கத்தைப் பலமாகத் தாக்கியதும் அந்த அதிர்ச்சியில் ஒரு கணம் வாழ்க்கை முழுதும் கோணுரக், கஜுராஹோவின் சிறப்பை ஆராய்வதில் செலவிட்டும், கரைகாண இயலாத ஒருவனைப்போல் கலங்கினுன் ரங்கநாத்.

அவள் கட்டிலின் ஓரத்தில் அமர்ந்திருந்தாள். அவள் தனது ஒரு கரத்தை ரங்கநாத்தின் உடலின் மறுபுறமும் கட்டிலின் மீதும் ஊன்றிக் கொண்டிருந்தாள். தன் நெஞ்சின் மீது அழுந்தியிருக்கும் இரு நகில்களின் ஸ்பரிசத்தை அவனுல் உணர முடிந்தது. அந்த நகில்களுக்கும், அவனது மார்புக்கு மிடையே அணிந்திருந்த ஆடைகளைத் தவிர கனத்த, தடித்த போர்வையும் இருந்தது. இருப்பினும் அந்த வெப்பத்தை, தாபத்தை, அழுத்தத்தை அவனுல் உணர முடிந்தது. ரங்கநாத்துக்கு மூச்சே நின்றுவிடும் போல் இருந்தது.

போர்வை அவன் முகத்திலிருந்து அகற்றப்பட்டு விட்டிருந்தது. ஆயினும் இருட்டில் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள முடியவில்லை. அவன் மார்பின் மீதிருக்த வெப்பமான அழுத்தம் அதிகரித்துக்கொண்டே போயிற்று. மென்மையான பட்டுப் போன்ற ஒரு கன்னம் அவனது கன்னத்தின் மீது வந்து படிந்தது. ஆழ்ந்த, உள்ளே அடக்கப்பட்ட விம்மலுடன் ஒரு குரல் கேட்டது: "ஹூம்—தூங்கிவிட்டீர்களா?"

ரங்கநாத்தின் உறக்கம் கலைந்துவிட்டது. அவன் தன் தலையை வேகமாய் அசைத்தான். அவன் வாயிலிருந்து விசித்திரமான ஒரு குரல் ஒலித்தது: "யார்? யாரது?"

ஒரு கணம் அவனது மார்பின் மீது சாய்ந்திருந்த மார்பகத்தின் அசைவே, நெஞ்சத் துடிப்பே நின்றுவிட்டது போலிருந்தது. அவள் சட்டென்று துள்ளி எழுந்து கட்டிலிலிருந்து

தூரச் சென்று நின்ருள். நின்றவள், அடங்கிய குரலில், "ஐய்யய்யோ .... அம்மா .... டி" என்ருள்.

அம்மாவிடம் மரியாதை காட்டுவது நல்லதுதான். ஆனல் இப்போது இந்தச் சொற்கள் அவளுக்கு ஏற்பட்ட அதிர்ச்சியையே குறித்தன. ரங்கநாத் போர்வையை உதறி விட்டு எழுந்திருப்பதற்குள் அவள் மாடியிலிருந்து மாடியாகத் 'தாவிக் குதித்து கொடியில் மறைந்தே போனுள்.

திறந்திருந்த கதவின் வழியாக வெளியே வந்து ரங்கநாத் மொட்டை மாடியில் நின்ருன். நல்ல குளிர். நெடு நேரம் வரை கவனமாகக் கேட்டுக்கொண் டிருந்தான். காற்றின் சலசலப்பைத் தவிர வேறெந்த ஓசையும் காதில் விழவில்லை. வந்தவளுக்கு "ஐயோ, அம்மாடி" என்ற புனிதமான நாம ஸ்மரணையைத் தவிர வேறு செய்தி எதுவும் சொல்வதற்கில்லை போலும்.

உள்ளே வந்து கதவை மூடி விட்டு, கட்டிலில் படுத்ததும் அவனுக்குப் பல விஷயங்கள் புரிந்தன. முதலாவது, கோணுரக், புவனேஸ்வர், ராஹோ முதலிய இடங்களிலுள்ள பெண்களின் சிலைகளின் விம்மிப் புடைத்த பெருத்த மார்பகங்கள், ரத்தமும் சதையும் கொண்ட உருவெடுத்துவிட்டால் மனிதனைப் பைத்தியமாய்க் கிறங்கடிக்கப் போதுமானவை என்பது தான். இந்தியச் சிற்பக் கலை, தொல் பொருள் ஆராய்ச்சி பற்றி அவன் இவ்வளவு படித்திருப்பதும் அரை குறையானது, உபயோகமற்றது என்று அவனுக்குத் தோன்றியது. இந்தியக் கலைகளில் டாக்டரேட் வாங்குவதற்குப் பதிலாக, சுர சுந்தரியின் போஸில் இருக்கும் உயிருள்ள இரு மார்பகங்களைப் பற்றிக்கொள்வதே மகத்தானது என்றும் நினைத்தான்.

இந்த எண்ணங்களையெல்லாம் அடியோடு ஒரு பக்கம் ஒதுக்கித் தள்ளி விட்டு, அவன் மனத்தைக் குடைந்துகொண் டிருந்த இன்னெரு விஷயம், "அடே! நீ ஒரு முட்டாள்" என்பதுதான். 'நீ பேசவேண்டிய அவசியம் என்ன இருந்தது? நீ பயந்துவிட்டாய்! அவள் மேலும் தொடர ஏன் நீ சந்தர்ப்பம் அளிக்கவில்லை?'

'அடே, நீ முட்டாள் அல்ல, கழுதை. தவறவிட்ட சந்தர்ப்பங்களில் இன்னுமொன்றைச் சேர்த்துக்கொண்டாயா?'

'அடே, நீ வேருென்றுமில்லை. ஓர் இந்திய மாணவன் தலையில் படத்திலிருக்கும் பெண்தான் எழுதி யிருக்கிறது.'

ரங்கநாத் மீண்டும் தூங்க முயன்ருன். தூக்கம் எங்கே வருகிறது? அவனது கரம் அவனையுமறியாமலேயே மார்பைத்

தடவிப் பார்த்துக்கொண்டது. இப்பொழுது அங்கே என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. துயரப்பட்டது மனம். ரோமம் அடர்ந்த அவனது மார்புதான் இருக்கிறது.

யார் அவள்? இதைப் பற்றி அவனால் அதிகம் சிந்திக்க முடிய வில்லை. ஏனென்றால் அவனது சிந்தனைத் தடத்திலே இரு மலைகள் எதிரிட்டு நின்றன.

# அத்தியாயம் 17

பொழுது விடிந்ததும் ஜோக்நாத்தைப் போலீசார் கைது செய்துவிட்டார்கள் என்ற செய்தி கிராமம் முழுவதும் பரவி விட்டது. வைத்தியரின் ஆள் என்று கூறப்படும் ஜோக்நாத்தைத் தொடப் போலீசாருக்கு எப்படித் தைரியம் வந்தது என்பதே ஜனங்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. கிராமத்திலிருந்த குண்டர்கள், ரௌடிகள், நல்லவர்கள் என்ற இருதரப் பாருமே திகிலடைந்தனர். 'வைத்தியரின் கையாளையே போலீஸ் விட்டுவைக்கவில்லை; நாம் எந்த மூலை?' என்று குண்டர் கள் அஞ்சினர். 'போலீஸ் தங்கள் சகபாடிகளிடமே இப்படிக் கைவரிசையைக் காட்டத் தொடங்கிவிட்டதென்றால், சமயம் நேரும்போது நம்மிடம் எப்படி நடந்துகொள்ளுமோ?' என்று நல்லவர்களும் பயந்தனர்.

போலீசாரின் இந்த நடவடிக்கை, அவர்களுடைய ஒவ்வொரு காரியத்தைப் போலவே, பரபரப்பான நாடகக் காட்சியாகவே இருந்தது. சூழ்நிலையை இப்படியொரு நாடகக் காட்சியாக்கிட தில் போலீசாருக்கு மிகுந்த பங்கிருந்தது என்பதைக் கூற வேண்டிய அவசியம் இல்லை. கொஞ்சம் பயங்கரமான ஆசாமி களை இரவின் பிற்பகுதியில் நான்காம் ஜாமத்தில்தான் கைது செய்யவேண்டுமென இன்ஸ்பெக்டர் படித்து வைத்திருந்தார். ஜோக்நாத், சிவபால்கஞ்சிலேயே சுற்றிக்கொண் டிருந்தான்.

அவனை எப்போது வேண்டுமானாலும் ஸ்டேஷனுக்குக் கூப்பிட்டு அனுப்பி, தைரியமாய்க் கைது செய்திருக்கலாம். ஆனால் அவர், அவனைக் கைது செய்யப் பிரம்ம முகூர்த்தத்தையே தேர்ந்தெடுத்தார்.

விடியற்காலை நாலரை மணிக்குப் போலீசார் அவனுடைய வீட்டை நாற்புறமும் சூழ்ந்துகொண்டனர். துப்பாக்கியைப் பிரயோகிக்கவேண்டிய அவசியம் இராது என்பது எல்லாருக்கும் நன்கு தெரிந்திருந்ததால் எல்லாக் கான்ஸ்டேபிள்களும் கையிலே ரைபிளை எடுத்துக்கொண்டிருந்தனர். இன்ஸ்பெக்டர், பிஸ்டலில் ரவைகளை நிரப்பிக்கொண்டார். பின் ஹெட் கான்ஸ்டேபிளை அழைத்து, "கான்பூரிலிருந்து போக்கிரிகளின் கோஷ்டியொன்று நேற்று இங்கே வந்திருக்கிறது. ஒருகால் அவர்கள் ஜோக்நாத்தின் வீட்டில் தங்கி இருக்கலாம்" என்று கிசுகிசுத்தார். "சார், கான்பூரிலிருந்து வரப்போகிறவர்கள் பூதான இயக்கத்தைச் சேர்ந்தவர்கள்" என்றான் ஹெட் கான்ஸ்டேபிள்.

"அதே தான்" என்று தாழ்ந்த குரலில் கூறினார் இன்ஸ்பெக்டர். "அயோக்கியப் பயல்கள், முதலில் சாதுக்கள் வேஷத்தில் திரிந்துகொண்டிருந்தார்கள். இப்பொழுது வேஷத்தை மாற்றிக்கொண்டிருக்கிறார்கள், அவ்வளவுதான்."

யாவரும் வீர ஹநுமானை ஸ்மரித்துக்கொண்டு, மனைவி மக்களை நினைத்தவாறு ஆயுதங்களுடன், அந்தப் போக்கிரிக் கும்பலை எதிர்க்கப் புறப்பட்டனர். எல்லாருடைய தலையின் மீதும் மரணத்தின் சாயை கவிந்திருக்க, உயிர் ஊசலாட அவர்கள் கிளம்பினர். பயத்தில் நெஞ்சே வாய்க்கு வந்துவிடும் போலிருந்தது.

வீட்டைச் சுற்றி வளைத்துக்கொண்ட பின், எல்லாக் கான்ஸ்டேபிள்களும், வெற்றிலை பாக்கு புகையிலை போடாமல், பீடி குடிக்காமல் தங்கள் தங்கள் இடத்திலேயே சில மாதிரி அரை மணி நேரம் உட்கார்ந்திருந்தனர். ஒருவனும் சிரிக்கவில்லை; சிரிப்பு மூட்டவும் இல்லை. ஒரு கான்ஸ்டேபிள், கால் பூட்சைக் கழற்றி விட்டு, சத்தமிடாமல் நடந்து ஒவ்வொருவரிடமும் சென்று காதோடு காதாய், ஏதோ சக்தி மந்திரம் ஜபிப்பவன் போல், "பயப்படாதீர்கள். ஆபத்து ஒன்றுமில்லை" என்று கூறிக்கொண்ட போனான். எல்லாரும் அநுபவம் பெற்றவர்கள். பல வருஷ சர்விஸ். ஒருவர் இப்படிச் சொல்லித் தைரிய

மூட்டுவதால் மட்டும் ஆபத்து விலகிவிடாது என்பதை அறிந்தவர்கள். அதனால் ஆபத்துக்கிடையேயே அசையாமல் அமர்ந்திருந்தனர். இன்ஸ்பெக்டரும், ஹெட் கான்ஸ்டேபிளும் கரத்தில் பிஸ்டலும் ரைபிளும் ஏந்திய வண்ணம் கதவருகே நின்றனர்.

இதற்குள் யாரோ ஒருவன் தெருவோடு போனான். இவர்களைப் பார்த்ததுமே திரும்பிவிட யத்தனித்த அவனை ஹெட் கான்ஸ்டேபிள் ஜாடைமூலம் அருகே அழைத்ததும் அவன் அருகில் வந்தான். ஹெட் கான்ஸ்டேபிள் அவன் காதருகில் குனிந்து, "ஓடுகிறாயா?" என்றான்.

"எதற்காக ஓடவேண்டும்? பொழுது விடிந்ததும் விடியாததுமாய் உங்கள் முகத்தில் விழிப்பானேன் என்று போனேன்" என்றான் அவன், சற்றும் பதறாமல்.

இன்ஸ்பெக்டர் உதட்டின்மீது விரலைவைத்து, "உஷ்" என்றார். ஹெட் கான்ஸ்டேபிள் மீண்டும் காதருகில் குனிந்து, "இங்கேயே திண்ணையில் உட்கார்ந்துகொள். சாட்சி சொல்ல வேண்டும்" என்றான்,

"உட்காருவானேன்? நாளைக்கு, நாளன்னைக்கு எப்போது தேவையோ, கூப்பிடுங்கள். சாட்சி சொல்கிறேன். நான் எங்கே போகிறேன்?" என்று கூறி, அவன் மெல்ல நழுவலானான்.

"சரி, போ! ஆனால் ஜாக்கிரதை, நாங்கள் இங்கே இருப்பது யாருக்கும் தெரியவேண்டாம்" என்று எச்சரித்தான் ஹெட் கான்ஸ்டேபிள்.

ஹெட் கான்ஸ்டேபிளின் காதில் அவனும் முணுமுணுத்தான். "யாருக்குச் சொல்வது? ஊர் முழுதுக்குத்தான் தெரியுமே."

அவன் போய்விட்டான். வீட்டின் பின்பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர்களுக்குப் பீடியும், புகையிலையும் இல்லாமல் ஒரே தவிப்பாக இருந்தது. இதற்குள் வெளிச்சம் வந்துவிடவே, ஒருவர் முகம் ஒருவருக்குத் தூரத்திலே தெரிந்தது. திடீரென்று முன்புறத்திலிருந்து ஏதோ, சர-மர என்ற ஓசை கேட்டது. ஒருகால் வெளிக் கதவு திறந்ததோ என்னவோ? யாரோ அவசர அவசரமாகப் பேசுவது கேட்டது. இனி 'தாங்கள் "தர்ம க்ஷேத்திரம், கர்மக்ஷேத்திர"த்தில் பிரவேசிக்கும் தருணம் வந்துவிட்டது' என்பது அவர்களுக்குப் புரிந்துவிட்டது. பைனட்டை உயர்த்திப் பிடித்துக்கொண்டு நின்றனர்.

வாசற்பக்கமிருந்து கேட்ட பேச்சுக் குரல்கள் தூர விலகிச் செல்வதுபோல் தோன்றியது. கான்ஸ்டேபிள்கள் தங்களுக்குள் கச முசா வென்று பேச ஆரம்பித்து விட்டார்கள். இருமுவதுடன் கூடவே இதுவரை அமுக்கி வைத்திருந்த காற்றைப் பல்வேறு துவாரங்கள் வழியே வெளியேற்றலானார்கள். சற்றைக் கெல்லாம் நாடகம் 'கிளைமேக்ஸ்', அதாவது உச்ச கட்டத்தை அடைந்துவிட்டது. விசில் சத்தம் கேட்கவே யாவரும் முன்வாசலை நோக்கி ஓடினர். பின்பு அங்கிருந்து சுமார் ஐம்பது கஜ தூரத்திலுள்ள மாந்தோட்டத்துக்கு ஓடினர். அங்கே போய்ச் சேர்ந்ததுமே அவர்கள் கண்ட காட்சி....

ஜோக்நாத் தரையின்மீது உட்கார்ந்திருக்கிறான், இன்ஸ்பெக்டர் அவன் மார்புக்கு நேரே கைத் துப்பாக்கியை நீட்டிய வண்ணம் நிற்கிறார். இன்னொரு பக்கத்திலிருந்து ஹெட் கான்ஸ்டேபிள் பைனெட்டை நீட்டிக்கொண் டிருக்கிறான். அற்புதமான இந்த நாடகக் காட்சிக்குத் திரை மட்டும் விழவே யில்லை. ஓடி வந்தவர்கள் காட்சிக்குக் கலை கட்டுவதுபோல் சூழ்ந்து நின்றுகொண்டு, ஜோக்நாத்தின் உடலின் ஏனைய பாகங்களுக்குத் தங்கள் பைனெட்டையும், துப்பாக்கியையும் குறி வைத்தவாறு நின்றனர்.

ஜோக்நாத்திடமிருந்து சற்றுத் தள்ளி ஒரு சிறிய சொம்பு உருண்டு கிடந்தது. அதிலிருந்த தண்ணீர் கீழே கொட்டியிருந்தது. இன்ஸ்பெக்டர் ஒரு கான்ஸ்டேபிளை நோக்கி, "அந்தச் சொம்பை எடுத்துக்கொள். சாட்சிக்கு உதவும்" என்றார்.

குனிந்து சொம்பை எடுத்தவன் அதைக் கூர்ந்து கவனத்துடன் பார்த்து, பாராட்டும் தொனியில், "நல்ல முராதாபாத் சொம்பு" என்றான். பிறகு யோசித்தவனாய், "இதைச் சீல் செய்து வைக்க வேண்டும் அல்லவா சார்?" என்றான் மீண்டும்.

"ஆமாம், பின்னால் பார்த்துக் கொள்ளலாம்." கான்ஸ்டேபிள் ஏதோ யோசித்தவனாய், தண்ணீரில் நனைந்திருந்த ஈர மண்ணை விரலால் கிளறி, "இந்த மண்ணையும் எடுத்துக் கொள்ள வேண்டுமா, சார்?" என்றான்.

ஹெட் கான்ஸ்டேபிள் எரிந்து விழுந்தான். "ரொம்பக் கெட்டிக்காரன் என்று காட்டிக்கொள்ள வேண்டாம். சொன்னதைச் செய்."

இன்ஸ்பெக்டர் ஜோக்நாத்தை எழுந்து நிற்கச் செய்தார். உடம்பு முழுதும் சோதிக்கப்பட்டது. இதன்பின் பைனெட்டு

கள் தூழ்த்தப்பட்டு உறையில் போடப்பட்டன. பிஸ்டல்கள் அதனதன் தோலுறையில் புகுந்துகொண்டன. கான்ஸ்டேபிள் கள் பேசவாரம்பித்தனர். "பொழுது விடிந்ததும் விடியாதது மாய்க் காலைக் கடனைக் கழிக்க வந்தான் போலிருக்கிறது" என்றான் ஒருவன். "யார் கண்டது? அக்கம்பக்கத்தில் அவனுடைய குழு இருக்கலாம். அவர்களுக்குச் சேதி சொல்லவும் வந்திருக்கலாம்" என்றான் இன்னொருவன். மூன்றாமவன், "வைத்தியர் அமர்க்களப்படுத்தப் போகிறார் பார்" என்றான். "அதெல்லாம் இல்லை. வைத்தியர் நம்ப இன்ஸ்பெக்டர் பாக்கெட்டுக்குள்ளே" என்று மெள்ளக் கிசுகிசுத்தான், நான்காமவன். "உஷ் பேசாதீர்கள்! பாருங்கள் தமாஷை" என்றான் ஐந்தாமவன்.

ஏதோ நாடோடி நடனம் ஆடும் முத்திரையுடன் ஜோக்நாத் எழுந்து நின்றானே தவிர, அவன் முகத்தைப் பார்த்தால் ஆடுபவன்போல் தெரியவில்லை. திடீரென்று இன்ஸ்பெக்டர் அவன் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்து, "சொம்பை எடுத்துக்கொண்டு எங்கே போய்க்கொண் டிருந்தாய்?" என்று கேட்டார்.

அடியின் பிரபாவத்தை அகற்ற விரும்புபவன்போல் அவன் இமைகளைப் படபட என்று கொட்டினான். பின்பு இன்ஸ்பெக்டரின் விழிகளை நேருக்கு நேர்ச் சந்தித்தவாறு, "என்னை அணு அணுவாக வெட்டினாலும் சரி, என்னுடைய வக்கீல் சொல்லாத வரையில், நான் ஒன்றும் கூறமாட்டேன்" என்றான் ஜோக்நாத்.

"விலங்கை மாட்டி இவனை ஸ்டேஷனுக்குக் கொண்டு போ. இவன் வீட்டைச் சோதனை போடவேண்டும்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"இவனையும் ஒரு கை பார்க்கவேண்டும்" என்று முணுமுணுத்தான் ஹெட் கான்ஸ்டேபிள்.

இந்தக் கதை, சுற்றி வளைத்து எப்படி எப்படியோ திரிந்து வைத்தியரின் காதுகளை எட்டியது. ஆனால் இன்றுதான் முதல் முறையாகப் போலீஸ் எது செய்தாலும் அது செய்வது சரிதான் என்ற சாசுவதமான சத்தியத்தில் வைத்தியருக்குச் சந்தேகம் தோன்றியது. ஜோக்நாத்தைப் பற்றி அவருக்கு அவ்வளவாக நல்ல அபிப்பிராயம் இல்லை என்றாலும், ஒரு மனிதனின் மதிப்பு அவனது நல்ல தன்மைகள், குணங்களினால் மட்டும் அல்ல; அவன் எவ்வளவு தூரம் நமக்குப் பயன்படு

வான் என்பதைப் பொருத்தது என்று நம்பும் உலகத்தில் அவர் வாழ்ந்து வந்தார். அவருடைய ஆட்களில் ஜோக்நாத்தே நிறை யக் குடிப்பான். தன் காசில் குடிக்கிறுனே அல்லது பிறர் காசில் குடிக்கிறுனே? குடிக்கும் அளவில் இம்மிகூடக் குறைக்கமாட் டான். மொத்தமாகப் பார்த்தால் நடுத்தரமான ரௌடி.

ஜோக்நாத்தைக் கைது செய்திருப்பதற்குப் பின்னுல் ஏதோ அரசியல் இருப்பதாக வைத்தியருக்குத் தோன்றியது. கொஞ்ச நாட்களாகவே இன்ஸ்பெக்டர், தன்னை மட்டும் அல்ல, ராமாதீன் பீகம் கேடவியையும் சற்று மதித்து நடப்பதுபோல் தெரிந்தது. அபினியின் கள்ள வியாபாரத்தில் ராமாதீன் இவரையும் கூட்டாளியாகச் சேர்த்துக்கொண்டு விட்டாரோ என்று முதலில் நினைத்தார். ஆனுல், அரசியல் தந்திரங்கள், வியவகாரங்களில் ராமாதீன் பீகம் கேடவி, தம்மைவிட அதிகம் பயன்படுவார் என்ற பிரமை இன்ஸ்பெக்டருக்கு ஏற்பட் டுள்ளது என்று இப்போது தோன்றியது. இந்தச் சூழ்நிலை யில் ஜோக்நாத் கைது செய்யப்பட்டால் முதலில் இன்ஸ் பெக்டர் விரும்புவதுபோல் எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப் படும். ஆனுல், பின்னுல் ராமாதீன் பீகம் கேடவி என்ன விரும்புகிருரோ அது இன்ஸ்பெக்டரின் விருப்பமாகவே இருக் கும் என்று வைத்தியருக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

ஜோக்நாத்தை ஜாமீனில் விடுவித்து அழைத்து வரவேண்டும் என்று ரூப்பன் ஒற்றைக் காலில் நின்றதால் விருப்பம் இல்லா விடினும் வைத்தியர், இன்ஸ்பெக்டருடன் இதுபற்றிப் பேசு வதற்குத் தயாரானுர்.

இப்போது காலையில் சுறுசுறுப்புடன் இயங்கிய இன்ஸ் பெக்டராய், தம் பார்வையாலேயே பிறரைச் சுட்டெரித்த வராய் அவர் தோன்றவில்லை. தம் வ்ராட்டசாட்டமான உட லில் சில்க் ஷர்ட் அணிந்துகொண்டு மினுமினுவென்று ஜொலித் தார். கதர்ப் பைஜாமா அணிந்து, வாயில் வெற்றிலையைக் குழப்பியவண்ணம் அவர் தம் வாயாலேயே, சம்பவம் முழு வதையும் கூற, வைத்தியர் கேட்டுக்கொண் டிருந்தார். ஜோக் நாத்தின் வீட்டிலிருந்து ஒரு நாட்டுத் துப்பாக்கியைக்கூடப் போலீசாரால் கைப்பற்ற முடியவில்லை என்பதைக் கேட்க அவருக்கு வியப்பே ஏற்படவில்லை. இத்தனை வருஷங்களாகப் போலீசாருடன் நெருங்கிய உறவுகொண் டிருந்ததால் குற்ற வாளிகளின் வீட்டில் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் நாட்டுத்

துப்பாக்கி என்று அழைக்கப்படும் இரும்புத்துண்டு கட்டாயம் தேடி எடுக்கப்படும் என்பதை அறிந்திருந்தார். அதைப் பார்த்ததுமே பதினெட்டாவது, பத்தொன்பதாவது நூற்றுண்டில் ஆங்கிலேயருக்கு எதிராகப் போரிட்டு இந்தியர்கள் தோற்றுப் போனது ஏன் என்ற வரலாற்று உண்மை தாளுகவே தெளிவாகிவிடும்.

இதுபற்றி அவர் இன்ஸ்பெக்டருக்குத் தம் நன்றியைத் தெரிவிப்பது அவசியம் என்று கருதினுர். இதற்குப் பீடிகையாக, "ஜோக்நாத் வீட்டிலிருந்து நகைகள் மட்டுந்தானு கிடைத்தது? கஞ்சா, பங்கி, அபினி, சரஸ் எதுவுமே கிடைக்கவில்லையா?" என்று வினவினுர்.

"நான் அபினியைத் தேடவில்லை. அப்படிச் செய்திருந்தால் அந்த முறை அந்தப் பார்ட்டியிலிருந்து ஒரு ஆளைப் பிடித்தார்; அதனுல் இந்தத் தடவை இந்தப் பக்கத்திலிருந்து ஒருத்தனைப் பிடித்திருக்கிருர் என்று ஊரார் சொல்லுவார்கள் அல்லவா?"

"பார்ட்டியா?" என்று வைத்தியர் வியப்புடன் வினவினுர். "பார்ட்டியா? நீங்கள் என்ன பாஷையில் பேசுகிறீர்கள்?"

"போலீஸ் பாஷையில்" என்றுன் ரூப்பன். இன்ஸ்பெக்டர் கண்களைத் தேய்த்துவிட்டுக் கொண்டு தன்னைச் சுதாரித்துக் கொள்ள முயன்றுர். மனத்துக்குள், 'மேல்நாட்டுக் குடிவகைகளில் இந்த 'ஜின்' ரொம்ப மோசம்' என்று கூறிக்கொண்டார். பார்த்தால் வெறும் தண்ணீர்மாதிரி இருக்கிறது. வயிற்றுக்குள் போனதுமே பேச்சையெல்லாம் திசை திருப்பிவிட்டு விடுகிறதே! என்ன சொல்வதற்குப் பதிலாக இந்த நாக்கு எதைச் சொல்லிவிட்டது? இன்ஸ்பெக்டர் கண்களைத் திறந்து பார்த்தார். வைத்தியரின் முகம் தீவிரத்துடன் காணப்பட்டது. 'சரி, இவர் ஏதோ மட்டமாகப் பேசப்போகிருர்' என்று எதிர் பார்ப்பவர்போல் இன்ஸ்பெக்டர் அவர் முகத்தையே பார்க்கலானுர்.

"நீங்கள் அநாவசியமாகத் தயக்கம் காட்டியிருக்கிறீர்கள். அபினி கள்ளக்கடத்தல் வியாபாரம் செய்கிறவனை மன்னிக்கவே கூடாது. அவன் அயோக்கியன். தேசத் துரோகி" என்றுர் வைத்தியர். இன்ஸ்பெக்டர் வாயைத் திறக்கவில்லை. 'ஜின்'ஞகை இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, இனி யோசிக்காமல் ஒரு வார்த்தை பேசக்கூடாது என்று மனத்துக்குள் உறுதி பூண்டிருந்தார்.

வைத்தியர் திடீரெனக் கேட்டார்: "ஆமாம், ஜோக்நாத் வீட்டில் சோதனை போட்டீர்களே! ஒரு நாட்டுத் துப்பாக்கி கூடக் கிடைக்கவில்லையே! இது என்ன சோதனை?"

"சும்மா அப்படி என்று வைத்துக்கொள்ளுங்களேன்" என்று பணிவுடன் கூறிய இன்ஸ்பெக்டர், "ஒவ்வொரு சோதனையிலும் கைப்பற்ற அப்படி எத்தனை நாட்டுத் துப்பாக்கிகள் எங்கே கிடக்கின்றன?" என்றவர், மீண்டும் மனத்துக்குள், 'ஜின்' நாடக மாட மிக்க உதவியாக இருக்கிறது எனப் பாராட்டிக் கொண்டார்.

ரூப்பன் ஒரு பத்திரிகையைப் பிரித்து அதன் பின் முகத்தை மறைத்துக்கொண்டு அமர்ந்திருந்தவன், அங்கிருந்தே, "துப்பாக்கிகள் எல்லாம் எங்கே போய்விட்டன? உங்கள் ஸ்டாக்கெல்லாம் தீர்ந்துவிட்டதா?" என்றான்.

"சென்ற முறை வைத்தியர் போலீஸ் ஸ்டேஷனில் பிரசங்கம் செய்தார் அல்லவா, அதன் பலன்தான் இது. அதன் பிரபாவத்தில் எல்லாப் போக்கிரிகளும் தங்கள் தங்கள் துப்பாக்கிகளை இலாக்காவுக்கு வெளியே தூர எறிந்துவிட்டார்கள். பெரும்பாலும், உன்னாவ்காரர்களுக்கு விற்றுவிட்டனர்" என்றார் இன்ஸ்பெக்டர் கம்பீரத்துடன்.

பயில்வான் பத்ரி உன்னாவ் சென்றிருந்தார். இன்னும் ஊர் திரும்பவில்லை. கண்ணைச் சற்றே சுருக்கி ஏதோ யோசித்த வைத்தியர் மெள்ளச் சிரித்துக்கொண்டார். பிறகு, "சிவபால் கஞ்சின் சீதோஷ்ண நிலைமை ரொம்பவும் சிறந்தது. அறிவு வளர்ச்சிக்கு ரொம்பவும் அனுகூலமாக இருக்கிறது" என்றார்.

"உங்களைத்தான் இந்த ஊரின் சீதோஷ்ண நிலைமையாக நான் நினைக்கிறேன்." இந்த முறை இன்ஸ்பெக்டர் 'ஜின்'னை நொந்துகொள்ளவில்லை. ஆனால் சிரித்தார். சிரித்துக்கொண்டே இருந்தார். 'ஜின்' அவருடைய நாக்கை மட்டும் அல்ல, குரலையே தவறான திசைக்குத் திருப்பி விட்டுவிட்டது என்பது அவருக்குப் புரியவில்லை.

வைத்தியர் ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தார். இன்ஸ்பெக்டர் போவதற்காக மெள்ள எழுந்து நின்றார். அவர் அறையின் நிலைப்படியைத் தாண்டும் சமயம் வைத்தியர் திடீரென ஏதோ நினைவு வந்தவர்போல், "ஜோக்நாத்துக்கு ஜாமீன் என் பெயரில் எழுதிவிட்டிருப்பீர்களென நினைக்கிறேன்" என்றார்.

இன்ஸ்பெக்டர் நின்ருர். "அப்படி இருந்தால் உங்களிடம் கையெழுத்து வாங்கி இருப்பேனே! பரவாயில்லை. கோர்ட்டில் ஜாமீன் வாங்கிக்கொள்ளலாம். யாரையாவது அங்கு அனுப்பி வையுங்கள்" என்ருர்.

வைத்தியர் மௌனமாகிவிட்டார். ஆனல் ரூப்பன் நேரிடையாகவே கேட்டுவிட்டான். "இங்கேயே ஜாமீனில் விடுவிப்பதில் என்ன சிரமம்?"

"திருட்டுக் குற்றத்துக்கு ஜாமீஞ?"

"இல்லை, கொலைக்கு மட்டுமா?"

இன்ஸ்பெக்டர் இதை அதிகம் பொருட்படுத்தாதவர் போல் கூறிஞர். "தாங்கள் போன வருஷம் நடந்த அந்த நேவ்தா சம்பந்தப்பட்ட வழக்கைப் பற்றிக் குறிப்பிடுகிறீர்களென்று நினைக்கிறேன். ஆனல் அதில் குற்றவாளி டி. பி. நோயாளி. அவனை ரிமாண்டில் வைத்துக்கொண்டு யார் பழியை ஏற்றுக் கொள்ளுவது?"

ரூப்பன் பத்திரிகையை வைத்துவிட்டு முன்பே எழுந்து விட்டான். "ஜோக்நாத் இப்போது உங்கள் ரிமாண்டில் இருக்கிருன். இங்கேயே அவனையும் சோதித்துப் பார்த்து விடுங்கள். அவனும் நோயாளிதான். அவனுக்கு டி. பி. நோயில்லை. 'கஞேரியோ' நோய்" என்ருன்.

வைத்தியர் அமைதியான குரலில் கூறிஞர். "ரூப்பன்! மரியாதையுடன் பேசு. இன்ஸ்பெக்டர் நமக்கு வேண்டியவர். எதைச் செய்தாலும் யோசித்துத்தான் செய்வார்."

"உத்தரவு கொடுக்கிறீர்களா? நான் வரட்டுமா?" என்ருர் இன்ஸ்பெக்டர் மீண்டும்.

"தாராளமாய்ப் போகலாம். ராமாதீன் ஸ்டேஷனில் காத்துக்கொண் டிருப்பார்" என்ருன் ரூப்பன்.

இன்ஸ்பெக்டர் புன்முறுவல் பூத்தார். பின்னர் உத்தியோக வாழ்வின் மிகத் துயரமான அம்சத்தைக் குறிப்பிட்டு, "நாடு சுதந்தரம் அடைந்துவிட்டது. இல்லையென்ருல் விஷயமே வேருக இருக்கும், ரூப்பன் பாபு! பெரிய பெரிய மனிதர்கள் அல்லவா எதிர்பார்த்துக்கொண்டு நிற்பார்கள்."

அவர் போனபிறகு, "பசு என்று நினைத்தது புலியாகி விட்டது" என்று ரூப்பன் தனக்குள்ளே கூறிக்கொண்டவன், வைத்தியர் கேட்கும்படியாக, "பெருத்த அவமானம்" என்ருன்.

வைத்தியர் அமைதியாக இருந்தார். ரங்கநாத் வெளியே செல்வதைப் பார்த்ததும், ஏதோ பிரசங்கம் செய்பவர் போல், "லாப நஷ்டம், வெற்றி தோல்வி, மான அவமானம் ஆகியவற்றை யெல்லாம் சமநோக்குடன் எடுத்துக்கொள்ள வேண்டும்" என்றார்.

தந்தை கீதோபதேசம் செய்யத் தனயன் இந்த இன்ஸ்பெக்டர் எங்கே போகிறான் பார்த்துக்கொள்ளலாம் என்று நினைத்தான்.

பாபு ராமாதீன் பீகம் கேடவியின் வாசலில் இன்று பங்கி அரைக்கப்பட்டுக்கொண்டிருந்தது. எதிரே ஒரு கூரையின் கீழே சூதாட்டம் நடந்துகொண்டிருந்தது. இவ்விரண்டிலும் சம்பந்தமற்றவர்போல் பாபு ராமாதீன் ஒரு கட்டிலில் படுத்தவாறு, நொண்டி கூறுவதை ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார். நொண்டி திண்ணைக்குக் கீழே நின்று பேசிக் கொண்டிருந்தான்.

ரங்கநாத்தும், சனிஸ்வரனும் அந்தப் பக்கமாய்ச் சென்று கொண்டிருந்தனர். ராமாதீன் அவர்களை உரத்த குரலில் அழைத்தார். அவர்கள் வந்ததும், தான் கட்டிலில் ஓர் ஓரமாக அமர்ந்துகொண்டு ரங்கநாத்தைக் கட்டிலில் உட்காரவைத்தார். சனிஸ்வரனுக்கு விசேஷமான மரியாதைகள் எதுவும் செய்யவில்லை.

"ஏன் நிற்கிறாய்? உட்காரும் பஞ்சாயத்துத் தலைவரே" என்றார்; அவ்வளவுதான்.

ரங்கநாத்துக்கு இது இரண்டாவது சந்தர்ப்பம். முதல் முறை அவன் அவர் வீட்டு வழியாகச் சென்றபொழுது பங்கி, சூதாட்டம் எதுவும் தென்படவில்லை. இன்று சூழ்நிலை மிகவும் மிதப்பாக இருந்தது. நொண்டியை நோக்கியவாறு ரங்கநாத் கேட்டான்: "இவர் நிலைமை எப்படி இருக்கிறது?"

"ரொம்பத் தைரியசாலிதான். காளை மாட்டிலேயே பால் கறந்துவிட்டான் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்" என்ற ராமாதீன், காளையைக் கறப்பதென்றால் எப்படி என்பதை ஜாடை மூலம் விளக்கினார்.

"என்ன? நகல் கிடைத்துவிட்டதா?" என்றான் ரங்கநாத் ஆவலுடன்.

வைணவத் துறவிகள்போன்ற நிர்விகார பாவத்துடன் நொண்டி கூறினான். "ஆமாம், பாபு! கிடைத்துவிட்டதென்றே

வைத்துக்கொள்ளுங்கள். மேலிடத்திலிருந்து விண்ணப்பம் திரும்பி வந்திருக்கிறது. சாதாரணமாக மேலே போகும் விண்ணப்பங்கள் தொலைந்து போகும். என்னுடையது தொலையவில்லை. எல்லாம் உங்களுடைய ஆசீர்வாதம்.''

"ஆமாம், இது நல்ல அறிகுறிதான்'' என்று அறிவாளிபோல் கூறினன் சனிஸ்வரன். "விண்ணப்பம் திரும்பி வந்திருக்கிற தென்ருல் இனி நகல் கிடைத்துவிடும்.''

"எப்பொழுது கிடைக்கும்?'' என்ருன் ரங்கநாத். ரங்கநாத்தின் இந்த அவசரம் நொண்டிக்குக் கொஞ்சம் ரசிக்கவில்லை போலும். "உன் நம்பர் இனி வந்துவிடும் என்று காப்பிஸ்ட் சொன்ஞர்'' என்ருன் அவன்.

"போப்பா, போய் ஏதாவது பானம் செய்'' என்று நொண்டியைப் பார்த்துக் கூறிஞர் ராமாதீன். "நாங்கள் வரட்டுமா, ராமாதீன்பாபு? உலாவப் போய்க்கொண் டிருந்தோம், நேரமாகிவிடும்'' என்ருன் ரங்கநாத்.

"பெண் குதிரையல்லவா நடை பழகும்! ஆண் பிள்ளை வேலையா இது?'' என்று உரிமையோடு கூறிய ராமாதீன், "ஐந்நூறு தண்டால் போடு. படபடவென்று இரும்புக் கடலை கூட ஜீரணமாகி விடும் வயிற்றில்'' என்ருர்.

இருவரும் புறப்பட்டனர். போகும்போது சூதாடுமிடத்தில் சற்றே தாமதித்தனர்.

இரண்டு குழுக்களாகப் பிரிந்து ஆடிக்கொண் டிருந்தனர். ஒரு புறம் சிலர் அமர்ந்து 'கோட்பீஸ்' ஆடிக்கொண் டிருந்தனர். கவனித்துப் பார்த்ததில் 'கோட்பீஸ்' ஐம்பத்திரண்டு சீட்டில் ஆடும் ஆட்டம் என்று தெரிந்தது. சீட்டுக்கள் பழசாகி, நைந்து போய் விளையாட்டில் தேர்ந்த புள்ளிகளுக்கு எதிரே இருந்து பார்த்தாலே அது என்ன சீட்டென்று தெரிந்துவிடும்படியாகவும் இருக்கவேண்டுமென்று தெரிந்தது. 'கோட்பீஸ்' ஆட எட்டுப் பேர் போதும். நாலு பேர் சீட்டைக் கையில் எடுத்துக்கொண்டு, முகத்தைத் தொங்கவிட்டவாறே சிந்தனையின் பாரத்திலே அமிழ்ந்திருப்பார்கள். மற்ற நாலு பேர் ஒவ்வோர் ஆட்டக்காரனின் பின்னுலும் நின்றவாறே ஆட்டத்தின் நேர்முக வர்ணனையில் ஈடுபட்டிருப்பார்கள். எந்தச் சந்தர்ப்பத்தில் மௌனமாக இருக்கவேண்டுமோ அப்போதுதான் பேசுகிருர்கள்.

இது மட்டுமா? ஆட்டம் ஆடுபவர்களுக்குப் பீடி பற்றவைப்பது, புகையிலையைத் தேய்த்துக் கொடுப்பது, தண்ணீர் வர

வழைப்பது, எறிந்த சீட்டை எடுத்து வைப்பது இவர்கள் வேலை. விளையாட்டுக்குப் பிறகு வெற்றி தோல்விக்கு ஏற்ப, ஆட்டக் காரர்களிடையே பணம் கொடுக்கல் வாங்கல், அல்லது சில்லறைத் தட்டுப்பாடு போன்ற பிரச்னைகளைத் தீர்த்துவைத்தல், ஜயித்தவனின் காசில் வெற்றிலைபாக்கு வாங்கும் பொறுப்பு —ஆகியவை இவர்களுடையதுதான்.

ஜயித்துப் போட்ட சீட்டைத் திரும்ப எண்ணுவது, தோற்றுப் போன பந்தயத்தை மீண்டும் ஆடவேண்டி, சீட்டைக் கீழே போட்டு அதே சாக்காகச் சண்டையைத் தூண்டுவதும் இவர்களுடைய இன்றியமையாத பணிகளில் ஒன்ருகும். எதிரே உட்கார்ந்திருக்கும் ஆட்டக்காரன் எந்தச் சீட்டை இறக்கவேண்டுமென்று ஜாடை காட்டுவது; தான் ஜாடை காட்டியது தெரிந்து போய்விட்டால் கூச்சல் போட்டுத் தன் எதிர்ப்பைத் தெரிவிப்பதுங்கூட இவர்களது கடமைதான்.

இந்த ஆட்டம் ரங்கநாத்துக்குக் கவைக்கு உதவாததாகத் தோன்றியது. இன்னொரு குழுவினரின் ஆட்டத்தைக் கவனித்ததும் சிவபால்கஞ்சின் சீட்டாட்டத்தைப் பற்றிய அவனது எண்ணம் முற்றும் அடியோடு மாறிவிட்டது.

அவர்கள் '.:ப்ளாஷ்' விளையாடிக்கொண்டிருந்தனர். 'வேன்டர்லை, லால்டேன்' என்று கூறுவதுபோல் அதுவும் 'பில்லாச்' சாகத் திரிந்துபோயிருந்தது. ஆட்டம் மிகவும் மும்முரமாய்' நடந்துகொண்டிருந்தது. ஒரு புறம் '.:ப்ள.:பிள்'—தானே இயங்கும் அஸ்திரம் ரணகளப்படுத்திக்கொண்டிருந்தது. மற்றொரு புறம் சுத்த தேசிய முறைப்படி ஓர் ஆட்டக்காரன் முன்னேறிக்கொண்டிருந்தான். திடீரென அவனது மூளை என்ற யானை கட்டவிழ்த்துக்கொண்டு இங்குமங்கும் ஓடத் துவங்கியது மட்டும் அல்ல, தன் எஜமானனையே கீழே தள்ளி அவனை நசுக்கி மிதிக்கக் காலைத் தூக்கிக்கொண்டு-நின்றுவிட்டது. அவன் கையிலிருந்த சீட்டுக்களை வீசி எறிந்தான். உடனே ஒரு கை நிறையச் சில்லறையை அள்ளி எடுத்து இன்னொரு ஆட்டக்காரன் தன் தொடைக்குக் கீழே வைத்துக்கொண்டு விட்டான். தோற்ற ஆட்டக்காரனை, இரண்டு நாட்களுக்கு முன் ரங்கநாத், வைத்தியர் வீட்டில் ஒரு நாளைக்கு எட்டணு கூலியில் வேலை செய்ததைப் பார்த்திருந்தான். அவன் சற்றும் பதற்றமோ, நிராசையோ அடையாமல், ஒரு பீடியைப் பற்றவைத்துக்கொண்

டான், அடுத்த ஆட்டத்துக்காகக் கலேத்துப் போடும் சீட்டை எவ்வித ஆர்வமும் இல்லாமல் பார்க்கலானுன்.

ரங்கநாத் மனத்துக்குள்ளே அவனது துணிவையும், பொறுமையையும் பாராட்டினுன். தத்தாத்திரேயர் மட்டும் உயிருடன் இருந்தால் இவனேத் தமது இருபத்தைந்தாவது குருவாக ஆக்கி இருப்பார் என்று நினேத்தான் அவன். அந்த ஆட்டக்காரனின் நிர்விகார மனநிலேயின் முன் அவனது சிரம் கவிந்தது.

உண்மையைக் கேட்டால் அவனது கையிலிருக்கும் சீட்டை எட்டிப் பார்ப்பதற்காகக் குனிந்தது, எவ்வளவு சுய நம்பிக்கையுடன், ஆவலுடன் அவர்கள் '.ப்ளாஷ்' ஆடிக்கொண் டிருந்தார்கள் என்பதை விளக்கியது. ரங்கநாத் வியப்பில் ஆழ்ந்தான்.

வெளி நாடுகளிலிருந்து கோடிக் கணக்காகப் பணத்தைக் கடன் வாங்கி, புற்ருக்குறை பட்ஜெட் தயாரிக்கும் நிபுணர்களுக்கும், மாபெரும் அரசியல்வாதிகளுக்கும் கூட இத்தகைய மனவுறுதி இருப்பது அரிது. இந்த மாடு மேய்ப்பவர்கள், கூலிகளின் வாழ்க்கையைப் பார்த்தபின், 'இனி நான் தில்லியிலே கனவு கண்டு கொண்டிருப்பவர்களின் மீது கோபம் கொள்வதை விட்டுவிட வேண்டியதுதான்' என்று நினேத்தான் ரங்கநாத்.

தன் அருகிலிருந்த ஆட்டக்காரனே அவன் நோக்கினுன். இம்முறையும் அவன் தோற்றுவிட்டான். மீண்டும் ஒரு பீடியைப் பற்றவைத்துக்கொண்டு, நிர்விகார பாவத்துடன் சுற்றும் முற்றும் விழிகளே அலேயவிட்டான் அவன். ரங்கநாத், சனிஸ்வரன் இருவரையும் வெறித்த பார்வையுடன் ஒரு புறம் ஒதுக்கி விட்ட அவன் சற்றுத் தூரத்தில் நின்றிருந்த தொ.ழிலாளி ஒருவனே நோக்கி ஐந்து விரல்களேக் குவித்து ஐந்து ரூபாய் கடனுகக் கொடுக்கும்படி கேட்டான். அவன் அதற்கு 'இல்லே' யென்று தலே அசைத்தான். இதன் பின் அவன் எழுந்து பாபு ராமாதீனின் அருகே சென்றவன் உடனே திரும்பி வந்து தன் இடத்தில் அமர்ந்துகொண்டான். அவன் முகத்தில் அதே நிர்விகாரமான பாவம். எவ்விதச் சலனமும் இல்லே. சீட்டைக் கையில் எடுத்ததும் அவன் மீதமிருந்த பீடியைத் தூக்கி எறிந்து விட்டுப் பெரிதாக ஓர் ஏப்பம் விட்டுக்கொண்டான். ஐந்து ரூபாய் நோட்டைப் பந்தயமாக வீசிப் போட்ட அவன் மீதிப் பணத்தை எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற அக்கறை கூட இல்லாமல் ஆட ஆரம்பித்தான். எதிர்ப்பக்கத்தில் இருந்த

ஆட்டக்காரன் முணுமுணுத்தான். "இந்தத் தடவை நல்ல சீட்டு வந்திருக்கிறது போலிருக்கிறது."

ரங்கநாத் குனிந்து பார்த்தான். அவன் முன்போலத்தான் ஃப்ளப் ஆடிக்கொண் டிருந்தான்.

வெளி நாட்டு உதவியை, எந்தக் காரணத்துக்காக, எந்தச் சந்தர்ப்பத்தில், முகத்தை எந்தவிதமாக வைத்துக்கொண்டு கேட்கவேண்டும் என்ற பாடம் ரங்கநாத்துக்குப் புலனாகிக் கொண்டிருந்தது.

# அத்தியாயம் 18

நகரங்களில், தேநீர்க் கடைகள், கமிட்டி அறை, வாசகசாலைகள், அசெம்பளியைப் போன்றவையே கிராமத்தில் பாதையோரத்திலுள்ள வாராவதிகள். அதாவது மக்கள் இங்கு அமர்ந்தே அரட்டை அடிப்பார்கள். இப்போது பகல் கிட்டத்தட்ட பத்து மணி வேளையில், ரங்கநாத்தும், ரூப்பனும் ஒரு வாராவதிக் கரையில் அமர்ந்து, சுகமாக வெயில் காய்ந்து கொண்டிருந்தனர். காலத்தின், உலகத்தின் போக்கைப் பற்றியும் பேசிக்கொண் டிருந்தனர்.

காலத்தின் போக்கு—அதாவது இருட்டில் அநுபவித்த விம்மிப் புடைத்த மார்பகத்தின் வெப்பமான ஸ்பரிசம்...பேச்சைத் தொடங்கியது ரங்கநாத்துதான். அன்றைய இரவு நடந்த சம்பவத்தைப் பற்றி யாரிடமும் சொல்லவேண்டாம் என்று அவன் விரும்பினான். ரூப்பனிடம் பொதுப்படையாகவே பேச விரும்பினான். சோளிகள் தயாரிக்கும் கம்பெனிக்குக் காலண்டர் மாடலாகப் பயன்படத்தக்க பெண்கள், அந்த வட்டாரத்தில் யார் யார் இருக்கிறார்கள் என்பதை மெள்ள அறிந்துகொள்ள விரும்பினான் அவன். ரூப்பனிடம் அவன் இதைப் பற்றிப் பேச ஆரம்பித்ததைப் பார்த்தால், பெண்கள், அல்லது அவர்களுடைய

மார்பகங்களைப்பற்றி வெறும் தொழில் முறையில் அக்கறை யுள்ளதுபோலவும், அவன் தான் அந்தக் கம்பெனியின் பிரசார அதிகாரிபோலவும் தோன்றியது.

ரூப்பன் இது விஷயமாகச் சற்றுத் தோண்டித் துருவிப் பேச ஆரம்பித்ததும், இவ்விஷயத்தைக் குறித்து ஆழ்ந்து சர்ச்சை செய்யத் தொடங்கினர். உடனே சராசரி இந்திய மாணவனைப் போலவே, ரங்கநாத் பிடிகொடுக்காமல் மெல்ல நழுவ ஆரம்பித் தான். பேச்சை மாற்றி, தி கிரேட் இண்டியன் ப்ரா மானு∴பேக்சரிங் கம்பெனியின் பிரசார அதிகாரின் பதவி யிலிருந்து விலகி, அகில இந்தியக் குடிமக்களின் உடல் நலப் பாதுகாப்புச் சங்கத்தின் செயலாளர் பதவியை மேற்கொண்ட வனாய், பெண்களின் தேக நலத்தைப் பற்றிப் பேச ஆரம்பித் தான். ஆனால் ரூப்பன் தொடுத்த கேள்விக் கணைகள், அந்தப் பதவியிலும் ரங்கநாத்தை அதிக நேரம் உட்காரவிடவில்லை. சற்று நேரம் வரை, இருட்டு, குளிர், பூதம் பிசாசு பற்றிப் பேசிக் கொண்டிருந்த ரங்கநாத்துக்குத் தான் விரும்பாவிடினும் அன்றைய இரவு நடந்த சம்பவம் பற்றிய முழு விவரங்களையும் கொஞ்சம் கொஞ்சமாக ரூப்பனிடம் கூறிவிட்டோம் என்பது சற்று நேரம் கழித்தே தெரிந்தது.

ரூப்பன் மிகவும் கவனமாகக் கேட்டுக்கொண் டிருந்தான். ரங்கநாத் கூறி முடித்தபின், அவனுக்கு, தான் தணலின் மீது உட்கார்ந்திருப்பதுபோல் இருந்தது. பெண்களைப் பற்றிப் பேசினாலே அவனுக்கு ஏற்படும் அந்த உணர்வு, இன்னதென்று விவரிக்க இயலாத ஓர் உணர்ச்சி, கதகதப்பு, ஓர் இறுக்கம் அவனுள் ஏற்பட்டது.

அன்றிரவு மாடிக்கு வந்தவள் பேலாதான் என்ற நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டு விட்டது. அவள் யாருக்கு ஆத்ம சமர்ப் பணம் செய்ய விரும்பி வந்தாளோ, அது ரூப்பன் பாபுதான். 'என் காதல் கடிதம் இப்பொழுதுதான் வேலை செய்ய ஆரம்பித் திருக்கிறது. அவள் தவிக்க ஆரம்பித்திருக்கிறாள்' என்று பெரு மிதத்துடன் எண்ணிய ரூப்பன் மனத்துக்குள் குமையலானான். 'அன்றிரவு மாடியில் நான் படுத்திருக்கக் கூடாதா?' என்ற ஏக்கம் ஒரு திரைப்படப் பாடலைத் தொண்டை வரைக்கும் வர வழைத்து விட்டது. சட்டென்று தன்னை அடக்கிக் கொண்டான் ரூப்பன். ரங்கநாத்தின் முன்னே அவன் புத்திசாலியாக நடந்து கொள்ள விரும்பினான். அவன் மௌனமாக இருப்பதைக் கண்ட

ரங்கநாத், "அவள் வந்தது போனது எதுவுமே எனக்குத் தெரிய வில்லை. அவள் என் மார்பின் மீது சாய்ந்து... அது மட்டுந் தான் நினைவிருக்கிறது" என்றான்.

ரூப்பன் கம்பீரத்துடன் பேசினான்: "இருக்கலாம். சில சமயம் இப்படித்தான் ஏமாந்து விடுகிறோம். யார் வந்தாளோ. தெரியவில்லை. உண்மையில் வந்தாளோ இல்லையோ, யார் கண்டது? யாரிடமும் ஒன்றும் சொல்லவேண்டிய அவசியம் இல்லை. பட்டிக்காடாயிற்றே, பூதம் பிசாசு என்று ஆரம் பித்து விடுவார்கள். யாருக்கு எதைச் சொல்ல முடியும் அண்ணா? வாயை மூடிக்கொண்டிருங்கள். இது பிரமையாகவும் இருக்கலாம்; உண்மையாகவும் இருக்கலாம்."

இந்தக் குட்டிப் பிரசங்கத்திலிருந்து ரங்கநாத்துக்கு இரண்டு விஷயங்கள் புலனாயின. ஒன்று, ரூப்பன் தனது இந்த அநுபவத்தைக் கனவு என்று கூறித் தட்டிக் கழித்து விட விரும்புகிறான். இரண்டாவது, வந்தது 'அவள்' அல்ல, 'அவன்' என்று கூறுகிறான். ரங்கநாத் தொடர்ந்து கூறினான். "இதில் பிரமை ஒன்றும் இல்லை. நான் விழித்துக்கொண்டுதான் இருந் தேன். அவள் வந்து என் கட்டிலில் உட்கார்ந்தாள். என் மீது குனிந்து...".

"சரி, சரி!" கற்பனைக் கொசுக்களை விரட்டுகிற பாவனையில் ரூப்பன் கரத்தை அசைத்தவாறே கூறினான். "ஒத்துக்கொள் கிறேன். உண்மையிலேயே யாரோ வந்திருக்கிறான். ஆனால் இதைப் பற்றி எங்கும் யாரிடமும் கூறவேண்டிய அவசியம் இல்லையென நினைக்கிறேன்."

'வந்திருந்தாலாவது...?' ரங்கநாத் கண்களை மூடி, இமைத் திரையில் கோனார்க்கின் சுரசுந்திரிகளைக் கொணர்ந்து நிறுத்தி, மேலோட்டமாக ஒரு பார்வை பார்த்தான். பின் இருபது முறையாவது மனத்துக்குள் கூறியிருப்பான். "அவன் இல்லை அவள். அவள்தான் வந்தாள். அவளேதான்; அவன் இல்லை."

**ஏ**தோ ஒரு கிராமத்தில் யாரோ யாரையோ கொலை செய்து விட்டார்கள். வேறு யார் மீதோ பழி வாங்கும் நோக் கத்துடன் அவன் பெயர் ஸ்டேஷனில் பதிவு செய்யப்பட்டு விட்டது. வேறு யாரோ, அவனிடமுள்ள விரோதத்தின் காரண மாக, அவனுக்கு எதிராகச் சாட்சி சொல்லவும் ஒத்துக் கொண்டுவிட்டனர். பிறகு யாரோ, யாரிடமோ அவனுக்காகச் சிபாரிசு செய்தனர். யாரோ அவன் சார்பில் யாருக்கோ

லஞ்சம் கொடுத்தார்கள். யாரோ சாட்சிகளைப் பயமுறுத்தினார்கள். யாரையோ முட்டாளாக்கினர். யாரிடமோ அன்பைச் சொரிந்தனர். இப்படியாக, இந்த விஷயம் கோர்ட்டை அடைவதற்குள் உருமாறி விட்டது. கொலை வழக்காக இல்லாமல், பழிக்குப் பழி என்ற நாடகமாகி விட்டது. இரு தரப்பு வக்கீல்களும் தாங்கள் ஏற்ற பாத்திரங்களை மிக நன்றாகவே நடித்தார்கள்.

டிராமா என்ற முறையில் நல்ல தரமான நாடகம் தம்முன் வைக்கப்பட்டுள்ளது என்று நீதிபதிக்கும் நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. சாட்சியாகக் கொணர்ந்து நிறுத்தப்பட்டதெல்லாம் உண்மையல்ல, மோசடி. முடிவில் பொய்யான ஜோடனையில் மதி மயங்கிய அவர், குற்றவாளி குற்றமற்றவன் என்பதை மட்டும் அல்ல, உண்மையில் கொலையே நடக்கவில்லையெனவும் கூறி வழக்கைத் தள்ளிவிட்டார். இதன் பலனாகக் குற்றவாளி ஹரிராம், கொலைக் குற்றவாளி என்று நிரூபிக்கப்படவில்லையாதலால் விடுதலை செய்யப்பட்டான்.

நீதிபதி கூறியதால் மட்டும் குற்றவாளி ஹரிராம் நல்லவனாகி விடவில்லை. எப்போதும்போல் ரௌடியாகத்தான் இருந்தான். ஆனால் ஜெயிலிலிருந்து திரும்பி வந்ததுமே, அந்த வட்டாரம் முழுவதிலுமுள்ள கௌரவமான குடிமக்களுக்கு, அதாவது பெண்களையும், தீண்டத்தகாதவர்களையும், முசல்மான்களையும் தவிர்த்து, ஏனைய மனிதர்களுக்கு ஒரு பெரும் விருந்தளித்தான். இதனால் சிவபால்கஞ்சிலுள்ள எல்லா முக்கியமான பிரமுகர்களும் பக்கத்துக் கிராமத்தில் ஹரிராம் அளித்த விருந்தில் கலந்துகொள்ளச் சென்றிடவே, வைத்தியரின் வீட்டில் ரங்கநாத் மட்டும் தனியாக இருந்தான்.

நாள் முழுவதும் அலுப்புத் தட்டும், உற்சாகமற்ற ஒரு நீண்ட பிரசங்கத்தைப்போல் கழிந்தது. மாலையானதும் அவன் உலாவிவரக் கிளம்பினான். பார்த்தால் பிரின்ஸ்பால் ஒரு வெற்றிலைபாக்குக் கடையில் நின்றுகொண்டிருந்தார்.

வெற்றிலையை மென்றுகொண்டே கடைக்காரனுக்குக் காசு கொடுக்க, அவன் மிகப் பவ்யமாக இந்தக் கடையே தங்களுடையது என்று கூறிக்கொண்டிருக்கும் சமயத்தில் ரங்கநாத் அங்கே போய்ச் சேர்ந்தான். உடனே பிரின்ஸ்பால் மிகக் கம்பீரத்துடன் கடையிலிருக்கும் சாமான்களை, ஜோடனைகளைப் பார்வையிடலானார். பல வண்ணங்களில் சித்திர

வேலைப்பாடுகள் அமைந்த ஒரு பிரேமில் காந்தியடிகள் பயங்கர மாகப் புன்னகை செய்து கொண்டிருந்தார். அவரது வாரிசான நேருஜி கரம் குவித்த நிலையில் நின்றிருந்தார். விஷயம் குழந்தை களின் சரும வறட்சிக்கு நிவாரணம் அளிக்கும் ஒரு தைலத்தின் விளம்பரம். ரங்கநாத் அதைச் சுட்டிக் காட்டிப் பிரின்ஸ் பாலிடம், "பார்த்தீர்களா?" என்றான்.

பதிலுக்கு அவர் அவதி மொழியில் ஒரு பழமொழியைக் குறிப்பிட்டு, "பட்டிக்காட்டுக்குத் தகுந்த பாடம்" என்றார்.

"பட்டிக்காடாவது, பட்டணமாவது?" என்றான் ரங்கநாத். "காந்தியடிகளிடம் எல்லாருக்குமே மதிப்பும் மரியாதையும் உண்டு" என்றவன், அந்தப் படத்தையே சில நிமிஷம் பார்த்துக் கொண்டிருந்தான். மிகுந்த உணர்ச்சியுடன் பிறகு, "இந்தப் படத்தை எழுதியவனுக்கு நூறு செருப்படி கொடுக்கவேண்டும் போல் தோன்றுகிறது" என்றான்.

பிரின்ஸ்பால் சிரித்தார். அந்தச் சிரிப்பு ரங்கநாத் முட்டாள் என்று கூறுவதுபோல் இருந்தது. "நீ எவ்வளவு வெல்லம் கரைக்கிறாயோ, அவ்வளவுதானே இனிக்கும்! வெற்றிலைபாக் குக் கடைக்காரனின் சக்தி எவ்வளவு? காலணாவுக்கு வியாபாரம் செய்கிற பயல்கள். பிகாசோவா மாட்டிவைப்பான்?" என்றார் அவர்.

ரங்நாத் இடைமறித்து உரத்த குரலில், "நிறுத்துங்கள், நிறுத்துங்கள். மாஸ்டர் சாகப்! பிகாசோவைப் பற்றிப் பேசாதீர்கள், உங்கள் வாயால்! அந்தப் பெயரைக் கேட்கும் போது மூர்ச்சையாகிவிடுவேன் போலிருக்கிறது" என்றான்.

இருவரும் சாலைக்கு வந்துவிட்டனர். மாடுகள் எருமைகளின் கூட்டத்தினிடையே இருவரும் காற்று வாங்கினார்கள். காற்று உண்மையில் பெயரளவுக்குக்கூட இருக்கவில்லை. நுரையீரலை நிரப்பத் தூசியும், மூச்சைத் திணறவடிக்கச் சாணத்தின் நெடியும், முதுகைத் துளைத்தெடுக்கக் கோமாதாவின் கொம்பு களுமே இருந்தன.

ரங்கநாத்தின் வார்த்தைகள் பிரின்ஸ்பாலை வெகுவாகத் தாக்கியிருக்கவேண்டும். மிகவும் கம்பீரமாக, பண்புள்ள மனி தனைப் போல் பேச ஆரம்பித்தார். "அப்படியானால், ரங்க நாத்ஜீ, என்னைப் படிக்காத முட்டாள் என்று நினைக்கிறார் போலும். நானும் சரித்திர பாடத்தில் எம். ஏ. பாஸ் செய் திருக்கிறேன். 61% மார்க் வாங்கியிருக்கிறேன். காலத்தின்

கோலம். இப்போது இங்கே பிரின்ஸ்பாலாக இருக்கிறேன்.''

தீவிரமான முனைப்புடன் அவர் பேசியதைக் கேட்டதும் ரங்கநாத்துக்கு என்னவோ போலாகிவிட்டது. தான் வேடிக்கையாகக் கூறியது அவரது மனத்தைப் புண்படுத்திவிட்டது என்று தோன்றியது. அவன் பிரின்ஸ்பாலிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். ''இதெல்லாம் எனக்குத் தெரிந்ததுதான் சார். மோசமான டிவிஷன் வாங்கி இருந்தால் தாங்கள் இங்கேயா இருப்பீர்கள்?'' என்றான்.

''அது சரிதான்'' என்றார் பிரின்ஸ்பால். ''அப்படியிருந்தால் ஏதாவதொரு யுனிவர்ஸிடியில் லெக்சரராக இருந்திருப்பேன். மூன்றும் டிவிஷனில் பாஸ் செய்த என் நண்பர்கள் எத்தனையோ பேர் யுனிவர்ஸிடியிலே இருக்கிறார்கள்.''

பிரின்ஸ்பால் சற்றுநேரம் மனம் சோர்ந்தவராய் நடந்து கொண்டிருந்தார். உணர்ச்சி வயப்பட முயற்சி செய்து கொண்டிருந்தார் போலும். சற்று நேரத்துக்குப் பிறகு, ''ரங்கநாத்ஜி! என்னைப்பற்றி நீங்கள் எல்லாம் என்ன நினைக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். ஒரு கல்லூரியின் பிரின்ஸ்பாலாக இருந்தும் இவன் இவ்வளவு முட்டாளாக, அப்பாவியாக எல்லாரிடமும் நடந்துகொள்கிறானே என்று நினைக்கிறீர்கள். அது சரி, நான் வந்து, அந்தக் கன்னு விஷயத்தை யெல்லாம் விட்டுத் தள்ளுங்கள்; பயல்கள் குண்டர்கள்! ஆனால் மற்றவர்கள் கூறுவதை மிகப் பணிவுடன்தான் கேட்டுக்கொள்கிறேன். முக்கியமாக என்னைவிட வயதில் பெரியவர்களின் வார்த்தையை நான் எப்பொழுதும் ஆமோதிப்பதுண்டு. நீங்கள் என்னை இப்பொழுது முட்டாளாக நினைக்கிறீர்கள். ஆனால் இதற்கு ஒரு காரணம் இருக்கிறது.''

''காரணம் என்னவென்றால்...'' எருமைக்கு வழி விட்டுவிட்டுப் பாதையின் ஓரமாக ஒதுங்கியவர் சிரிக்க ஆரம்பித்தார்.

''அறிவுக்கு மதிப்பு இருப்பது போல் முட்டாள்தனத்துக்கும் ஒரு மதிப்பு உண்டு. முட்டாள்தனமான பேச்சை விரும்பினால் ஏற்றுக்கொள், அல்லது விட்டுவிடு. இதனால் அவனுக்கு ஏதும் நஷ்டம் இல்லை. எதுவும் ஆகப்போவதில்லை. அவன் முட்டாள், என்றும் முட்டாளாகத்தான் இருக்கிறான். முட்டாளை எப்போதும் சீண்டாமல் இருப்பது எனக்கு வழக்கமாகிவிட்டது. சில சமயம் நான் இப்படி நடந்துகொள்வதைப் பார்த்து மக்கள்

என்னையே முட்டாளாகக் கருதுகிறார்கள். ஆனால் அவர்களே முட்டாள்கள்தான். ரங்கநாத் பாபு, நீ என்ன நினைக்கிறாய்?''

பிரின்ஸ்பாலின் வாயிலிருந்து ஒரேயடியாக வெளிப்பட்ட இந்தக் கருத்துக்களைக் கேட்ட ரங்கநாத் அயர்ந்துபோய் விட்டான். பின்னாலிருந்து ஒரு கன்றுக்குட்டி தன் கொம்பினால் குத்திய வலிகூட அவனுக்கு உறைக்கவில்லை. பிரின்ஸ்பால் தான் அவன் கரத்தைப் பற்றி ஓரமாக இழுத்தார். அவர் அறிவாளி என்பதற்கு இதுவே ஓர் அத்தாட்சியாக இருந்தது.

'எப்போது பல்லைக் காட்டினோம்? ஹி....ஹி....ஹி என்று அசடு வழியச் சிரித்தோம்?' என்பது அவனுக்கே தெரியாது. மறு கணம், பிரின்ஸ்பாலிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டவன் மட மடவென்று பேசிக்கொண்டே போனான். "ஆமாம்....ஆமாம், எனக்குத் தெரியும். பிகாசோவைப்பற்றி நீங்கள் எல்லாம் தெரிந்தவராயிற்றே! அதெல்லாம் ஒன்றுமில்லை. நீங்கள் சிவபால்கஞ்சில் இதைப் பற்றிக் குறிப்பிட்டீர்களே, அதுதான் விஷயம். நீங்களே யோசித்துப் பாருங்கள், பிகாசோவின் பெயரையாவது இங்கே யாராவது கேட்டிருக்கமுடியுமா? நினைக்கத்தான் இயலுமா? அதனால்தான் எனக்கு மூச்சே நின்றுவிடும் போலாகிவிட்டது. தவறு உங்களுடையதும் அல்ல, என்னுடையதும் அல்ல. சிவபால்கஞ்ச், வெற்றிலை பாக்குக் கடைக்காரர்களின் தவறும் அல்ல. தவறு பிகாசோ வுடையதுதான்.''

ரங்கநாத் என்ற நபரின் தனித்தன்மை, சிதறி விழுந்து பொடிப் பொடியாவதைப் பிரின்ஸ்பால் பார்த்துக்கொண்டே இருந்தார். பின்பு குரலை இன்னும் கொஞ்சம் உயர்த்திக் கம்பீர மாக கூறினார்: "ஒரு காலத்தில் நானும் ரொம்பப் பிரமாத மாகப் பேசுவேன். அப்போது நான் எம். ஏ. யில் படித்துக் கொண்டிருந்தேன். எந்தப் பேராசிரியர் தகுதி பெற்றவர், யார் முட்டாள் என்று நான் பார்க்கமாட்டேன். ஒவ்வொரு வருக்கும் முன்னால் என் திறமையை அப்படியே வாரிக் கொட்டுவேன். இதனால் ஒரு பேராசிரியருக்குக் கோபம் வந்து விட்டது. எனக்கு வழுக்கிவிட்டது. தெரியுமா, ரங்கநாத் பாபு....?''

இப்போது இருவரும் கிராமத்துக் கடைத்தெருவுக்கு வெளியே வந்துவிட்டனர். மாலை வேளை, கடலை வறுக்கும் அடுப் பின் புகை மேலே எழும்பிச் செல்லாமல் எதிரேயே அலை

பாய்ந்துகொண்டிருந்தது. சூரியன் அஸ்தமித்துவிட்டது என்ருலும் பொரி கடலை விற்கும் கடையில் அமர்ந்திருக்கும் பெண்ணை நன்ருகப் பார்க்க முடிந்தது. பார்க்கத் தகுந்த பெண்தான் என்று மனத்துக்குள் நினைத்துக்கொண்டான் ரங்கநாத்.

கிராமத்தின் குடியிருப்பைத் தாண்டி, ஐம்பது கஜ தூரம் வந்துவிட்டார்கள். இனி மக்கள் நடமாட்டம் இல்லாத வெட்ட வெளிதான். இந்தத் தனிமையில், கவிதை, கொள்ளை, மல ஜலம் கழித்தல் எல்லாம் செய்யலாம். இதனுல்தானே என்னவோ, கவிதை இயற்றவோ, கொள்ளை நடத்தவோ இயலாதவர்கள் பாதையின் இருபுறமும் அமர்ந்து அசுத்தப் படுத்தியபடி, ஒருவர்மீது ஒருவர் கல்லை விட்டெறிந்து கொண்டிருந்தார்கள்.

இன்னும் சற்றுத் தள்ளி நிறைய பெண்கள், நடுத்தர வயதினரும் இதே காரியத்துக்காகப் பாதையின் இருபுறமும் வரிசையாக உட்கார்ந்திருந்தனர். சற்றும் லஜ்ஜையற்று அவர்கள் அங்கே உட்கார்ந்திருந்தது நவபாரதத்தை உருவாக்கும் சிற்பிகளை அவமானத்துக் குள்ளாக்குவதுபோல் தோன்றியது. ஆனுல் நிச்சயமாக இது அவர்களுக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை. ஏனெனில் இப்போது அவர்கள், தங்கள் வீட்டில் பளபளவென்று மின்னும் சிறிய அறையில், 'கமோடி'ல் அமர்ந்த வண்ணம், பத்திரிகை, மலச்சிக்கல், வெளி நாட்டுப் பயணம் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள்.

இவர்கள் இருவரும் வருவதைக் கண்டதும், அந்தப் பெண்களெல்லாம் அப்படியே திடீரென்று 'கார்ட் ஆஃப் ஆனர்' கொடுப்பதுபோல் எழுந்து வரிசையாக நின்றனர். இது தினசரி காணும் காட்சிதான். ஆதலால், ரங்கநாத்தும், பிரின்ஸ்பாலும் தங்கள் வழியில் நடந்துகொண்டிருந்தனர். அந்தப் பெண்களும் சிவனே என்று நின்று கொண்டிருந்தனர். ஒரு செம்மறி ஆடு, 'மே...மே...' என்று கத்திக்கொண்டு, ரங்கநாத், பிரின்ஸ்பால் இருவர்மீதும் மோதியவாறே பாதையின் ஓரத்துக்கு ஓடியது. யாரோ ஒருத்தி, தன் அருகே வைத்துக் கொண்டிருந்த தண்ணீர்ச் சொம்பை உருட்டியவாறே பக்கத்துத் தோட்டத்துக்குள் நுழைந்தது. கல்லை எறிந்தவாறே சில குழந்தைகள் சத்தம் போடத் தொடங்கின. சிலர் அந்த ஆட்டைத் துரத்திக்கொண்டு ஓடினர். இந்த அமர்க்களத்தில் ரங்கநாத்தும் பிரின்ஸ்பாலும் சற்றுநேரம் ஒன்றும் பேசவில்லை.

சுமார் பத்து கஜ தூரம் சென்றபின் அவர்கள் திரும்பிப் பார்த்தனர். பெண்கள் பாதை ஓரத்தில் முன்போலவே உட்கார்ந்துவிட்டிருந்தனர்.

பிரின்ஸ்பால் மீண்டும் விட்ட இடத்திலிருந்து பேச்சைத் தொடங்கினார்.

"ரங்கநாத் பாபு! என்மீது கோபம் கொண்டாரே, பேராசிரியர் அவர் கோபம் தணியவே இல்லை. எனது ஒவ்வொரு செயலிலும் அவர் குற்றம் கண்டுபிடிக்கலானார். கடைசியில் அவர் என் டிவிஷனைக் கெடுத்துவிட்டார். அவர் இருக்கும்போது எனக்கு யூனிவர்ஸிடியில் இடம் கிடைக்காது என்றாகிவிட்டது என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன். இது ஒரு பெரிய கதை! என்ன சொல்ல?"

"அந்தப் பயலை மட்டும் நான் காலை வாரிவிடாமல் இருந்திருந்தால், நிலைமையே வேறாக இருந்திருக்கும். இன்றைக்கு அவர் இருக்கும் இடத்தில் நான் இருந்திருப்பேன்."

இந்தக் கதையை எல்லாம் கூறியபின், பிரின்ஸ்பால் மௌனத்தில் ஆழ்ந்துவிட்டார். சற்றுநேரம் இருவரும் மௌனமாகவே நடந்தனர். நெடுநேரத்துக்குப் பிறகு பிரின்ஸ்பால் சொன்னார். "இம்மாதிரி பலதடவை நான் அடிபட்டிருக்கிறேன். இதன்பின்பு எல்லாமே இப்படித்தான் நடக்கிறது. நடக்கட்டுமே என்று விட்டுவிட்டேன். எல்லாரும் லாப வேட்டைக்காரர்களாக இருக்கும்போது, 'நீ என்ன பிரமாத யோக்கியனாகி நடந்து எதைச் சாதித்துவிடப் போகிறாய்? எதை மாற்றிவிடப் போகிறாய்?' என்ற முடிவுக்கும் வந்துவிட்டேன். எனது தற்போதைய நிலை என்ன தெரியுமா? நீ ஏதாவது சொல்லுகிறாயா, 'ஆமாம், ஆமாம், ரொம்பச் சரி!' வைத்தியர் சொல்லுகிறாரா, 'மகராஜ்! நீங்கள் சொல்வதுதான் ரொம்பச் சரி.' ரூப்பன் சொல்லட்டும், பயில்வான் சொல்லட்டும், 'எல்லாம் சரி. ரொம்பவும் நல்லது. நல்லது' என்பதுதான்."

பிரின்ஸ்பாலை இடைமறிக்கும் துணிவு ரங்கநாத்துக்கு ஏற்படவில்லை. "ஆமாம் சார், சரிதான்" என்றான்.

திடீரெனப் பிரின்ஸ்பால் ஆவேசம் வந்தவர் போல் பேசினார். "அது சரி, ரங்கநாத் பாபு, நான் நான்கு சகோதரிகளுக்குத் திருமணம் செய்தாகவேண்டும். ஒரு காசு கிடையாது கையில். வைத்தியர் கழுத்தைப் பிடித்துக் கல்லூரிக்கு வெளியே தள்ளிவிட்டால், பிச்சைகூட யாரும் போடமாட்டார்கள். இப்போ,

நீயே சொல்லு. இந்தக் கன்று, வன்று சொல்வதைக் கேட்பதா, அல்லது வைத்தியர்........".

இந்த உரையாடலில் பிரின்ஸ்பாலின் தனித்துவத்தில் மறைந்திருந்த ஒரு பெரும் பகுதி, மனிதத்தன்மை வெளிப்பட்டுக் கொண்டிருந்தது என்றாலும், அவர் பேச்சில் இப்போது அதே வழக்கமான அசட்டுத்தனமே அதிகமாக வெளிப்பட ஆரம்பித்ததும், அதன் மயக்கம் கலைந்துவிட்டது. ரங்கநாத்தின் மனமும் முன்போலவே லேசாகிவிட்டது. "இல்லை இல்லை. நீங்கள் செய்வதெல்லாம் சரிதான். சரியாகத்தான் செய்கிறீர்கள். நீங்கள் அமர்ந்திருக்கும் இடமும் சரிதான். யுனிவர்ஸிடி புரொபசராவதில் என்ன இருக்கிறது? இங்கே நீங்கள் இருக்கும் பதவி என்ன வைஸ் – சான்ஸ்லருக்குக் குறைந்ததா?" என்றான் அவன்.

இவ்வளவு நேரத்துக்குப் பிறகு இப்பொழுதுதான் பிரின்ஸ்பால் சிரித்தார். "அது சரிதான். வைஸ் - சான்ஸ்லரைவிட நல்ல நிலையில் இருப்பதாகத்தான் நான் நினைக்கிறேன். வைஸ் – சான்ஸ்லருக்கு வாழ்க்கை நரகந்தான். பொழுது விடிந்ததுமே கடிரை எடுத்துக்கொண்டு போய் எக்ஸிகூடிவ்களுக்குச் சலாம் போடவேண்டும். சில சமயம் சான்ஸ்லர், சில சமயம் மந்திரிகள், சில சமயம் காரியதரிசிகளுக்கு முன்னே போய் நிற்கவேண்டும். வருஷத்துக்குக் குறைந்த பட்சம் நாலு தடவையாவது கவர்னர் மிரட்டுவார். ராவும் பகலும் ஒரே சள்ளை, பிடுங்கல். மாணவர்கள், அவன் அம்மாவையும், சகோதரிகளையும் கண்டபடி வைதுகொண்டே ஊர்வலம் கிளம்புகிறார்கள். எப்பொழுது அடி விழுமோ என்ற பயம் எப்போதும். போலீஸுக்குப் போன் செய்தால் இன்ஸ்பெக்டர் சிரிக்கிறான்; 'இந்த வைஸ் - சான்ஸ்லர் இருக்கிறாரே, அவருக்கு வருடத்தில் பதினைந்து, இருபது முறையாவது மாணவர்களின்மீது தடியடிப் பிரயோகம் செய்யாவிட்டால் இவர் மனம் நிம்மதியடையாது' என்கிறான். ரங்கநாத் பாபு, நிலைமை எப்படியிருக்கிறது?" என்றார்.

ரங்கநாத் ஒன்றும் பேசவில்லை.

தொண்டையைக் கனைத்துக்கொண்டு அவர் தொடர்ந்தார். "இப்பொழுது பிரின்ஸ்பால் பதவியில் இந்தத் தொந்தரவு இல்லை. வைத்தியர் மானேஜராக இருக்குமிடத்தில் பிரின்ஸ்பால் சிங்கக்குட்டிதான் என்று வைத்துக்கொள். நான் யாரை

யும் முகஸ்துதி செய்துகொண்டு திரியவேண்டிய அவசியம் இல்லை. வைத்தியரைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு எல்லாரையும் மிரட்டுகிறேன். ரங்கநாத், என்ன நினைக்கிறாய்?''

''நீங்கள் சொல்வது முழுதும் சரிதான்.''

''உண்மையைக் கேட்டால் யூனிவர்ஸிடி லெக்சரராகவில்லையே என்ற வருத்தம் எனக்கு இப்பொழுது கொஞ்சங்கூட இல்லை. அது இன்னும் மோசமான நரகம். படுநரகம். இருபத்து நாலு மணிநேரமும் காக்காய் பிடிக்கும் வேலைதான். ஏதாவது சர்க்கார் போர்டு ஒரு பத்து ரூபாய் மானியம் தந்ததென்றால், காதைப் பிடித்து முறுக்கித் தனக்கு வேண்டியபடி 'தீசிஸ்' எழுதி வாங்கிக்கொள்கிறது. ரிஸர்ச் செய்கிறார்களாம் ரிஸர்ச். யாரைப் பார், ஏதாவதொரு 'ரிஸர்ச் ப்ராஜக்ட்' என்கிறான். இதென்ன ரிஸர்ச்? யாருடைய உப்பைத் தின்கிறானோ, அவனைப் பாடுகிறான். வேறு என்ன? ஆமாம், ஏதேதோ சொல்லுகிறார்களே.... என்ன வார்த்தை அது?.... ஓ.... நினைவு வந்துவிட்டது. அறிவுஜீவிகளாம், சொல்லுகிறார்கள். இந்த அறிவுஜீவிகளின் நிலை என்ன தெரியுமா? மேனாட்டுப் பயணம் செய்ய வாய்ப்பு பெறத் தங்கள் அப்பாவின் பிள்ளைகள், தாங்கள் இல்லை என்று நிரூபிக்கவேண்டுமானாலும் இவர்கள் தயங்காமல் அதைச் செய்துவிடுவார்கள். நாற்சந்தி முனையில் நிறுத்தி, பத்துத் தரம் செருப்பினால் அடித்தாலும் சரி, 'என்னை ஒருமுறை அமெரிக்காவுக்கு அனுப்பிவிடு' என்பார்கள். இவர்கள்தான் அறிவுஜீவிகள்.'' சில நிமிஷங்களுக்குப் பிறகு அவரே கூறினார். ''வைத்தியரைப் புகழ் பாடி, சந்தோஷப்படுத்த நான் தயார். ஆனால் ஒவ்வொருத்தன் முன்னிலையிலும் தலை வணங்க நான் தயார் இல்லை. லெக்சரர் ஆவது என்னால் இயலாத செயல்.''

பிரின்ஸ்பால் தம் தலையை வேகமாய் அசைத்து லெக்சரர் ஆகமாட்டேன் என்று மறுத்தார். அவர் முகத்தைப் பார்த்தால் உலகத்திலுள்ள யூனிவர்ஸிடிகளில் எல்லாம் இதனால் சோகம் பரவிவிட்டது போலத் தோன்றியது.

''தாங்கள் சொல்வது ரொம்பவும் சரி'' என்றான் ரங்கநாத்.

பிரின்ஸ்பால் ரங்கநாத்தை உற்றுப் பார்த்தார். பின்பு திடீரென்று சிரிக்க ஆரம்பித்தார். ''என்ன விஷயம். ரங்கநாத் பாபு, நான் சொல்வதற்கெல்லாம் 'ரொம்ப நல்லது, சரி-சரி' என்கிறாயே?'' என்றார் மெதுவாக.

"உங்களது அநுபவத்திலிருந்து பயனடையலாமா என்று பார்க்கிறேன். ஒருவர் சொல்லுவதை மறுத்துப் பேசுவதில் என்ன இருக்கிறது? தாங்கள் சொல்வது, ரொம்பவும் சரி அவ்வளவுதானே?" என்ருன் ரங்கநாத்.

பிரின்ஸ்பால் கடகடவெனச் சிரித்தார். "சரியாகச் சொன்ஞய் ரங்கநாத் பாபு. நான் பிகாசோவின் பெயரைச் சொன்னதுமே உனக்கு மூர்ச்சை போட்டிருக்கும். எனக்கும் புரிகிறது. இதிலெல்லாம் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமே இல்லை. யந்திரங்களின் மீதுகூட இதன் பாதிப்பு ஏற்பட்டுவிடுகிறது. ஒரு சம்பவம் சொல்லுகிறேன் கேள்.

"ஒரு விமானம் இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குப் போய்க் கொண்டிருந்தது. விமானத்தில் ஒரு புகையிலை வியாபாரியும் பிரயாணம் செய்துகொண் டிருந்தான். அந்தப் பயலுடைய வாழ்க்கை முழுவதும் பீடி, சிகரெட் வியாபாரத்திலேயே கழிந்திருக்கிறது. திடீரென அவனுக்கு என்ன தோன்றியதோ, இலக்கியம், வேதாந்தம் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டான். அவ்வளவுதான், விமானத்தின் இயந்திரம் அப்படியே ஸ்தம்பித்துவிட்டது! சுமார் ஓராயிரம் அடி கீழே வந்துவிட்டது விமானம். ஒரே குழப்பம், கலவரம்! ஏதோ விபத்து ஏற்பட்டுவிட்டது என்று பிரயாணிகள் நினைத்துவிட்டனர். ஆனால் இதற்குள் எல்லாம் தாஞகவே சரியாகிவிட்டது. இன்ஜின் மீண்டும் வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது.

"விமானத்தின் இன்ஜினீயர் இதைப் பற்றிப் புலன் விசாரணை செய்ததும் என்ன தெரிந்தது தெரியுமா? புகையிலை வியாபாரி, கார்ல் ஜஸ்பெர்ஸின் பெயரைச் சொல்லியிருக்கிருன். அவ்வளவுதான், இந்தத் துயரத்தின் அதிர்ச்சியில் விமானத்தின் இன்ஜின் திடீரென்று நின்றுவிட்டது. அதன் பிறகு பிரயாணிகள், வியாபாரியை ரொம்பவும் தாஜாப் பண்ணி, 'ஐயா ஒன்று நீங்கள் சும்மாயிருங்கள், அல்லது பீடி, சிகெரெட், புகையிலையைப் பற்றி மட்டும் பேசுங்கள். இல்லாவிட்டால் இந்த விமானம் விபத்துக்குள்ளாகிவிடும்' என்ருர்களாம்."

ரங்கநாத்துக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "ஓ... எவ்வளவு வேடிக்கையாகப் பேசுகிறீர்கள்?" என்ருன்.

"தினமும் உனக்காக இப்படிப் பேச நான் தயார். ஆனல் உனக்கு என்னைக் கவனிக்க ஏது நேரம்? இப்பொழுதெல்

லாம் கன்னு மாஸ்டரின் பேச்சில் மயங்கி இருப்பதுபோல் தோன்றுகிறது."

உலாவிவிட்டு அவர்கள் இருவரும் திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். காற்றிலே நல்ல குளிர். இருளும் சூழ்ந்துவிட்டது. பாதையின் ஓர் ஓரத்தில் லம்பாடிகள் அமர்ந்து கணப்பிலே குளிர் காய்ந்துகொண்டிருந்தனர். நாகரிகமானவர்கள் என்று தங்களைக் கருதுபவர்களுக்குப் புரியாத மொழியில் அவர்கள் உரையாடிக்கொண்டிருந்தனர். போகும்போது பசு, எருமைக் கூட்டங்களை எப்படி நிச்சிந்தையாகத் தாண்டிச் சென்றாரோ, அப்படியே இப்பொழுதும் இவர்களைக் கடந்து நடந்துவந்தார் பிரின்ஸ்பால். ரங்கநாத் ஒரே ஒருமுறை திரும்பிப் பார்த்தவன், "ரொம்பவும் குளிர்கிறது" என்றான்.

கால நிலையைப்பற்றி எதுவும் கூறப் பிரின்ஸ்பால் தயாராக இல்லை. இன்னமும் அதே பழைய பல்லவியையே உறுதியாகப் பற்றிக்கொண்டிருந்தார். "உங்களால் மனிதனை இனம் காணமுடியவில்லை. ரூப்பன், கன்னுவின் வலையில் விழுந்துவிட்டான் என்று காதில் விழுந்தது. ஆனால் ரங்கநாத் பாபு, இந்தக் கன்னு மாஸ்டர் எப்படிப்பட்டவன் என்பதை நீங்கள் யோசிக்கவேண்டும்."

"இந்தக் கன்னு ரொம்பத் தந்திரசாலி. அன்று அடிதடி வரை விஷயத்தை இழுத்துவிட்டான் பார்த்தாயா? இதனால் அவனுக்கு என்ன நஷ்டம்? காலேஜின் மரியாதைதான் கெட்டுவிட்டது."

ரங்கநாத் கூறினான். "சண்டை என்னவோ இருதரப்பிலும் நடந்ததாகத்தானே நான் கேள்விப்பட்டேன்."

"நீங்கள் என்ன கேள்விப்பட்டால் என்ன, ரங்கநாத் பாபு? இப்பொழுது கேஸ் கோர்ட்டில் இருக்கிறது. மாஜிஸ்டிரேட் என்ன நினைக்கிறாரோ, அதன்படிதான் தீர்ப்பு" என்று பற்றற்ற துறவியைப் போல் கூறினார் பிரின்ஸ்பால்.

"இருந்தாலும் இது ரொம்பவும் மோசம்."

"மோசமா? நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகவேண்டிய விஷயம், ரங்கநாத் பாபு! கன்னு மாஸ்டர் அவ்வளவு மான வெட்கம் உள்ளவனாகத் தெரியவில்லை. நாம்தான் அவன் கழுத்திலே கல்லைக் கட்டிப் போடவேண்டும். அப்பொழுதுதான் மூழ்குவான்."

யாரேனும் கேட்டால் கேட்கட்டும், கேளாவிட்டால் போகட்டும் என்று பிரசார இலாக்கா பற்றற்றுப் பணிபுரிவது

போல், பிரின்ஸ்பாலும் பேசிக்கொண்டே இருந்தார். "போலீ சார்தான் வேண்டுமென்றே இரு தரப்பினர் மீதும் 107-ஆம் பிரிவின்படி வழக்குப் பதிவு செய்திருக்கிறார்கள். இதுதான் போலீசாரின் அயோக்கியத்தனம். அயோக்கியத்தனம் செய் தது கன்னு, அடிதடிக்குத் தயாராய் நின்றது அவனது கூட் டாளிகள். ஆனால் வ்ழக்குப் பதிவு செய்யப்பட்டது அவர்கள் மீது மட்டும் அல்ல, எங்கள்மீதும்தான். இதைத்தான் அநியாய மென்று சொல்லுகிறோம்."

"நேற்றுத்தான் வழக்குத் தாக்கலாகியது. சமாதானம் செய்துகொள்ளும்படி என்னிடம் கூறப்பட்டது. இதில் சமா தானத்துக்கு என்ன இருக்கிறது? நேரிடையாக, 'என்னைத் தூக்கில் மாட்டிவிடுங்கள். எல்லாச் சண்டையும் தீர்ந்துவிடும். சிவபால்கஞ்சில், கன்னு மாஸ்டரும் அவருடைய ரௌடி சகாக் களும் மட்டும் இருக்கட்டும். அப்புறம் ஒரு சண்டையோ, தகராறோ இருக்காது' என்றேன்.

"நான் ஒன்றும் பேசாமல்தான் திரும்பிவந்தேன். அந்தப் பக்கம், அறுபது எழுபது மாணவர்களைத் திரட்டிவைத்துக் கொண்டு, 'பிரின்ஸ்பால், முர்தாபாத்!' என்ற கோஷம் எழுப் பிக்கொண் டிருந்தார்கள். நகரத்திலுள்ள கோர்ட்டாரும், நூற்றுக் கணக்கில் மரியாதையுள்ள கனவான்களும் அங்கே இருந்தனர். இவர்களெல்லாம் யார் என்று அவர்கள் வினவிய தும், கன்னு மாஸ்டர், 'இவர்கள் சங்காமல் கல்லூரி மாணவர் கள்' என்று கூறினன்."

"வெட்கங் கெட்டவன்."

"ரங்கநாத் பாபு! எல்லாம் புரிந்ததா? இதுதான் உங்கள் கன்னு மாஸ்டரின் லட்சணம். ரூப்பனிடம் சொல்லும், பின்னல் வருத்தப்பட நேரும்."

போலீஸ் ஸ்டேஷன் வழியாகச் சென்றனர் இருவரும். எதிரே பார்த்தால், லாந்தரை வைத்துக்கொண்டு, பல கான்ஸ்டேபிள் கள் இங்குமங்கும் சுற்றிக்கொண் டிருந்தனர். ஒரே சத்தமும் அமர்க்களமுமாக இருந்தது. சில பையன்கள் பாதையில் நின்று கோரஸ் போல் எதையோ பாடிக்கொண் டிருந்தனர். போலீஸ் ஸ்டேஷனுக் கருகே இன்ஸ்பெக்டரின் வீட்டுக்கு எதிரே, மூன்று டிரக்குகள் நின்றன. அவற்றில் சாமான்களை ஏற்றிக்கொண் டிருந்தனர். கான்ஸ்டேபிள்களின் கூச்சல்கள், பரபரப்புக்கு இதுதான் காரணம் என்று தெரிந்தது.

"ஓ.... இன்ஸ்பெக்டரைத் தூக்கிவிட்டார்கள் போலிருக்கிறது" என்றார் பிரின்ஸ்பால் மெல்ல. இதைக் கூறும்போதே தம் கூற்றின் முழுப் பொருளும் அவருக்கு விளங்கிவிட்டது போலும். ரங்கநாத்தின் தோள்களைப் பற்றியவாறு மகிழ்ச்சியுடன் ஆரவாரித்தார். "ஓகோ! இதுதான் விஷயமா? இலாக்காவே நாற்றமடித்தது. இனித் துப்புறவாகிவிடும்."

"இவ்வளவு சீக்கிரம் உத்தரவு எப்படி வந்ததோ தெரியவில்லை. மத்தியான்னம் வரையில் ஒரு தகவலும் இல்லையே?" என்றான் ரங்கநாத்.

பிரின்ஸ்பாலின் மகிழ்ச்சியைப் பார்க்க வேண்டுமே! அப்படியே கரங்களை விரித்துக்கொண்டு வானத்தில் பறந்து, எதிரேயுள்ள மரக்கிளையில் அமர்ந்து புல்புல் பறவைபோல் ஆனந்தகீதம் இசைத்துவிடுவார் போலிருந்தது. "ரங்கநாத் பாபு! இத்தனை நாட்களாக உங்கள் மாமாவுடன் வசித்தும் அவரைத் தெரிந்துகொள்ளவில்லையே நீர்! இதற்கு முன்னே இருந்த இன்ஸ்பெக்டரை, சும்மா பன்னிரண்டே மணி நேரத்தில் சிவபால்கஞ்சைவிட்டுத் துரத்திவிட்டார் தெரியுமா? இவருக்காவது பாவம், இருபத்துநான்கு மணிநேரம் கிடைத்திருக்கிறது" என்றார் அவர். பிறகு குரலைத் தாழ்த்திக்கொண்டு கிசுகிசுத்தார். "வைத்தியரை யாராலேனும் மிஞ்சமுடியுமா? ஜோக்நாத்தை ஜாமீனிலே என்று விடவில்லையோ, அன்றே நினைத்தேன், இனி ஆசாமி மூட்டை கட்டவேண்டியதுதான் என்று. இது போதாதென்று நம்ப விஷயம் 107 வேறு. ரங்கநாத் பாபு, நீரே சொல்லுங்கள். என்னைச் சார்ஜ் பண்ணவேண்டிய அவசியம் என்ன வந்தது? ஆனால் இவருக்கு யார் சொல்லுவது? ராமாதீன்தான் இவருக்குக் குருவாகி விட்டானே! தான் நினைத்தபடி இவரை ஆட்டினான். ஆனால் பார்த்தீரா? இன்னும் பத்து நாட்கள்கூட ஆகவில்லை. தூக்கி விட்டார்கள்."

பையன்களின் கோரஸ் இன்னமும் தொடர்ந்துகொண்டிருந்தது. டிரக்குகளின் முன்னே வந்து நின்று சாமான்கள் ஏற்றப்படுவதைப் பார்க்கலானார்கள்.

ஒரு டிரக்கில் பெரிய பெரிய கருங்காலிக் கட்டில்கள் ஏற்றப்பட்டன. மீதமிருந்த இடத்தில், ஒரு நல்ல ஜாதிப் பசுவும், அதன் கன்றுக்குட்டியும் ஏற்றப்பட்டன. பிரின்ஸ்பால் இதைப் பார்த்துவிட்டு, "எருமையைக் காணோமே. முதல் தர எருமை, முர்ரா ஜாதி" என்றார்.

"இந்தப் பசு, டிகைத்கஞ்ச் டாக்குர்கள் கொடுத்தது. அது தான் அந்த விதவை மருமகள் விஷயம். கோதானம் செய்து விடுதலை பெற்றுவிட்டார்கள்" என்று ரங்கநாத்துக்கு அறிவித் தார் அவர்.

குறிப்பிட்ட ஒருவனைக் கேட்காமல் பொதுப்படையாகச் சற்றே குரலை யுயர்த்திப் பிரின்ஸ்பால் வினவினூர், "எருமை என்னவாயிற்று? காளுேமே?" என்று.

இருட்டிலிருந்து பதில் வந்தது, "விற்ருகிவிட்டது" என்று.

"யாருக்கு?"

"நகரத்திலிருந்து ஒரு மாட்டுக்காரன் வந்தான்."

"என்ன விலை?"

"நூறு ரூபாய்! என்ன நினைத்தீர்கள்? ஆயிரம் ரூபாய் வருமென்ரு?"

"இப்பொழுதும் அப்படித்தான் நினைக்கிறேன்" என்று வேடிக்கையாகப் பதில் அளித்த பிரின்ஸ்பால், 'நீயும் இந்த வேடிக்கையைச் சற்று ரசியேன்' என்பதுபோல் அவனது தோள்களைப் பற்றி லேசாகக் குலுக்கினூர்.

டிரக்குக்கு அருகே கட்டில்கள்தான் கிடந்தன. இன்ஸ்பெக் டருக்குக் கட்டில்களில் மிகவும் விருப்பமுண்டு என்று ரங்கநாத் கேள்விப்பட்டிருந்தான். இன்று அதைக் கண்ணுரைப் பார்த்தாகி விட்டது. அப்போது பெருத்த ஆரவாரத்துடன் கட்டில்கள் டிரக்கில் ஏற்றப்பட்டுக்கொண் டிருந்தன. சிலவற்றை ஏற்றி யாகிவிட்டது. சிலவற்றை ஏற்றிக்கொண் டிருந்தனர். இன்னும் சிலவற்றை ஏற்றியாகவேண்டும். தெருவில் நின்று கூச்ச லிட்டுக்கொண் டிருந்த பையன்கள், இருட்டின் காரணமாய் அந்த இடத்தை, நன்ருய்ச் சுற்றி வளைத்து வட்டமாக நின்ற வண்ணம் கட்டில்கள் ஏற்றப்படுவதைப் பார்க்கலாயினர்.

ஒரு கான்ஸ்டேபிள் கட்டிலின்மீது ஏறி நின்று, விளக்கைக் கீழே தொங்கவிட்டு, கட்டிலை ஏற்றிக்கொண் டிருந்தவர்களை உற்சாகப்படுத்திய வண்ணம், "ஏய்! இந்தாங்கப்பா? ஜாக்கி ரதை! எங்கேயாவது காலை உடைத்துவிடப் போகிறீர்கள்! ஏய்! எனக்கு முன்னரே தெரியும்! நீங்கள் உடைக்காமல் விடமாட் டீர்கள்" என்று கூச்சலிட்டுக் கொண்டே இருந்தான். அவனு டைய கூச்சலைக் கேட்டபோது, ஏதாவதொரு கட்டிலின் கால் முறிவது குடியரசான இந்தியாவில் நேரிடும் ஒரு மகத்தான விபத்து என்று தோன்றியது. கட்டிலை டிரக்கில் ஏற்றியவர்

களை நோக்கி, ரங்கநாத்தும் குளிர்ந்த குரலில் கூறினன்: ஆமாம்பா? ஏதாவது காலை கீலை உடைத்துவிடாதீர்கள். மெது வாகப் பார்த்து ஏற்றுங்கள்.''

இதைக் கேட்ட பிரின்ஸ்பால் உரக்கச் சிரித்தார். கட்டில் களைக் கவனிப்பதில் எந்தவிதக் குந்தகமும் ஏற்படுத்தாமல், நின்ற இடத்திலிருந்தே கான்ஸ்டேபிள் ஒருவன் குரல் கொடுத்தான். ''யாரது? பிரின்ஸ்பால் சாகப்! ஜய்ஹிந்த் பிரின்ஸ் பால்ஜீ!''

''ஜய்ஹிந்த்! என்னப்பா விஷயம்? மாற்றலா?''

''ஆமாம், சாகப். இன்ஸ்பெக்டர் மேலதிகாரிக்கு எழுதிக் கேட்டிருந்தார். பெண்ணின் படிப்பு விஷயமாக நகரத்துக்கு மாற்றிக்கொண்டுவிட்டார்.''

''நம்பக் காலேஜில் படிக்கலாமே? சிவபால்கஞ்ச் நகரத்தை விடக் குறைந்ததா என்ன?''

''உங்கள் காலேஜ் இந்துஸ்தானி ஸ்கூல். அவர் பக்தின் ஸ்கூலில் ஆங்கிலப் படிப்பு படிக்க வைப்பார். பேபிக்கு யூனி பாரம் தைத்து வந்திருக்கிறது. நீல நிறம். அதைப் போட்டுக் கொண்டால், பேபி, அப்படியே இங்கிலீஷ்காரி மாதிரி இருக்கிருள்.''

''அப்போ மாற்றலாகி நகரத்துக்குப் போகிருர். நல்லது தான். அப்போ இந்தப் பசு எதற்கு? இதற்கு வைக்கோல் எங்கிருந்து வரும்? இதை விற்கப் போவதில்லையா?''

கான்ஸ்டேபிள் முழு பலத்தையும் செலுத்தி ஒரு கட்டிலை உயரத் தூக்கியவன், பெருமூச்சு விட்டுக்கொண்டே, ''விற்பதா? இல்லை. பசு, மிலிட்டிரி பண்ணையில் இருக்கும். அங்கே நம்ப இன்ஸ்பெக்டரின் அண்ணன் வேலையாக இருக் கிருர். இங்கே பாவம், இதற்கு என்ன கிடைத்தது? சாப்பிடற நாளே இனிமேதான் இதுக்கு வரப்போகிறது.''

டிரக்கின்மேலே நின்றவனின் கவனமெல்லாம் கட்டில்கள் கால் முறியாமல் வண்டியில் ஏற்றவேண்டும் என்பதில் தான் இருந்தது. பற்களைக் கடித்துக்கொண்டு, ''டேய்... சரியாய் ஏத்துடா? பயலே! அந்தக் கட்டிலை உடைத்துவிடாதே! உடைத்துவிட்டாயோ... பயலே! தெரியும் சேதி!'' என்று உறுமிக்கொண் டிருந்தான்.

வைத்தியர் இப்பொழுதுதான் இன்ஸ்பெக்டரைச் சந்திக்க வந்திருப்பதாக யாரோ பேசிக்கொண்டனர். ''நான் இருக்கும்

போது உங்களை எப்படி மாற்றமுடியும்? சொல்லுங்கள். இதை இப்பொழுதே கான்சல் செய்கிறேன்'' என்றூராம் வைத்தியர்.

''மானமுள்ளவராக இருந்தால் விடியற்காலையில் கோழி கூவுவதற்கு முன்னரே சிவபால்கஞ்சைவிட்டுப் போய்விட வேண்டும் இவன்'' என்று பிரின்ஸ்பால் ரங்கநாத்திடம் கூறினர்.

சற்று நேரம், சாமான்களையே பார்த்துக்கொண்டு நின்றனர் இருவரும். ரங்கநாத் சொன்னன்: ''இன்ஸ்பெக்டர் சாருக்குக் கட்டில் என்ருல் ரொம்ப ஆசை போலிருக்கிறது.''

''இனமாக எது கிடைத்தாலும் விருப்பந்தான்'' என்ற பிரின்ஸ்பால், டிரக்கின் மேலே நின்றவனை நோக்கி, ''அடே தம்பி, அந்த உடைந்த கட்டிலைப் போட்டுவிட்டு போப்பா. ஒரு ரூபாய், அரை ரூபாய்க்கு எடுத்துக்கொள்கிறேன்'' என்ருர்.

''இவ்வளவு பெரிய மனிதராக இருந்துகொண்டு, இப்படி அற்பமாகப் பேசுகிறீர்களே! வாங்கிக்கொள்வதானல் பூரா டிரக்கையே வாங்கிக்கொண்டு போங்கள். சொல்லுங்கள், இப்பொழுதே வேண்டுமானலும்......''

'ஹி...ஹி.... டிரக்கையே வாங்கிக்கொண்டு என்ன செய்ய? நான் சாதாரண ஸ்கூல் மாஸ்டரப்பா'' என்றவர் சட்டெனக் குரலை மாற்றிக்கொண்டு, வெகு சாதாரணமான மனிதனைப் போல், ''இன்ஸ்பெக்டர் வீட்டில்தான் இருக்கிருரா? வைத்திய ரும் இருக்கிருரா? அப்போ போகலாம், ரங்கநாத் பாபு! இன்ஸ்பெக்டரைப் பார்த்துவிட்டு வரலாம். பாவம், ரொம்பவும் நல்ல மனிதர். ஒருவரையும், ஒருபோதும் துன்புறுத்தியதே இல்லை. யாரிடத்திலும் எதுவும் கேட்டதில்லை. கடவுளாகப் பார்த்து என்ன கொடுத்தாரோ, அதைக் கண்ணை மூடிக் கொண்டு வாங்கிக்கொண்டார். பாவம்'' என்ருர்.

'உண்மையிலே பாவம், நல்ல மனிதர்தான். அதனல்தான் போய்விட்டார்' என்று நினைத்தான் ரங்கநாத்.

# அத்தியாயம் 19

சிக்கிலியர்கள், உயர் ஜாதி வகுப்பினர்கள் ஆகிய இரு வகுப்பினரும் வசிக்கும் பகுதிகளுக்கிடையே அமைத்திருந்த காந்தி சதுக்கத்தில் இன்று நாய்கள் குரைத்துக்கொண் டிருக்க வில்லை. மனிதர்கள்தான் பேசிக்கொண் டிருந்தனர். தேர் தலுக்கு முன்பே ராமாதீனின் சகோதரர் அந்த இடத்தை நன்கு சுத்தம் செய்திருந்தார். ஒருகால் தேர்தல் சட்டத்தில் இவ்வாறெல்லாம் குறிப்பிடப்பட்டிருக்கிறதோ என்னவோ தெரியாது. ஆனல் ஒவ்வொரு தேர்தலுக்கு முன்பும், அதாவது சில மாதங்களுக்கு முன்பே, அரும்பெரும் தலைவர்கள் எல்லாம், தங்கள், தங்கள் தேர்தல் களத்தை அபிவிருத்தி செய்து விடுகின்றனர். ஒருவர் புதிய பாலமொன்றைக் கட்டுவிக்கிருர். இன்னொருவர், சாலை போடுகிருர். மற்றொருவர், ஏழை களுக்கு அன்னமிடுகிருர், கம்பளிகளைத் தானமாக வழங்கு கிருர். இந்தக் கணக்குப்படி, ராமாதீனின் சகோதரர் சதுக் கத்தின் சுற்றுப்புறத்தைச் சீராக்கி, அதன் தோற்றத்தையே மாற்றிவிட முயன்றிருந்தார்.

அங்கே, நீண்டுயர்ந்த ஒரு பெரிய வேப்பமரம் இருந்தது. அறிவு ஜீவிகளைப் போல் அது நெடுந்தூரம் நீண்டு பரந்து கிளை பரப்பி நின்ருலும், தன்னகத்தே காலியாகத்தான் நின்றது. ராமாதீனின் சகோதரர் அதனடியிலே ஒரு கிணற்றை வெட்டு வித்தார். உண்மையிலே கிணறு என்னவோ, முன்பே அங் கிருந்ததுதான். ஆனல் அவர் அதைப் புதுப்பித்து, நடப்பு உலகத்தின் வழக்கப்படி, கிணற்றை வெட்டுவித்த செய்தி யைச் சர்க்கார் தஸ்தாவேஜுகளில் பதிப்பித்தார். இது நல்ல கணிசமான உதவித் தொகையைப் பெறக்கூடிய வாய்ப்பு மட்டும் அல்ல, ஒருவிதத்தில் அரசியல் நடவடிக்கையாகவும் இருந்தது. முன்பு அந்தக் கிணறு, மழைக் காலத்தில் சுற்றும் புறமும், உயரமான இடத்திலிருந்து வரும் மழை நீரையெல்

லாம் தன்னகத்தே இழுத்துக்கொண்டிருந்தது. இதனால் அந்தப் பகுதியில் வெள்ளம் பெருகி ஓடுவதை அது தடுத்து வந்தது எனலாம். இப்பொழுதோ கிணற்றைச் சுற்றிச் சிமெண்ட் மேடை அமைக்கப் பட்டுவிட்டது. இதிலிருந்து இது ஏதோ ஓர் ஐந்தாண்டுத் திட்டத்துடன் சம்பந்தப்பட்ட நடவடிக்கை என்பது தெளிவாகிவிட்டது. இதையே மேலும் தெளிவாக்க, கிணற்றின் இருபுறமும் இரு கம்பங்கள் நிறுத்தப்பட்டன. அவற்றில் ஒன்றின்மீது கற்பலகையில் பொறிக்கப்பட்ட வாசகம் இதுதான்.

'மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்.'

சிவபால்கஞ்ச் பஞ்சாயத்தின் கால்நடை மருத்துவர் ஸ்ரீ ஜாவூலால் இந்தக் கிணற்றுக்கு அஸ்திவாரக் கல்லை நாட்டினார். தலைவர், ஸ்ரீ ஜகதம்பா பிரசாத் அவர்கள்.

மேடை கட்டிவிட்டதால் வெளியேயிருந்த தண்ணீர் உள்ளே இறங்குவதற்குப் பதிலாக, மேடையிலிருந்த தண்ணீர் வெளியே வழிந்தோடலாயிற்று. இப்படி இந்த நீர் தேங்கித் தேங்கித் குட்டையானதுதான் மிச்சம். கடைசியில் அது ஒரு பெரிய சாக்கடையாக உருவெடுத்து, கிராமத்து மக்களை நோக்கி, 'வயிற்றுப் புழுக்களைப் பற்றிய அநுபவந்தான் உங்களுக்கு ஏற்கனவே உண்டு. இனி அதை விட்டுவிட்டு வாருங்கள். கொஞ்சம் மலேரியாவையும், ஃபைலேரியாவை யும் வாங்கிக்கொண்டு போங்கள்' என்று சொல்லுவது போலிருந்தது.

கிணற்றுப் புனரமைப்பின் கூடவே காந்திச் சதுக்கமும் முன் னேற்றம் அடைந்திருந்தது. புதிதாகச் செங்கற்கள் பொருத் தப்பட்டன. கான்டிராக்டர்களால் போடப்பட்டிருந்தும், அதன் சிமெண்ட் மேற்பூச்சு, பதினைந்து நாட்களாகியும் இன்னும் பெயர்ந்து விழாமல் இருந்தது. இந்தச் சூழலில் சதுக்கம் முன்பு இருந்ததைவிட மேலும் கவர்ச்சியாய் விளங்கவே, கல்லூரி மாணவர்கள் சிலர் காசு வைத்துச் சீட்டாடச் சில சமயம் அங்கு வந்து அமர்ந்தனர். மாலை வேளையில் பயில் வான் பத்ரியின் பயிற்சிக்கூடத்தைச் சார்ந்த சில காளைகளும் இங்கு வரலாயினர். அவர்களுடைய நடையுடைப் பாவனை களைக் கவனித்தால், சதுக்கமேடையில் அமர்ந்து தங்கள் கழுத்திலே போட்டிருக்கும் மண் பூச்சைச் சுரண்டி எடுக்கத் தான் வருகிறார்கள் எனத் தோன்றியது.

இன்று தேர்தல் தினம். கல்லூரிக்கு விடுமுறை. தேர்தல் வேறு இடத்தில், நிச்சயமாகவே சக்கிலியர்கள் குடியிருப்பி லிருந்து வெகு தூரத்தில், வேறு இடத்தில்தான் நடக்க வேண்டும். ஆனால் இச்சமயம் காந்திச் சதுக்கத்தில் நல்ல கூட்டம். காந்தியடிகள் எதை விரும்புவாரோ, அப்படிப்பட்ட நிலையில் எல்லா மக்களும் ஒன்றாக, ஒற்றுமையுடன் வீற்றிருந் தனர். சூதாடியவர்கள்கூடச் சீட்டுக் கட்டைத் தங்கள் ஜேபியில் வைத்துக்கொண்டுவிட்டனர். குஸ்தி பயிற்சிக்கூடத்துச் சீடர்க் குழாம் குஸ்தி போடாமல், மண்ணைப் பூசிக்கொள்ளாமல், மாலிஷ் செய்துகொண் டிருந்த கடுகு எண்ணெயின் மணத்தின் மூலமாகத் தங்கள் பெருமை என்ற நறுமணத்தை எல்லாத் திசைகளிலும் பரப்பிக்கொண் டிருந்தனர்.

ரூப்பன் பாபுவின் நடையில் உற்சாகம் இல்லை. என்றும்போல் முகத்தில் சுறுசுறுப்பும், கெட்டிக்காரத்தனமும் மிளிரவில்லை. சோர்வாகக் காணப்பட்டான். காந்திச் சதுக்கத்தை நோக்கி அவன் வருவதைக் கண்ணுற்றதும் ஒரு புதிய பயில்வான் கண்ணைச் சிமிட்டியவாறு, "சொல்லுங்கள் பாபு! என்ன விஷயம்?" என்றான்.

பதிலுக்கு ரூப்பன் கண்ணடிக்கவும் இல்லை. 'என்ன ராஜா? நீ எப்படி இருக்கிறாய்?' என்று கேட்கவும் இல்லை. வெறுமே தலை அசைத்து, அந்த அசைப்பின் மூலம், 'நீ வேண்டுமானால் தமாஷ் செய். நான் செய்யப் போவதில்லை. என் மனசு கெட்டிருக்கிறது' என்பதைப் புலப்படுத்தினான். கறுப்புக் கண்ணாடி அணிந்து, கழுத்தில் பட்டு உருமாலைச் சுற்றிக் கொண்டு மெள்ள நடந்துவந்தவன், மேடையின்மீது பேசாமல் உட்கார்ந்துவிட்டான். சற்றுநேரம் கூடியிருந்தவர்களிடையே மௌனம் நிலவியது.

வேலையற்றுச் சோம்பிக் கிடந்த குட்டிப் பயில்வான் தன் கரத்தை நீட்டி, முழங்கையை மடித்தான். முழங்கைக்கு மேலே, உருண்டு திரண்ட தசைப்பகுதி எலியின் வடிவத்தில் எழும்பி நின்றது. அதை அன்புடன் மீண்டும் மீண்டும் பார்த்தவாறே, அவன் ரூப்பனின் அருகே வந்து அமர்ந்தான். இரண்டாம் முறை யாகக் கண்ணடித்தவாறே ரூப்பனின் முதுகைத் தடவிக் கொண்டே, "என்ன பாபு! இன்று என்ன, எல்லாம் ஒருமாதிரி யாக இருக்கிறது?" என்று வினவினான். ரூப்பன்பாபு, தன் நண்பனின் இருக்கையையோ, அவனது பேச்சையோ சற்றும்

கவனித்ததாகத் தெரியவில்லை. மௌனமாய் உட்கார்ந்திருந்தான். கல்லூரியைச் சேர்ந்த மாணவன் ஒருவன், "குருஜி, நாங்கள் என்ன செய்யவேண்டுமென்று நீங்கள் கூறவேயில்லையே! ராமாதீனின் கட்சியிலிருக்கிற அளவு, சனிஸ்வரனின் கட்சியில் சூடு பிடிக்கவில்லையே?" என்றான்.

ரூப்பன், நிறைக் கர்ப்பத்தின் பாரமிகுந்த குரலில் கூறினான். "இனி, சூடாவது, குளிராவது? அதெல்லாம் ஒன்றுமில்லை தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்டுவிட்டது. சனிஸ்வரன் ஜயித்து விட்டான்."

குட்டிப் பயில்வான்கள், கல்லூரி மாணவர்களிடையே குழப்பம் பரவிவிட்டது. நாற்புறமிருந்தும் இதே கேள்விதான் எழும்பியது. "எப்படி? எப்படி? சனிஸ்வரன் எப்படி ஜயித்தான்?"

கண்களைச் சிமிட்டியவாறே, ரூப்பனின் தோழன் ஒருவன் கூறினான். "சொல்லப்பா! பயில்வான் சனிஸ்வரன் எப்படி ஜயித்தான்?"

"மகிபால்பூர் உபாயத்தின்படி" என்றான் ரூப்பன் தளர்ந்த குரலில்.

"தேர்தலில் வெற்றி பெற மூன்று உபாயங்கள் உள்ளன. ஒன்று ராம்நகர் வழி, இரண்டாவது நேவாதா வழி, மூன்றாவது மகிபால்பூர் வழி."

ராம்நகர் கிராமப் பஞ்சாயத்துத் தேர்தலில் ஒருமுறை இரண்டு பேர் நின்றார்கள். ரிபுதமன்சிங், சத்ருக்னசிங் இரு வேட்பாளர்களும் ஒரே ஜாதிக்காரர்கள். இதனால் ஜாதியின் பெயரால் வோட்டுகள் பிரிவதற்கு வழியில்லாமல் போயிற்று. டாக்குர்கள் குழம்பினர். 'இவனும் டாக்குர், அவரும் டாக்குர்; யாருக்கு வோட்டுப் போடுவது, யாருக்குப் போடாமல் இருப்பது?' என்று குழம்பினர். டாக்குர்கள் அல்லாதவர்களோ, 'இவர்களோ நம் இனத்தவர்கள் அல்ல. இவர்களுக்கு வோட்டுப் போட்டாலென்ன? போடாவிட்டால் என்ன?' என நினைத்தனர். சில நாட்களுக்குப் பின், 'ரிபுதமன் சிங் சத்ருக்னசிங் இரு பெயர்களின் அர்த்தமும் ஒன்றேதான். அதாவது எதிரியை அடித்து வீழ்த்தக்கூடிய சிங்கங்கள் என்று பொருள். பின் என்ன? யார் தலைவனாக வந்தால் நமக்கு என்ன?' என்ற குடியாட்சி மனோபாவத்துடன், இருவரும் ஒருவரையொருவர் வெட்டி வீழ்த்திக் கொள்ளட்டும் என்று வாளா இருந்து விட்டனர்.

தேர்தலுக்குச் சுமார் ஐந்து நாட்கள் முன்வரை, இதே அலட்சிய மனேபாவந்தான் நிலவியது. வேட்பாளர்கள் மக்களிடம் வோட்டுக்காகச் சென்றால் மக்கள் அவர்களிடம் பெரும்பாலும் கூறிய பதில் இதுதான்: "நாங்கள் என்ன வோட்டை ஊறுகாயா போடப் போகிறோம்? எத்தனை சொல்லுகிறீர்களோ, அத்தனை வோட்டுத் தருகிறோம்."

இதையெல்லாம் கண்ட வேட்பாளர்கள், நமக்கு எவரும் வோட்டுப் போடப் போவதில்லை என்ற முடிவுக்கு வந்தனர். திகிலுற்ற அவர்கள், மக்கள் உரிமைக் குரலை எழுப்பலானார்கள். மக்களுக்கு அவர்களது வோட்டின் மதிப்பை எடுத்துக் கூறலானார்கள். "நீங்கள் உங்கள் வோட்டைத் தவறான மனிதனுக்கு அளித்துவிட்டால் ஜனநாயகத்துக்குப் பேராபத்து வந்துவிடும்" என்று எடுத்துரைத்தார்கள். மக்களால் இதைப் புரிந்து கொள்ள இயலவில்லை. புரிந்துகொண்டவர்களும் கூறியது இதுதான்: "தவறான மனிதனுக்கு வோட்டுப் போடுவதனால் ஜனநாயகத்துக்கு எந்தவிதமான ஆபத்தும் வந்துவிடாது. நீ வோட்டுப் போடுகிறாய் அல்லவா? அதுவே ஜனநாயகத்துக்குப் போதுமானது. தவறும், சரியானதும் என்றென்றும் இருந்து கொண்டேதான் இருக்கின்றன. நாடு முழுவதும் என்ன நடந்து கொண்டிருக்கிறது, பாரேன்!"

இப்படிக் கூறியவர்கள் இரண்டொருவர்தான் என்றாலும் ஜனநாயகத்தை அர்த்தமற்றதாக்க இது போதுமானதாக இல்லை. இதனால் இரு வேட்பாளர்களும் தங்கள் பிரசாரத்தின் போக்கை மாற்றிவிட்டார்கள். பஞ்சாயத்துத் தலைவனின் அதிகாரங்களைப் பற்றி எடுத்துரைக்க ஆரம்பித்த அவர்கள், 'பஞ்சாயத்துத் தலைவர் விரும்பினால் கிராமத்துப் புறம்போக்கு நிலங்களையெல்லாம் விரும்பியவர்களுக்கு வழங்கமுடியும். புறம்போக்கு நிலங்களை அத்துமீறித் தமதாக்கிக்கொண்டிருப்பவர்களிடமிருந்து அவற்றைப் பறிமுதல் செய்யும் அதிகாரமும் அவருக்கு உண்டு' என்று பறைசாற்றத் தொடங்கினர்.

குடியானவனை, 'கோதான்' நாவலைப் படித்தவர்களும், 'தோ பீகா ஜமீன்' போன்ற திரைப்படங்களைப் பார்த்தவர்களும் நன்கறிந்திருக்கமுடியும். நிலம் அவனுக்கு உயிர் போன்றது. இது மட்டுமா? தன் நிலத்தைவிட மாற்றானின் நிலத்தின் மீது அவனுக்கு அளவற்ற ஆசையுண்டு. சந்தர்ப்பம் கிடைத்தால் நிலத்துக்காகப் பேராசைப்படுவான். இதுதான் சாம்ராஜ்

யத்தின் எல்லையை விரிவாக்கவேண்டுமென்ற பேராசை அல்ல. இயல்பான சாதாரண ஆசைதான். இதனால்தான் தன் வயலின் வரப்பின்மீது அமர்ந்துகொண்டு, தன் கால்நடைகளைப் பக்கத்து வயலுக்கு விரட்டி மேய்க்கிறான். கரும்பு தின்னவேண்டுமென்ற ஆசை வந்தால் தன் வயலின் கரும்பை ஒடிக்காமல், பக்கத்து வயலின் கரும்பை ருசி பார்த்துக் கொண்டே மற்றவர்களிடம், "பார்த்தீர்களா? என் வயலில் எத்தனை திருடு போகிறதென்று?" என்று அங்கலாய்க்கிறான். அவன் தவறாக எதுவும் சொல்லவில்லை. அவனது வயலுக்குப் பக்கத்து வயலிருப்பதுபோல், இன்னொருவனுக்கு அவனது வயல் பக்கத்து வயல்தானே! பிறத்தியான் சொத்தின்மீது யாவருக்குமே இயற்கையாகவே ஓர் ஆசை, ஒரு பிரியம், அவ்வளவுதான்!

இவை எல்லாம், 'கோதான்' நாவலில் இவ்வளவு அப்பட்டமாக எழுதப்படவில்லை. பம்பாய்த் திரைப்படங்களிலும் கிஷன் சந்திரர், மற்றும் க்வாஜா அகமது அப்பாஸிடமுள்ள பயத்தினாலோ, அல்லது முற்போக்கு வெறியில் ஐம்பது சதவீதம் குருடாகப் போனதாலோ, அல்லது வெறும் அறியாமையினாலோ, தெளிவாக, அப்பட்டமாகக் காட்டப்படவில்லை. இதனால்தான் சற்று ஒளிவுமறைவு இன்றிச் சொல்லவேண்டி நேர்ந்துள்ளது. நம் நாட்டில் இது கலைஞர்களுடைய பணி இல்லையென்றாலும்........

கிராமத்து மக்களுக்கு, பஞ்சாயத்துத் தேர்தல் என்பது நிலபுலன்கள், பட்டா சம்பந்தப்பட்ட விஷயம் என்று தெரிந்ததும், அதாவது பக்கத்து வயலைத் தன்னுடையதாக ஆக்கிக் கொள்ளலாம், யாராவது பிள்ளை குட்டி இல்லாமல் செத்துப் போனால் அவனுடைய வாரிசாகப் பிரகடனப்படுத்திக்கொண்டு பட்டம் சூட்டிக்கொள்ளலாம் என்ற குடியானவர்களுக்கே உரித்தான ஆசை கொழுந்துவிட்டெரிய ஆரம்பித்தது. இதன்பின்பு, வோட்டர்களின் மண்ணாசையானது அவர்களைக் கிராமப் பஞ்சாயத்தை நோக்கி இழுத்தது. கிராமப் பஞ்சாயத்திடமுள்ள நேசபாவம் அதன் தலைவர் ஸ்தானத்துக்குப் போட்டியிடும் வேட்பாளர்களிடம் இன்னும் பலமாகக் காந்தம்போல் கவர்ந்திழுத்தது. அவ்வளவுதான். தேர்தலைப்பற்றி அவர்களது மூளை திடீரென்று சுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கியது.

இதற்குப் பிறகு சீனப் படையெடுப்பின்போது ஆச்சார்ய கிருபளானி நாட்டின்முன் ஒரு குழப்பமான பிரச்னையை வைத்தாரே, அதுபோல் அவர்களின் முன்னேயும் அதே பழைய பிரச்னை வந்து நின்றது. நடுநிலை என்பது அர்த்தமற்றது. இது ஒரு பலவீனம் மட்டுமல்ல, இதனால் தீமையும் விளையும். நிம்மதியாக வாழ ஆசைப்பட்டால் இந்த இருவரில் யாராவது ஒருவரைத் தேர்ந்தெடுக்கவேண்டும். நடுநிலை வகிக்க அதிகம் முயற்சி செய்யக் கூடாது. ஏனென்றால் இருமுனைத் தாக்குதலுக்கு ஆளாக நேரிட்டுவிடும் என்றெல்லாம் அவர்கள் யோசிக்க ஆரம்பித்தார்கள்.

அகில உலக அரங்கில் இந்த நடுநிலைப் பிரச்னையை நாம் ஒருவாறு வாயைத் திறக்காமல் சமாளித்து விட்டோம். அல்லது நழுவிக்கொண்டுவிட்டோம். இது நமக்குச் சிரமமானதாகவும் இருக்கவில்லை. ஏனெனில் இதுபோல் பல பிரச்னைகளுக்கு நாம் ஈடு கொடுத்திருக்கிறோம். ஆனால் ராம்நகர்வாசிகளைப் பொறுத்தவரையில் தங்களது நன்மை, தீமைகளைப் பற்றித் தாங்கள் நன்கு அறிந்தவர்களென்ற கர்வம் அவர்களுக்கு உண்டு. ஆனால் இந்தப் பிரச்னையிலிருந்து நழுவிவிடுவதோ, தப்பித்துக்கொண்டு விடுவதோ சரியென அவர்கள் நினைக்கவில்லை. இதனால் வெகு விரைவில் கிராமம் முழுதும் இரு கட்சிகளாகப் பிரிந்துவிட்டது.

புறம்போக்கு நிலங்களின் பங்கீடு ரிபுதமனின் திருக்கரங்களால் ஏற்படுவதை விரும்பியவர்கள் ஒரு கட்சி. இப் புனிதக் கைங்கரியத்தை நிறைவேற்றுவதில் சத்ருக்னசிங்தான் சிறந்தவன் எனக் கருதியவர்கள் இன்னொரு கட்சி. இப்படிக் கிராமமே இரு கூறுகளாகப் பிரிந்து நின்றது.

தேர்தலுக்கு இரண்டுநாள் முன்வரை, இரண்டு தரப்பாரிடையேயும் ஏற்பாடுகள் பலமாக இருந்தன. 'இன்குலாப் ஜிந்தாபாத்' என்று தொண்டை வரளக் கத்தினர். ஒருவர், மற்றொருவருடைய தாயையும், உடன்பிறந்தவளையும் வம்புக்கிழுத்து அவர்களைப்பற்றிய ருசிகரமான தகவல்களை வெளியிட்டனர். குண்டாந்தடிகளுக்கு எண்ணெய் பூசினர். ஈட்டிகளையும், குறுவாளையும் பதப்படுத்தி, பளபளவென்று மெருகேற்றிக் குறுந்தடியில் செருகி வைத்துக்கொண்டனர். உயிரை உள்ளங்கையில் ஏந்தி, அந்தக் கையிலே கஞ்சா அடைத்த புகைக் குழாயை ஏந்தினர். இந்த ஏற்பாடுகளெல்லாம் கிட்டத்தட்ட

முடிந்த நிலையில் ரிபுதமன்சிங், தனது இளைய தம்பி, சர்வதமன் சிங்கை அழைத்து, மிகுந்த அன்புடன், "தம்பி, இந்தப் போராட்டத்தில் நான் ஒருவனே உயிர் துறக்க நேரிட்டால், ஒருகால் என்னுடன் இருபத்தைந்து பேர்களும் உயிர் துறக்க நேரிட்டால் நீ என்ன செய்வாய்?" என்று வினவினான்.

சர்வதமன்சிங் சட்டப் படிப்பில் தேறியிருந்தான். ஒரு காலத்தில் எப்படிப் பெரிய பெரிய பாரிஸ்டர்களும், வக்கீல்களும் தங்கள் தொழிலைத் துறந்து அரசியல் களத்தில் குதித்தார்களோ, அப்படியே அவனும் தன் வக்கீல் தொழிலைத் துறந்து, கடந்த நான்கு வருஷங்களாக உள்ளூர் அரசியலில் குதித்திருந்தான். இரண்டுக்கும் வித்தியாசம் இதுதான். சுதந்தரப் போராட்ட அரசியலிலே பங்கேற்ற வக்கீல்கள் பெரும்பாலோரின் ஜீவனோபாயம் எப்படி நடந்ததென்று மக்கள் தெரிந்துகொள்ள இயலவில்லை. ஆனால் சர்வதமனின் பிழைப்பு எப்படி நடக்கிறதென்பதைப் பற்றி யாவரும் நன்கறிந்திருந்தனர் என்பதுமட்டும் அல்ல, அதனால் ஓரளவு கவரப்பட்டும் இருந்தனர். சர்வதமனிடம் பத்து காஸ் விளக்குகள் இருந்தன. திருமணக் காலங்களில் வாடகைக்கு விடப்பட்டன. இரண்டு துப்பாக்கிகளும் அவனிடம் உண்டு. வழிப்பறி, கொள்ளை முதலியவை நடக்கும் சீசனில் இவையும் வாடகைக்குக் கொடுக்கப்பட்டன. எப்படியோ, ஆக மொத்தம் நிம்மதியாகக் கிராம அரசியலில் பங்கெடுத்துக்கொண்டு வாழும்படியான வரும்படி அவனுக்குக் கிடைத்து வந்தது. காஸ் விளக்குகளும், துப்பாக்கிகளும் வெகுதூரம்வரை சென்றன. அதற்கேற்ப அவனுடைய சமூகத் தொடர்பானது எவ்வளவு விசாலமானதாக, ஆழமானதாக இருந்ததென்பதை அளவிடமுடியாதென்றாலும், இதனால் சர்வதமனின் பேச்சிலும் நடையுடை பாவனையிலும், ஒரு தன்னம்பிக்கையும், சாமர்த்தியமும் வந்திருந்தன என்பது என்னவோ உண்மை.

அண்ணனின் கேள்விக்குச் சர்வதமன் மிகுந்த தன்னம்பிக்கையுடன் உசிதமான முறையில் பதில் கூறினான். "அண்ணா! நீங்களும், உங்களுடைய ஆட்கள் இருபத்தைந்து பேரும் இந்தப் போராட்டத்தில் கொல்லப்பட்டால், எதிர்க்கட்சி சத்ருக்னசிங்கும் அவரது இருபத்தைந்து ஆட்களும் கொல்லப்படுவார்கள். கணக்குக்குள் வருவது இவ்வளவு. அதற்குமேல் தாங்கள் எப்படிச் சொல்லுகிறீர்களோ அதன்படி செய்யலாம்."

ரிபுதமனன், சர்வதமனனை மார்போடணைத்து அழ முயற்சி செய்தான். ஆனால், திரைப்பட நடிகனாகவோ, தலைவனாகவோ இருந்தால்தானே நினைத்த மாத்திரத்தில் அழமுடியும். அதாவது போதியப் பயிற்சியின்மையினால் ரிபுதமனன் தன் முயற்சியில் தோற்றுப் போனான். சர்வதமனன் மெள்ளத் தன்னை விடுவித்துக்கொண்டு, "இதிருக்கட்டும்! சொல்லுங்கள். இருபத்தைந்துக்கு, இருபத்தைந்து என்ற கணக்கைத் தீர்த்தபின் என்ன செய்வது?"

"மீண்டும் இதன் தலைவருக்கான தேர்தல் நடக்கிறதென்றும், நீ தலைவனாக விரும்புகிறாயென்றும் வைத்துக்கொள். அப்பொழுது நிலைமை எப்படியிருக்கும்?" என்று வினவினான் ரிபுதமனன்.

சர்வதமன் காகிதம் பென்சிலை எடுத்து வந்து எதையோ கூட்டிக் கழித்தபின் கூறினான். "அண்ணா, நீயும், சத்ருக்னசிங்கும் உங்களுடைய ஆட்கள் ஐம்பது பேர்களுடன் இறந்துவிட்டால் நான் மட்டும் என்ன? என் கட்சியைச் சார்ந்த யாராக இருந்தாலும் அந்தக் கட்சியின் எந்த வேட்பாளரையும்விட அதிகமாக ஐம்பது வோட்டு நிச்சயமாகப் பெறமுடியும். ஏனென்றால் கிராமத்து வோட்டர்களில் அந்தக் கட்சியிலிருந்து உண்மையிலேயே சாவுக்கஞ்சாதவர்கள் அதிகப்பட்சமாகப் போனால் இருபத்தைந்து பேர் தேறலாம். ஆனால் நம் பக்கம் இப்படிப்பட்டவர்கள் நாற்பதுக்கும் அதிகமாக இருக்கும். அந்தப் பக்கம் இருபத்தைந்து பேர் இறந்துவிட்டதாக வைத்துக்கொண்டால் அந்த வட்டாரமே போய்விட்டது என்ற அர்த்தம். ஆனால் நம் பக்கம் இருபத்தைந்து பேர் இறந்து போனாலுங்கூட வெற்றி நம் பக்கத்துப் பதினைந்து பேர்கள் கையில்தான் இருக்கும்."

தேர்தலுக்கு மூன்று நாட்களுக்கு முன். சப் டிவிஷனல் மாஜிஸ்டிரேட்டின் கோர்ட்டில் ரிபுதமனன், சத்ருக்னசிங் மற்றும் அவனுடைய இருபத்தைந்து கூட்டாளிகளுக்கு எதிராக, ஒரு விண்ணப்பம் தாக்கல் செய்தான். அதாவது இவர்களால் தன் உயிருக்கும் உடைமைகளுக்கும் ஆபத்து நேரிடும் என்று அஞ்சுவதாகவும், தேர்தலின்போது அமைதிக்குப் பங்கம் விளையுமென்று அஞ்சுவதாகவும் புகார் செய்தான். போலீசார் இந்த விண்ணப்பத்தை ஏற்று ஆமோதித்தனர். இதற்குப் பதிலாகச் சத்ருக்னசிங், ரிபுதமன் மற்றும் அவனது நாற்பது கூட்டாளி

களுக்கு எதிராகப் புகார் மனு சமர்ப்பித்ததும் போலீசார் அதையும் ஆமோதித்தனர் என்றாலும், ரிபுதமன், அவனது இருபத்தைந்து சகாக்கள் விஷயத்தில்தான் இது பொருந்தும் என்று கணக்குப் போட்டனர்.

தேர்தலுக்கு ஒரு நாள் முன்பு வேட்பாளர் இருவரும், மற்றும் இரு கட்சியிலிருந்தும் இருபத்தைந்து, இருபத்தைந்து பேர்களும் சம்மன் மூலம் மாஜிஸ்டிரேட்டின் முன்னிலையில் வரவழைக்கப்பட்டனர். மாஜிஸ்டிரேட், சட்டப் புத்தகத்தில் எழுதியிருந்தபடி, சத்ருக்னசிங் மற்றும் அவனது கட்சியாட்களிடம் ஜாமீனும் நன்னடத்தைப் பத்திரமும் கோரினார். அவர்கள் தயங்கினர். பின்பு மாஜிஸ்டிரேட், ரிபுதமன், அவனது கட்சியாட்களிடமும் இதுபோல் ஜாமீனும், நன்னடத்தைப் பத்திரமும் கோரவே, ரிபுதமன், "ஐயா, நாங்கள் நன்டைத்தைப் பத்திரமோ, ஜாமீனோ தரமாட்டோம். நாளைக்கு எங்கள் கிராமத்தில் படுகொலை நிகழப் போகிறது. இது உங்களுக்கு நினைவிருக்கட்டும். எவ்வளவு பெரிய தொகை ஜாமீன் கோரினாலும் அது இந்தச் சத்ருக்னசிங்கையோ, அவனது தோழர்களான இந்தக் குண்டர்களையோ, நாளை ரகளை செய்வதிலிருந்து தடுத்து நிறுத்தப் போவதில்லை. நாங்கள் எளிய குடியானவர்கள். இவர்களை நாங்கள் எப்படி எதிர்த்து நிற்கமுடியும்? அதனால் ஜாமீன் கொடுக்கவில்லை என்ற காரணம் காட்டி எங்களைக் காவலில் வைத்துவிடுங்கள். காவலில் இருந்தாலாவது எங்கள் உயிர் தப்பும். தாங்கள் தயவுசெய்து சத்ருக்னனின் ஜாமீன் தொகையைப் பெற்றுக்கொண்டு அவனை மட்டும் நம்பிவிடாதீர்கள். எங்களைச் சேர்ந்தவர்கள் இரண்டொருவர் கிராமத்தில் இருப்பார்கள். அவர்களின் உயிரைக் காப்பாற்றவேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிடுங்கள்" என்றவன், தான் நின்ற கூண்டின் கிராதிகளைப் பற்றிக்கொண்டு அழ முயற்சி செய்தான்.

போலீசார் இந்த வாக்குமூலத்தையும் ஆமோதித்து ஏற்றுக்கொண்டனர். முடிவில் மாஜிஸ்டிரேட், 'தேர்தலின்போது ரிபுதமனும் அவன் சகாக்களும் காவலில் இருந்தால், சத்ருக்னன், அவனது கட்சியாளர்களின் ஜாமீன் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. அவர்களும் காவலில் இருந்தாகவேண்டும்' என்று முடிவு செய்தார். இதன் பலன், ஒரு சில நாட்களுக்கு, இரு வேட்பாளர்களும் அவர்களின் இருபத்தைந்து சகாக்களும் இறந்தவர்களாகி விட்டனர்.

தேர்தல் மிகமிக அமைதியாக நடந்தது. எவ்வித அநாகரிக மான நிகழ்ச்சிகளும் இன்றி நல்லதொரு சூழ்நிலையில் நடந்தது. இரு வேட்பாளரின் செல்வாக்கு, திறமையைப் பொறுத்த வரையில், சத்ருக்னனும் அவனது கட்சியாளர்களும் உபயோக மற்றவர்களாய்த்தான் இருந்தனர். கிராமத்தில் அவர்கள் கட்சியில் யாராவது உயிரோடு இருக்கிறார்களா என்பதே சந்தேகமாக இருந்தது. ஆனால் ரிபுதமனின் கட்சியின் சார் பாக வேலை செய்ய ரிபுதமனின் தம்பி சர்வதமன் இருந்தான். ஏனென்றால் போலீசாரின் ஒப்புதலும், வக்கீல் பட்டமும் 'அவன் மிகவும் நல்ல மனிதன், அமைதி காப்பவன்' என்ற நிலையை ஏற்படுத்தி இருந்தன. இதனால் அவன் காவலில் இருக்கவேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. அவன் தேர்தலுக்கு முனைந்து வேலை செய்தான். வெற்றியைப் பற்றி என்ன சொல்ல?

தேர்தலில் வெற்றி பெறும் இந்த முறைதான் 'ராம்நகர் வழி' என்ற பெயரில் 'பேட்டன்ட்' ஆயிற்று.

நேவாதா வழி இதைவிடச் சற்று லட்சியத்தன்மை வாய்ந்தது.

அங்கே பல ஜாதியினரும் தேர்தலில் போட்டியிடத் தயாராக நின்றனர். அவர்களில் முக்கியமானவர்கள் இரு வகுப்பினர். ரிக் வேதத்தில், புருஷ பிரம்மத்தின் வாய், பாதங்கள் என்று கருதப்பட்டவர்கள், இன்றைய நோக்கின்படி, இது பிராம்மணர் கள்– ஹரிஜனங்கள் போட்டி. ஆனால் நேவாதாவில் இந்த விஷயம், மிகக் கலாசாரப் பண்புடன், கிட்டத்தட்ட வேத முறைப்படி மலர்ந்தது எனலாம்.

பிராம்மண வேட்பாளர், தம் வகுப்பைச் சார்ந்தோர்க ளிடையே ரிக் வேதத்தின் புருஷ சூக்தத்தைப் பலமுறை கூறி, பிராம்மணன்தான் பிரம்மத்தின் வாய் என்பதை எடுத்துரைத் தார். கூடவே சூத்திரன்தான் பிரம்மத்தின் 'பாதம்' என்பதை யும் விளக்கிக் கூறத் தவறவில்லை. தலைவர் என்ற பதவியைப் பற்றிக் கூறுகையில், அவர் உதாரணங்களுடன்; 'அந்தப் பதவி, அறிவு, பேச்சுத்திறன் ஆகியவற்றுடன் சம்பந்தப்பட்டது, இந்தக் குணங்கள் பாதங்களுக்குக் கிடையாது. சிரத்தில்தான் உள்ளது. அந்தச் சிரத்தில்தான் முகம் உள்ளது என்பதையும் விவரித்து, இயற்கையான சுபாவத்தின்படி, பிராம்மணன்தான் தலைவனாகவேண்டும், சூத்திரன் அல்ல' என்று கூறினார்.

இந்தப் பிராம்மண வேட்பாளர், சூத்திரர்களை அவமதிப்பதற்காக, வழக்கிலுள்ள வசவு, திட்டுகளைக் கையாளவில்லை. தம் கழுத்தை இந்த உயர் கலாசாரப் பண்பு நிலையிலிருந்துதான் வலியுறுத்தி வந்தார். ஏதோ சலுகைகள் அளிப்பதுபோல், ஒரு விஷயத்தை அவர் நேரடியாக ஒப்புக்கொண்டார். 'அதாவது ஓடியாடி, அலைந்து திரிந்து செய்யவேண்டிய காரியங்கள், நிச்சயமாகவே சூத்திரனுக்குத்தான் கிடைக்கவேண்டும். அதற்குக் கால்கள் தேவை. பஞ்சாயத்தில் பியூன் போன்ற வேலைகள் தரலாமே தவிர, தலைவர் பதவிக்காகச் சூத்திரன் போட்டியிடுவது என்பது வேத சாஸ்திரத்துக்கு எதிரானது' என்ருர்.

ஆனல், பெரும்பாலும் நடப்பதுபோல், வோட்டர்கள், இந்தக் கலாசார உயர்வு நிலையை ஏற்றுக்கொள்ளவில்லை. இதனல் பிராம்மண வேட்பாளர் தம் பிரசாரத்தின் முறையை மாற்றி அமைத்துக் கொள்ளவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. புருஷ பிரம்மத்தின் 'வாய்' என்ற நிலையில் தம் வாயை இன்னும் சற்றுத் தாராள நோக்குடன் உபயோகிக்கத் தொடங்கினர். அவருடைய உதவியாளர்களோ, பிரசாரம் செய்யும்போது, இன்னும் கொஞ்சம் தாராளமாக நடந்துகொள்ளவே, சில தினங்களுக்குள்ளாகவே, விஷயம் பழைய நிலைக்கு வந்து விட்டது. 'சொல்லப்பா? டாக்குர் கிஷன்சிங்! என்னை விட்டு விட்டு நீ அந்தச் சக்கிலியனுக்கா ஓட்டுப் போடப்போகிருய்?' என்ற பேச்சுகள் கிளம்பின.

கிராமத்தில் பிராம்மண வேட்பாளரின் சார்பிலிருந்து, வசவு திட்டுகள் மிகமிக உக்கிரமான நிலையை அடைந்துவிட்டன. திடீரென ஒரு நாள், சூத்திரனைப் 'பாதங்கள்' என்று கருதிய புருஷ சூக்தத்தின், அந்த 'ருசா'வின் சரியான பொருள் விளங்கிவிட்டது.

ஓரிடத்தில் பிராம்மண வேட்பாளரின் உதவியாளர், எதிர்க் கட்சி வேட்பாளரை, மனம் கொண்டமட்டும் திட்டிக் கொண்டிருந்தார். அவன் திண்ணையில் அமர்ந்திருந்தான். அவன் வாயிலிருந்து சரமாரியான வசவுகள் எழுந்தன. இடையிடையே முக்கியமாக எழுந்த கேள்வி "சொல்லு டாக்குர், கிசன்சிங்! நீ இப்பொழுது அந்த...." இந்த 'அந்த'க்குப் பிறகு பச்சைப் பச்சையான திட்டுக்கள். பிறகு வாக்கியத்தின் அடுத்த பகுதி"........க்கா வோட்டுப் போடப் போகிருய்?" என்பது

அவன் பாட்டுக்குத் திண்ணையில் அமர்ந்து பேசிக்கொண்டே போனன். வசவுகள் பிரவாகமாய்ப் பெருக்கெடுத்து ஓடின.

திடீரென அவனது பேச்சு அப்படியே அரைகுறையாய் நின்று விட்டது. இடுப்பில் பலத்த அடி விழுந்தது. "அப்பா, அடி விழுந்ததே...." என்று சொல்லும் நிலைகூட அவனுக்கு ஏற்பட வில்லை. அப்படியே சுருண்டு திண்ணையிலிருந்து கீழே விழுந் தான். இன்னும் பத்து அடி, உதைகள் தொடர்ந்து வீழ்ந்தன. அவன் கண்களைத் திறந்தபோது, உலகமே கனவாகத் தோன்றி யது: மோக மயக்கம் தானாகவே தெளிந்துவிட்டது. இதைத் தொடர்ந்து, இதைப் போலவே பல சம்பவங்கள் நடை பெற்றன. புருஷ பிரம்மத்தின் வாய், புருஷ பிரம்மத்தின் பாதங்களிலிருந்து அதிக் தூரத்தில் இல்லை என்பது பிராம்மண வேட்பாளருக்குப் புரிந்தது. சுருக்கமாகச் சொன்னால், எங்கே வாயசைகிறதோ, அங்கே பதிலுக்குக் காலும் உதைக்கிறது. இதன்பின் நெடுநேரம்வரை, வாயைத் திறக்கமுடியவில்லை என்பதும் தெளிவாகப் புலனாகியது.

ஆராய்ச்சிக்குப் பின் புலனாகிய இந்த அநுபவ உண்மை பிராம்மண வேட்பாளரைப் பெரும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது. ஆனால் இந்தச் சந்தர்ப்பத்தில் அவரது உதவிக்காக ஒரு பாபாஜி உதயமானார். ஏழை எளிய குடியானவர்களிலிருந்து, பெரிய பெரிய அதிகாரிகள், தலைவர்கள் எல்லாரும் இவருக்குச் சீடர். வியாபாரிகளிடையே மிகச் சுலபமாகத் தமக்குரிய சீடர்களை இனம் கண்டு கொள்ளும் பல பாபாஜிகளில் இவரும் ஒருவராக இருந்தார்.

விக்கிரமாதித்தன் கதைகள், வேதாளம் சொன்ன கதை களில் வருமே, அதுபோன்ற சம்பவமொன்று நிகழ்ந்தது. தம் வாயை அதிகம் உபயோகப்படுத்தாமல் ஒரு கட்டுப்பாட்டுக் குள் இருந்தபோதும் பிராம்மண வேட்பாளர் ஒருநாள், புருஷ பிரம்மத்தின் 'பாதங்கள்' தம்மை இடறி விட்டுவிடுமோ என்ற பயத்தில் சுருண்டு போய்விட்டார். இந்தத் தலைமைப் பதவியை அந்தச் சக்கிலியன் தீண்டிவிடாமல் காப்பாற்றி, அதை எவ் வாறு பிராம்மணர்களின் கைக்குள் வைத்துக்கொள்வது என் பதைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தார் அவர்.

இதைப் பற்றிய ஆலோசனை கிராமத்துக்கு வெளியே, ஒரு கிணற்றின் மேடையில், மென்மையான கருநீல வண்ணம் சூழ்ந்த கானகத்தில், இருள் பரவும் அந்தி வேளையில் ஆலமரத்தின் அடர்ந்த நிழலின் அருகே சற்றுத் தூரத்தில் நடந்துகொண்டிருந்தது. அப்போது மரத்தின் கீழே, ஏதோ

மின்பொறிகள் எழுவதுபோல் தென்பட்டது. கூடவே, தழு தழுத்த குரலில் பகவான் சங்கரரைப் பற்றிய அடைமொழிகள் பலவும் காதில் விழுந்தன. மரத்தின் கீழே யாரோ ஒரு மகான் இருக்கிறார் என்பது பிராம்மண வேட்பாளருக்குத் தெரிந்து போய்விட்டது.

உண்மையும் அதுவேதான்: பகவான் சங்கரரின் திரு நாமத்தை உச்சரித்தவாறே பாபாஜி கஞ்சாப் புகை பிடித்துக் கொண்டிருந்தார். துன்பம் ஏதும் இல்லாத நிலையில்கூட எதிரே ஒரு சாமியாரைக் கண்டால் மனிதன் தடாலென்று காலில் வீழ்ந்துவிடுகிறான். இங்கேயோ, பாவம், பிராம்மண வேட்பாளர் மிகுந்த துயரத்தில் இருந்தார். எதிரே, எதிர் பாராத முறையில் பாபாஜி திவ்யதரிசனம் தந்தார். அவ்வளவுதான். எதையும் யோசிக்காமல் அவன் தடாலென அவர் காலில் விழுந்து பிரார்த்திக்கலானான்.

பாபாஜியின் வாழ்க்கையில் இத்தகைய சந்தர்ப்பங்கள் பல முறை வந்ததுண்டு. தம் அநுபவங்களின் பயனாக அவர் அந்தப் பிராம்மண வேட்பாளருக்கு அபயதானம் அளித்தவாறே, "மகனே! பயப்படாதே! உனக்கு ஸ்வப்பன தோஷ நோய் என்றால் அது சீக்கிரம் விலகிப்போகும், அல்லது சிறு வயதில் ஏற்பட்ட கெட்ட பழக்கத்தினால் ஆண்மையை இழந்திருந்தால் கவலைப்படாதே, என்னை நம்பு! எனது மருந்தை இருமுறை பிரயோகம் செய்வதால் நீ ஓராயிரம் பெண்களின் கற்பைச் சூறையாடமுடியும்" என்றார். பிராம் மண வேட்பாளர் தலை அசைத்து, பாபாஜியின், இந்தத் தாராள மனத்தைப் பயன்படுத்திக்கொள்ள மறுத்துவிட்டார். பாபாஜி விடவில்லை.

"மிக மிக ரகசியமான இந்தக் குறிப்பின்படி, நீ வசீகரண மந்திரத்தில் மிகத் தேர்ச்சி பெற்றுவிடுவாய். மேலும் இந்தக் குறிப்பின்படி நீ மருந்து தயாரித்து விற்பனை செய்தால் சில நாட்களிலேயே கோடீஸ்வரனாகவும் மாறவேண்டி இருக்கும்" என்றார் அவர். இத்தனைக்குப் பிறகும் பிராம்மண வேட்பாளர் அழுதுகொண்டே இருந்தார். தலை அசைத்து இந்தக் கருத்துக் களுக்குத் தம் மறுப்பையும் தெரிவித்தார். பாபாஜி அதிகம் வற்புறுத்தியபின், பிராம்மணர் கூறினார்: "எனக்கு ஆயிரம் பெண்களின் மானத்தைக் குலைக்கவேண்டாம். ஒரே ஒரு சக்கிலியனை மானபங்கப்படுத்தினால் போதும்."

பாபாஜி பிராம்மண வேட்பாளருக்கு மீண்டும் அபயம் அளித்தார். விஷயம் முழுவதையும் தெரிந்துகொண்டபின், இந்தச் சங்கடமான நிலையைத் தாண்டி, அக்கரை சேரவேண்டி, கஞ்சாக் குழாயை வேட்டியின் இடுப்பு மடிப்பில் செருகிவிட்டு, தம் பொய்யான ஜடாமுடியின்மீது கொஞ்சம் லேசாகத் தூசியைத் தூவிக்கொண்டு ஊரை நோக்கி நடையைக் கட்டினார்.

ஊரிலே ஒரு கோவிலின்முன் பாபாஜி முகாம் போட்டார். மறுநாளிலிருந்து, கபீர் ராமானந்தரிலிருந்து, குரு கோரக்நாத் வரையில் பல பக்தர்களின் கதைகளை எடுத்துரைக்கலானார். அந்தக் கதைகளின் தாத்பரியம் இதுதான். 'ஜாதிபேதத்தைக் கருதாதீர்கள். எவன் ஹரியைப் பஜிக்கின்றானோ அவன்தான் ஹரியினுடையவன்.'

இந்த 'ஹரி' என்பது என்ன என்று, அன்று மாலையிலிருந்தே மக்கள் உணர ஆரம்பித்துவிட்டனர். ஒரு புகைக் குழாயில் கஞ்சா நிரப்பப்பட்டு, அதன்மீது கனிந்துகொண் டிருக்கும் நெருப்புத் தணல் திணிக்கப்பட்டது. மாறி மாறிக் கன்னம் உப்பவும் சுருங்கவும், ஊதி ஊதிப் பற்றவைப்பதற்குள் மூச்சுத் திணறியது. ஒரு மூச்சை விட்டு இன்னொரு மூச்சு இழுப்பதற்குள், இடைப்பட்ட காலத்தில் பகவான் சங்கரரின் திருநாமம் பல்வேறு முறையில், பல்வேறு அர்த்த பாவங்களுடன் கூறப்பட்டது. இந்தக் கஞ்சாக் குழாய், பக்தர்களிடையே பரவலாக இங்கிருந்து அங்கும், அங்கிருந்து இங்கும் விநியோகிக்கப்பட்டது. இதுதான் 'ஹரி' என்று பக்தர்கள் புரிந்துகொண்டனர்.

பாபாஜியின் சமூகத்தில் நாற்பத்தெட்டு மணி நேரமும் அகண்ட பஜனையும், கீர்த்தனையும் நடந்துகொண்டேயிருந்தன. கஞ்சா பிடிக்காதவர்களுக்காக, பங்கி பானத்துக்கு ஏற்பாடாகியிருந்தது. கீர்த்தனைகள் நடைபெறும் நேரம் வரையில், அம்மிக் கல்லில் குழவியும் இயங்கிக்கொண்டு தான் இருந்தது. ஹார்மோனியம் ஒலித்துக்கொண்டே இருந்தது. ராதாகிருஷ்ணர், சீதாராமரைப் போற்றிப் புகழ்ந்து பாடிய பாடல்களின் மெட்டின் முன்னே, திரைப்படப் பாடல்கள்கூடத் தோற்றுப் போகும்; அப்படிப்பட்ட மெட்டுக்கள்.

இரண்டொரு நாட்களுக் குள்ளேயே பாபாஜிதான் கிருஷ்ணாவதாரம் என்று கருதப்படலானார். யமுனையின் நீரைப் பருகாமல் அவர் கஞ்சாப் புகையைப் பருகுகிறார் என்பது வேறு

விஷயம். ஸ்ரீ கிருஷ்ண பகவானைவிட, பைசாச பூத கணங்களைப் போல் அவருக்குப் பகவான் சங்கரரிடந்தான் நெருக்கம் அதிகம். தகதகவென்று கனன்றுகொண் டிருந்த மண் குழாயில் கஞ்சா, கடத்தல் பொருளாக இருந்தால் என்ன, சர்க்கார் கடையில் வாங்கியதாக இருந்தால் என்ன? கங்கோத்திரியில் கங்கை ஜலமும், சாக்கடை நீர் சங்கமத்தின் கங்கையும் என்றும் ஒரே விதத்தில்தானே பாவிக்கப்படுகிறது என்பதை நிரூபிப்பது போலிருந்தது.

பாபாஜி மிகவும் சுவையான மனிதர். கீர்த்தனைகளை மட்டுமா அவர் சோதனைக் குள்ளாக்கிறார்? தாமே கீர்த்தனைகளை இயற்றினார். கஞ்சாப் புகை ஏருத சமயம் குரல் சற்றே தொண்டையிலிருந்து வெளியே கேட்கும். ஹார்மோனியம் இல்லாத போது அவரது கீர்த்தனையில், ராகமென்ற பெயரில் ஏதோ ஒலிப்பதுபோலிருக்கும். ஆனால் இத்தனை தொந்தரவுகளெல்லாம் இருந்தபோதும், மிக விரைவிலேயே கிராமம் முழுவதையும் பாபாஜி தம் வசப்படுத்திக் கொண்டுவிட்டார்.

கபீர், சூர்தாஸ், ராமானந்த் போன்றவர்களின் பாடல்களை அவர் பாடப் பாட மக்கள் அந்தச் சாதுக்களைப் பாராட்டலானார்கள். அந்தச் சாதுக்கள் மட்டும் அங்கே இருந்திருந்தால், பாபாஜியின் சொந்தக் கவித் திறனை நிச்சயம் பாராட்டி இருப்பார்கள். இந்த வேகத்தில் பாபாஜி, கிராமத்திலிருந்த ஜாதி பேத உணர்வை விரைவிலேயே அகற்றிவிட்டார். ஒருநாள், கஞ்சா, பங்கி, பஜனை, கீர்த்தனை என்ற அமர்க்களத்தினிடையே, "இந்தக் கிராமத்துப் பஞ்சாயத்துத் தலைவர் மிகுந்த தர்மாத்மா, நல்ல மனிதர்" என்று பாபாஜி, லேசாகக் குறிப்பிடவே மக்கள் திகைத்துவிட்டனர். பங்கியடிப்பவன் ஒருவன், "இதுவரை தலைவர் எவரும் தேர்ந்தெடுக்கப்படவில்லை. இனித்தான் முதல் முறையாகத் தேர்தல் நடக்கப்போகிறது" என்பதைத் தெரிவித்ததும் பாபாஜி, "நம்முடைய பகவான் தேர்ந்தெடுத்துவிட்டார்" என்பதைக் குறிப்பிட்டார். மிகச் சுருக்கமாகவே, போதை தெளிவதற்குள், பிராம்மண வேட்பாளர்தான் பகவானால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் என்பது மக்களுக்குத் தெரிந்துவிட்டது. போதை முற்றும் தெளிவதற்குள்ளேயே, கிட்டத்தட்ட கிராமவாசிகள் எல்லாருமே அவரைத் தங்கள் பஞ்சாயத்துத் தலைவராக ஏற்றுக் கொண்டும் விட்டனர். இந்த விதமாக, 'பாதம்' கும்பிவிட்டது. 'வாய்' வென்றுவிட்டது.

இந்த நேவாதா முறை, தேர்தலில் போட்டி இடுபவர்களுக்கு மிகப் பயனுள்ளதாகவே இருந்தது. மற்றக் கிராமங்களில் இம்முறை லேசான திருத்தங்களுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டு, பெரிய பெரிய தேர்தல்களில் வெற்றியைத் தேடித் தந்தது. கஞ்சாப் போதை பழக்கமான சாதுக்கள் கிடைக்காத ஊர்களிலும், கஞ்சா நிறைய கிடைக்காத இடங்களிலும், யாரையேனும் ஒருவரைப் பிடித்துப் பாபாஜியாக்கி, தேவி பூஜைக்குரிய ஏற்பாடுகளைச் செய்தனர். ஆங்காங்கே, ஆடுகள் பலி கொடுக்கப்பட்டன, கள் பிரசாதமாக வழங்கப்பட்டது. இதற்கெல்லாம் கிடைத்த பலனும் இதுவேதான். 'பாதம்' தொய்ந்து போக, 'வாய்'க்கு வெற்றி கிட்டியது.

இதுபோல் 'பேட்டண்ட்' ஆகிய முறை, தேர்தல் என்ற சம்ஹிதையில் நேவாதா முறை என்ற பெயரில் பதிக்கப்பட்டது.

மகிபால்பூர் முறை சுத்த விஞ்ஞான ரீதியாக, யாவற்றையும் விட எளியதாக இருந்தது. ஒரு தேர்தல் அதிகாரியின் தவறுதலினால் இது ஏற்பட்டது என்றாலும், இந்தத் தவற்றுக்கு ஒப்புதல் அளித்து, இதையே பல இடங்களில் மறுமுறை செயலாக்கப்பட்டது. இந்தத் தவறு ஒரு கடிகாரத்தினால் ஏற்பட்டது.

தேர்தல் பகல் பன்னிரண்டு மணிக்கு நடப்பதாக இருந்தது. தேர்தல் அதிகாரியின் கடிகாரம் மணிக் கூண்டின் கடிகாரத்தின் படியும், மணிக் கூண்டுக் கடிகாரம், முனிசிபல் சேர்மனின் வீட்டுக் கடிகாரத்தின்படியும் ஓடியதால் கால்மணி நேரம் முன்னதாகக் காட்டியது. இதன் பலன், சில வேட்பாளர்கள் எதிர்த்தும்கூடத் தேர்தல் அதிகாரி, பதினொன்றே முக்கால் மணிக்கே, எத்தனை வோட்டர்கள், வேட்பாளர்கள் வந்திருந்தனரோ, அவர்களை வைத்துக்கொண்டே தேர்தலை முடித்து, தேர்தல் முடிவையும் அறிவித்துவிட்டார். எஞ்சிய வோட்டர்கள், வோட்டளிக்கச் சாவடிக்கு வந்தபோது, தேர்தல் அதிகாரி தம் வீட்டில் ஒரு மணி அடித்துப் பதினைந்து நிமிஷத்துக்குப் பிறகு சாப்பிடப்படும் மதிய உணவைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

இந்தத் தேர்தலுக்கு எதிராகக் கொடுக்கப்பட்ட மனுவில் கடிகாரங்களைப் பற்றித்தான் விவாதமெல்லாம் நடந்தது. இந்த வழக்கே விஞ்ஞான ரீதியாக நடைபெற்றது. இதனால் கோர்ட்டாருக்குப் பலவிதமான கடிகாரங்களையும் நுட்பமாக, அதன் அமைப்புகளைப் பற்றிய விதங்களை அறிந்துகொள்ளும்

வாய்ப்புக் கிட்டியது என்றாலும், மூன்று வருஷங்கள் வழக்குத் தொடர்ந்து நடந்த பிறகும், தேர்தல் அதிகாரி உண்மையிலேயே தவறு செய்தாரா இல்லையா என்பது நிரூபிக்கப்பட முடியவில்லை. யார் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டாரோ அவர் தம் கடிகாரத்தை எப்பொழுதும் கால் மணி நேரம் முன்னதாகவே வைத்துக் கிராமத்தில் தம் ஆட்சியைச் செலுத்தலானார். மற்ற வேட்பாளர்கள், சின்ன பயில்வான் உட்பட, கடிகாரத்துக்குப் பதிலாக மணியை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

மகிபால்பூர் சம்பவம் முற்றிலும் யதேச்சையாக நேர்ந்தது என்றாலும் நியூடனின் கண் முன்னே மரத்திலிருந்து ஆப்பிள் விழுந்த சம்பவமும், அதிலிருந்து பூமியின் ஆகர்ஷண சக்தியைக் கண்டறிய நேர்ந்ததும்கூட யதேச்சையானதுதானே! இந்த நிகழ்ச்சிக்குப் பின், தேர்தல் கலை வல்லுனர்கள்கூட இதிலிருந்து ஒரு சித்தாந்தத்தைக் கண்டறிந்தனர். 'எல்லாக் கடிகாரங்களும் ஒரே சமயத்தில், ஒரே நேரத்தைக் காட்டுவதில்லை. அதுபோலவே, எல்லா வோட்டர்களும் ஒன்றாக, ஒரே இடத்தில் வந்து சேரமுடிவதில்லை' என்பதுதான் அந்த உண்மை.

இந்த உண்மை கண்டறியப்பட்டபின், கிராமப் பஞ்சாயத்துத் தேர்தல்களில், பலமுறை, பலவாறாக இது பயன்படுத்தப் பட்டது. தேர்தல் அதிகாரிகளின் கடிகாரங்கள், மகிபால்பூர் உதாரணத்தை முன்வைத்து ஒன்று, அரை மணி, கால் மணி முன்னதாக நேரம் காட்டின. அல்லது மெதுவாகப் பின்தங்கி இயங்கின. கடிகாரம் ஒரு சிறிய யந்திரமாதலால், இதன் பொருட்டு எந்த மனிதனிடமும் குற்றம் காணமுடியவில்லை. பெரும்பாலும் எந்த வேட்பாளரின் கடிகாரம், தேர்தல் அதிகாரியின் கடிகாரத்துக்கு ஒத்துப் போய் நேரத்தைக் காட்டியதோ அவரே வெற்றி பெறுவதும் இயல்பாகிவிட்டது. இதுவும் இரு மெஷின்களின் விளையாட்டு ஆகையினால், இதன் பொருட்டும் எந்த மனிதனையும் குற்றவாளியாக்குவது என்பது விஞ்ஞானத்துக்குப் புறம்பானதாகிவிடும்.

பூகோள அமைப்பின்படி, சிவபால்கஞ்ச், மகிபால்பூரிலிருந்து தொலைவிலும், நேவாதாவுக்கு அண்மையிலும் இருந்தது. இதனால் ராமாதீன் பீகம்கேடவிக்கு நேவாதா முறைபற்றி நன்றாகத் தெரிந்திருந்தது. இதனால் அவர் இதைத் தாராள

மாகப் பிரயோகித்தார். சனிஸ்வரனின் தரப்பில் வைத்தியர் பூகோளத்தைவிடச் சரித்திரத்தைத்தான் தனக்கு உதவியாகப் பயன்படுத்திக்கொண்டார். கடந்த காலத்தில் எல்லா வழி முறைகளையும் நன்கு ஆராய்ந்தபின், சனிஸ்வரனின் சார்பாக, மகிபால்பூர் வழியைப் பின்பற்றுவதுதான் சரியென அபிப் பிராயப்பட்டார். இதற்கென ஒரு மலிவான கடிகாரம் வாங் கியதுதான் அவருக்குச் செலவு. அதையும் தேர்தல் அதிகாரி மறதியாகத் தம் கையில் கட்டிக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்துவிட்டார். நேவாதா வழியைப் பின்பற்றியவர் களோ, தோல்வியுற்று, நிராசையிலும், சாராயப் போதை யிலும் சுருண்டு விழுந்துவிட்டனர். போதைப் பொருள்களில் தேர்ச்சி பெற்றதைத் தவிர அவர்களுக்கு வேறு எதுவும் கிட்டவில்லை.

# அத்தியாயம் 20

மாடி வராந்தாவிலே கல்லோடு சேர்த்துக் கட்டிய காகிதப் பொட்டளமொன்று வந்து விழுந்தது. அது காதற் கடிதமென்று பின்பே தெரிந்தது. ரங்கநாத் அதை ஒருமுறை படித்தான். பிறகு மீண்டும் மீண்டும் படித்தான். அன்றிரவு தன் பருத்த மார்பகங்களின் உரசலின் மூலம், இரவெல்லாம் கஜுராஹோ வையும், கோணரக்கையும் நினைவூட்டிச் சென்றாளே, அவளு டைய கடிதந்தான் இது என்பதை அறிந்துகொள்ள அதிக நேரமாகவில்லை. இந்தக் காதற் கடிதம் தனக்கு எழுதப்பட வில்லை. வேறு யாருக்கோ எழுதப்பட்டிருக்கிறது என்பதும் அவனுக்குத் தெளிவாகப் புரிந்தது.

அந்த ‘அவன்’ யார்?

ரூப்பனா?

இந்தக் கடிதத்தைப் பேலாவா, ரூப்பனுக்கு எழுதி இருக்கிறாள்? அப்படியென்றால் அன்றிரவு மாடிக்கு வந்தவள் பேலாதானா?

ரங்கநாத் இந்தக் கேள்விகளுக்குரிய பதில்களைத் தேடுகையில், ஒரு பெரும் நியாயவாதி போன்றோ, தர்க்கவாதி போன்றோ செயல்பட்டு, இரண்டும் இரண்டும் சேர்ந்தால் நான்கு என்று எண்ணிக் கொண்டிருந்தான் என்று கருதுவது தவறாகும். உண்மையில் அவன், ஒருபுறம் இந்தக் கடிதம் எழுதியவள் பேலா என்று நினைத்து ரூப்பனுடன் அவளை இணைத்துச் சரி பார்த்துக் கொண்டிருந்தான். மற்றொருபுறம் சிவபால்கஞ்சில் கூடத் திரைப்படப் பாடல்களில் புலமை பெற்ற இவ்வளவு பெரிய வித்வான் இருக்கிறாரா என்பது அவனுக்கு வியப்பை அளித்தது. பல்கலைக் கழகத்து அதிகாரிகள் அவனை நெஞ்சாரத் தழுவிக்கொண்டாலும், கொள்ளாவிட்டாலும் நிச்சயம் அவன் கழுத்தில் திரைப்பட இலக்கியத்தில் டாக்டரேட் பட்டத்தைக் கட்டிவிடுவார்கள். ஏனென்றால் அந்தக் காதற் கடிதம் முழுவதுமே, திரைப்படப் பாடல்களின் வரிகளை இணைத்து, உருவாக்கிய வசன கவிதையாக, அதாவது கவிதையை வசனமாக்கி எழுதியிருந்தது. இவ்வித எண்ணங்களின் மத்தியில் இன்னோர் எண்ணமும் மெல்லத் தலைதூக்கிக் கொண்டிருந்தது.

இதைத் திரைப்படப் பாஷையில் சொன்னால், "இந்த உலகம் என்னை ஏன் இப்படி வதைக்கிறது?" எனலாம். அன்று அவனது குரலைக் கேட்ட மாத்திரத்தில், 'ஐயோ, அம்மா!' என்ற பவித்திரமான சொற்களை உச்சரித்தவாறே திரும்பி ஓடிய அவள், வேறொருவனுக்குத் "தனியாக இருக்கிறேன். நீ எங்கிருந்தாலும் வா" என்ற வேண்டுகோள் கொடுத்துக் கொண்டிருப்பதை ரங்கநாத்தால் தாங்க முடியவில்லை.

கடிதத்தைத் தன் ஜேபியில் வைத்துக்கொண்டு அவன் வீட்டை விட்டுக் கிளம்பினான். இன்று நகரத்தில் ஜோக்நாத் வழக்கு நடைபெறுகிறது. சிவபால்கஞ்சில் சற்று மதிப்புள்ளவர்களாகக் கருதப்படும் ஒவ்வொருவரும் நகரத்துக்குத்தான் போய்க் கொண்டிருந்தார்கள். கிராமத்து ரௌடியின் மீது வழக்கு நடக்கப் போகிறதென்றால் ஊர்க்காரர்களுக்கு, போய் அதையும் பார்த்துவிட்டு நகரத்தையும் ஒரு சுற்று சுற்றிவிட்டு வரலாமே என்ற எண்ணம் எழுவது இயல்பு. அந்த ரௌடி அவமானம் அடைவதைப் பார்ப்பதில் ஒரு திருப்தி, ஓர் ஆறுதல். அந்த ரௌடிக்கும், 'இதோ பார், என் கிராமத்திலிருந்து எத்தனை பேர் என் உதவிக்கு வந்திருக்கிறார்கள்?' என்பதில் மனப்பூர்வமான

இன்பம். இதற்குள் பலர் புறப்பட்டுச் சென்றுவிட்டனர். பலர் புறப்பட்டுக் கொண்டிருந்தனர்.

பயில்வான் பத்ரி, தம் மனங்கவர் தோற்றத்துடன் எதிரே வந்துகொண் டிருந்தார். உள்ளே பனியன் போட்டுக்கொள்ளு வது அவசியம் இல்லை என்று கருதப்பட்டதாலோ, பங்குனி மாதத்துக்கு இதுவே சில்லென்றிருந்ததாலோ, அவரது உடலில் மல்மல் குர்த்தா பளபளத்தது. இடுப்பில் லங்கோடு இருந் தாலும், அதன்மீது லுங்கி கட்டியிருந்ததுதான் பின்னும் வியப் பாக இருந்தது. கால்களில் கறுப்புப் பாலீஷ் ஏறிய பூட்ஸ், மழுங்க மொட்டை அடித்திருந்த தலையில் கடுகு எண்ணெயின் பளபளப்பு, அதற்கு மேலே, மிக மிக உயரத்தில் நீல வானம்.

ரங்கநாத் இந்தக் காதற் கடிதத்தை, ரூப்பனிடம் கொடுத்து, திரைப்படம் நமது பண்பின் மகத்தான விழுச்சிக்கு எவ்விதம் கைகொடுக்கிறது என்பதுபற்றிய தன் சில கருத்துக்களைக் கூறி, பேலாவின் காதல் வலையில் வீழ்வதிலிருந்து அவனைத் தடுக்கவேண்டும் என்றே முதலில் நினைத்திருந்தான். ரூப்ப னிடம் இது பற்றிப் பேசுவது கடினம் என்பது அவனுக்குத் தெரியும். ஆனால் காதல் கடிதம் போன்ற கடுமையான விஷ யத்தைச் சாதாரணமாக முடித்துவிடுவதும் சரியல்ல என்று தோன்றியது. ஆனால் பயில்வான் பத்ரியைப் பார்த்ததும் அவனது எண்ணம் மாறிவிட்டது. யாராவது ஓர் அமெரிக்க நிபுணனைப் பார்த்ததும் நாம் சில சமயம் நமது திட்டங்களை மாற்றிக்கொள்கிறோமே, அதுபோல ரங்கநாத்தின் திட்டமும் மாறிவிட்டது. பயில்வான் பத்ரி இந்தக் காதற் கடிதத்தைத் தூரத்திலிருந்தே பார்வையிட்டார். இதற்கு வசதியாக, ரங்க நாத் சுமார் ஒன்றரையடி தூரத்தில் நின்று கடிதத்தை இரண்டு கரங்களினாலும் பிடித்துக் கொண்டான். அவர் மௌனமாய்க் கடிதம் முழுவதையும் படித்தார். ஓரிடத்தில் அவர் விழிகள் சற்றுச் சுருங்கியதும் ரங்கநாத், அவருக்கு உதவும் நோக்கத் துடன், 'மீண்டும் இந்த மனோகரமான இரவு வராது' என்று படித்தவன், "மனோகரமான, என்றால் அழகிய என்று அர்த்தம்" என்றான். 'எனக்குத் தெரியும். இதைக் கூறவேண்டிய அவசியம் இல்லை' என்பதுபோல் பயில்வான் பத்ரி ஓர் ஏப்பம் விட்டார். கடிதம் முழுவதையும் படித்தபின் அதை வாங்கிக்கொண்டு அவர் மடித்துத் தம் குர்த்தாவின் ஜேபியில் போட்டுக் கொண்டார்.

"ரூப்பன் ரொம்பத் தவருன வழியில் போய்க் கொண்டிருக்கிருன். அதிலும் அந்தப் பெண், இந்தக் கடிதத்தில் கண்ட குப்பையை வாரி நிறைத்திருக்கிருள்" என்ருன் ரங்கநாத்.

பதிலுக்குப் பயில்வான் உரக்கச் சிரித்தார். "அந்தச் சிறுக்கி கிராம சேவிகாதான் இதை எழுதி இருக்கிருள். இங்கு அவள் ஒருத்திக்குத்தான் இதெல்லாம் தெரியும்" என்ருர்.

"அப்படியென்ருல் ரூப்பன், கிராம சேவிகாவிடம்...."

பயில்வான் முன்போல் சிரித்துக்கொண்டே இருந்தவர், தம்மை அடக்கிக்கொண்டு, "இல்லே, இல்லே. நீ எல்லாவற்றையும் விபரீதமாகவே புரிந்துகொள்ளுகிருய். பாவம், அவள் அந்தக் காரியமெல்லாம் செய்யமாட்டாள். மற்றவர்களுக்குக் கடிதம் மட்டுமே எழுதுவாள்" என்ருர்.

பயில்வான் பத்ரி மேலே நடந்துவிட்டார். ரங்கநாத்தின் முகத்திலிருந்த குழப்பத்தைக் கண்ணுற்றதும், மேலே நடந்தவாறே, "இந்தக் கடிதத்தைப் பற்றிக் கவலேப்படாதே. நான் சரி செய்துவிடுகிறேன்" என்ருர்.

நீதிமன்றம் நகரத்திலிருந்தாலும் கிட்டத்தட்ட சிவபால்கஞ்ச் முழுவதுமே அங்கு ஆஜராகி இருந்தது. ஜோக்நாத் சம்பந்தப்பட்ட திருட்டுக் குற்றத்துக்குச் சாட்சிகள், தங்கள் சாட்சியங்களேக் கூறிக் கொண்டிருந்தனர்.

அந்தச் சூழ்நிலேயே மிகவும் மட்டமானதாக, ஆபாசமானதாக இருந்தது. வராந்தா முழுவதிலும் நாய்கள் மாதிரி ஜனங்கள் படுத்துப் புரண்டு கொண்டிருந்தனர். ஹோலி நெருங்கிவிட்டதால், கேலியும் பரிகாசமும், வசவும் திட்டுமாக இருந்தது. ஒவ்வொருவரின் உடலின் மீதும் அழுக்கான, ஆனல் வண்ண வண்ணமான துணிகள், இல்லே, துணி மூட்டைகள் இருந்தன. அழுக்குப் பிடித்த உடையும், மழிக்காத தாடி மீசைகளுடன் வாதி, பிரதிவாதிகள் பீடி பிடித்துக்கொண்டோ, பாசி பிடித்த பற்களிடையே புகையிலேத் தூளேப் பத்திரமாக அடைத்து வைத்துக்கொண்டோ, உரத்த குரலில் காச்சுமூச் சென்று கத்திப் பேசிக்கொண்டிருந்தனர். ஒரு பெண், தரையில் படுத்துக்கொண்டு தன் குழந்தைக்குப் பாலூட்டிக் கொண்டிருந்தாள். அவள் பால் கொடுக்கும் நிலே, அங்கிருந்தவர்களுக்கு ஒரு சுவையான காட்சியாக விளங்கியது.

காற்று வேகமாய் வீசியதால், எழும்பிய தூசியும், காய்ந்த சருகுகளும் வராந்தா முழுவதும் சிதறிக் கிடந்தன.

முழங்கால்வரை காக்கிப் பட்டியைக் கட்டிக் கொண்டு, இரண்டு போலீஸ்காரர்கள், தலையில் தொப்பி இல்லாமல், வராந்தாவில் இங்குமங்கும் போய்க்கொண் டிருந்தனர். அதில் எப்போதும் யாராவது ஒருவனைச் சரியானபடி பதம் பார்க்கத் தயாராக இருக்கும் ஒருவனுடைய பூட்ஸ் இப்பொழுது வராந் தாவுக்கு எதிரேயுள்ள மரத்தின் அடியில் வீற்றிருந்த சக்கிலிய னிடம் ரிப்பேருக்காகச் சென்றிருந்தது. இன்னொருவனுடைய பூட்ஸோ, புதிதாக இருந்ததால் அவனுடைய காலையே பதம் பார்க்க ஆரம்பித்துவிட்டது. இதனால் அதைக் கதவருகில் அவன் கழற்றி வைத்திருந்தான். வக்கீல்களோ வேலை இருந் ததோ இல்லையோ, கோர்ட்டுக்குள் போவதும் வருவதுமாக இருந்தனர். கோர்ட்டின் அலுவலக ஊழியர்களோ, நிம்மதி யாய்க் கொட்டாவி விட்டுக்கொண்டு, பதினைந்து நிமிஷங்களுக் கொருமுறை, கோர்ட்டுக்கு வெளியே வந்து எதிரேயுள்ள வெற்றிலை பாக்குக் கடைக்குச் செல்வதும், யாராவது கட்சிக் காரன் பின்னால் தொடர்ந்து வர, யாராவது ஒருவன் பக்கத்தி லேயே வர வெற்றிலையைக் குதப்பிக்கொண்டு, ஒட்டகம் மாதிரி கழுத்தை உயர்த்திவாறு, "இன்று ரொம்பவும் வேலை. நாளைக்குப் பார்க்கலாம். நாளை மறுநாள் வா" என்றெல் லாம் கூறிய வண்ணம், மீண்டும் கோர்ட்டின் பாதுகாப்பான எல்லைக்குள் புகுந்து கொண்டிருந்தனர்.

வராந்தாவின் ஒரு மூலையில் நொண்டி உட்கார்ந்து கொண் டிருந்தான்.

பஞ்சாயத்துத் தலைவன் என்ற முறையில் இங்கே வேடிக்கை பார்க்க வந்தவர்களில் சனிஸ்வரனும் ஒருவனாக இருக்கவேண்டி யது இன்றியமையாததாகியது. தவிரவும் சின்ன பயில்வான் இன்று போலீசாரின் சார்பாக, ஜோக்நாத்துக்கு எதிராகச் சாட்சியம் கூற வந்திருந்தான். இது மிகவும் சரித்திர முக்கியத் துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகி விட்டிருந்தது. ஏனென்றால், சின்ன பயில்வான் வைத்தியரின் ஆள் என்பது மக்கள் கருத்து. அப்படிப் பார்த்தால் ஜோக்நாத்தும் வைத்தியரின் ஆள்தான். இருந்தாலும் எப்படியோ, ஒருவருடைய இரண்டு ஆட்களில் ஒருவன் குற்றவாளியாகவும், இன்னொருவன், அவன் குற் றத்தை நிரூபிக்கும் சாட்சியாகவும் மாறி எதிரும் புதிருமாக நிற்கும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. இதைக் குறித்துச் சில நாட்களுக்குமுன் தெருக்கூத்து நாடக பாணியில் ரூப்பன்,

"ஹாய், ஒன்றாய் மலர்ந்த இரு மலர்களின் விதி வெவ்வேறாக இருக்கிறது" என்றான்.

சனிஸ்வரனும், மற்றும் கிராமத்தினர் பலரும் கோர்ட்டுக் குள்ளேயே போய்விட்டனர். சனிஸ்வரன், சும்மா குஷிப் படுத்துவதற்காக நொண்டியைத் தன்னுடன் ரிக்ஷாவில் அழைத்து வந்திருந்தான். இப்பொழுது வெளி வராந்தாவில் அமர்ந்திருந்த நொண்டி, தன்னைச் சுற்றிலுமிருந்த புதியவர் களுக்குத் தன் அநுபவங்களைச் சொல்லிக்கொண் டிருந்தான். அவனுக்கு இருந்ததோ ஒரு வாழ்க்கை, அதிலே ஒரே ஒரு அநுபவந்தான். அதைத் தான் இப்போது விரிவாகச் சொல் லிக் கொண் டிருந்தான் அவன்.

"ஐயா, கேளுங்கள்! ஒரு வருடம் மூன்று மாதங்களுக்குப் பிறகு இப்போதுதான் விஷயம் ஒரு மாதிரி முடிந்திருக்கிறது. நகலுக்காக விண்ணப்பித்த விண்ணப்பத் தாளில் ஒரு தவறும் இல்லை என்ற நிலை வந்திருக்கிறது. பத்திரங்கள் தலைமைக் காரியாலயத்திலிருந்து தாலுக்கா ஆபீஸுக்குத் திரும்பி வந் துள்ளன. நேற்றுத் தாலுக்கா ஆபீஸுக்குப் போனேன். காப்பிஸ்ட் என் பத்திரங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது. இன்று ஒருவேளை தயாராகிவிடலாம். பிறகு மூலத்துடன் ஒத்திட்டுப் பார்த்தாக வேண்டும். இன்னும் இரண்டு மூன்று நாட்களில் வந்துவிடும்."

வராந்தாவின் கம்பமொன்றில் சாய்ந்தவாறு சிகரெட் பிடித் துக் கொண்டிருந்த வக்கீல் ஒருவர் தாம் நின்ற இடத்திலிருந்தே சொன்னார். "இத்தனை நாட்கள் இப்படி அலைந்திருக்கிறாயே! முதலிலேயே என்னிடத்திலோ, வேறு எந்த வக்கீலிடமோ வந்திருந்தால் விஷயம் இரண்டு, மூன்று நாட்களில் முடிந்திருக்கும்."

இப்போதெல்லாம் சாதுக்களுக்குரிய இனிய மதுரமான புன்னகையைச் சிந்த நொண்டி கற்றுக்கொண் டிருந்தான். அந்தப் புன்னகை, 'என்னப்பா, குழந்தைத்தனமாகப் பேசுகிறாயே! என்னுடைய நல்ல தன்மையினால் தான் நான் இதைச் சகித்துக்கொண் டிருக்கிறேன்' என்று சொல்லுவது போலிருக்கும். இப்பொழுதும் அதே புன்னகையை மலர் வித்துக் கொண்டு, "இதில் வக்கீல்களுக்கு என்ன அவசியம் இருக்கிறது பாபு! இது உரிமைப் போராட்டம். காப்பிஸ்ட் பாபுவுக்கு ஐந்து ரூபாய் கொடுத்திருந்தால் மூன்று நாட்கள்

என்ன, மூன்று மணி நேரத்தில் கிடைத்திருக்குமே! ஆனால் அவர் அதை அப்படிப் பெறுவதாகவோ நான் பணம் கொடுப்பதாகவோ இல்லை" என்றான் நொண்டி.

"ஏன்? பெற்றுக் கொள்ளமாட்டாரா? நீ ரூபாய் கொடுத்து அவர் வாங்கிக் கொள்ளவில்லையா என்ன?" என்றார் வக்கீல் மீண்டும். நொண்டி களைத்துப் போனவனாய்க் கீழே படுத்துக் கொள்ளப் பார்த்தான். "இது சத்தியப் போராட்டம் பாபு. நீங்கள் வக்கீல். உங்களுக்கு இது புரியாது" என்றான்.

சுற்றியிருந்தவர்கள் சிரிக்கலானார்கள். ஆனால் நொண்டி படுத்துக் கொண்டவன், மௌனமாய் விழிகளை மூடிக் கொண்டான். பின்பு அவன் லேசாக முனகுவது போல் இருந்தது.

"என்னப்பா? நொண்டி! எப்படியோ ஆகிவிட்டாயே?" என்று யாரோ கேட்டனர்.

கண்களைத் திறக்காமலேயே அவன் தலை அசைத்தானே தவிர, ஒன்றும் பேசவில்லை. அவன் அருகே அமர்ந்திருந்த ஒருவன் அவனது உடலைத் தொட்டுப் பார்த்து, "காய்ச்சல் போலிருக்கிறது" என்றான்.

கிழவி ஒருத்தி மௌனமே உருவாய் அமர்ந்து குழி விழுந்த கண்களால் வானத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். "கெட்ட காலம் வந்து விட்டது. என் பிள்ளைகள் இரண்டு பேருக்குக் காய்ச்சல். பயிர் முற்றிவிட்டது. அறுவடை செய்பவர்கள் இல்லை. எலிகள் நாசமாக்கிக் கொண்டிருக்கின்றன" என்றாள் அந்தக் கிழவி.

கௌரவ மாஜிஸ்ரேட்டின் கோர்ட், கயாதீனை விசாரித்துக் கொண்டிருந்தது. குறுக்கு விசாரணை முடியும் நேரத்தில் திடீரென்று ஜோக்நாத்தின் வக்கீல் கேள்விகள் கேட்கத் தொடங்கினார்.

"உங்களுக்கு ஒரு மகள் இருக்கிறாளா?"

"ஆம்."

"அவளது பெயர் பேலாவா?"

"ஆம்."

"அவளுக்கு வயது கிட்டத்தட்ட இருபது இருக்குமா?"

"ஆம்."

கோர்ட்டார் கயாதீனைச் சந்தேகத்துடன், அதாவது இருபது வயதுடைய ஒரு பெண்ணின் தந்தையை எப்படிப் பார்க்க வேண்டுமோ அப்படி உற்றுப் பார்த்தார்.

"உங்கள் வீட்டில் வேறு யாராவது பெண்கள் இருக்கிறார்களா?"

"ஆம். என் விதவைச் சகோதரி இருக்கிறாள்."

"ஆனால் அவள் எப்போதும் உங்களுடன் இருப்பதில்லை அல்லவா?"

"அப்படியில்லை. அவள் எப்பொழுதும் என்னுடன் தான் இருக்கிறாள்."

வக்கீல் கர்ஜித்தார். "நீங்கள் சத்தியம் செய்திருக்கிறீர்கள். பொய் கூறினால் வழக்குத் தள்ளுபடியாகிவிடும். உமது சகோதரி பெரும்பாலும் தன் புக்ககத்தில் தான் இருக்கிறாள். அப்போதெல்லாம் உமது மகள் வீட்டில் தனியாகத் தான் இருக்கிறாள் என்பது உண்மையா இல்லையா?"

கயாதீன் மௌனமாக நின்றார். வக்கீல் மீண்டும் உறுமினார். "ஏன் பேசமாட்டேன் என்கிறீர்கள்?"

"என்ன பேசுவது? உங்களுக்கு இவ்வளவு கோபம் ஏற்படும்போது பதில் கூறுவது கடினம்."

"எனக்குக் கோபம் இல்லை" என்று அதே குரலில் உறுமினார் வக்கீல்.

கயாதீன் ஒன்றும் பேசவில்லை. வக்கீல் குரலைத் தணித்துக் கொண்டு, "உமது பதில் என்ன?" என்று வினவினார்.

"என் விதவைச் சகோதரி என்றுமே என்னுடன் தான் இருக்கிறாள்."

"உமது மகளுக்குத் திருமணமாகி விட்டதா?"

"இல்லை."

"எப்பொழுது செய்வதாக உத்தேசம்?"

"அது கடவுளின் விருப்பத்தைப் பொறுத்தது."

கடவுள் என்ற சொல்லைக் கேட்டதும் கனம் கோர்ட்டார் தலை நிமிர்ந்து பார்த்தார். இதுவரை, இந்த வழக்குச் சம்பந்தப்படாத காகிதங்கள் எதையோ புரட்டிக்கொண்டிருந்த கோர்ட்டார் வக்கீலை நோக்கி, "இந்தக் கேள்விகளுக்கும் வழக்குக்கும் சம்பந்தம் இல்லை" என்றார்.

"ஸ்ரீமான் கோர்ட்டார் அவர்களே, இதற்குச் சம்பந்தமுண்டு என்பதை நான் பின்னால் நிரூபிக்கிறேன்" என்றார் வக்கீல்.

கனம் கோர்ட்டாரின் எச்சரிக்கைக் குறிப்பை உணர்ந்து கொண்ட பப்ளிக் பிராசிக்யூடர் தம் சாட்சியைக் காப்பாற்ற வேண்டிய உணர்வைப் பெற்றவராய், "கோர்ட்டார் அவர்

களே! இந்தக் கேள்விகள் வழக்குக்குச் சற்றும் சம்பந்தப்படா தவை'' என்று ஆட்சேபித்தார்.

கனம் கோர்ட்டார் கடுமையான பார்வையைப் பப்ளிக் பிராசிக்யூடர் மீது வீசினர். அவருடைய ஆட்சேபக் குரலுக் குப் பதில் அதுதான்.

ஜோக்நாத்தின் வக்கீல், கனம் கோர்ட்டாரின், 'மூட்' மோசமாவதைக் கண்டதும், கயாதீனிடம் அவருடைய மகளைப்பற்றி மேற்கொண்டு கேள்விகள் கேட்பதை நிறுத்திக்கொண்டார். அடுத்த சாட்சி அழைக்கப்பட்டான்.

அவன் வேறு யாரும் அல்ல. ஜோக்நாத்தின் வீட்டைச் சோதனை போட்ட சமயம், எதேச்சையாகத் தன் வீட்டிலிருந்து வெளியே வந்தவன், போலீசைக் கண்டு ஓட்டம் பிடித்தான் அல்லவா? அப்போது அவன், போலீசாரைச் சமாதானப் படுத்த, அவர்கள் கூப்பிடும்போது சாட்சி சொல்ல வருவதாகக் கூறியிருந்தான். அவன் பெயர் பைஜ்நாத். சிவபால்கஞ்சின் பண்டிதர் ராதேலாலின் சீடப்பிள்ளை அவன். பண்டிதர் ராதேலால் பொய்ச் சாட்சி சொல்லுவதில் நிபுணர். மிகத் தேர்ச்சியும் திறமையும் பெற்றிருந்த அவரை இன்றுவரை எந்த வக்கீலாலும் குறுக்கு விசாரணையில் முறியடிக்க முடிந்ததில்லை. பிடிக்கு அகப்படாமல் பொய் சொல்லும் திறமை பெற்றவராக இருந்ததால், மாவட்டம் முழுதும் நடக்கும் வழக்குகளிலும், சாட்சியங்களிலும் பங்கேற்று அளவிட முடியாத பெரும் கீர்த்தி பெற்றிருந்தார்.

இப்போது கொஞ்ச நாட்களாகவே ஒரு கிழக்கத்திய பெண்ணின் காதல் அவரை வீட்டோடு கட்டிப் போட்டிருந்தபடியால், சாட்சியம் கூறுதல் என்ற பிரைவேட் பிராக்டிஸுக்கு அவரால் அதிக நேரத்தை ஒதுக்க இயலவில்லை. இதனால் வழக்குகளில் ஆஜராவதை முன்னைவிடக் குறைத்துக்கொண்டிருந்தார். பெரிய வக்கீல்கள், டாக்டர்கள் போல அவரும், தற்சமயம் சாதாரண பிராக்டிஸ் செய்யாமல். பிரத்தியேகத் துறையில் தேர்ச்சி பெற்றவர்களைப் போல், சிவில் வழக்குகள், அதிலும் குறிப்பாக, வாரிசுகள், சொத்து பாத்தியதைப் பற்றிய விவகாரங்களில் தான் பங்கேற்றுக் கொண்டிருந்தார். கிரிமினல் வழக்குகள் சம்பந்தப்பட்ட வரையில், பொய்ச் சாட்சி சொல்லும் தரத்தை ஸ்திரமாக்கும் பொருட்டுக் கடந்த சில ஆண்டுகளாகவே ஒரு சில சீடர்களைத் தயாராக்கி

வைத்திருந்தார். அவர்களில் பைஜ்நாத் முதலிடம் பெற்றவன்.

பைஜ்நாத், பீகம் கேடாவைச் சேர்ந்தவன் என்றாலும் சாட்சி சொல்ல நேரிடும்போது, சுற்றுப்புறமுள்ள கிராமங்களில் எது சம்பந்தப்பட்ட வழக்கானாலும், அவன், அந்த நேரத்தில் அங்கே இருந்ததாக ஏற்றுக் கொள்ளப்பட்டு வந்தது. இதனால் அவனது தொழில் பீகம்கேடா மட்டும் அல்லாமல், அக்கம்பக் கத்துக் கிராமங்களிலும் நன்றாகவே நடந்தது. இது கூடத் தற் செயலாக நேர்ந்ததுதான். ஜோக்நாத் கைதான அன்று அவன் சிவபால்கஞ்சில்தான் இருந்தான். ஆனால் பொதுவாகச் சாட்சி யம் கூறுவதற்கு உண்மையில் இந்த இடத்தில் இருப்பதும், இல்லாதிருப்பதும் அவசியம் இல்லாததாக இருந்தது.

பைஜ்நாத் வழக்கை ருஜுப்படுத்த சாட்சியம் கூறினான். "ஜோக்நாத்தின் வீடு என் முன்னிலையில் தான் சோதனையிடப் பட்டது. இந்த மூன்று நகைகளும் என் கண் முன்னேதான் கண்டெடுக்கப்பட்டன. என் முன்னே சீல் வைக்கப்பட்டது. இதைப் பற்றிய ரிப்போர்ட் எழுதும்போது நான் உடனிருந் தேன். என் கையெழுத்து என் கண் முன்னேதான் போடப் பட்டது.........இத்யாதி, இத்யாதி."

ஜோக்நாத்தின் வக்கீல் விசாரணையைத் தொடங்கினார்.

"நீ பீகம்கேடாவில் வசிக்கிறாயா?"

"ஆம்."

"பீகம்கேடா சிவபால்கஞ்சிலிருந்து இரண்டு மைல் தூரத்தில் இருக்கிறதல்லவா?"

"எனக்குத் தெரியாது."

"பின் எவ்வளவு தூரம் இருக்கும்?"

"சிவபால்கஞ்சில் தெருக் கூத்து நடந்தால் பீகம்கேடாவில் காதில் விழும்."

"ஒரு மைல் இருக்குமா?"

"சொல்வது கடினம்."

"பத்து மைல்?"

"தெரியாது."

"இருபது மைல்?"

"தெரியாது. நான் அளந்து பார்த்ததில்லை." கனம் கோர்ட் டார் சாட்சியை வெறித்துப் பார்த்தார். "இரண்டு கிராமங் களுக்குமிடையே எவ்வளவு தூரம் இருக்கும்?"

"இடையே கொஞ்சம் வயல்வெளிகள் உள்ளன."

"எத்தனை வயல்கள்?"

"பத்து, இருபது, ஐம்பது இருக்கலாம்."

"சரியாகச் சொல், எத்தனை வயல்கள் இருக்கும்?"

"தெரியாது. நான் எண்ணிப் பார்த்ததில்லை." கனம் கோர்ட்டார் பப்ளிக் பிராசிக்யூடரின் பக்கம் திரும்பிப் பார்த்தார். அவர் சொன்னார். "கனம் கோர்ட்டார் அவர்களே! சாட்சி சொல்வது சரிதான். அவன் எண்ணிப் பார்த்ததில்லை. ஆனால் இரண்டு கிராமங்களும் அருகருகே தான் இருக்கின்றன. ஒரு மைல் தூரத்துக்குள்ளே இருக்கலாம். இன்ஸ்பெக்டரின் சாட்சியத்தில் இது கூறப்பட்டிருக்கிறது."

கோர்ட்டார், ஜோக்நாத்தின் வக்கீலை நோக்கி, "அப்பொழுது இரண்டிற்குமிடையே உள்ள தூரத்தைப் பற்றிக் குறுக்கு விசாரணை செய்யவேண்டிய அவசியம் என்ன? இன்ஸ்பெக்டர் கூறிய சாட்சியத்தைத் தாங்கள் 'சேலஞ்ச்' செய்கிறீரா?" என்று வினவினார்.

"நான் சேலஞ்ச் செய்யவில்லை, யுவர் ஹானர்! ஆனால் குறுக்கு விசாரணை செய்யத்தானே வேண்டும்?"

"அதற்காக?"

"சாட்சியம் கூறுபவனின் அறிவு எப்படியிருக்கிறது என்பதைக் காண்பிக்க."

"அல்லது தங்களுடைய அறிவைக் காட்டுவதற்காகவும் இருக்கலாம்."

கோர்ட்டரின் இந்த வார்த்தைகளைச் செவியுற்றதும் வக்கீலின் முகம் ஜிவ்வெனச் சிவந்து விட்டது. இதற்குள் கோர்ட்டில் இருந்தவர்கள் உரக்கச் சிரிக்கவே, இது அவரை அவமதிப்பதற்காக அல்ல, வேடிக்கையாகக் கூறப்பட்டது என்பது நிரூபணமாகி விட்டது. யார் யாருக்கு இது தமாஷாகப் பட்டதோ, அவர்கள் சிரித்துக்கொண்டே இருந்தார்கள். முடிவில் ஜோக்நாத்தின் வக்கீலும் சிரித்து விட்டார். கோர்ட்டுகளில் சட்டப் புத்தகங்களில் இல்லாத ஒரு சட்டம் நிலவுவதுண்டு. கோர்ட்டாரும் வக்கீலும் சில சமயம் அக்பர் பீர்பலின் பரிகாச உரையாடல்களைப் போல் பரஸ்பரம் கேள்வி பதில்களை உடனுக்குடன் பரிமாறிக் கொள்வதுண்டு. இந்த அநாவசிய வழக்கத்தை இன்னும் கடைப்பிடித்தபின், சிவபால்கஞ்சிற்கும், பீகம்கேடாவுக்கும் இடையேயுள்ள தூரத்தைப்

பற்றிய கேள்விகளை அவசியமற்றவை என்று மாஜிஸ்டிரேட் தள்ளிவிட்டார். ஆனால் கேள்விகளும், பதில்களும் பதிவான பின்னரே அவை நிராகரிக்கப்பட்டன.

பைஜ்நாத் தொடர்ந்து விசாரிக்கப்பட்டான்.

"இதுவரை போலீசுக்காக நீ எத்தனை வழக்குகளில் சாட்சியம் கொடுத்திருக்கிறாய்?"

"நினைவில்லை."

"பரவாயில்லை. நான் சொல்லுகிறேன். இதுவரை போலீசாரின் சார்பில் அறுபது வழக்குகளுக்குச் சாட்சியம் கூறியிருக்கிறாய்."

"சொல்லிக்கொண்டே போங்கள். எனக்கு நினைவில்லை."

"இதற்கு முன்பு நீ எப்போதாவது போலீசாரின் சாட்சியாக எந்த வழக்கிலாவது ஆஜரானது உண்டா?"

"போலீசாரின் சாட்சி என்றால் என்ன?"

"கேள்விக்குப் பதில் கேள்வி போடாதே! நேராகப் பதிலைக் கூறு."

"நீங்கள் என்னை நீ......கி......என்று மிரட்டாதீர்கள். நான் ஒன்றும் படிக்காத முட்டாள் அல்ல."

இந்தப் பதிலைக் கேட்டதும் எதிர்த் தரப்பு வக்கில் மீண்டும் கோர்ட்டாரின் உதவியை நாடினார். கனம் கோர்ட்டார் திருவாய் மலர்ந்தருளினார். "ஏய்! கேள்விக்குச் சரியான பதிலைக் கூறு."

பைஜ்நாத் கோர்ட்டாரின் முன் சிரம்பணிந்து தாழ்மையுடன் கூறினான், "ஏழையின் ரட்சகரே! கேள்விகள் கேட்கட்டும், பதில் கூறுகிறேன். இவர் நான் எத்தனை முறை போலீசாருக்குச் சாட்சிகள் கூறியிருக்கிறேன் என்று கேட்கிறார். போலீஸ், கிலீஸ் எல்லாம் எனக்கு என்ன தெரியும்? நான் உண்மையைத் தான் கூறுகிறேன். போலீஸ் கூப்பிட்டால் என்ன, வேறு யார் கூப்பிட்டால் என்ன? எனக்குத் தெரிந்த உண்மையைக் கூறுகிறேன். அவ்வளவுதான்."

கோர்ட்டார் ஏதும் கூறும் முன்பே, ஜோக்நாத்தின் வக்கீலுக்குக் கோபம் வந்துவிட்டது. முன்கோபத்துக்குப் பிரசித்தி பெற்றவர் அவர். அவருடைய கோபத்தைக் காட்டவேண்டி அவருடைய ஏஜன்ட்கள், புதிய கட்சிக்காரர்களைக் கோர்ட்டுக்கு அழைத்து வருவதுண்டு. கோபந்தான், அவருடைய அறிவு, புத்தி, சட்ட ஞானம், ஆயுதம், கவசம் ஆகிய எல்லாமாக

இருந்தது. அவருடைய பெயர்ப் பலகை, விளம்பரம், அம்மா, அப்பா, தோழன், கடவுள் யாவுமே அவருடைய கோபந்தான். கோபம் வந்தால் அதைக் கண்டு பிறர் நடுங்குவார்களோ என்னவோ, அவருடைய உடம்பு வெடவெடவென்று நடுங்கும். புத்திசாலியான மாஜிஸ்டிரேட்டாக இருந்தால், இருமுவது, தும்முவதுபோல்தான் இதுவும் என்று அவரது கோபத்தைப் பொருட்படுத்தாமல் சாதாரணமாய் எடுத்துக் கொண்டு, அதைப் பற்றிய அபிப்பிராயம் ஏதும் தெரிவிக்காமல் காரியத்தை நடத்திக்கொண்டு போவார்கள். யாரேனும் அப்படி அவரது கோபத்தைத் தவருக எடுத்துக் கொண்டாலும் வக்கீல் விடமாட்டார். பார் அசோசியேஷனில் இதைப் பற்றிப் புகார் செய்து ஒரு பிரசங்கம் செய்வதுடன் இதைக் கண்டித்து ஒரு தீர்மானமும் நிறைவேற்றிவிடுவார்.

இந்த மாஜிஸ்டிரேட் புத்திசாலி. அதனுல் அவருடைய கோபத்தைப் பொருட்படுத்தியதாகக் காட்டிக் கொள்ளவில்லை. வக்கீல் கர்ஜித்தார். "எனது நேரிடையான கேள்விக்குச் சரியான பதிலைச் சொல். சும்மா போக்குக் காட்டாதே! சர்க்கார் வழக்குகளில் சாட்சியாக இதுவரை, எத்தனை முறை சாட்சியம் சொல்லி யிருக்கிருய்?"

"இது என்னுடைய நேரிடையான கேள்வி, வக்கீல் சாகப், பதில் சொல்லும்! இதுவரை, கொள்ளை, கொலை வழக்கிலே நீர் எத்தனை முறை ஆஜராகி இருக்கிறீர்கள்?" என்ருன் பைஜ்நாத்.

தமது சீற்றத்தைக் கண்டு, மக்கள் பயப்படுவதையோ, முரண்டு பிடிப்பதையோ தான் வக்கீல் இதுவரை பார்த்திருக்கிருர் இப்படிச் சற்றும் அஞ்சாமல் அயோக்கியத்தனமாக எவனும் நடந்துகொண்டு அவர் பார்த்தது கிடையாது. இந்தத் திமிரான பதிலைக் கேட்டதும் அவரது கோபம் வாலையாட்டியது மட்டும் அல்ல, தளர்ந்து போய் நான்கு கால்களையும் பரப்பிக்கொண்டு படுத்துவிட்டது. "கனம் கோர்ட்டார் அவர்களே! சாட்சியின் போக்கைப் பார்த்துக்கொள்ளுங்கள். முறையற்ற தன்மையில் நடந்துகொள்கிருன். இதன் மூலம் கோர்ட்டை அவமதிக்கிருன்" என்ருர் வக்கீல்.

ஓடிய வக்கீலின் காலைத் தான் முறித்துவிட்டாற் போன்ற பாவத்துடன் போக்கிரித்தனமாகத் தலை அசைத்தவாறே பைஜ்நாத் கேட்டான்: "நீங்கள் கேட்டதில் தவறு இல்லையா வக்கீல் சாகப்? நான் கேட்டதும் கோர்ட்டாரிடம் முறையிடுகிறீர்களே?"

கோர்ட்டார் ஏதோ தஸ்தாவேஜை மும்முரமாய்ப் படிப்பதில் ஈடுபட்டிருந்ததால் இம்முறை வக்கீல் தமது சாமர்த்தியத்தி லேயே இந்தக் குழியிலிருந்து மேலே ஏறி வரவேண்டி நேர்ந் தது. பற்களைக் கடித்துக்கொண்டு, “அரை ரூபாய், கால் ரூபாய்க்குப் போலீசாருக்குச் சாட்சி சொல்ல வருகிறாய். இப் பொழுது என்னையே கேள்வி கேட்கிறாயா நீ?” என்றார் வக்கீல் முறைப்பாக.

பைஜ்நாத் அகம்பாவத்துடன் நாற்புறமும் ஒரு தரம் தன் பார்வையைச் சுழற்றியவாறே யாவருக்கும் கேட்கும்படியாக, “இது அவரவர் தொழில்” என்றான் சாவதானமாக.

மாஜிஸ்டிரேட் முக்கியமான தஸ்தாவேஜுகளில் கையெழுத் துப் போட்டாகிவிட்டது. நடந்தது ஏதும் அறியாத நிலை யில், “உங்களுக்குள் வார்த்தையாடுவது சரியல்ல, வக்கீல் சாகப்! குறுக்கு விசாரணையைத் தொடருங்கள்” என்றார்.

“கோர்ட்டார் அவர்களே! இந்தச் சாட்சியை விசாரணை செய் வது கடினமாக இருக்கிறது. ஒவ்வொரு கேள்விக்கும் பதில் கூறாமல் மடக்குகிறான். இதைக் குறித்துக் கொள்ளுங்கள்” என்றார் வக்கில்.

மாஜிஸ்டிரேட், சாட்சியை உற்றுப் பார்த்தார். சாட்சியான பைஜ்நாத் பப்ளிக் பிராசிக்யூடரைப் பார்த்தான். பப்ளிக் பிராசிக்யூடரோ, கனம் கோர்ட்டார் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தார்.

கனம் கோர்ட்டார் வக்கீலை நோக்கி, “மேலே தொடருங்கள்” என்றார்.

ஒற்றைக் காலில் நிற்கும் கொக்கு, தன் காலை மாற்றிக் கொள்வதுபோல் வக்கீல் தம் குறுக்கு விசாரணையில் மகத் துவம் நிறைந்த ஓர் அத்தியாயத்துக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டு மேலே தொடர்ந்தார்.

“நீ 379–ஆம் சட்டப் பிரிவின்படி நடைபெற்ற வழக்கில் குற்றத்தை ஊர்ஜிதப்படுத்தச் சாட்சி கூறியதுண்டா?”

“எனக்கு நினைவில்லை.”

“இந்தச் சாட்சியத்தை நீ இந்த மாதமா கொடுத்திருக்கிறாய்?”

பைஜ்நாத் சற்று யோசித்தான். பிறகு, “இந்த மாதத்தில் நான் ஒரு சாட்சியம் கூறியதுண்டு. நான் என் தோட்டத்தி லிருந்து வந்து கொண்டிருந்தபோது ஒருவன் கையில் பொட்ட லத்துடன் ஓடிக் கொண்டிருந்தான்.”

"நீ உனது சாட்சியத்தில் என்ன கூறிஞய் என்பதை இங்கே கூறவேண்டிய அவசியம் இல்லே. எனக்கு வேண்டியது இவ்வளவுதான். போன மாதமும் நீ சாட்சி கூறிஞயா இல்லேயா? பதில் சொல்."

"சாட்சியம் கூறினேன். ஆனுல் வழக்கின் பெயர் நினைவில்லே."

"சாட்சியம் கூறிஞய். ஆனுல் வழக்கின் பெயர் நினைவில்லே. அப்படித் தானே!"

இத்தனை நேரத்துக்குப் பிறகு கனம் கோர்ட்டாருக்கு உண்மையிலேயே கோபம் வந்து விட்டது.

"இது எப்படி உண்மையாகும்?" என்று வினவினுர்.

"நான் நாட்டுப்புறத்தான், சர்க்கார்! படித்தவன் அல்ல."

வக்கீல் கூறினுர். "கனம் கோர்ட்டார் அவர்களே! பூக்கதந்திரமான பதிலேயும் குறித்துக் கொள்ளுங்கள்."

"கனம் கோர்ட்டார் எதை எதைக் குறித்துக் கொள்வார், வக்கீல் ஐயா? தாங்களே குறித்துக் கொள்ளுங்கள். உங்கள் குமாஸ்தாவிடம் சொல்லுங்கள். அவர் எல்லாவற்றையும் குறித்துக் கொள்ளுவார்" என்ருன் பைஜ்நாத்.

கோர்ட்டார் இப்போது பைஜ்நாத்தை அதட்டினுர் என்ருல், மிகவும் கடுமையாக மிரட்டினுர். அந்த மிரட்டலில் பைஜ்நாத்தே உண்மையில் சற்று அரண்டுவிட்டான் என்ருல் பார்த்துக் கொள்ளுங்கள். அவன் முகம் வெளிறிவிட்டது. கனம் கோர்ட்டார் அவர்களின் முகங்கூடச் சற்றுச் சிவந்துவிட்டது. ஆனுல் அந்த அதட்டல் இரண்டு, மூன்று நிமிஷம் தொடர்ந்ததும் அதற்குள் பைஜ்நாத் தன்னைச் சமாளித்துக் கொண்டு விட்டான். அவனுக்குத் தன் குரு, பண்டிதர் ராதேலாலின் நினைவு வந்து விட்டது. "மகனே! சாட்சியம் கூறும்போது சில சமயம், கோர்ட்டாரும், வக்கீலும் மிரட்டி, அதட்டுவார்கள். இதைக் கண்டு பயப்பட்டுவிடாதே. பாவம், அவர்கள் நாளெல்லாம் மூளைக்கு வேலே கொடுத்துக் கொண்டிருக்கிருர்கள் அல்லவா? அதனுல் சற்று எரிச்சல் அடைந்திருப்பாாகள். பெரும்பாலும் அவர்களுக்கு அஜீர்ணம், ஜீரணக் கோளாறு, மூல ரோகம், இப்படி ஏதாவது நோய் இருக்கும். இதனுல்தான் சிடுசிடுப்பார்கள். அவர்களுடைய அதட்டல், மிரட்டல், உருட்டல்களைக் கண்டு அஞ்சிவிடாதே. உன்னை அல்ல, தங்களுடைய திறமையின்மையை அதட்டுகிருர்கள் என்பதை நினைத்துக்

கொள். இது மட்டும் அல்ல. இவர்களெல்லாம் பெரிய மனிதர்கள், படித்தவர்கள் என்பதும் நினைவிருக்கட்டும். இவர்களால் உன் விஷயத்தைப் புரிந்து கொள்ளவே முடியாது. இதனால் அவர்கள் கோபித்துக்கொண்டாலும், நீ குழம்பிவிடக் கூடாது. இப்பொழுது எந்த உபாயத்தைக் கையாண்டால் இவர்களை விழ்த்தலாம் என்பதைப் பற்றிச் சிந்திக்கவேண்டும். தெரிந்ததா?'' என்று அவர் அறிவுரைகள் வழங்கி இருந்தார்.

கனம் கோர்ட்டார், ''கேள்விகளுக்கு, உண்டு, இல்லை'' எனப் பதில் கூறுமாறு பணித்திருந்தார். இப்பொழுது குறுக்கு விசாரணை என்ற பீரங்கி வண்டி, மேடு பள்ளத்திலிருந்து சமதளத்துக்கு இறங்கி நகர ஆரம்பித்தது.

"இன்றிலிருந்து ஆறு மாதங்களுக்குமுன் சர்க்கார், அதாவது பிரேசருடைய வழக்கில் நீ சாட்சியம் கூறினையா?''

"இல்லை." (இந்தப் பதிலில் உண்மை இருந்தது. ஏனென்றால் பைஜ்நாத் இந்தச் சாட்சியத்தை ஏழு மாதங்களுக்கு முன்னர் கூறியிருந்தான்.)

"ஒரு வருடத்துக்கு முன் சுன்னூவின் வழக்கில் சாட்சி கூறினையா?''

"இல்லை." (இந்தப் பதிலும் உண்மைதான். சுன்னூவின் வழக்கு 14 மாதங்களுக்கு முன்பு நடந்தது.)

"................."

''இல்லை."

"................."

"இல்லை."

"................."

"தெரியாது."

"................."

"ஆம்."

"ஆமாம்."

''இதைப் போல் நீ இதுவரை பல வழக்குகளில் சர்க்கார் சாட்சியாக இருந்திருக்கிறாய்."

"தாங்கள் இரண்டைத்தான் கூறியிருக்கிறீர்கள்."

"இத்தனை வழக்குகளில் நீ அடிக்கடி போலீஸ் தரப்புச் சாட்சியமாக, அவர்களுக்குக் கிடைத்திருக்கிறாய். இதற்கு முக்கியமான காரணம் ஏதும் உண்டா?''

பைஜ்நாத், கனம் கோர்ட்டாரை நோக்கி, தியாகச் செம்மல் போல் உணர்ச்சி வேகத்துடன், "காரணம், நான் சூரத்தன முள்ள மனிதன் என்பதுதான். அயோக்கியர்களுக்கு எதிராகச் சாட்சியம் கூற எவருக்கும் துணிவிருப்பதில்லை. நான் பயம் அற்றவன். ரௌடித்தனத்துக்கு நான் எதிரி. இதனால் நான் எதைப் பார்க்கிறேனோ அதை ஊரறியச் சொல்லுவதற்கு நான் தயங்குவதில்லை" என்றான்.

வக்கில் அவனை இடைமறிக்க முயற்சி செய்தார். மாஜிஸ்டிரேட், சாட்சிக் கூண்டிலிருந்து இறங்கிவிடும்படி அவனுக்கு ஜாடை காட்டினார். ஆனாலும் பைஜ்நாத்தின் பிரசங்கம் ஓய வில்லை. "எனது வட்டாரத்திலுள்ள குண்டர்களை விரட்டியடிப்ப தென்று நான் சபதம் எடுத்துள்ளேன். இதை முடித்தபின் தான் ஓய்வெடுப்பேன்.என் வார்த்தையில் நான் உறுதியாக நிற்பவன். இதற்காக என் உயிரே போனாலும் சரி, எனக்குக் கவலையில்லை."

அடுத்த சாட்சி கூண்டில் ஏறினான்.

"உன் பெயர் என்ன?"

"சின்ன வஸ்தாது."

பப்ளிக் பிராசிக்யூடர் இதைத் திருத்தினார். பேஷ்காரிடம், "சோட்டேலால் என்று எழுதிக் கொள்ளுங்கள்" என்று கூறினார்.

சின்ன வஸ்தாது அவரைப் பார்த்து முறைத்த விதம், தன்னை யாரோ உண்மையிலேயே சோட்டாவாக, அதாவது சின்னவனாக்கி அவமதித்து விட்டமாதிரி இருந்தது. கோபத்தில் அவன் எச்சிலை விழுங்கிக்கொண்டான்.

அடுத்த கேள்வி: "உன் தந்தையின் பெயர் என்ன?"

"குசேஹர்."

பப்ளிக் பிராசிக்யூடர் மறுபடியும் திருத்தினார்.

"குசேஹர் பிரசாத்."

இம்முறை தன் தந்தையை யாரோ திட்டிவிட்டது போல் முறைத்தான் சின்ன வஸ்தாது.

"ஜாதி?"

"பிராம்மணன்"

"வசிப்பது?"

"நாங்கள் கஞ்சாவாசிகள்."

"அது சரி. உன் கிராமத்தின் பெயர் என்ன?"

"கஞ்ச்."

"எந்தக் கஞ்ச்?"

சின்ன வஸ்தாது அலட்சியமாக, "ஏழு, எட்டு கஞ்ச் இருக்கிறதா என்ன?" என்று வினவியவன், சற்றுப் பொறுத்து, "சிவபால்கஞ்ச்" என்ருன்.

"சொல்லு! கடவுள் சாட்சியாக நான் சொல்லுவதெல்லாம் சத்தியம்."

"சொல்லியாகி விட்டது."

"சொல்லவில்லையே. வாயால் சொல்லு: கடவுள் சாட்சியாக நான் சொல்வதெல்லாம் சத்தியம்."

"வாயால் சொல்லியாகிவிட்டது."

கோர்ட்டுச் சேவகன் கனம் கோர்ட்டாரை நோக்கினுன். சம்பாஷணைக்கு ஒரு முடிவு ஏற்பட்டுவிட்டது போல் நிசப்தம் ஏற்பட்டு விட்டது. மாஜிஸ்டிரேட், சின்னவஸ்தாதை உற்றுப் பார்த்தார். தூக்கி நிற்கும் தாடை எலும்புகள், காளை மாதிரி பிடரி. கயாதீன் சொன்னதுபோல் துதிக்கை இல்லாத யானை. மாஜிஸ்டிரேட்டோ வெறும் அறிவு ஜீவி. உடனே சேவகனை நோக்கி, "சாட்சியை வெளியே போய் வாயைச் சுத்தம் செய்து கொண்டு வரச் சொல்" என்று உத்தரவிட்டார்.

"வெளியே போய் வாயைச் சுத்தம் செய்து கொண்டு வா."

சின்ன வஸ்தாது, அங்க வஸ்திரத்தை எடுத்து, முகம் வாய் எல்லாவற்றையும் நன்ருகத் துடைத்துக் கொண்டான். பிறகு கப்பலின் ரேலிங்கில் சாய்ந்து கொண்டு, கடலில் வாழும் நீர்ப் பிராணிகளை வேடிக்கை பார்ப்பதுபோல் சாட்சிக் கூண்டிலே சாய்ந்து கொண்டு சுற்றும் முற்றும் பார்க்கலானுன்.

மாஜிஸ்டிரேட் மீண்டும் கூறினுர்.

"சாட்சியை வாயைச் சுத்தம் செய்துகொண்டு வரச் சொல்."

பப்ளிக் பிராசிக்யூடர் சின்ன வஸ்தாதை நோக்கி, "போய் வாயிலிருக்கும் வெற்றிலையைத் துப்பிவிட்டு, வாயை அலம்பிக் கொண்டு வா" என்ருர்.

சுய நம்பிக்கையுடன் சின்ன வஸ்தாது, உண்மையாக மிகவும் ரசித்து மெதுவாக வெற்றிலையைக் குதப்பிக்கொண்டு இருந்தான். 'போய் உன் சுய நம்பிக்கையைத் துப்பிவிட்டு வா' என்று சொல்வது போல் அவனுக்குத் தோன்றியிருக்க வேண்டும். காதில் விழாதவன் போல், மெதுவாக வெற்றிலையை விழுங்கிவிட்டு, மீண்டும் அங்கவஸ்திரத்தினுல் வாயைத் துடைத்துக் கொண்டான்.

மாஜிஸ்டிரேட் சேவகனை நோக்கி உத்தரவிட்டார். "சாட்சிக்குப் பிரமாணம் செய்து வை."

அவர்களிடையே ஏற்பட்டுவிட்ட இந்த உடன்பாட்டைச் சற்றும் ரசிக்காதவனாய்ச் சின்ன வஸ்தாதை வெறித்துப் பார்த்தவாறே சேவகன் கூறினான்.

"சொல்லு. கடவுளின் சாட்சியாக நான் சொல்வதெல்லாம் சத்தியம்."

"நான் சொல்வதெல்லாம் சத்தியம்."

"கடவுளின் சாட்சியாக."

"கடவுளின் சாட்சியாக!" சின்ன வஸ்தாது இங்கும் அங்கும் பார்த்தவாறே அநாயாசமாகக் கூறினான்.

பப்ளிக் பிராசிக்யூடர் முதலில் ஜோக்நாத்தின் வீட்டைச் சோதனை போட்டது சம்பந்தமாக அவனைச் சில கேள்விகள் கேட்டார். இன்ஸ்பெக்டர் ஜோக்நாத்துடன் அவனுடைய வீட்டில் நுழைந்தது வரையிலான கேள்விகளுக்குப் பதில் சொன்னான் அவன்.

தொடர்ந்து இன்ஸ்பெக்டர் வினவினார்.

"ஜோக்நாத்தின் வீடு சோதனை இடப்பட்டதா?"

"ஆம்."

"என்ன கிடைத்தது?"

"ஒன்றுமில்லை."

பப்ளிக் பிராசிக்யூடரின் புருவங்கள் சுருங்கின. சற்று அழுத்தமாகவே கேட்டார். "சோதனை செய்ததில் என்ன கிடைத்தது? பதில் சொல்."

"என்ன கிடைக்கும்? மணிதான்."

ஜோக்நாத்தும் அவனுடைய வக்கீல் இருவரும் வாய்க்குள் சிரித்துக் கொண்டனர். பின்னாலிருந்து சனிஸ்வரன் சொன்னான். "சபாஷ். அடித்துத் தள்ளு, மகனே!"

"யாரது பேசியது? இது முறையற்றது" என்றார் கனம் கோர்ட்டார் கம்பீரத்துடன். இதற்குள் சனிஸ்வரன் கோர்ட்டுக்கு வெளியே நடந்துவிட்டான்.

"சோதனையிட்டதில் மூன்று நகைகள் கிடைத்தன. அவை உன் முன்னே வைக்கப்பட்டிருக்கின்றன" என்றார் பிராஸிக்யூடர்.

ஜோக்நாத்தின் வக்கீல் பாய்ந்து கொண்டு வந்தார். கோர்ட்டாரை நோக்கி, "கனம் கோர்ட்டார் அவர்களே! இது குறுக்கு விசாரணை" என்றார்.

"கனம் கோர்ட்டார் அவர்களே! சாட்சி எதிராக மாறிவிட்டான். நான் இவனைக் குறுக்கு விசாரணை செய்ய அநுமதி கேட்கிறேன்" என்றார் பப்ளிக் பிராசிக்யூடர்.

"அநுமதிக்கிறேன்" என்றார் மாஜிஸ்ட்ரேட் கம்பீரமாக.

இதை ஜோக்நாத்தின் வக்கீல் ஆட்சேபித்தார். "கனம் கோர்ட்டார் அவர்களே! இந்தச் சாட்சி எதிரியாக மாறிவிட்டான் என்பதை இவர் எழுத்து மூலம் எழுதிக் கொடுக்க வேண்டும்."

பப்ளிக் பிராசிக்யூடர் தம் ஃபைலிலிருந்து ஒரு தாளை எடுத்து நீட்டினார். அது முன்பே எழுதி வைக்கப்பட்டிருந்தது போலிருந்தது. அந்த விண்ணப்பம் கோர்ட்டின் முன்னே வைக்கப்பட்டது.

ஜோக்நாத்தின் வக்கீல் மீண்டும் ஆட்சேபத்தைக் கிளப்பினார். "கோர்ட்டார் அவர்களே! இந்த மனு முன்பே எழுதப் பட்டிருக்கிறது."

"இதனால் எவ்வித மாறுபாடும் ஏற்பட இடமில்லை" என்றார் கனம் கோர்ட்டார்.

இருந்தாலும் எதிர் தரப்பில் இதற்கு விளக்கம் கூறவேண்டியது அவசியமாக இருந்தது. பப்ளிக் பிராசிக்யூடர் கூறினார்: "கோர்ட்டார் அவர்களே! இது தினசரி நடக்கும் வியாபாரம் தான். கோர்ட்டின் தந்திரோபாயங்கள் இவை. நாங்கள் எந்த நிலைமைக்கும் தயாராகவே இங்கு வருகிறோம்."

"நல்லது. குறுக்கு விசாரணையைத் தொடரலாம்." பப்ளிக் பிராசிக்யூடர் சின்ன வஸ்தாதுவின் பக்கம் திரும்பி, தன் கேள்வியை மீண்டும் கேட்டார். "உன் முன்னே வைக்கப்பட்டிருக்கும் இம்மூன்று நகைகளும், ஜோக்நாத்தின் வீட்டைச் சோதனையிட்டபோது கைப்பற்றியது தானே?"

அர்த்தமில்லாமல் சளசளவென்று தான் பேச விரும்பவில்லை என்பது போல் சின்ன வஸ்தாது கோர்ட்டாரை நோக்கி, "நான் கொடுக்கவேண்டிய வாக்குமூலத்தைக் கொடுத்தாகி விட்டது. சோதனை இட்டதில் எதுவும் கிட்டவில்லை; அவ்வளவு தான்."

பப்ளிக் பிராசிக்யூடர் தம் பையிலிருந்து ஒரு தாளை எடுத்து நீட்டி, "எது எது கைப்பற்றப்பட்டது என்று எழுதியுள்ள இந்தப் பத்திரம் உன் முன்னால் தானே எழுதப்பட்டது?" என்று வினவினார்..

"என் முன்னால் வசவும் திட்டுகளுமே பரிமாறப்பட்டன. எழுத்துமூலம் எதையும் செய்ய அப்பொழுது சந்தர்ப்பம் இருக்கவில்லை."

"இந்தப் பத்திரத்தில் உன் கையெழுத்து இருக்கிறது. நன்றாகப் பார்த்துக் கொள்."

சின்ன வஸ்தாது கோர்ட்டாரை நோக்கி, "சர்க்கார், என் வாக்குமூலம் முடிந்துவிட்டது. இவர் அதே கேள்வியை ஏன் மீண்டும் மீண்டும் நச்சரிக்கிறார்?" என்றான்.

இம்முறை, கோர்ட்டார் அவனுக்குப் பரிவு காட்டவில்லை. கடுமையான குரலில் எச்சரிப்பதுபோல் கூறினார். "பத்திரத்தைப் பார்த்துப் பதில் சொல். பொய்யான சாட்சி கூறினால் ஜெயில் வாசந்தான் கிடைக்கும்."

சின்ன வஸ்தாது இதனால் சற்றும் பாதிக்கப்படவில்லை. மார்பை நிமிர்த்திக்கொண்டு நின்றபடி கூறினான். "சர்க்கார், ஜெயில் வாசந்தான் இருக்கவே இருக்கிறது. கோர்ட்டுக்குள் நுழையும்போதே, ஒருகாலை ஜெயிலுக்குள்ளேயும், ஒருகாலை வெளியிலேயும் வைத்துக் கொண்டு தானே வருகிறோம். ஆனால் பத்திரத்தை நான் பார்ப்பதில் என்ன இருக்கிறது சர்க்கார்! படிப்பு, எழுத்து என்பது என்னைப் பொறுத்த வரையில் பாபமாகிவிட்டதே."

பப்ளிக் பிராசிக்யூடர் குரலை உயர்த்தினார். "அப்படி என்றால் நீ எப்படிக் கையெழுத்துப் போடுகிறாய்? இந்தக் கையெழுத்தை நீ போடவில்லையா?"

இவ்வளவு நேரத்துக்குப் பிறகு ஜோக்நாத்தின் வக்கீல் வாயைத் திறந்தார். ஏதோ ஒரு கன்றுக்குட்டியைத் தடவிக் கொடுத்துக் கொஞ்சுவதுபோல் குழைந்தார். "மெதுவாக ஒவ்வொரு கேள்வியாகக் கேளுங்கள். சாட்சி எங்கும் ஓடிப் போய்விடப் போவதில்லையே."

பப்ளிக் பிராசிக்யூடர் இதைச் சற்றும் பொருட்படுத்தாதவராய், "அப்படியென்றால் இதில் எப்படிக் கையெழுத்துப் போட்டாய்?" என்று கேட்டார்.

"யார் கையெழுத்துப் போட்டது?" என்றான் சின்ன வஸ்தாது. "எங்களுடைய ஏழு தலைமுறையில் யாராவது கையெழுத்துப் போட்டிருந்தால் அல்லவா நான் போட? போய்ப் பார்த்துக் கொள்ளுங்கள். வீட்டிலே நூறு பத்திரம் வைத்திருக்கிறேன். ஒவ்வொன்றிலும் கட்டைவிரல் அடையாளந்தான் வைத்திருக்

கிறேன்.'' சின்ன வஸ்தாது இப்படிக் கூறி முடித்ததும் பெருமிதத்துடன் தனது விழிகளை நாற்புறமும் சுழற்றினன்.

பப்ளிக் பிராசிக்யூடர் மறுபடியும் கேட்டார். ''இந்தக் காகிதத்தில் கையெழுத்துப் போட்டது நீ தானே?''

''கத்தவேண்டுமென்றுல் கௌதாரி மாதிரி கத்திக்கொண்டே இருங்கள். யார் வேண்டாம் என்றூர்கள்?''

கோர்ட்டார் இடைமறித்தார். ''மரியாதையுடன் பேசு.''

சின்ன வஸ்தாதுக்கு வெறி மூண்டுவிட்டது. ''அவரவர்களுக்கும் மரியாதை இருக்கிறது, சர்க்கார்! இவர் மிரட்டலுக்கு அஞ்சி நான் ஏன் தவருகச் சாட்சியம் கூறவேண்டும்?'' என்றுன் உரக்க.

பப்ளிக் பிராசிக்யூடர் தம் காகிதங்களை மடித்து எடுத்துக் கொண்டவாறே, ''இனி நான் கேட்கவேண்டியது எதுவுமில்லை'' என்றூர்.

சின்ன வஸ்தாது நழுவிய லுங்கியைப் பிடித்துக்கொண்டே நழுவப் பார்த்தான். இதற்குள் ஜோக்நாத்தின் வக்கீல் கூறினர். ''கனம் கோர்ட்டார் அவர்களே! நான் இவரைச் சில கேள்விகள் கேட்க விரும்புகிறேன்.''

கோர்ட்டார் ஆட்சேபிக்கவில்லை. வக்கில் கேட்டார். ''கயாதீனின் பெண் பேலாவை உனக்குத் தெரியுமா?''

''யாருக்குத் தெரியாது?''

''அப்படி, இப்படிப் பேசாதே. உன்னைப்பற்றி மட்டும் சொல். உனக்கு அவளைத் தெரியுமா? இல்லையா?''

''ஏன் தெரியாது?''

''அந்தப் பெண் எப்படிப்பட்டவள்?''

''கெட்ட நடத்தை உள்ளவள்.''

கனம் கோர்ட்டார் இடைமறித்தார். ''இந்தக் கேள்வி, அர்த்தமற்றது. இதற்கும் வழக்குக்கும் சம்பந்தம் இல்லை.''

''ஏன் இல்லை சர்க்கார்? விஷயம் இதோ தெளிவாகிவிடும்'' என்று விரல்களைச் சொடுக்கினர் வக்கீல்.

''பேலா கெட்ட நடத்தையுள்ளவள் என்று நீ சொல்லுகிருயா?''

''கண்ணுல் பார்த்திருக்கிறேன்.''

''என்ன பார்த்தாய்?''

''ஜோக்நாத்துடன் தகாத உறவு கொண்டிருந்தாள். அதனால் தான் கயாதீன் ஜோக்நாத்தை இவ்வழக்கில் சம்பந்தப்படுத்தி யிருக்கிறார்.''

இதன் பின் குறுக்கு விசாரணை அதே பழைய பாணிக்கு இறங்கிவிட்டது. கோர்ட்டில் ஆயிரம் முறை நிரூபிக்கப்பட்டுள்ள அதே பழைய கதைதான். அதாவது உலகத்தில் திருடனென்று யாரும் இல்லை. திருடனாகக் கருதப்படுகிறவனுக்கு அந்த வீட்டின் எஜமானி, சகோதரி, பெண் என்று யாருடனாவது தகாத உறவு இருக்கும். இரவு தனிமையில் உறவாட அவள் தன் காதலனை அழைத்திருப்பாள்; வீட்டு எஜமானர் அவனைத் தன் நண்பனாக, மாப்பிள்ளையாக, தங்கையின் கணவனாகக் கருதாமல் திருடன் என்று பிடித்துக் கொடுத்திருப்பார். அதன் பலனாக இப்படி...... இன்னும் வழக்கு இதே பாணியில் தான் தொடர்ந்தது.

அந்த இன்ஸ்பெக்டர் இப்பொழுது சிவபால் கஞ்சில் இல்லை. கட்டில்கள், கறவைப் பசு முதலியவற்றுடனும், கான்வென்டில் படிக்கும் தம் பெண்ணுடனும் நகரத்தில் ஏதோ ஒரு சந்தில் மிகுந்த சிரமத்துடன் ஒரு சிறிய வீட்டைத் தேடிப் பிடித்திருந்தார். பிரத்தியேகமான ஓர் அலுவல் அவருக்குத் தரப்பட்டிருந்ததால் அவர் ஒரு சாதாரணப் பிரஜையின் நிலையில் வாழ வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருந்தது. குறிப்பாகச் சர்க்கார் ஊழியர்களுக்கு, இப்படிச் சாதாரண பிரஜையாக வாழ்வதென்பது வருந்துவதற்குரிய ஒரு காரியம் அல்லவா? இதனால் அவரைப் பார்க்கும்போது வருத்தமாக இருந்தது.

ஜோக்நாத்தின் மீது சாற்றப்பட்ட திருட்டுக் குற்றத்தின் மீது அவர் சோதனை இட்டதால் அவர் கோர்ட்டுக்கு அழைக்கப்பட்டிருந்தார் இன்று அவர் மீண்டும் கஞ்ச்வாசிகளுடன் தொடர்பு கொள்ளும்படி நேரிட்டிருந்தது. சின்ன வஸ்தாதுவின் சாட்சியத்தைக் கேட்டதுமே தம்மையுமறியாமல், ''சீ சீ!'' என்றவர், கோர்ட்டார் அதைக் கவனிக்கும் முன்பே கயாதீனின் கரத்தைப் பற்றி, அவரை வெளியே அழைத்துக் கொண்டு வந்து வட்டார். சற்று நேரம் இருவரும் மௌனமாக நின்றனர். முடிவில் இன்ஸ்பெக்டர், ''ஓ......இந்தக் கஞ்ச் மனிதர்கள்? சீ, அயோக்கியத்தனத்துக்கும் ஓர் எல்லை இருக்கிறது. அப்படிப்பட்ட பெண்ணைப் பற்றி இப்படி அபவாதம் பேசும் நாக்கு அறுந்து விழவில்லையே?'' என்றார் ஆற்றாமையுடன்.

தரையை வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்ற கயாதீனைப் பார்த்தால் இரண்டு செங்கல்களுக்கிடையே கிடந்த குண்டூசியைக் குனிந்து எடுக்கலாமா வேண்டாமா என்று யோசிப்பது போல் இருந்தது.

வெறுப்பு நிறைந்த குரலில் இன்ஸ்பெக்டர் தொடர்ந்தார். "யார் யாரை வேண்டுமானாலும் எது வேண்டுமானாலும் சொல்லலாம். இந்த மனிதர்களை ஏனென்று கேட்பாரே கிடையாது."

வழக்கமான தம் தளர்ந்த சில்லிட்ட குரலில் கயாதீன் கூறினார். "இன்ஸ்பெக்டர், இதைத் தவிர வேறு என்ன நடந்திருக்க முடியும்? நீங்கள் ஜோக்நாத்தைக் கைது செய்த அன்றே, இனி என் குடும்பத்தில் யாருடைய மானமும் தப்ப முடியாது என்றுதான் நான் நினைத்தேன்."

"இதற்காக நான் பெரிதும் வருந்துகிறேன்."

"வருந்துவதற்கு எதுவும் இல்லை. உங்கள் மீது என்ன குற்றம்? யாரைத் திருடன் என்று நிரூபித்து ஜெயிலுக்கு அனுப்ப விரும்புகிறீர்களோ, அவன், தான் தப்பிக்க எதை வேண்டுமானாலும் செய்யத் துணியாமல் இருக்கமாட்டானே?"

"எனக்கு உடம்பெல்லாம் பற்றி எரிகிறது."

"எனக்காக வருத்தப்படாதீர்கள், இன்ஸ்பெக்டர் சாகப்! இதுதான் இந்த நாட்டின் நடப்பு. கோர்ட்டுப் படியேறினால் எல்லாவற்றுக்கும் தயாராக இருக்கவேண்டியதுதான். இங்கு வர நேர்ந்தால், அது பெரும் துர்பாக்கியம் என்று நினைத்துக் கொள்ளவேண்டியதுதான். உங்கள் உடம்பெல்லாம் பற்றி எரிவதால் என்ன பயன்? உங்களால் என்ன செய்யமுடியும், இன்ஸ்பெக்டர் சாகப்?"

ஜோக்நாத்தின் வக்கீல் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல் வெளியே வந்து இன்னொரு கோர்ட்டை நோக்கி ஓடினார். பின்னாலேயே ஓடி வந்த கட்சிக்காரர்களை நோக்கி, "அவசரப் படாதீர்கள். ஜோக்நாத் விடுதலையாகட்டும். பிறகு ஒவ்வொருவரையும் தனித் தனியாகக் கவனிக்கிறேன். ஆமாம், போலீசாரையும் கூடத்தான்" என்றார்.

திடுக்கிட்ட இன்ஸ்பெக்டர் திரும்பிப் பார்த்தார். ஆனால் அவர் பார்ப்பதற்கு என்ன பாக்கி இருக்கிறது?

# அத்தியாயம் 21

நீற்சமயம் பிரின்ஸ்பால், வைததியருடன் கல்லூரிப் பிரச்னேக் குறித்துக் கலந்தாலோசித்துக் கொண்டிருந்தார். அதாவது, கன்ஞ மாஸ்டரைத் திட்டிக்கொண் டிருந்தார். இதற்கு முதல் நாள், 107–ஆம் பிரிவின்படி நடைபெற்ற வழக்குக்காக அவர் கோர்ட்டுக்குச் சென்றிருந்தார் அல்லவா? அப்போது வழக்கில் புதிய திருப்பம் ஏற்பட்டிருப்பது அவருக்குப் புலனுகியது. கன்ஞ மாஸ்டரின் வக்கில் தம் வாதத்தில் கூறியதாவது: "கனம் கோர்ட்டார் அவர்களே! இருப்பவர்கள், இல்லாதவர் கள் சம்பந்தப்பட்ட வழக்காகும் இது. ஒருபுறம் இருப்பவர், கல்லூரியின் மானேஜர், வைத்திய மகராஜ் என்று அழைக்கப் படுகிறவர். அவர் வைத்தியராக இருப்பதைவிட மகாராஜா வாக விளங்குவதே அதிகம். அவருக்குப் பக்கபலமாகக் குண்டர்களும், ரௌடிகளும் நிறையப் பேர் நிற்கின்றனர். அவர்களில் ஒரு சிலர்தான் இந்தக் கல்லூரியின் பிரின்ஸ் பாலும், மற்றும் ஏழெட்டு ஆசிரியர்களும் ஆவார்கள். இவர் கள் ஒன்று அவருக்கு உறவினர்கள் அல்லது உறவினர்களுக்கு உறவினர்கள். இவர்கள் யாவருமே நல்ல நிலைமையில்தான் இருக்கிருர்கள். அப்படி ஏதேனும் குறைவு ஏற்பட்டால் கலலூரி நிதி இவர்களது பற்ருக்குறையைத் தீர்த்துவிடுகிறது. கனம் கோர்ட்டார் அவர்களே! இன்ஞெருபுறம் இருப்பவர்கள் கன்ஞ மாஸ்டரும் மற்றும் ஏழெட்டு ஆசிரியர்களுந்தான். இவர்கள் ஏழைகள். மேலும் அவர்களுடைய சதித் திட்டங்கள், இவர்கள் மேலே உயராதபடி என்றுமே அமுக்கிவைத்துக் கொண்டிருக்கின்றன. இவர்களிடையே யுள்ள போராட்டத்தின் முக்கியக் காரணம் இதுதான்."

கனம் கோர்ட்டார் ஆங்கிலத்தில் ,கூறிஞர்: "அப்படியாஞல் இது சோற்றுக்கும், மீனுக்கும் இடையேயுள்ள சண்டையைப் பற்றிய பிரச்னே."

வக்கீல் தம் கூற்றை மறுத்து, பின் அதைச் சீராக்கித் திருத்தி, வளர்த்து, மீண்டும் அதே கருத்தை வலியுறுத்தி,

அதே பிரச்னையைக் கிளப்பிய பின் அதிலிருந்து பின்வாங்கிய வாறு கூறினார்: "கனம் கோர்ட்டார் அவர்களே! நான் இந்த அர்த்தத்தில் கூறவில்லை. நான் கூற வந்தது, இந்தச் சச்சரவு கொள்கைகளைப் பற்றியது என்பதுதான்."

"அப்படித் தாங்கள் கூறவில்லையே?"

"கூறுவதாக இருந்தேன். கனம் கோர்ட்டார் அவர்களே! மக்களின் பணம் அவ்வாறு விரயமாக்கப்படுவதைக் கன்னு மாஸ்டராலும், மற்றும் அவருடைய கொள்கையைச் சார்ந் தவர்களாலும் சகித்துக்கொள்ள இயலவில்லை. கனம் கோர்ட் டார் அவர்களே! இவர்கள் எல்லாம் இளைஞர்கள். அயோக் கியத்தனம், மோசடி ஆகியவற்றுடன் உடன்பாடு கொள்வ தென்பது இவர்களுக்கு இன்னும் பழக்கமாகவில்லை."

கனம் கோர்ட்டார் முறுவலுடன் கூறினார். "அப்படியென் றால் இவர்கள் வழக்கு, ஜெயில் முதலியவற்றைக் கண்டு அஞ்சக்கூடாது."

வக்கீல் இந்த யோசனையைப் பொருட்படுத்தாமல் தொடர்ந் தார். "இதனால்தான் இவர்கள் கல்லூரி சம்பந்தப்பட்ட நிர்வாக விஷயங்களில் நடக்கும் தில்லுமுல்லுகளைப் பற்றிச் சட்ட ரீதி யாகத் தங்கள் எதிர்ப்பு உணர்ச்சியைத் தெரிவிக்கின்றனர். நீதிபதி அவர்களே! கொஞ்ச நாட்களுக்கு முன்பு கல்லூரி மானேஜர் தேர்தல் நடைபெற்றது. பிஸ்டல் பலத்துடன் வைத்திய மகராஜ் மறுபடியும் மானேஜராகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார். இதைப் பற்றிப் புகார் செய்யப்பட்டது. கன்னு முதலியோர் தேர்தலை ஆசேபித்தது மட்டுமன்றி டெபுடி டைரெக் டரையே நேரில் சந்தித்தனர். விஷயம் முழுவதும் மீண்டும் புனர்விசாரணை செய்யப்படவிருக்கிறது. இதேபோல் இந்த வைத்திய மகராஜ், எந்தக் கோவாபரேடிவ் யூனியனின் மானேஜிங் டைரக்டராக இருக்கிறாரோ, அதில் கையாடல் நடந்திருக்கிறது. அந்த விஷயம் ஆறு மாதம் வெளியே வராமல் அடக்கிவைக்கப்பட்டிருந்தது. கன்னுவும் அவருடைய சகாக் களும், கூட்டுறவுச் சங்கத் தலைவரைச் சந்தித்து, விசாரணை யைத் தொடங்கி வைத்திருக்கின்றனர். தாங்கள் அவசிய மென்று கருதினால், இவ்விரு அதிகாரிகளையும் சாட்சிகளாகக் கோர்ட்டார் முன்னிலையில் ஆஜர் செய்கிறேன்.

"கோர்ட்டார் அவர்களே! இந்த விசாரணைகளுக் கிடையே, கன்னுவையும், அவரது தோழர்களையும் மடக்கிப் பலவந்த

மாக அவர்களது வாயை அடக்கவே, அவர்கள்மீது இந்த வழக்குத் தொடரப்பட்டுள்ளது என்பதைத் தங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். இந்த வழக்கே ஒரு மோசடி, புரட்டு.''

பிரின்ஸ்பாலின் வக்கீல் கோர்ட்டில் என்ன என்ன சொன்னார் என்பது அத்தனை முக்கியம் இல்லை. ஆனால் அன்றைய தினம் கிராமத்துக்குத் திரும்பி வந்ததுமே, பிரின்ஸ்பால் வைத்தியரைச் சந்தித்து, கல்லூரித் தேர்தல், கோவாபரேடிவ் யூனியனின் கையாடல் பற்றிப் புனர்விசாரணை நடக்கப் போவதாக அறிவித்தார்.

வைத்தியரின் முகத்தில் லேசான சுருக்கங்கூட விழவில்லை. முற்றும் தர்மத்தின் பக்கம் சாய்ந்தவராய், "பகவானின் இஷ்டம்" என்று கூறி மௌனமாகிவிட்டார்.

ஆனால் பிரின்ஸ்பால் இப்போது ஒரு தீர்மானமான திட்டத்துடன் வந்திருந்தார். சற்றுப் பதற்றமான நிலையில் இருந்ததால் தம் மொழியான அவதியில் படபடத்தார்.

"மகராஜ், இந்தக் கன்னுவன்னு பசங்க, கையைக் காலை ஒடித்து எங்கேனும் வீசி எறிந்துவிடவேண்டும். இல்லாவிட்டால் இந்தப் பசங்க காதைப் பிடித்து முறுக்கிக் கல்லூரியை விட்டு வெளியேற்றவேண்டும். நாலு உதைகொடுத்துப் பயல்களை........''

வைத்தியரிடம் இது எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. "எனக்கு இம்சை வழி பிடிப்பதில்லை" என்றவர் பெரியதாக ஓர் ஏப்பம் விட்டார். தொடர்ந்து, 'பகவானின் விருப்பம்' என்று கூறுவார் என்று பிரின்ஸ்பால் எதிர்பார்த்தார். ஆனால் அவர் ஒன்றும் கூறவில்லை. ஒருகால், அகிம்சை, பிஸ்டலைக் காட்டியது, கையாடல், நாட்டின் நன்மை போன்ற பிரச்னைகள் அவரைக் குழப்பிவிட்டனவோ என்னவோ?

சாராயக் கடையிலிருந்து கிட்டத்தட்ட நூறுகஜ தூரத்தில் ஓர் அரசமரம் இருந்தது. அந்த அரசமரத்தில் ஒரு பூதமும் வாழ்ந்து வந்தது. மிகவும் பழமையான, வயதான பூதம் அது. நாட்டுக்குச் சுதந்தரம் வந்து, ஜமீந்தாரி முறை ஒழிந்து, பஞ்சாயத்து ராஜ்யம் நிலை பெற்று, கல்லூரிகள் திறந்த பின்னும் அது சாகவில்லை. அது அங்கே வாழ்கிறதென்று தெரிந்தவர்கள், சூரியன் அஸ்தமித்த பிறகு அங்கே போக மாட்டார்கள். அப்படி அந்த வழியே செல்ல நேரிட்டாலும் அவர்கள் காதிலே ஏதேதோ குரல்கள் விழும். அந்தக் குரல்

களைக் கேட்டபின் கேட்டவர்களுக்குக் காய்ச்சல் வந்துவிடும். காய்ச்சலில் பெரும்பாலும் இறந்துவிடுவார்கள். அப்படிச் சாகவில்லை என்றால், 'பண்டித ராதேலாலிடம் போ, அவர் பூதத்தை விரட்டிவிடுவார்' என்று ஊரார் சொல்லுவார்கள்.

ஒரு நாள் மாலை வேளை. சைக்கிளில் யாரோ ஒருவன் ஆலமரத்தின் வழியாகச் சென்றான். அந்த ஆலமரம் பாதையின் ஓரமாக இருந்ததால், அந்த வழியே செல்லுகிறவர்கள், அதைக் கடந்து செல்லுவதைத் தவிர வேறு வழியில்லை. சைக்கிளில் சென்றவனுக்குப் பூதத்தைப் பற்றி நன்றாகத் தெரியும். அவனுக்கு முன்னால் ஒரு டிரக் மெதுவாகச் சென்று கொண்டிருந்ததால்தான் அந்த வழியே செல்ல அவனுக்குத் துணிவு வந்தது. டிரக்கின் பின்புறத்திலிருக்கும் சிவப்பு விளக்கு ஒளியின் உதவியினால், மேற்கு வானத்தில் எஞ்சியிருந்த ஓரிரண்டு ஒளிக் கீற்றுகளைக் கண்டு, இன்னும் அந்திவேளை வந்துவிடவில்லை என்ற துணிவுடன் அவன் அந்த மரத்தைக் கடந்து கொண்டிருந்தான்.

அப்புறந்தான் அவன் நிம்மதியாக மூச்சுவிட்டான். பங்குனி மாதத்துக் காற்று அவன் முகத்தில் வந்து மோதியது. அவன் மகிழ்ச்சியுடன் அதை அநுபவித்தான். சற்றே உற்சாகத்துடன் தன்முன்னே ஒரு ஜனக் கூட்டத்தைக் கற்பனை செய்து கொண்டவனாய் இரண்டு மூன்று முறை கீச்சுக் குரலில், 'நகருங்கள், நகருங்கள்' என்று கூறிக்கொண்டான். பின்பு ராவெளர் அமர்சிங்கின் பிரசித்தி பெற்ற தெருக்கூத்து நாடகத்தின் பாடல் ஒன்றை முணுமுணுத்தான். குரலின் வால்யூம் மெல்ல மெல்ல அதிகரித்துக்கொண்டே போயிற்று.

சட்டென்று அவன் திடுக்கிட்டான். பாதையின் ஓரத்தில், மிகமிக அருகாமையிலிருந்து, 'கோங், கோங்!' என்கிற சத்தம் கேட்டது. நிச்சயம் இது மனிதக் குரல் அல்ல. யாரும் சொல்லாமலேயே சைக்கிள்காரனுக்கு இது பூதத்தின் குரல் என்று தெரிந்துவிட்டது. அவனது மேல் மூச்சு, அப்படியே மேலேயே நின்றுவிட்டது. கீழ் மூச்சு, அப்படியே கீழ் வழியாகவே வெளியேறி விட்டது. பூதம் யாருக்கும் சொல்லாமலேயே தன் இருப்பிடத்தை மாற்றிக் கொண்டுவிட்டது. ஆல மரத்திலிருந்து இறங்கி அத்திமரத்துக்கு வந்து விட்டது போலும் என்று அவன் நினைத்தான்.

'கோங், கோங்' என்கிற சத்தம் இம்முறை இன்னும் பலமாகக் கேட்டது. கூடவே இரண்டொரு மனிதக் குரல்களும் கேட்டன. ஒருவன் உரக்க நகைத்தான்: "அதிகம் குடிக்காதே என்று சொன்னேன் அல்லவா? கேட்டால்தானே!"

"இன்னும் கொஞ்சம் குடிப்பா, குடி!" என்றது இன்னொரு குரல்.

இன்னோர் ஆண் குரல் கேட்டது. அது பாடிக்கொண் டிருந்தது. சிரிப்புடன் கூடவே, 'கொள்ளைக்காரன் ஹாமித்' என்ற தெருக் கூத்து நாடகத்திலிருந்து ஒரு பாட்டுக் கிளம்பியது. "சத்தம் போடாதே! சிக் சிக் சத்தம் போடாதே."

இதற்குள், 'கோங், கோங்' என்ற சத்தத்தில் ஆரோகண, அவரோகணங்கள் கேட்க ஆரம்பித்துவிட்டன. முதலில் யாரோ 'கோங்...கோங்' என்று ஆரம்பித்திருக்கிறார்கள். பின்னால் தனது சுயத் திறமையைக் காட்டும் எண்ணத்துடனோ என்னவோ, தொண்டை கிழிய "காப்பாற்றுங்கள்" என்று கத்தினான். இதைத் தொடர்ந்து மீண்டும், 'கோங், கோங்' என்ற அதே சத்தம். ஆனால் இம்முறை இந்தச் சத்தம் உரத்துக் கேட்கவில்லை.

'கொள்ளைக்கார ஹாமித்' என்ற நாடகப் பாடலைப் பாடியவனும் பாடுவதை நிறுத்திவிட்டான். "சொன்னேன் அல்லவா மகனே! அதிகம் குடிக்காதேயடா என்றேனே! சும்மா கிடைக்கிற கள்ளுதானே என்று..." தொடர்ந்து ஒரு சிரிப்பு. இது அந்தப் பாடுகிறவன் குரல் போலவே தோன்றியது. மீண்டும், அதே பாட்டு தொடர்ந்தது.

சைக்கிளில் சென்றவனின் வயிற்றைக் கிளறி, வாயுவைக் கிளப்பிவிட்டதெல்லாம் பூதத்தைப் பற்றிய பயந்தான். மனிதர்களைப் பற்றி அவனுக்குச் சற்றும் பயம் இல்லை. இதனால் மனிதக் குரல்களைக் கேட்டதும், 'சரி, ஏதோ அமர்க்களம் நடக்கிறது' என்பதை மோப்பம் பிடித்தவனாய்ச் சைக்கிளிலிருந்து இறங்கியவன் உரத்தக் குரலில், "பயப்படாதே! பயில்வான்! இதோ வந்துவிட்டேன்! அடேய் ஜாக்கிரதை! கை வைக்காதே" என்று கூச்சலிட்டான்.

அத்திமரத்தின் மற்றொரு புறத்தில் அடர்ந்த புதரொன்று இருந்தது. அந்திமாலையின் கருக்கலில் நாலைந்து பேர் அங்கு நடமாடுவது தெரிந்தது. பல விதமான தொனிகளும் கேட்டன.

"கோங் ..கோங் ...கோங்..."

"காப்பாற்றுங்கள்."

"கத்தாதேடா! அதிகம் குடிக்காதே என்று சொன்னேன் அல்லவா?"

"சத்தம் போடாதே! சிக்சிக் சத்தம் போடாதே." சைக்கிள் காரன் ஜாக்கிரதையாக இங்குமங்கும் பார்த்தவாறே முன்பின் அறியாத ஒருவனை என்னவென்றும் தெரியாத ஆபத்திலிருந்து காப்பாற்ற விழைந்தவனாய்க் குரல் கொடுத்தான்.

இதன்பின் ஒரு மனிதன் புதரிலிருந்து வெளிப்பட்டு விருவிரு வென்று நடந்து வந்து, சைக்கிள்காரனின் அருகில் வந்து நின்றான். அவன் வாயிலிருந்து பிரமாதமான நெடி வந்தது. அதிகாரத் தோரணையுடன் அவன் வினவினான்:

"என்னப்பா தம்பி? ஏன் கூச்சல் போடுகிறாய்? உனக்கு என்ன வேண்டும்?"

சைக்கிள்காரன் புதரைச் சுட்டிக் காட்டி, "அங்கிருந்து யாரோ 'காப்பாற்று, 'காப்பாற்று' என்று கத்துகிறான்" என்றான்.

"அவர்கள் எல்லாம் குடித்துவிட்டுப் போதையிலே கிறங்கிக் கிடக்கிறாங்க. எல்லாப் பயல்களும் உளறிக்கிட்டுக் கிடக்கி றாங்க. ஆனால் உனக்கு என்ன வேண்டும்?"

இதற்குள் இன்னும் இரண்டு சைக்கிள்காரர்கள் அந்த வழியே வந்தனர். இவர்களைக் கண்டதும் தங்கள் சைக்கிளின் வேகத் தைக் குறைத்துக்கொண்டு இறங்க முயற்சி செய்தனர். புதருக்கு அருகே குரல்கள் இன்னும் வலுத்து விட்டனவே தவிர, சொற்கள் தெளிவாகக் கேட்கவில்லை.

அந்த மனிதனே ராணுவ தோரணையில் கூறினான். "நீங்க ளெல்லாம் நிற்கவேண்டிய அவசியம் இல்லை. இது கஞ்ச் ஆட் களின் விஷயம். எல்லாப் பயல்களும் குடித்துவிட்டுப் போதை யிலே இருக்கிறார்கள். எல்லாரும் அவரவர் வழியிலே போங்க."

வந்திருந்த இரண்டு சைக்கிள்காரர்களும் இந்த உபதேசத்தை ஏற்று, தங்கள் சைக்கிளின் வேகத்தைத் துரித மாக்கிவிட்டனர். முதலில் வந்த சைக்கிள்காரன்கூட வேறு வழி யின்றி முகத்தைச் சுளித்தவனாய் மேலே நகர்ந்தவன், போகிற போக்கில், "எல்லாரும் அயோக்கியப் பயல்கள்! இந்தக் குடி காரப் பயல்களால் இலாக்காவே படுமட்டமாகிவிட்டது" என்று கூறினான்.

ராணுவ தோரணையில் நின்றவன், "நீ சொல்வது சரிதான் தம்பி! கள் குடிப்பது சரியல்லதான்" என்றான்.

இப்போது பாதையிலே ஜன சஞ்சாரமே இல்லை. அந்த மனிதன் தான் நின்ற இடத்திலிருந்தே கூவினான்.

"ஊம்...நடங்க . பையன்களே! டபிள் மார்ச்! சலோ......"

கிட்டத்தட்ட நாலைந்து பேர் புதருக்குப் பின்னாலிருந்து வெளியே வந்து பாதையில் நின்றனர். அதில் ஒருவனுக்குக் கூடப் போதையின் தடுமாற்றம் இருந்ததாகத் தெரியவில்லை. எல்லாரும் மௌனமாக இருந்தனர். அவர்கள் நடந்த நடையைப் பார்த்தால் சைக்கிள்காரர்கள் கைப்பற்றிய நமது எல்லைப் பகுதிகளைத் திரும்பும் கைப்பற்றும் பணி இவர்களிடந்தான் ஒப்படைக்கப் பட்டிருப்பதுபோல் தோன்றியது. பூதம் இருந்த ஆலமரத்தின் அருகே வந்ததுமே அவர்கள் பாதையை விட்டு இறங்கி விட்டனர். இது பூதத்தின்-பயத்தினாலும் இருக்கலாம். அல்லது எதிரே வந்து கொண்டிருந்த காரின் ஹெட்லைட்டின் தீவிரமான பிரகாசத்தினாலும் இருக்கலாம். பாதையை விட்டிறங்கியதுமே அவர்கள் ஒரு வயலுக்குள் பிரவேசித்தனர். வயலின் நாற்புறமும் கருவேல மரக்கிளைகள் வேலியாக நடப் பெற்றிருந்தன. வயலில் பயிர் ஏதும் இல்லை. நிலத்தின் பாதுகாப்புக்காக வேலி இட்டிருந்தார்களோ என்னவோ?

வயலிலிருந்து திரும்பவும் மேலே ஏறிப் பாதைக்கு வந்தனர் அவர்கள். சாராயக் கடை கிட்டத்தட்ட ஐம்பது கஜ தூரத்தில் இருந்தது. அதில் ஒருவன் சொன்னான். "இதில் ஒரு கருவேலங்குச்சி கூட ரம்சன்னாவினுடையது அல்ல. யாருடைய கருவேல மரத்தை ஒடித்துக் கொண்டு வந்தானோ தெரியவில்லை."

"யார் கண்டது? யாருடையதோ?"

'நீ சொல்லவேண்டாம். எனக்கே தெரிந்துவிடும்."

"தெரிந்துவிடுமென்றால், ஏன் கேட்கிறாய்?"

"நீ ஆள் எப்படி என்பது தெரியட்டுமே என்று தான் கேட்கிறேன்."

அந்த ஆள் சிரிக்கலானான். பின்பு எல்லாருக்கும் கேட்கும்படியாக, "ஜோக்நாத் ஜெயிலிலிருந்து குறுக்குவாதம் செய்யக் கற்றுக்கொண்டு வந்திருக்கிறான்" என்றான்.

எல்லாரும் சாராயக் கடைக்குள் நுழைந்தனர். சுமார் நாலைந்து பேர்தான் அங்கே இருந்தனர். அவர்களில் ஒருவன் இவர்களைக் கண்டதும், "ஜோக்நாத்! ஜெயிலிலிருந்து எப்பொழுது வந்தாய்?" என்றான் உற்சாகத்துடன்.

"இன்று மத்தியானத்துக்குப் பிறகு."

மேலும் உற்சாகத்துடன் அவன் வினவினன். "எப்படி இருந்தது?"

"ரொம்ப நன்ருக இருந்தது."

"யாராவது தெரிந்தவர்கள் இருந்தார்களா?"

"சிறையில் இருந்தவர்களெல்லாம் தெரிந்தவர்களாகி விட்டார்கள்."

"பிரேசர் அங்கே தான் இருந்தான். சந்தித்தாயா?"

"இல்லை! அங்கே எல்லாரும் பிரேசருக்கு அப்பளுக இருந்தார்கள்."

"மூங்கில் அரைத்தாயா இல்லையா?" மூலையிலிருந்து யாரோ கரகரத்த குரலில் கேட்டார்கள். ஜோக்நாத் ஆத்திரத்துடன், "யாருடா பேசறது, கழுதைப் பயல்?" என்ருன்.

"நம்ப பாகுன்தான்."

"அவனை வாயை மூடிக்கொள்ளச் செரல். சிவபால்கஞ்சில் அவனுக்கு மரியாதை கிடையாது."

"பாகுன் கேட்டுக் கொண்டாயா? உன் வாயை மூடிக்கொள்ளச் சொல்லுகிருன். இவன் ஜோக்நாத், தெரியுமா? இப்பொழுதுதான் ஜெயிலிலிருந்து வந்திருக்கிருன்."

"நான் சொல்றதையும் கேட்டுக்கச் சொல்லு. முதலிலேயே சொல்லிவிடறேன். நான் ஒன்றும் நம்பர் போக்கிரி. வாயை மூடிக்கொண்டு சொப்புச் சொப்பாய்க் கள்ளு குடிச்சிட்டு அங்கேயே மூலையில் வாந்தி எடுத்துக்கொண்டு கிட. இன்னொரு முறை மூங்கிலை இடிச்சியா, வெட்டிஞயான்னு கேட்டா? உன் கதியும் அதே கதியாகிவிடும்."

"பாகுன்! கேட்டுக் கொண்டாயா?"

"கேட்பது யாரு? இங்கே மூலை காலியாக அல்லவா கிடக்கிறது."

"அடே! பாகுன் எங்கே? ஆள் நழுவிவிட்டானு?"

ஜோக்நாத் பத்து ரூபாய் நோட்டை எடுத்து, கடைக்காரனிடம் நீட்டியவாறே, "எல்லாருக்கும் ஒவ்வொரு கலயம் ஊத்து. ஒருத்தரைக் கூட விடக்கூடாது. ரொம்ப நாளுக்கப்புறம் ஊர் மண்ணை மிதிச்சிருக்கிறேன்" என்ருன்.

"நிறையப் பணம் கொண்டு வந்திருக்கிருய்ப் போல் இருக்கிறதே."

"நம்ப சனிஸ்வரன் பஞ்சாயத்துத் தலைவராகிவிட்டார் அல்லவா? அவன் உத்தரவு, இன்னிக்கு எல்லாரும் ஆனந்தமாய்க் குடியுங்கடான்னு."

"சனிஸ்வரன் கிட்ட காசு ஏது?"

"இப்ப சனிஸ்வரன் வெறும் சனிஸ்வரனு? பஞ்சாயத்துத் தலைவர், புரிந்ததா?"

ஆளுக்கொரு கலயத்தை வாங்கிக்கொண்டு உட்கார்ந்தனர். கடையின் வெளிவராந்தாவை, ஒரு தட்டி வைத்துத் தெருவிலிருந்து மறைத்துக் கட்டியிருந்தது. உள்ளேயிருந்த அறைதான் கடை. தட்டி கட்டிய வராந்தாவில் ஒரு ஹரிக்கேன் விளக்கு தொங்கியது. உள்ளே இருந்தபடியே வராந்தாவில் அமர்ந்துள்ளவர்களைப் பார்க்கமுடியும். வராந்தாவில் ஒரு பெஞ்ச் இருந்தது. இரண்டு பேர் அதன் மீது அமர்ந்திருந்தனர். ஜோக்நாத்தும் அதிலே போய் அமர்ந்தான். மற்றவர்கள் கீழே விரித்திருந்த கோணியில் உட்கார்ந்தனர். சிலர் மண் தரையில் அமர்ந்தனர். மது ஊற்றுபவன், மதுக்கலயம், மதுக்கோப்பை ...எல்லாமே இவ்வளவுதான் இங்கே.

நாட்டுச் சாராயத்தின் நெடி, பாதையில் நெடுந்தூரம் வரை வீசியது. மச்சகந்தியின் மணத்திலுல் அவள் இருப்பிடம் சந்தனு அரசனுக்குத் தெரிந்ததுபோல் தொலைவிலிருந்தே, இங்கே நாட்டுச் சாராயம், கள்ளுக்கடை இருக்கிறது என்பது நெடியிலுல் தெரிந்தது. இந்த நெடிதான் இந்த நாட்டுச் சாராயக்கடைக் குரிய விளம்பரம். இதனுல் தான் நல்ல பத்திரிகைகளில், வெளி நாட்டு மதுவகைகளுக்காக வரும் விளம்பரங்களில் இது பற்றிய குறிப்பே இருப்பதில்லை. இதற்கு விளம்பரம் அவசியமே இல்லை.

இரண்டொரு வாய் குடித்தபின் ஜோக்நாத் இங்கு மங்கும் பார்த்தவாறே, "தண்ணீர் கலந்திருக்கிறது" என்றுன்.

"என்ன?"

"தண்ணீர்! சாராயத்திலே தண்ணீர் கலந்து வைத்திருக்கிறுன்."

"எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது."

"எனக்குக் கூட."

"எனக்குக் கூடத்தான் ரொம்ப நாளாவே அப்படியொரு சந்தேகம். ஆனுல் இப்ப வெல்லாம் தண்ணீர் கலந்த கள்ளு நிஜக் கள்ளு மாதிரிதான் தெரிகிறது."

கடைக்காரன் தன் இடத்திலிருந்து எழுந்து வந்தான். சில் விட்ட குரலில், ஆனால் அழுத்தமாக, "ஆனந்தமாய்க் குடி! முதல் கலயத்திலேயே நீ நிதானம் தப்பிவிட்டாய். கால், அரைமில்லி இனமாக் குடிக்க வேண்டுமென்றால் சொல்லு; தரேன்! தண்ணீ, கிண்ணீன்னு சொல்லாதே! எவனாவது போக்கத்த பயல் தண்ணீ கலப்பான். அந்த ஆளு நான் அல்ல" என்றான்.

ஜோக்நாத்துக்கு இது நன்றாக உறைத்ததுபோலும். பையிலிருந்து பத்தும் ஐந்துமாய் நோட்டுகளை எடுத்தவாறே, "இனமாகக் குடிக்கவேண்டுமென்றால் குடிப்பேன். அது நிச்சயம். ஆனால் பயப்படாதே! இதோ பார், என்றாவது இத்தனை நோட்டுகளைப் பார்த்திருக்கிறாயா?" என்றான் மிடுக்குடன்.

கடைக்காரன் ஒல்லியான உடலுடையவன் என்றாலும் நல்ல திடகாத்திரன். கம்பீரமாக நடந்து திரும்பிச் சென்றவாறே, "நான் பார்த்த நாளெல்லாம் ஆச்சு, இப்போ நீ பார்க்கிற காலம். பாரு பாரு" என்றான்.

இரண்டாம் முறையாகக் கலயம் நிரப்பப்பட்டது.

"ஜோக்நாத், என்ன விஷயம் மேலே!" என்றான் ஒருவன்.

'கொஞ்சம் பணக் கஷ்டம்' என்று யாருமே எண்ணிவிடக் கூடாது என்று நினைக்கும் தோரணையில் கூறினான் ஜோக்நாத். "முதலில் இன்ஸ்பெக்டரை இரண்டிலொன்று பார்க்கவேண்டும். மாற்றலாகிவிட்டால் என்ன? நான் விடப்போவதில்லை, இங்கு வருவதற்குமுன் ஒரு தாவா ஃபைல் பண்ணி விட்டுத்தான் வந்திருக்கிறேன்."

"என்ன தாவா?"

"சிவில்தான், உனக்குத் தெரியதா? என் மேல் பொய்யாகத் திருட்டுக் குற்றம் சாட்டினான் அல்லவா? இரண்டு, மூன்று மாதம் நான் காவலில் இருக்கவேண்டி வந்ததல்லவா?"

"வைத்தியர் ஜாமீன் கொடுக்கவில்லையா?"

"அவர் கொடுப்பதாகச் சொன்னார். நான்தான் மறுத்துவிட்டேன். அந்த இன்ஸ்பெக்டரை ஒருகை பார்த்துவிட நான் இங்கே இருக்கிறேன் என்று சொல்லிவிட்டேன். இருப்பதற்கு வாடகை ஒன்றுமில்லையே?"

"ம்...அப்புறம்"

"அப்புறம் என்ன? எனக்கு அவமானம் ஏற்பட்டுள்ளது. என் பயிர்த் தொழில் நாசமாகிவிட்டது. ஒரு வயலை ரம்சண்ணா அமுக்கிவிட்டான். இந்த எல்லா நஷ்டத்துக்காகவும் எட்டாயிர

ரூபாய்க்கு மானநஷ்ட வழக்குப் போட்டிருக்கிறேன். டிகிரி ஆகிவிட்டால் அவ்வளவுதான், இன்ஸ்பெக்டர் தொலேந்தார்."

"கோர்ட் பீஸ் என்னவாயிற்று? சிவில் வழக்கு என்ருல் நிறையச் செலவாகுமே."

"எல்லாம் கடவுள் கொடுப்பார்."

"இதோ பார் ஜோக்நாத், பிராமணன் வீட்டிலே பிறந்து விட்டு, இப்படி, அப்படிப் பேசாதே. உண்மையைச் சொல்."

"ஆமாம்ப்பா. நானும் தான் சொல்லுகிறேன், பகவானே நடுவிலே இழுக்காதே என்று! கோர்ட் பீஸ் யார் கொடுப்பார்கள்?"

"கடவுள் கொடுப்பாரென்று சொன்னேன் அல்லவா?"

"சரி. ஆள் தேர்ந்துவிட்டான். இனிச் சொல்லமாட்டான். சரி, சொல்லவேண்டாம், மேலே பேசு. வழக்கைத் தாக்கல் பண்ணிவிட்டாயா?"

"தாக்கல் பண்ணிவிட்டேன்."

"எப்போது?"

"இன்று தான்."

புதருக்குப் பின்னல் உருண்டு கிடந்தவன் தட்டுத் தடுமாறி எழுந்து நின்ருன். மெல்ல முனகியபடியே நடக்கலானன். தன்னிரக்கம், ஆக்ரோஷம் முதலிய பல இலக்கிய பூர்வமான குணங்களினல் பீடிக்கப்பட்டவனுக இருந்தான் அவன். சாராயக் கடையில் அவன் கூறியதிலிருந்து புலனுகிய விஷயம் சற்று முன் பூதம் இருக்கும் ஆலமரத்தின் அருகில் வழிப்பறி நடந்திருக்கிறது. யாரோ அவனிடம் கொள்ளையடித்து விட்டார்கள் என்பதுதான். அவன் போலீஸ் ஸ்டேஷனில் புகார் செய்யப் போகிருன்.

ஜோக்நாத்தின் பக்கத்தில் மண் தரையில் உட்கார்ந்திருந்தவன் கலயம் கலயமாக உள்ளே தள்ளிக் கொண்டிருந்தான். இதைக் கேட்டதும் அவன், "உன் கிராமம் ரொம்ப மோசம், பயில்வான்! பொழுது சாய்வதற்குள்ளேயே ஆளுங்க லெப்ட் ரைட் போட்டுக்கொண்டு வழிப்பறி கொள்ளை நடத்தருங்களே! இது ரொம்ப அர்த்தமற்ற வேலை. என்ன சொல்லுகிருய் நீ?" என்ருன்.

ஜோக்நாத் தலையை மட்டும் ஆட்டிவிட்டு, கடைக்காரனை நோக்கி, "இன்னெரு கலயம் ஊத்தப்பா? விருப்பம் இருந்தால் சும்மா ஊத்து" என்ருன்.

சற்றைக்கெல்லாம் அவர்கள் யாவரும் தள்ளாடியவாறே வெளியே வந்தனர். அவர்களின் முன்னே வெறிச்சோடிய பாதை நீண்டு கிடந்தது. இரண்டொரு நாட்டு நாய்களைத் தவிர வேறு எதுவும் இல்லை.

புதரிலிருந்து முனகியபடி தள்ளாடிக் கொண்டு வந்த மனிதன் இப்போது அவர்களைத் தாண்டிச் சென்றதுகூட அவர்களுக்குத் தெரியவில்லை. இப்பொழுது அந்த மனிதனின் உள்ளத்திலிருந்த ஆக்ரோஷம் தணிந்து தர்மத்தில் அவனுக்கு நம்பிக்கை மேலிட்டு நின்றது. ஏன் தெரியுமா? அவன் ஸ்டேஷனுக்குப் போவதற்கு முன்னேயே ஓர் அறிவாளி அவனுக்கு அறிவுரை வழங்கிவிட்டிருந்தார்.

"ரிப்போர்ட் செய்வதால் என்ன நடக்கப் போகிறது? நடந்தது நடந்தாகிவிட்டது. கைவிட்டுப் போன பொருள் திரும்பியா வர போகிறது?

"சொல்லு, நீ இந்துவா? முசல்மானா? இந்துவானால் உன் கர்மவினையை நம்புகிறாய் அல்லவா? உன் பாக்கியத்தில் இந்த நாற்பத்தஞ்சு ரூபாய் இல்லை என்று வைத்துக்கொள். இனிமேல் அலைவதினால் பயன் இல்லை. இது தான் கடவுளின் விருப்பம்.

"சரி, உயிர் தப்பினாய் அல்லவா? அதுவே பெரியது. போன வருஷம் இந்த இடத்தில் ஒரு மனிதனை வெட்டிப் போட்டு விட்டார்கள்.

"ராமநாமத்தைச் சொல்லு. வீட்டுக்குப் போய்ச் சத்திய நாரயண பூஜை செய். வழக்கு கிழக்கு என்று செலவு செய்வதைத் தர்மத்துக்குச் செலவு செய்.

"சூடான பாலில் மஞ்சள் பொடியைப் போட்டுக் குடித்துவிடு. புரண்டு படுத்துக்கொண்டு நன்றாய்த் தூங்கு. காலைப்போது விடிவதற்குள் எல்லாம் மறந்துவிடும்."

# அத்தியாயம் 22

சிலம்பக் கூடத்திலிருந்து இரண்டு பயில்வான்கள் உல்லாச மாக வெளியே வந்தார்கள். ஒன்று பத்ரி, மற்றொருவன் சின்ன வஸ்தாது. இரண்டு பேர் தலையும் மழுங்க மொட்டை அடித் திருந்தது. வேர்வையின் காரணமாய்ப் பிளாஸ்திரி போட்ட மாதிரி மண் அப்பிக்கொண் டிருந்தது. கழுத்தின் பின்புறம் காண்டாமிருகம் மாதிரி சுருக்கங்கள். சின்ன வஸ்தாது நடு நடுவே மெல்லிய குரலில் முனகினான். ஆனால் சுயமரியாதை யின் காரணமாய் அந்த முனகல்கூட, 'ஐயோ' என்று வெளி வராமல் நீண்ட பெருமூச்சுடன் 'ஹோய்' என்ற சத்தமாய் வெளியே வந்தது. பத்ரி மௌனமாய் அவனுடன் நடந்து கொண்டிருந்தார். இந்த விஷயங்களுடன் தமக்குச் சம்பந்த மில்லை என்பது போலிருந்தது அவருடைய முகபாவம்.

இன்று சின்ன வஸ்தாதைப் பத்ரி பயில்வான், 'தோபிகாட்' பிடியில் மல்லாக்க வீழ்த்திவிட்டார். பத்ரி பயில்வான், அவ னுடைய உஸ்தாத், அதாவது, குருவாக மட்டும் இருந்திராவிடில் சின்ன வஸ்தாது இப்போது கண்களில் கண்ணீரும், வாயில் நுரையும் கக்கியவாறே அவரை ஆயிரம் வசவுகள் வைதிருப் பார். ஆனால் குருவிடம் மரியாதை காட்டும் பொருட்டே மௌனமாக இருந்தான். மௌனமாய் நடப்பது கடினமாகி விடும்போது, வாயிலிருந்து 'ஹோவ்' என்ற தொனி வெளிப் பட்டது. அவ்வளவுதான்.

ஆனால் நேர இருந்த விபத்து இத்துடன் தீர்ந்துவிடவில்லை. நடந்துகொண்டே, "என்னப்பா! அன்று ஜோக்நாத்தின் வழக் கில் நீ சாட்சியாக என்ன என்ன சொல்லிவிட்டு வந்தாய்?" என்று கேட்டார் பத்ரி பயில்வான்.

"ஜோக்நாத்தின் சாட்சியாக எந்த மச்சான் போனான்? நான் போலீஸுக்கில்ல சாட்சியாப் போனேன்." இடுப்பு வலியை யும் மறந்தவாறே கூறினான் சின்ன வஸ்தாது.

பத்ரி அமைதியாகக் கூறினார். "நேரிடையாகக் கேட்டால், நேரான பதில் சொல். மச்சான் கிச்சான் என்ற பெயரை யெல்லாம் இழுக்காதே."

"யார் கோணல்மாணலாய் நடக்கிறார்கள்?" என்றான் சின்ன வஸ்தாது. காரமாகக் கேட்டானே தவிர, குரல் சற்று அடங்கியே இருந்தது.

பத்ரி பயில்வான் அர்த்தமற்ற இந்தப் பேச்சைக் காதில் போட்டுக்கொண்டதாகவே தெரியவில்லை. "சாட்சியத்தில் நீ பேலாவைப் பற்றி என்ன கூறினாய்?" என்று கேட்டார்.

"என்ன சொல்லுவது? வாயில் என்ன வந்ததோ அதைச் சொன்னேன்."

பத்ரி பயில்வான் மிகவும் மென்மையாகத்தான் பேசிக் கொண்டு வந்தார். இப்போதோ சட்டென்று அவன் கரங்களைப் பற்றி, "சொல்லு, அவளுக்கும் ஜோக்நாத்துக்கும் ஏதாவது தொடர்பு, தொடிசு உண்டா?" என்று வினவினார்.

சின்ன வஸ்தாது மெல்லத் தன் கரங்களை விடுவித்துக் கொண்டான். விரலைப் பிடித்து மெல்ல அடிமடியில் கை போடுவது, பின்பு 'தோபிகாட்' பிடியை பிடித்து மல்லாக்க வீழ்த்துவது என்ற அநுபவத்தைச் சற்று முன் அநுபவித்திருந்ததால், பேச்சைத் தட்டிக் கழிக்கும் உத்தேசத்துடன், "யாருக்கும் யாருக்கும் என்ன தொடர்பு என்று? எனக்கு என்ன தெரியும்? கிராமத்தைச் சுற்றித் துவரைப் பயிர் போட்ட வயல்கள்தான். யாருக்கு யார்கிட்ட என்ன சம்பந்தம் இருக்கிறதென்று நான் எங்கே போய்ப் பார்ப்பது?" என்றான்.

பத்ரி பயில்வான் இன்னமும் தம் குரலை உயர்த்தவில்லை. முன்போலவே சகஜமான குரலில் கேட்டார். "ஆனால் பேலா, ஜோக்நாத்தை, ஏதோ எக்கச்சக்கமான நிலையில் நீ பார்த்ததாக அல்லவா கூறியிருக்கிறாய்?"

"சொன்னதினால் என்ன ஆகிவிடப்போகிறது?" பத்ரி பயில்வான் சட்டென்று நின்றுவிட்டார். கடுமையான குரலில், "ஏன் ஆகிவிடாது? நீ சொன்னாயா இல்லையா? சொல் அதை" என்றார்

சின்ன வஸ்தாதுக்கு இப்பொழுது சற்றே சந்தேகம் பிறந்தது. அவன் குரலிலிருந்த தைரியமும் நம்பிக்கையும் பறந்தோடிவிட்டன. சாசுவதமான உண்மைகளைப் பறைசாற்றுகிற புரட்சி எழுத்தாளன்கூட ரேடியோ அதிகாரிகளின் முன்னே சற்றுத் தயங்கித் தயங்கிப் பேசுவதுபோல் அவனும் பத்ரி பயில்வானின் முன்னே அரண்டு போய் நின்றான். மன்னிப்புக் கேட்டவாறே, "சொன்னேன் குரு! ஆனால் ஏதோ சொல்லு

வேண்டியதற்காக என்ன என்னவோ சொன்னேன். கோர்ட் சாட்சி விவகாரம் அல்லவா அது? வாயிலே வந்ததைச் சொன்னேன். எந்த உண்மையை அங்கே சொல்ல வேண்டும்?''

பதிரி பயில்வான் இருட்டில் சில நிமிடம் மௌனமாய் நின்றுகொண்டிருந்தார். ஒன்றும் பேசவில்லை. எந்தப் பயில்வானும் சுலபமாகச் செய்யமுடியாத காரியத்தைச் செய்து கொண்டிருந்தார். அதாவது யோசித்துக் கொண்டு நின்றார்.

சின்ன வஸ்தாது பின்னும் அரண்டு போனான். தயங்கியவாறே, ''குருஜி! எதைப் பற்றி யோசிக்கிறீர்கள்? வேடன் அல்லவா யோசிப்பான்? என்னிடம் சொல்லுங்கள்? என்ன விஷயம்?'' என்றான்.

பத்ரி பயில்வான் மெதுவாகக் கூறினார். ''உன்னைக் காலால் உதைக்கலாமா? செருப்பால் அடிக்கலாமா என்று யோசிக்கிறேன். உன்னோட நாக்கிலே நாயாடா மூத்திரம் பெய்யுது? களவாளிப் பயலே! தூ!'' பத்ரி வெறுப்புடன் காறி உமிழ்ந்தார். சின்ன வஸ்தாது அப்படியே அலமலந்து நின்றான். பிறகு, ''அப்படிச் சொல்லாதீர்கள் குரு! நான் எங்கே தப்பு செய்தேன் என்று சொல்லுங்க'' என்றான்.

''உனக்குப் புரியுமாடா கழுதை? நீ ஒரு நல்ல குடும்பத்துப் பெண்ணின் மானத்தையே குலைத்து உலகத்தின் முன்னால் போட்டுவிட்டாயேடா? உனக்கு இது தப்பாகத் தோணலையாடா?''

'இவ்வளவுதானா விஷயம்?' என்று நினைத்த சின்ன வஸ்தாது நிம்மதியாகப் பெருமூச்சுவிட்டான். பிறகு, ''குருஜி! நான் கோர்ட்டில் கடவுள் சாட்சியாக எல்லார் முன்னிலையிலும் சொன்னேன். ஆனால் எல்லாருக்குமே கோர்ட்டில் சொல்லப் படுவது உண்மையல்ல என்பது தெரியும். யாருக்கு இதனால் என்ன நஷ்டம்?'' என்றான் அலட்சியமாக.

பத்ரி ஒன்றும் பேசாமல் இருப்பதைக் கண்டு அவனுக்குத் துணிச்சல் ஏற்பட்டுவிட்டது. தன் இயல்பான முறையில் அதாவது உலகமே தன் முன்னால் ஒரு சிறு துரும்பு என்ற நினைப்பில் தொடர்ந்து கூறினான். ''இதற்காகவா என்னைச் செருப்பால் அடிக்கவேண்டும் என்றீர்கள் குருஜீ! சபாஷ் குருஜீ! நீங்கள்கூடச் சில சமயம் என்னமாய்ப் பேசுகிறீர்கள்? என்னவோ ஏதோ என்று நான்கூடப் பயந்துவிட்டேன்.''

பத்ரி பயில்வான், தம் கழுத்தை இரு கரங்களாலும் பரபர வென்று தேய்த்து, பட்பட் என்று நாலைந்து அடி போட்டுக் கொண்டார். தம் கழுத்தில் படிந்திருந்த மண்ணை இந்த முறையில் தட்டிவிட்டவர் இவ்வளவு நேரமாய்க் குழம்பிய சிந்தனையையும் அந்த உதறலில் தள்ளிவிட்டார் போலும். சட்டென்று சிரித்தவாறே, "நீ பரம்பரைக் காட்டுமிராண்டி. உனக்கு இடம், வலம் என்ன தெரியும்? இந்தப் பேலா உனக்கு அம்மாவாகப் போகிறாள். நீ அவளை விபசாரி என்று சொல்லு, அல்லது வேறு எது வேண்டுமானாலும் சொல்லு! அந்த வசவு உன் மேலேயே தான் வந்து விழும்" என்றார்.

"என்ன சொன்னீர்கள் குருஜீ?"

"சொல்வது என்ன? ஒரு மாதத்துக்குள் பேலாவுக்குத் திருமணம் நடக்கும். அதுவும் பத்ரி பயில்வானுடன். நீ மேளம் கொட்டு! ஏதாவது புரிந்ததா பயலே?"

பத்ரி பயில்வானின் வார்த்தைகளைக் கேட்டதும் ஏதோ அர்த்தமற்ற பிதற்றல்கள் ஒரு மூட்டையாகத் தன் மீது விழுவது போல் உணர்ந்த சின்ன வஸ்தாது யாரோ தன்னை ஒரே அடியில் மல்லாக்க வீழ்த்திவிட்டதாக நினைத்தான். "என்ன சொல்லுகிறீர்கள் குருஜி?" என்ற வார்த்தைகள் அவனையும் அறியாமலேயே அவன் வாயிலிருந்து வெளியே வந்தன.

"நான் சொல்வது காதில் விழவில்லையா?" மிகவும் சகஜமாகக் கிண்டல் செய்தவாறே பத்ரி, "என்ன விஷயம்? காது அடைத்துக்கொண்டுவிட்டதா? மீண்டும் சொல்லுகிறேன், கேட்டுக்கொள். நான் பேலாவைத் திருமணம் செய்து கொள்ளப் போகிறேன். அவளுக்கு வாக்குக் கொடுத்து விட்டேன். நீ அன்று கோர்ட்டில் வாக்குமூலம் கொடுத்துக் கொண்டிருந்தபோது என் உடலில் ஒவ்வொரு ரோமமும் பற்றி எரிந்தது. உதை கொடுத்து உன் மண்டையை வயிற்றுக்குள் அமுக்கிவிடலாமா என்று நினைத்தேன். ஆனால் நீ என் சீடப் பிள்ளை. 'பாவம், அறியாப் பையன்' என்று மன்னித்து விட்டேன்."

நீண்டதொரு பெருமூச்சுடன் அவர் தம் பேச்சை முடித்தார். "சரி! நடந்தது நடந்தாயிற்று. இனி உன் நாவைச் சற்று அடக்கிக்கொள். தெரிந்ததா?"

இப்போதும் சின்ன வஸ்தாதுக்கு அர்த்தமற்ற சொற்குவியலின் மேல் தான் கிடப்பது போலும். பத்ரி பயில்வான்

சொல்வதெல்லாம் ஏதோ கனவிலே கேட்பதுபோலவும் தோன்றியது. "குருஜி! நீங்கள் பிராம்மணர், அவள் பனியா! நன்ருக யோசித்துச் சொல்லுங்கள். வைத்திய மகராஜ் முரண்டு பிடித்தால் இந்தத் திருமணத் திட்டம் எல்லாமே தவிடு பொடியாகிவிடும்" என்ருன்.

"யானை தன் வழியே நடக்கும். நாய் குரைத்துக்கொண்டிருக்கும்" என்ருர் பத்ரி பயில்வான்.

சின்ன வஸ்தாது கெஞ்சாத குறைதான். "குருஜி! நீங்கள் பாட்டுக்குப் பழமொழி பேசுகிறீர்கள். வைத்திய மகராஜ் இதற்கெல்லாம் இணங்கமாட்டார்" என்ருன்.

தம் உள்ளத்து ரகசியத்தைத் திறந்து காட்டியதில் பத்ரி பயில்வானின் மனம் இலேசாகிவிட்டதுபோல் தோன்றியது. இதற்கு அவர் மறுமொழி ஏதும் தரவில்லை. சீட்டியடிக்கலாஞர்.

சற்றுத் தூரம் நடந்தபின், சின்ன வஸ்தாதுவின் மூளையில் ஒரே சமயத்தில் பல விஷயங்கள் தம் முழுக் கனத்துடன் இயங்கியதும் பல விஷயங்கள் தெளிவாகின. ரூப்பன் பேலாவுக்குக் காதற் கடிதம் எழுதிஞன் என்று கொஞ்ச நாட்களுக்குமுன் வதந்தி பரவியது. பிறகு, வைத்தியர் வீட்டு மாடியில் யாரோ ஒரு பெண் இரவு வேளையில் வந்தாள். ரங்கநாத்தைக் கண்டதும் ஓடிவிட்டாள் என்ருெரு செய்தியும் காற்றுவாக்கில் பரவியதும் அவன் காதில் விழுந்தது. வைத்தியர் வீட்டு மாடியிலிருந்து எந்த எந்த வீட்டின் மாடிகளுக்குப் போகமுடியுமோ, அதில் கயாதீனின் வீடும் ஒன்று. ஒரு நாள் ரங்கநாத்திடம் ஒரு பெண் எழுதிய கடிதம் சிக்கியது. ஆனால் அதுபற்றி ரங்கநாத் எதுவும் பேசமாட்டேன் என்கிருன் என்றும், ஒரு நாள் ரூப்பன் அவனிடம் கூறியிருந்தான். ரூப்பன் பல நாட்களாகப் பேலாவைச் சுற்றி வலை வீசி வருகிருன். இப்போது கிட்டத்தட்ட சிக்கவைத்து விட்டரனே என்று அவனுக்குச் சந்தேகம். இந்த நிலையில் பத்ரி பயில்வான் கூறிய செய்தி, அதாவது பயில்வானுக்கும் பேலாவுக்கும் தொடர்பு உள்ளது என்ற செய்தி, மிக மிக ஆழமாகப் பாய்ந்ததும் உண்மையிலேயே அவன் கலகலத்துப் போய்விட்டான். இருந்தாலும் சமாளித்துக்கொண்டு, "குருஜி! பேலாவுக்கு ரூப்பன்பாபு ஏதோ எழுதிஞரென்று கேள்விப்பட்டேனே!" என்ருன்.

"ஆமாம். சின்னப் பிள்ளைதானே! ஏதோ அறியாமல் செய்து விட்டான்."

"அங்கிருந்து ஏதோ கடிதம் வந்ததாகவும் ' கேள்விப் பட்டேன்."

"யார் சொன்னது உனக்கு?" என்று கடுமையாகக் கேட்டார் பத்ரி பயில்வான்.

"யாரும் இல்லை, குருஜி!"

"பின் எப்படித் தெரிந்தது?"

"காதில் விழுந்தது."

"யார் சொன்னார்கள்?"

"நினைவில்லை. யாரோ, அப்படியே காற்றுவாக்கில்."

பத்ரி பயில்வான் பேசவில்லை. கைதேர்ந்த சாட்சி கோர்ட்டில் சத்தியப் பிரமாணம் செய்துவிட்டுக் குறுக்கு விசாரணையில், இவனிடம் கேள்வி கேட்பதில் அர்த்தமில்லை என்று நினைக்கும் படியாகச் செய்துவிடுவதுபோல், சற்று நேரம் மௌனமாகி விட்ட பத்ரி பயில்வான் தெளிவாகச் சொன்னார். "ஆமாம், கடிதம் வந்தது. எனக்குத்தான் வந்தது. ஆனால் அது கடிதம் அல்ல. இந்தக் காலத்துப் பெண்களின், கேலி, பரிகாசப் பாடல் அது."

சின்ன வஸ்தாது அவரைச் சற்றுக் குஷிப்படுத்தினான். "அப்படியானால் குருஜி, கதை ரொம்ப வருஷமா நடக்கிறதா? மாடியிலேயே........."

"இவ்வளவு பெரிய விஷயத்தை எல்லாருக்கும் முதலில் உன்னிடந்தான் கூறியிருக்கிறேன், இதுவே அதிகம். மேலும் அதிகம் கேட்காதே, இதை, இப்போதே போய் யாரிடமும் சொல்லிவிடாதே" என்றார் பத்ரி.

இருட்டில் சின்ன வஸ்தாது எந்த மேடையின்மீதோ இடித்துக் கொண்டான். வசவொன்றை உமிழ்ந்தான். இடுப்பில் வலித்தது. அந்த வலியை 'ஹோய்' என்ற முனகலுடன் வெளியிட்ட வாரே, "யாரிடமும் சொல்லமாட்டேன் குருஜீ" என்றான்.

"கொஞ்ச நாட்களுக்கப்புறம் தானே தெரியும். அதுவரை மூடி வைத்திரு."

"சொல்லிவிட்டீர்கள் அல்லவா குருஜி? யாரிடமும் சொல்ல மாட்டேன்."

சற்றுப் பொறுத்துப் பத்ரி பயில்வான் சிரித்தார். "டே? சின்னப் பயலே! நீதான் என்ன பிரமாதமாய் ஜோடி சேர்த் தாயடா? பேலா, ஜோக்நாத்திடமா உறவுகொள்ளுவாள்! கழுதை... எப்படி இருக்கிறாள்? பேலா கையைப் பிடித்தால்

ஆசாமி கதறிவிடுவான். அவனோடு போய்ப் பேலாவை இணைத் தாயே! நீ முட்டாளடா, முட்டாள்!" என்றார் சிரித்துக் கொண்டே.

சின்ன வஸ்தாதுவின் இடுப்பில் சுளீரென்று ஒரு வலி, யாரோ மீண்டும் 'தோபிகாட்' பிடியில் அவனை இரண்டாம் முறையாக மல்லாக்க வீழ்த்திவிட்டது போல் இருந்தது.

இருவரும் பிரியும்போது பத்ரி பயில்வான், தமக்கும் பேலாவுக்கும் உள்ள தொடர்பைப் பற்றி எங்கும் பிரஸ்தாபிக்க வேண்டாமென்று சின்ன வஸ்தாதுவை மீண்டும் ஒருமுறை எச்சரித்தார். சின்னவனும் மிகுந்த பயபக்தியோடு ரகசியத்தைக் காப்பாற்றுவதாக வாக்குக் கொடுத்தான். ராஜ பவனங்களில் எடுத்துக்கொள்ளப்படும் ரகசியக் காப்புப் பிரமாணம் போலிருந்தது அது. இதன் பலனை, மறுநாளே பத்ரி பயில்வான் தன்னை ஒரு தினுசாகப் பார்க்கும் பலரைச் சந்திக்க நேர்ந்தது.

# அத்தியாயம் 23

அந்தக் கிராமத்திலே துயரமே வடிவாக ஒரு பையன் இருந்தான். அவன் பெயர்தான் ரூப்பன். சில தினங்கள் முன்வரை அவனுக்கு மிகுந்த செல்வாக்கும் மரியாதையும் இருந்தன. ஏனென்றால் அவன் அப்பா வைத்திய மகாராஜ். இதைத் தவிர அவனுக்கும் தனக்கென்ற ஒரு பெயரும், செல்வாக்கும் இருந்தன. பத்தாவது வகுப்பில் பல வருஷங்களாக அவன் நீடித்துப் படித்தாலும், அவன்தான் மாணவர்களின் தலைவன். தாசில்தார் அவனுக்குத் தோழர், இன்ஸ்பெக்டர் அவனுடைய சபையின் அங்கத்தினர், பிரின்ஸ்பால் அவனுடைய ஆதீனத்துக்கு உட்பட்டவர். கல்லூரி ஆசிரியர்களின் விவகாரங்களையும் நடவடிக்கைகளையும் குறித்து அவன் பெரிதும் அதிருப்தியுற்றிருந்தான்.

ஆசிரியர்களும் அவனை, "பயானும் பயம். பீஷணம் பீஷணனும்" என்று, அப்பனுக்கும் அப்பனைக் கருதி வந்தனர். வீட்டிலும் அவன் சுறுசுறுப்பும் சுட்டித்தனமும் நிறைந்த ஒரு கன்றுக் குட்டியாகவே கருதப்பட்டான். 'நாட்டின் அரசியல் என்ற மேய்ச்சல் தரையில் இஷ்டம்போல் மேய்ந்து திரியும் புத்தி சாலிப் பிள்ளைகளைப்போல, ஒரு நாள் அவனும் மேயும் கலையில் வல்லவனாகிவிடுவான். தன் தந்தை இறந்ததும் இப்படி அப்படி ஆறு மாதம் ஒரு வருஷம் திரிந்த பிறகு, தன் தந்தையின் ஸ்தானத்தில் அமர்ந்து நிம்மதியாக அசைபோட ஆரம்பித்து விடுவான்' என்பதற்கான உறுதியான அறிகுறிகள் காணப் பட்டன.

சுமார் ஐந்து மாதங்களுக்கு முன் அந்த ஊருக்கு ஓர் இளைஞன் வந்தான். அவன் பெயர் ரங்கநாத். மக்கள் அவன் பெருமையை அறிந்து கொண்டிருந்தனர். ஏனென்றால் அவனு டைய மாமாவின் பெயர் வைத்திய மகராஜ்; தவிரவும் அவனுக் கென்று ஒரு சிறப்பும் இருந்தது. அதாவது, அவன் சரித்திரப் பாடத்தில் எம். ஏ. பாஸ் செய்திருந்தான். பார்ப்பதற்கு நன்றா கவும், நல்லவனாகவும் தோன்றினான். ஆனால் விரும்பினால் வக்கிரமாகவும் பேசுவான். கிட்டத்தட்ட ஒவ்வொரு படித்த இந்திய இளைஞனைப் போலவே அவனும் தனக்குத் தொடர் பில்லாத ஒவ்வொரு சம்பவத்தையும் எட்டி நின்று ஒரு சம்பவ மாகவே பார்த்தான். பிறகு அதை மறந்துபோனான். அதைப் பற்றிப் பின்னால் அதிகக் கவலையும் படவில்லை. சரித்திரப் பாடம் படித்திருந்ததால், அரசயல், சமூகச் சுரண்டல்கள், துன் பங்கள் பற்றிய கதைகள் நிறையத் தெரிந்திருந்தன. எனினும் 'தானும் சரித்திரத்தின் ஓர் அங்கந்தான். விரும்பினால் சரித் திரத்தை மாற்றி அமைக்கவும் அதை நாசமாக்கவும் தன்னால் இயலும்' ஏன்பதைப் பற்றி அவன் யோசித்துப் பரர்த்ததே இல்லை. அவன் மூளைக்கு இந்த விஷயம் எட்டியதாகவும் தெரியவில்லை. நாட்டில் 95 சதவீத அறிவு ஜீவிகளில் அவனும் ஒருவனாக இருந்தான். எந்த அறிவு ஜீவிகள் தம் அறிவைப் பற்றிச் சுய திருப்தி அடைந்து வந்தார்களோ, எந்த அறிவு அவர்களுக்குத் தர்க்க ஞானத்தை அளித்ததோ, 'பிறர் என்ன செய்யவேண்டும்? என்ன செய்யக்கூடாது' என்று பிரசங்கம் செய்யும் திறமையை அளித்ததோ, அந்த அறிவு, 'தாங்கள் என்ன செய்யவேண்டும், என்ன செய்யக்கூடாது? தங்களுக்கும்

சில பொறுப்புகள் உள்ளன' என்பதை உணராதபடி அவர்களை வெகுதூரம் விலக்கி வைத்திருந்ததோ அவர்களில் ரங்கநாத்தும் ஒருவன்.

ரூப்பன் என்ற பெயருடைய அந்தப் பிள்ளை, தற்போது மிகுந்த துயரமடைந்திருந்தான். ஏனென்றால் சில நாட்களாக அரசியலில், தனக்குப் பிடித்தவர்கள், பிடிக்காதவர்கள் என்று தன் சொந்த விருப்பு, வெறுப்பை அதில் நுழைக்க ஆரம்பித்திருந்தான். இதனால் இதற்கு முன்னால் அவனுக்குப் புலனாகாத பல தீமைகள், மோசமான அம்சங்கள், இப்போது ஒரு பந்து போல் உருண்டு திரண்டு அவன் கண்முன்னே தோன்றலாயிற்று. முதலில் கல்லூரி பிரின்ஸ்பாலைத் தன் தந்தையின் அடிமை என்று நினைத்திருந்தான். இப்போதோ, அவர் வெறும் முட்டாள், பிடிவாதக்காரர், மற்ற ஆசிரியர்களிடம் தமக்குள்ள துவேஷத்தையும், வெறுப்பையும் காட்டத் தன் தந்தையைத் தம் கட்சிக்குள் இழுப்பதாகத் தோன்றியது. சில ஆசிரியர்கள் முட்டாள்கள், ஒன்றும் தெரியாதவர்கள் என்று முதலில் தோன்றியது. இப்போதோ. அவர்கள் ஒன்றும் தெரியாதவர்களாய் இருந்தாலும், 'போக்கிரிகள் அல்ல, அவர்களைக் காப்பாற்றவேண்டும்' என்று தோன்றியது. சில நாட்களுக்கு முன் வரை பத்ரி பயில்வான் உடல் வலிமைக்கே ஓர் எடுத்துக் காட்டாக விளங்கினார். அந்த வலிமையே ஓர் அகங்காரமாகவும் இருந்தது. ஆனால் தற்சமயம் அக்கம்பக்கத்து ஜில்லாக்களிலிருந்து வந்து பத்ரி பயில்வானைச் சந்தித்துப் பேசிவிட்டுப் போகும் குண்டர்களிடம் கவனம் சென்றது. உள்ளத்தின் எந்த ஆற்றாமையினால், வேதனையினால் விபீஷணனும், டிராட்ஸ்கியும், சுபாஷ் சந்திரபோசும் உலகத்துக்கு எதையோ சாதித்துக் காட்ட விரும்பி, முடிவில் தூக்குமேடைக்கும் ஜெயிலிக்கும் போனார்களோ, அல்லது ஜயப்பிரகாஷ் நாராயண், அச்சுதபட்டவர்த்தன்போல் கடைசியில் சந்நியாசம் மேற்கொண்டார்களோ அதைப் போன்ற மன நிலையில் தான் ரூப்பனும் இருந்தான்.

இன்னொர் இளம் காளையும் மனம் வெதும்பிக்கொண்டு கிடப்பதைக் கடந்த ஐந்து மாதங்களாக அவன் கண்கூடாகப் பார்த்தான். வேடிக்கையாக ஆரம்பித்த விளையாட்டில், கை கால்கள் முறிந்தன. சிரித்துக்கொண்டே பிறர் கண்களில் தூவிய மண்ணினால் அவரவர் கண்களே குருடாகிவிட்டன. இவற்றை எல்லாம் பார்த்தாகிவிட்டன.

சனிஸ்வரனைப் பஞ்சாயத்துத் தலைவனாக்கியது, சின்ன வஸ்தாது, ஜோக்நாத்துக்கு விரோதமாகச் சாட்சி சொல்லப் போனது எல்லாமே விளையாட்டாகத்தான் ஆரம்பித்தது. சனிஸ்வரன் உண்மையிலேயே பஞ்சாயத்துத் தலைவனாகி விட்டதையும், சின்ன வஸ்தாது சிரித்துக்கொண்டே ஜோக்நாத்தைச் சிறையிலிருந்து விடுவித்துக்கொண்டு வந்து விட்டதையும் பார்த்ததும் ரங்கநாத்துக்கு ஒரே அதிர்ச்சியாக இருந்தது. சனிஸ்வரன் வெற்றி பெற்ற தினத்தன்று அவன் பெரிதும் கவலையுற்றான். ஒவ்வொரு ராஜ்யத்திலும் எத்தனை வைத்திய மகராஜ்கள், மந்திரிகள், முக்கிய மந்திரிகளின் வரிசைகளில் இடம்பெற்றுள்ளார்களோ, அத்தனை சனிஸ்வரன்கள் இடையே நுழைந்திருக்கிறார்கள் என்பதும் தெளிவாகப் புலனாகியது.

ரூப்பன் என்ற பெயருடைய இளைஞனுக்கு மனக்குழப்பம் ஏற்பட்ட தினத்தன்று, இன்னுமொரு சம்பவமும் நடந்தது. ஆனால் அந்தச் சம்பவத்துக்கும் மனக் குழப்பத்துக்கும் தொடர்பு ஏதும் இல்லை. அந்த இளைஞனுக்கு வெகு நாட்களாகவே ஒரு பெண்ணின் தேவையிருந்தது. இதை உணர்ந்ததும் அவன் தவறாகத் தனக்குப் பேலாதான் தேவை என்று நினைத்துவிட்டான். இதன் பிறகு, தனது இந்த ஆசைக்கும் புழு, பூச்சி, பறவைகள், மிருகங்களின் இடையே அதற்குரிய பருவகாலங்களிலும், மனிதர்களுக்கோ காலம் நேரம் இல்லாமல் எப்போதுமே கிளைத்துவிடும் அந்த உடற் பசிக்குக், 'காதல்' என்று பெயரிட்டுவிட்டான். நமது அகராதியில் இது கவிதை மயக்கத்தில் வந்த சொல்லாக இருக்கலாம். தான் பேலாவைக் காதலிப்பதாக அவன் நினைக்கத் தொடங்கிவிட்டான். உள் விஷயங்களைப்பற்றி அதிகம் தெரியாத காரணத்ினால் அவளும் தன்னைக் காதலிப்பாள், காதலிக்கக்கூடும் என்று நினைத்துவிட்டான். இதன் பிறகுதான் அவன் பேலாவுக்கு ஒரு காதற் கடிதம் எழுதினான். பேலா இதற்குப் பதில் எழுதவில்லை. ஆனால் இதற்கு பதிலாகப் பல இடங்களில் அவன் பலவிதமாகப் பதில் சொல்ல நேர்ந்தது. பதில் கூறுகையில் அவன் தன் முறுக்கைத் தளரவிடவில்லை என்றாலும் உள்ளுக்குள்ளேயே மிகவும் வெட்கிப் போனான். கன்னா மாஸ்டர், பேலாவுக்கும் பத்ரி பயில்வானுக்குமிடையேயுள்ள 'தொடிசு' பற்றிக் குறிப்பிட்டு, பத்ரி அவளைத் திருமணம் செய்துகொள்ளப் போவதாகக் கூறியதும், அவன் மனத்தில் பெருத்த சஞ்சலம்

ஏற்பட்டது. அந்த மனக்குழப்பம், பிரின்ஸ்பால், வைத்தியர், பத்ரி பயில்வான், சனிஸ்வரன் யாவரையும்பற்றி முற்றும் மாருன எண்ணங்களை ஏற்படுத்திவிட்டது. இது வரை யதார்த் தத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தான். இப்போதோ, அவன் வாழ்க்கையில் யதார்த்தத்தின் தரிசனமே ஆரம்பித்து விட்டது.

ரூப்பனுடன் கூட மற்றப் பையன்களுக்கும், சுரண்டல், அநியாயங்களைப் பற்றிய கதைகளைத் திரும்பக் கூறிக்கொண் டிருப்பதால் பயன் இல்லை என்பதை உணர்ந்தனர். எல்லா வேதங்களையும், உபநிஷத்துக்களையும், புராணங்களையும் சுமக்கும் கழுதை, அகில உலக வித்வத் பரிஷித்தின் தலைவ ராலுலுங்கூட மனிதனுக முடியாது. மனிதனுவதற்கு அறிவுச் செல்வத்தை, கழுதையாகப் பொதி சுமந்தால் மட்டும் போதாது. இன்னமும் வேறு எதுவோ செய்தாகவேண்டும் என்பதையும் அவர்கள் உணரலாயினர்.

கன்னு மாஸ்டர் பத்ரி பயில்வானுடைய காதல் விவகாரம் பற்றிச் சொல்வதற்கு முன்பே ரூப்பனிடம் இன்னொரு விஷயத் தையும் சொல்லி இருந்தார். இந்தச் சம்பவம், ஹோலிக்கு மூன்று நாட்களுக்குப் பிறகு நடந்தது. இரவில் சந்திரோதயம் ஆனபிறகு, பாதையோரத்தில் ஒரு பாலத்தின் கைப்பிடிச் சுவற்றில், அதாவது சிலநாட்களுக்கு முன் ரங்கநாத், ரூப்ப னிடம் அன்று இரவு மாடியில் நடந்த சம்பவத்தைக் கூறிய அதே இடத்தில் கன்னு மாஸ்டருடன், மாளவியா அமர்ந் திருந்தார். ஹோலிப் பண்டிகையின் கொண்டாட்டத்தில் இடை விடாமல் பங்கி பானம் செய்ததின் விளைவாக ரூப்பன் மிகவும் தளர்ந்துபோயிருந்தான். தளர்ச்சியைப் போக்கிக்கொள்வதற் காக, மீண்டும் பங்கி அருந்திவிட்டு ரங்கநாத்துடன் உலாவப் புறப்பட்டிருந்தான். பாலத்தின்மீது இருவர் அமர்ந்திருப்பதைக் கண்டதும் தனது இயல்பான சுபாவப்படி, "யாரது?" என்ருன்.

"யார்? ரூப்பன் பாபு! நமஸ்காரம் ரங்கநாத்ஜீ! நான்தான் கன்னு!" என்ற பதில் வந்தது.

"இன்னொருவர் யார்?"

"நான்தான் மாளவியா, நமஸ்காரம் ரூப்பன்பாபு! வாருங் கள், உட்காருங்கள்."

தன் ஆசிரியரின் வணக்கத்துக்குச் சம்பிரதாயமான பதிலைக் கூறிவிட்டு ரூப்பனும் பாலத்தின்மீது அமர்ந்தான். ரங்கநாத்

இன்னொருபுறம் உட்கார்ந்துகொண்டான். இந்த நான்கு பெரிய மனிதர்களின் கூட்டம் ஆரம்பமாயிற்று.

இரவு கிட்டத்தட்ட ஒன்பது மணி இருக்கும். ஆனால் எங்கும் சந்தடி அடங்கவில்லை. தாலுக்கா ஆபீஸுக்கு முன்னால் வெற்றிலை பாக்குக் கடையில் பாட்டிரியில் இயங்கும் ரேடியோ இன்னும் ஒலித்துக்கொண்டிருந்தது. திரைப்படப் பாடல்கள் என்ற சாக்கடையிலிருந்து, 'ஆசைகள், காதலனே, அழகிய மந்திரவாதியே, உன் பார்வை, என் இலட்சியம், நீ எங்கே! நெஞ்சம், மது, நெஞ்சோடு அணைத்துக்கொள்! புன்சிரிப்பு, நெருப்பு, வாழ்க்கை, சாவு, இரக்கமற்றவனே, சித்திரம், வெண்நிலவு, வானம், இன்பக் கனவு, போதை, ...' ஆகிய சொற்கள், பட்டினிவால் வாடிக் கொண்டிருக்கும் நாடுகளில் புத்தெழுச்சியின் செய்தியைப் பரப்ப முற்றிலும் பொருத்த மானவை என்ற முறையில் சரமாரியாக வந்து விழுந்துகொண் டிருந்தன. இந்தச் சாக்கடை அருவியாகக் கொட்டும் ஓசை, வெகுதூரம்வரை பரவிக்கொண்டிருந்தது. காற்றிலே கலந்து இந்தப் பாலம்வரை வந்து, காதிலே மோதிக்கொண் டிருந்தது. அக்கம்பக்கத்தில் ஊளையிட்ட நரிகள், தங்களிடம் இன்னமும் ஒரு சமூகமாக ஒன்றி வாழும் வலிமை இருக்கிற தென்பதை ஊர்ஜிதப்படுத்திக்கொண் டிருந்தன. கிராமத்தின் சுற்றுப் புறத்திலுள்ளள காடுகள் வெட்டப்பட்டுவிட்டதால், தங்கள் நாட்டைவிட்டு விரட்டப்பட்ட யூதர்கள் போல், மீண்டும் எங்கே யாவது குடியேறுவதற்காகக் கிளர்ச்சி செய்யப்போகிறோம் என்பதை அறிவித்தனவோ என்னவோ? டிரக்கின் கடமுடா ஓசை, ஹார்னின் ஒலி, எழுபது மைல் வேகத்தில் நகரத்தை நோக்கிப் பறக்கும் அதன் வேகம் இவை யாவும் இந்தச் சத்தங்களையெல்லாம் அமுக்கிவிடுவதுபோல் ஒலித்தன.

இரவாகிவிட்டது. நகரத்தில் ஏதாவதொரு மலிவான 'பார்'ரில் 'ரம்' காலிபட்டிகள் உருண்டோடிக்கொண் டிருக்கும். ஏதாவதொரு கடையில் மாமிசமும், சூடான தண்டூரி சப்பாத்தி யும் தயாராகிக்கொண் டிருக்கும். எங்கேயாவது ஒரு சிறுக்கி, பீடியைப் புகைத்தவாறே என்னை எதிர்பார்த்துக் கொண்டிருப் பாள். இந்தமாதிரி கற்பனைகள் நூற்றுக் கணக்கான மைல்கள் தூரத்திலிருந்து வரும் டிரக் டிரைவர்களின் ஆவலைக் கிளறி விட்டுக் கொண்டிருந்தன. கால்கள் ஆக்ஸிலரேடரை முழு வேகத்துடன் மிதித்தன. இதன் பலன் ஐந்து நிமிஷங்களுக்

கொருமுறை ஒரு டிரக் பாலத்தை முழு வேகத்துடன் கடந்து செல்ல, பாலத்தின் கைப்பிடிச் சுவற்றிலே வீற்றிருந்த நான்கு மகா புருஷர்களும் மூச்சைப் பிடித்துக்கொண்டு அது மேலே விரைந்ததும், "அப்பாடா, பிழைத்தோம்" என்று நிம்மதியாக மூச்சைவிட்டுப் பேச்சை மேலே தொடர்ந்து கொண்டிருந்தனர்.

இத்தனை இடையூறுகளுக்கும், இடைஞ்சல்களுக்கும் இடையே சம்பாஷணை தொடர்ந்து நடைபெற்றுக்கொண் டிருந்தது. கன்னு மாஸ்டர் துயரம் மிகுந்த குரலில், ரூப்பனையும், ரங்கநாத்தையும் தமக்கு உதவும்படி கேட்டுக்கொண்டார். அவர் தம் ஜேபியிலிருந்து ஒரு காகிதத் துண்டை எடுத்து ரூப்பனின் முன் நீட்டி, "இதைப் படித்துப் பாருங்கள். உங்கள் பிரின்ஸ்பால் எழுதியிருக்கிறார்" என்றார்.

"என்னால் இருட்டில் படிக்க முடியாது. நீங்களே படித்துக் காண்பியுங்கள்." என்றான் ரூப்பன்.

கன்னு மாஸ்டர் வாய் மூலமாகவே அதில் எழுதியிருந்ததின் சாராம்சத்தைக் கூறினார். மாளவியாவின் நடத்தை பற்றிய விஷயம் அது. அந்தக் கடிதத்தில் கூறியிருந்த விஷயத்தை நம்பவேண்டுமென்றால், மாளவியாவுக்குத் தம் மாணவர்களின் மீது காதல் என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். சில மாணவர் களுடன் அவரது நேசம் முற்றும் சரீரத் தொடர்புடையது. அந்தக் கடிதத்தில் பல சம்பவங்கள் குறிப்பிடப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்று, மாளவியா யாரோ ஒரு மாணவனைத் தம் முடன் நகரத்துக்கு அழைத்துச் சென்று, சினிமாவுக்கு அழைத்துப் போய்க் காண்பித்த பிறகு, இரவை அவனுடன் கழித்தார். வரப்போகும் பரீட்சையின் கணக்கு வினுத்தாளையும் அவனுக் குக் கூறினார். பிறகு சிவபால்கஞ்சிற்குத் திருப்பி அழைத்துவந் தார். இந்தக் கடிதம், இலக்கிய நோக்குடன் அல்லாமல், மக் களுக்கு உண்மைச் சம்பவத்தைப் புலப்படுத்தும் நோக்கத் துடன் எழுதப்பட்டிருந்ததால் அதன் வர்ணனை, நடை முதலியன அப்பட்டமாகவும், சில இடங்களில் பாமரத்தனமாகவும் கூட இருந்தன. இந்தத் துண்டுப் பிரசுரத்தில் பிரின்ஸ்பால், மானே ஜர் இருவரிடமும், இத்தகைய ஆசிரியர்களைக் கல்லூரியிலிருந்து காதைப் பிடித்து முறுக்கி வெளியேற்றவேண்டும் என்று வேண்டுகோள் வெளியிடப் பட்டிருந்தது.

கன்னு மாஸ்டர் ரூப்பனிடம் கேட்டார். "இதற்குப் பின்னும் நாங்கள் சும்மா இருக்கவேண்டுமென்று நீ விரும்புகிறாயா?

பிரின்ஸ்பாலுக்கு விரோதமாக எதுவுமே கூறக்கூடாது என்று நினைக்கிறாயா?''

பங்கியின் போதையில் ரூப்பன் வினவினான்: "என்ன செய்யலாம் என்ற எண்ணம்?''

"இந்தத் துண்டுப் பிரசுரத்தை அச்சடித்தது பிரின்ஸ்பால் தான் என்பதற்குரிய அத்தாட்சிகளெல்லாம் எங்களிடம் தயாராக உள்ளன. மான நஷ்ட வழக்குப் போடப் போகிறோம்.''

"ரொம்பவும் அவமானமான விஷயம் "என்றான் ரங்கநாதன்.

ரூப்பன் அலட்சியமாக, "இதோ பாருங்கள்! ஒரு காலத்தில் மாளவியாஜியைப் பற்றி இத்தகைய வதந்திகள் உலவியது என்னவோ உண்மை. மாளவியாஜி தன்னைச் சினிமாவுக்கு அழைத்துச் செல்வதாய்க் கூறியதாக ஒரு பையனே என்னிடம் கூறியிருக்கிறான்.''

விசித்திரமான ஒரு சத்தம் அவன் பேச்சினிடையே குறுக்கிட்டது. மாளவியா மூக்கைச் சிந்திக்கொண்டிருந்தார். அப்போதுதான், மாளவியா நெடு நேரமாய்ச் சத்தம் இல்லாமல் அழுதுகொண்டிருப்பது தெரிந்தது

"இது .... இதுதான் 'கேரக்டர் அசாசினேஷன்' என்பது'' என்று ஆவேசத்துடன் கூறினார் கன்னா. "கண்ணியமான மனிதனை இம்மாதிரி அவதூறுக்குள்ளாக்குவது எத்தனை பெரிய தவறு? உன்னிடம் அநுதாபத்தை எதிர்பார்த்தோம். நீயும் இப்படிப் பேசுகிறாய்.''

"நான் கேள்விப்பட்டதைக் கூறினேன். அவ்வளவுதான்'' என்றான் ரூப்பன் நிர்த்தாட்சிண்யமாக. "ஆசிரியர்கள் இப்படியெல்லாம் நடந்துகொண்டுதானே இருக்கிறார்கள்? இந்தக் குற்றச்சாட்டு உண்மையானதாக இருந்தாலும் ஒன்றும் புதியது அல்லவே. ஆனால் இம்மாதிரி துண்டுப் பிரசுரம் வெளியிடுவதை நான் கடுமையாக ஆட்சேபிக்கிறேன். நீங்கள் நிம்மதியாக இருங்கள். நான் இதைப் பகிரங்கமாக எதிர்க்கப் போகிறேன்.''

கன்னா மேலும் கொதிப்படைந்தார். "ரூப்பன் பாபு! மீண்டும் அதையே சொல்லுகிறாயே. இதை நான் ஆட்சேபிக்கிறேன். மாளவியாவுக்கு எதிராக இது முற்றும் பொய்யான பிரசாரம். இவரை மானபங்கப்படுத்துவது! யார் யாரைப் பற்றி வேண்டுமானாலும், எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம் என்பதால் அது உண்மையாகி விடமுடியுமா?''

அவர் மேலும் தொடர்ந்தார். "சொல்லவேண்டுமானால் ... இப்பொழுது பத்ரி பயில்வானைப் பற்றியுந்தான் ஊரெல்லாம் பேசிக்கொள்கிறார்கள். எப்படியெல்லாம் கண்டபடி பேசுகிறார் கள் தெரியுமா? ஆனால் நான் அவற்றை நம்பவில்லை."

"பத்ரி அண்ணாவைப் பற்றி என்ன பேசிக்கொள்கிறார்கள்?" என்று வினவினான் ரங்கநாத். பிறகு கன்னாமாஸ்டர் சுற்றி வளைத்துப் பத்ரியின் காதல் விவகாரத்தைப் பற்றிக் கூறினார். இதை அவருக்கு ஒரு மாணவன் கூறினானாம். அந்த மாணவ னிடம் சொன்னது சிலம்பக் கூடத்தின் ஒரு பயில்வானாம். அந் தப் பயில்வானுக்கு யார் கூறினார்களோ தெரியாது. கன்னாமாஸ் டர் கூறிய செய்தியில் மற்ற விவரங்களோடு இன்னுமொரு புதிய செய்தியும் இருந்தது. அதாவது, பெண்ணுக்குத் திரு மணம் ஆகாமலேயே இன்னும் ஏழெட்டு மாதங்களில் கயாதின் தாத்தா ஆகப்போகிறார்.

பலமான அதிர்ச்சி தரும் செய்திதான். ரூப்பன், நல்ல வேளை, பாலத்திலிருந்து விழாமல் தப்பித்தான். "பங்கியின் போதை" என்று கூறி ரங்கநாத் நிலைமையைச் சமாளித்தான். ஆனால் ரூப்பன் உண்மையிலேயே கலகலத்துப் போய்விட்டான் என்பது தெளிவாகத் தெரிந்தது. சற்று நேரம் கழித்து ரூப்பன் தன்னை ஒருவாறு சுதாரித்துக்கொண்டதும் இதுவரை புலனாகாத பல விஷயங்கள் பளிச்சென்று தெரிந்தன. இப் பொழுது கொஞ்ச நாட்களாகவே, மாடியில் கசரத் செய்யும் போது, பத்ரி பயில்வான் மாடியிலேயே நெடுநேரம் இருக்கிறார் என்பது மட்டும் அல்ல; மாடிப்படிக் கதவையும் உட்புறம் தாளிட்டுக் கொண்டுவிடுகிறார். தவிர, அன்று ரங்கநாத் மாடி யில் தனியாகப் படுத்திருந்தபோது வந்த பெண் யார் என்ப தும் இப்பொழுது புரிந்துவிட்டது.

நிஜமாகவே ரூப்பன் இப்போது பங்கி போதையின் உஷ் ணத்தை உணரலானான். குழப்பம் அடைந்தவனாய் இங்கும் மங்கும் பார்த்தான். ரங்கநாத்தும் கன்னாமாஸ்டரும், மிக மும்முரமாக, பிரின்ஸ்பால் மற்றும் அவருடைய சகாக்களுக்கு எதிராக 107-ஆம் பிரிவின்படி நடக்கும் வழக்கைப் பற்றிச் சர்ச்சை செய்துகொண் டிருந்தனர். கன்னாமாஸ்டர், 'தன்னி ரக்கம்' என்ற மகா காவியத்தில் ஒரு புதிய அத்தியாயத்தை எழுதத் தொடங்கி இருந்தார். ரூப்பன் சற்று நேரம் மௌன மாய் அமர்ந்து அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தான்.

கன்றுமாஸ்டர் முன்னை விட இளைத்துவிட்டார் என்பதை ரூப்பன் கவனிக்கத் தவறவில்லை. மாளவியா பேசாமல் உட்கார்ந்திருக்கவில்லை; மௌனமாய்க் கண்ணீர் வடித்த வண்ணம் இருந்தார்.

ரூப்பனுக்கு ஆத்திரமாய் வந்தது. ஆனால் எதன்பேரில், யார் மீது என்பதுதான் தெளிவாகவில்லை. இந்த ஆசிரியர்கள் மீதும், ஏன் தன் மீதே கூட இரக்கமாக இருந்தது. பிரின்ஸ்பாலை வாய்க்கு வந்தபடி திட்ட ஆரம்பித்தான் ரூப்பன். ரங்கநாத் அவனைச் சமாதானப்படுத்தியவாறு மற்றவர்களிடம், "ஒன்றுமில்லை, பங்கியின் போதை" என்று விளக்கியதும் ரூப்பன் அவன் மீது எரிந்து விழுந்து அவன் வாயை அடைத்துவிட்டான்.

நகரத்தின் ஒரு கோடியில் உயர்ந்த மதிர்ச் சுவர்களால் சூழ்ந்த ஒரு பெரிய விசாலமான பங்களா இருந்தது. அதன் தோற்றத்தைப் பார்த்தாலே அது யாரோ ஒரு ஜமீந்தாருடைய பங்களா என்று தெரியும். ஜமீந்தாரி முறை ஒழிந்ததுமே அந்தப் பங்களாவை, அந்த ஜமீந்தார், இந்தப் புதிய யுகத்தின் ஜமீந்தார் ஒருவருக்கு வாடகைக்கு விட்டிருந்தார்.

பங்களாவின் ஒரு கோடி அறையில் ஜில்லாக் கல்வி அதிகாரியின் காரியாலயம் இருந்தது. அதைத் தவிர மற்றப் பங்களா முழுவதும் அவருடைய வாசஸ்தலமாக விளங்கியது. அவர் வசித்து வந்த இடம் முழுவதற்குமாக — அதைக் காரியாலயம் என்று கருதிச் சர்க்கார் அதற்குரிய வாடகையைக் கொடுத்து வந்தது. காரியாலயத்துக் குரிய வாடகை முழுவதையும், ஜில்லா அதிகாரி, தம் வீடு என்ற பெயரில் கொடுத்துவந்தார். இப்படிப்பட்ட இணக்கமான ஒப்பந்தத்தை ஆங்கிலத்தில், 'ஆபீஸ் கம் ரெசிடென்ஸ்' என்று சொல்லுவதுண்டு.

காரியாலயத்திலிருந்து, அதாவது. அந்த மூலையிலிருந்த அறையிலிருந்து, வைத்தியர், பிரின்ஸ்பால், ரூப்பன் மூவரும் வெளியே வந்தனர்.

வெளியே இருந்து பார்த்தபோது யாரோ மூன்று திருடர்கள், பங்களாவுக்குள்ளே தங்களது கைவரிசையைக் காட்டிவிட்டு, குளியலறை வழியாக வெளியேறிக் கொண்டிருப்பது போல் தோன்றியது. பத்தடி நடந்த பின் அவர்களது நடைவேகம் மட்டுப்பட்டது. சுற்றும் முற்றும் பார்வையை அலையவிட்டவர்களாய், புல் தரையின் நீள அகலத்தையும் தோட்டத்

தின் அழகையும் பார்த்தார்கள். போர்டிகோவின் பக்கம் பார்வையைத் திருப்பிய ரூப்பன், "இன்ஸ்பெக்டர் சாகப்பின் கார் ரொம்ப மோசமாகிவிட்டது" என்றான்.

மேலெழுந்தவாரியாகப் பார்த்த பிரின்ஸ்பால், "பிரயாணப் படி குறைக்கப்பட்டு விட்டது போலிருக்கிறது" என்றார்.

"அப்படியா?" என்ற ரூப்பன், லான், தோட்டம் கட்டடம் எல்லாவற்றையும் நோட்டம் பார்த்தவாறே, "எப்படி இருந்தாலும் பிரமாதமான ஆடம்பரம் இவை எல்லாம், அதுவும் இனமாக" என்றான்.

வாயிலின் அருகே ஒரு பியூன் நின்றான். பிரின்ஸ்பாலைக் கண்டதுமே அவன் முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக்கொண்டான். பிரின்ஸ்பாலும் தம் முகத்தை ஒரு மாதிரியாக்கிக் கொண்டு தலையை மேலும் கீழும் ஆட்டினார். பியூன் இப்போது ஒரு தினுசாக முகபாவத்தை மாற்றிக்கொண்டதும் பிரின்ஸ்பால் ஜேபியிலிருந்து ஓர் எட்டணாவை எடுத்து நீட்டியவாறே, "என்னப்பா? இனிமேல் தினம் தினம் கேட்பாயா?" என்றார். பியூன் மரியாதையுடன் பதில் அளித்தான்: "நீங்கள் கொடுப்பதைச் சாப்பிடுகிறேன்."

"அதில் என்ன சந்தேகம்?" என்றான் ரூப்பன். வைத்தியர் ரூப்பனை முறைத்துப் பார்த்துவிட்டு மௌனமாய்ச் சாலைக்கு வந்து விட்டார். ரூப்பன் இதனால் பாதிக்கப்பட்டதாகவே தெரியவில்லை. பிரின்ஸ்பாலிடம், "இப்படிப்பட்ட சமயங்களில் இரண்டணாவுக்கு மேலே கொடுக்கக் கூடாது. இரண்டணாவுக்கு இரண்டு பீடா வருதே! இனமாக இவ்வளவா?" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

ஆங்கிலேயர்கள், 'சிவில் லைன்ஸ்' என்று பெயரிட்டு, தமது வாரிசுகளுக்கும், தத்துப் புத்திரர்களுக்கும் வழங்கிவிட்டுச் சென்றிருந்த பகுதி அது. பாதையிலே போக்குவரத்து மிகவும் குறைவு, நெரிசலும் கிடையாது. சிற்சில சமயம், பளபள வென்ற கார், அது சர்க்கார் பணமோ, கடனை வாங்கியதோ, சும்மா கிடைத்ததோ, கம்பீரமாக வழுக்கிக்கொண்டு ஓடும். பாதசாரி, தனது அதிர்ஷ்டத்தினாலும், கடவுளின் அருளினாலும் தான் தப்பியதை நினைத்துப் பெருமிதம் அடைந்தவனாய்ப் பாதையோரத்துக்கு ஒதுங்கிப் போய்விடுவான். சில சமயம் சில ஒட்டை வண்டிகளும், உண்மையில் தனியார் வண்டிகளாகவே இவை இருக்கும், போதிய 'படி' கிடைக்காததால்,

இளைத்து மெலிந்திருக்கும்; 'அனிமியா' வியாதிக்காரர்களைப் போல் தோன்றும். இவை 'கடபுடா' வென்ற ஓசையை எழுப்பிக் கொண்டு மெதுவாகச் செல்லும்.

மாலை சுமார் நான்கு மணி இருக்கும். சர்க்காரின் நாலாந் தர ஊழியர்கள் தங்கள் அதிகாரிகளின் குழந்தைகளைத் தங்கள் சைக்கிளில் ஏற்றிக் கொண்டு, கிர், கிர் என்று ஓசை எழுப்பிய வண்ணம் சென்று கொண்டிருந்தனர். ஆங்கில முறைப் பள்ளிகளிலிருந்து குழந்தைகள் வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். எல்லாக் குழந்தைகளுக்குமே வீட்டுக்கு விரைந்து சென்று ஒரு மகத்தான சேதி சொல்லவேண்டியிருந்தது. "உன் மம்மி உனக்கு இன்னொரு டிராயிங் நோட்டு வாங்கித் தராவிட்டால் உனக்கு நாளைக்குப் பனிஷ்மெண்ட் கிடைக்குமாக்கும்" என்று இரு குழந்தைகள் விவாதித்துக் கொண்டே சென்றனர். ஒரு குழந்தை சைக்கிளின் முன் பக்கத்திலும், இன்னொரு குழந்தை பின்னால் கேரியரிலும் உட்கார்ந்திருக்க, யூனி..பாரம் போட்ட பியூன் சைக்கிளை ஓட்டிச் சென்று கொண்டிருந்தான்.

இவ்வளவு நேரத்துக்குப் பிறகு, இப்போது தான் வைத்தியர் வாயைத் திறந்தார். குரல் கம்மியிருந்தது. "இந்தக் குழந்தைகளின் கல்வியைப் பாருங்கள். நம்முடைய கிராமத்துப் பள்ளிகளின் குழந்தைகளுக்கும் இவர்களுக்கும் எத்தனை வித்தியாசம்?"

பிரின்ஸ்பாலின் இரு கரங்களும் பான்ட்டின் ஜேபிக்குள் சென்று விட்டன. அவரது சின்ன வாய் பெரியதனமாக எதையோ கூறுவதற்குத் தயாராகிவிட்டது. "இப்பொழுது முடியாவிட்டாலும் அடுத்த ஜூலைக்குள்ளாவது நமது கல்லூரியிலும் பையன்கள் யூனி..பாரம் அணிய வேண்டும் என்பதை அமலாக்கி விடவேண்டும்" என்றார்.

"மிக நல்ல யோசனை" என்றார் வைத்தியர். ரூப்பன் பின்னாலிருந்து கேட்டான். "எந்த யூனி..பாரம்? இந்தப் பியூன் போலவா? அல்லது அந்தக் குழந்தைகளுடையது போலவா?"

"ரூப்பன் பாபு! நான் பக்கா சோசலிஸ்ட். இரண்டையும் ஒன்றாகத்தான் கருதுகிறேன்" என்றார் பிரின்ஸ்பால்.

"நான் உங்களையும் சேர்த்து மூவரையும் ஒன்றாகக் கருதுகிறேன்" என்றான் ரூப்பன்.

இதற்குப் பிறகு மூவரும் சற்று நேரம் மௌனமாகவே நடந்தனர்.

"இன்ஸ்பெக்டரின் வீட்டிலிருந்து பீப்பாய் திரும்பி வரவில்லை" என்றார் பிரின்ஸ்பால்.

கம்பீரமாய் நடந்துகொண்டிருந்த வைத்தியர் ஏதோ யோசித்தவராய், "நெய் கிட்டதட்ட பத்து சேராவது இருக்கும் இவ்வளவு நெய் கொடுத்த பிறகு பீப்பாயைப் பற்றி என்ன வருத்தம்?" என்றார். பிரின்ஸ்பால் சிரித்தார். "சரி! விடுங்கள், மாடு போன பிறகு கயிற்றைப்பற்றி வருத்தம் என்ன?"

"அதுதானே?" என்ற வைத்தியர், கம்பீரத்துடன் கதை அளக்க ஆரம்பித்தார். "யானையைத் தானம் செய்தபின் அங்குசத்தைப் பற்றிச் சண்டையா? ராமர் விபீஷணனுக்குப் பட்டம் கட்டிய பிறகு ஜாம்பவான் சொன்னான், 'மகாராஜா! ஒரு தங்க மாளிகையாவது நீங்கள் வைத்துக் கொண்டிருக்கலாம்' என்று. இதற்குப் புருஷோத்தமரான ராமசந்திர பிரபு சொன்னாராம். 'ஹே! ஜாம்பவத: விக்ரீதே கரிணி: கிமங்குஷே விவாத: அதாவது யானையை விற்ற பிறகு அங்குசத்துக்காக என்ன சண்டை?' என்று."

பிரின்ஸ்பாலின் மனத்தில் இதுவரை உறுத்திக்கொண்டிருந்த முள்ளைக் கெல்லி எறிந்தாகிவிட்டது. தலையை ஆட்டிக்கொண்டு, வீரத்துடன் அவர் பகன்றார். "அது சரிதான். கிடக்கட்டும் விடுங்கள். போயும் போயும் இந்தப் பீப்பாவில் என்ன வந்து விட்டது?"

"சித்தாந்தப்படி இது தவறு. அவர் பீப்பாவைத் திருப்பித் தந்திருக்கவேண்டும். ஒவ்வொரு முறையும் புதிய டப்பா எங்கே இருந்து கொண்டு வருவது?" என்ற ரூப்பன் பிரின்ஸ்பாலை நோக்கி, "தங்களுக்குத் தயக்கமாக இருந்தால் என்னிடம் சொல்லுங்கள். நான் கேட்டு வாங்கிக்கொண்டு வருகிறேன்" என்றான்.

ஆனால் யாரும் அவனிடம் ஏதும் சொல்லவில்லை.

அவர்கள் கடைவீதிக்கு வந்து சேர்ந்தனர். இன்றுங்கூட இந்திய நகரங்களில் இரண்டு விதமான கடைத்தெருக்கள் இருக்கின்றன. ஒன்று கறுப்பர்கள், அதாவது சுதேசி மக்களுக்கு; இன்னொன்று வெளுப்பர்களான உயர்ந்த பிரஜைகளுக்கு. ஆங்கிலத் திரைப்படக் கொட்டகைகள், மதுக் கடைகள் அதாவது பார் ஹோட்டல்கள், பளபளக்கும் ஆடம்பரமான கடைகள். கண்ணைப் பறிக்கும் ஒளி, சிகரெட், மது வகைகள் பற்றிய தகதகக்கும் விளம்பரங்கள் எல்லாம் இங்கு இருந்தன.

இந்த இடத்துக்கு வந்தால், 'நாட்டில் சாப்பிட ரொட்டி கிடைக்காவிட்டாலும் உயர்தர ரொட்டிகளுக்கும், கேக்கு களுக்கும் பஞ்சம் இல்லை. தண்ணீர் கிட்டாமல் தொண்டை வறண்டு போனாலும் பீரைப் பருகித் தாகசாந்தி செய்து கொண்டு மது விலக்கைப் பற்றி ஒரு பிரசங்கமே செய்து விட லாம்' என்று தோன்றும். சுருக்கமாகக் கூறினால் இங்கு வந்த பிறகு, உனக்குச் சாப்பிட, குடிக்க, உடுத்திக்கொள்ளத் தேவை யானவற்றுக்குச் சிரமம் எல்லாம் நீ 'ஜனதா'வாக இருக்கும் வரையில்தான். இந்தக் கஷ்டங்களிலிருந்து நீ விடுபட விரும் பினால் அதை விட்டுவிட்டுப் 'படப்பன்', அதாவது, 'மேன்மை யுள்ள பிரஜையாவதற்கு உபாயம் தேடவேண்டும்' என்று தோன்றும்.

ஓரிடத்தில் நடைபாதையில் வேட்டி, குர்த்தா, குல்லாய் அணிந்த நாலைந்து கனவான்கள் உலாவியவாறே அரட்டை அடித்துக்கொண்டிருந்தனர். உள்ளுக்குள் மிகவும் சந்தோஷ மாக இருந்தனர். நடுநடுவே சந்தோஷ மிகுதியினால் ஒருவர் மற் றொருவரின் காலுக்குக் கீழே வெற்றிலைச் சாற்றை உமிழ்ந்து கொண்டனர். "வெள்ளையர்களே, வெளியேறுங்கள்" என்ற கோஷத்துக்குப் பிறகு பிறந்திருந்த ரூப்பன், "கடவுள் தன் கழு தைகளுக்கு ஜிலேபி கொடுத்துக்கொண்டிருக்கிறார். ஒவ்வொரு கிளையிலும் ஆந்தை உட்கார்ந்திருக்கிறது" என்றான்.

இந்தக் கவிதை மக்களிடையே மிகவும் புழக்கத்தில் இருந் தது. இதைக் கூறியதனால் ரூப்பன் தனது 'ஒரிஜனலிட்டி'யை வெளிப்படுத்தி விடவில்லை என்றாலும் அதைக் கூறிய முறையி லிருந்து, விஷயம் மிகவும் சீரியஸாகி விட்டதை உணர்ந்தவே, பிரின்ஸ்பால், வைத்தியரை நோக்கி, "வாருங்கள் மகராஜ்! ஏதாவது சாப்பிட்டு விட்டுப் போகலாம். பையன் ஒரு மாதிரி யாகிவிட்டான்" என்றார்.

முதலில் வெற்றிலை பாக்குக் கடையைத் தேடுவதென்று நிச் சயித்தனர். இந்தியனுக்கு இது கடினமான விஷயம் இல்லை. ராபின்சன் குருசோவுக்குப் பதிலாக இந்தியன் ஒருவன் ஏகாந்தமான தீவில் அகப்பட்டுக்கொண்டு விட்டானானால், ஃப்ரைடேக்குப் பதிலாக, வெற்றிலை பாக்குக் கடைக்காரனைத் தான் தேடிக் கண்டுபிடித்திருப்பான். நிஜமாகவே ஓர் உண் மையான இந்தியனுக்குரிய பரிபாஷை என்னவென்றால் அவன் எங்கு வேண்டுமானாலும் வெற்றிலை போட்டுக் கொள்ளத்

தகுந்த ஏற்பாடுகளைச் செய்துகொள்ளுவான். எங்கு வேண்டு மானாலும் சிறு நீர் கழிக்க இடம் தேடி விடுவான்.

ஆனால் இந்தக் கடைத் தெருவில் வெற்றிலை பாக்குக் கடையைத் தேடிப் பிடிக்கவேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் கடைகளே மனிதர்களைத் தங்கள்பால் கவர்ந்து கொண்டிருந்தன. வெற்றிலை பாக்குக் கடைகள், முன்னால், பின்னால், இடப் பக்கம், வலப்பக்கம் என்று எல்லாப் பக்கத்திலும் இருந்தன. மூவரும் தங்களுக்கு முன்னாலிருந்த கடையின் அருகே வந்து நின்றனர். அங்கிருந்த பெரிய நிலைக் கண்ணாடியைப் பார்த்து, தம் தலைப்பாகையைச் சரி செய்துகொண்டார் வைத்திய மகராஜ். ரூப்பன் கண்ணைச் சுருக்கிக்கொண்டு முறுவல் பூத்தான். பிரின்ஸ்பால் கடைக்காரனிடம் பேசலானார்.

அவர் மெதுவாகக் கூறினார்: "மூன்று டம்ளர் கொஞ்சம் கெட்டியாக."

ஏதும் அறியாத பாவத்தில் வைத்தியர் வினவினார்: "என்னது? என்னது?"

"ஒன்றும் இல்லை. சும்மா வெற்றிலை போடுவதற்கு முன்னதாகச் சாந்தி செய்துகொள்ளத்தான்" என்றார் பிரின்ஸ்பால். வெற்றிலை பாக்குக் கடைக்காரன் பங்கி பானம் தயாரித்து மூன்று டம்ளர்களையும் நிரப்பினான்.

"கொஞ்சம் மிளகும், பாதாமும் போட்டிருக்கவேண்டும்" என்றார் பிரின்ஸ்பால்.

எங்கே பார்த்தாலும் ஒரே ஆங்கிலமயமாக இருந்தது. ஆங்கிலத்தில்தான் விளம்பரங்களும், கடைகளின் பெயர்களும் இருந்தன. அழுக்குப் படிந்த காலருடன் குமாஸ்தாக்கள், பளபளக்கும் உடையில் வியாபாரிகள், அவர்களுடைய வாரிசுகள், போக்கிடம் அற்றவர்கள், சுற்றும் ஓட்டை ஓடசல் அரசியல் வாதிகள், தன் பார்வையாலேயே உலகத்தை முறியடித்து விடக்கூடிய, மோவாயை உயர்த்திக்கொண்டு பீடுநடை போடும் அதிகாரிகள் என்று யாவருமே மணிப்பிரவாளமாய் ஆங்கிலத்தில் பேசினர். மேனாட்டு ரீதியான உடையில் நிமிர்ந்து நடை போட்டவர்கள் கம்பீரமாகவே சென்றனர். ஓர் ஆங்கிலத் திரைப்பட விளம்பரத்தில் ஒரு மேனாட்டுப் பெண், கிட்டத்தட்ட நிர்வாணமாய், ஒரு கட்டிலில் சாய்ந்து கிடந்தாள். அவளை யாரோ முத்தமிட்டுக் கொண்டிருந்தார். இதனருகே கன்னங்கரிய, அழுக்குப் படிந்த குழந்தைகள் அதைப் பார்த்துக்கொண்டு

நின்றன. அருகே ஒரு கிராமபோன் கடையிலே, 'பாப் மியூசிக்' ரிக்கார்ட் ஒலித்துக் கொண்டிருந்து. சில இளவட்டங்கள், தாங்கள் சாப்பிடும் கோதுமை கூடத் தங்களது ஏழ்மையைக் காட்டி, வெளியே இருந்து தானம் வாங்கப்பட்டது என்பதையே மறந்து, கையையும் காலையும் அநாவசியமாக ஆட்டி அசைத்த வாறு நடந்தனர். ரட்யார்ட் கிப்ளிங்கின் உடல் மேலேயும், தலை கீழேயும் தொங்குவதுபோல், கிழக்கு, மேற்குக் கலாசாரப் பண்புகள் பெருமளவில் இரண்டறக் கலந்துகொண் டிருந்தன. ரூப்பன் பங்கி பானத்தைப் பருகிவிட்டு டம்ளரைத் தடா லென்று கீழே வைத்தான். பிரின்ஸ்பால் கன்னு மாஸ்டரைப் பற்றி ஏதோ கூறிக்கொண் டிருந்தார். ரூப்பன் தன் தந்தையை நோக்கித் திரும்பினான். "தாங்கள் கொஞ்சம் இந்தப் பிரின்ஸ் பாலைச் சும்மா இருக்கச் சொல்லுங்கள். இவர் கன்னு மாஸ் டரைப் பற்றி இங்கே பேசவேண்டாம். இல்லாவிட்டால், நான் பச்சை பச்சையாகப் பேச ஆரம்பித்துவிடுவேன். அவர் ஓடிப் போகவேண்டியதுதான்" என்றான் கடுமையாக.

அமைதியும், மன்னிப்புமே உருவான தேவதூதனைப் போல் வைத்திய மகராஜ் தமது இறக்கைகள் படபடக்க, அதாவது, மீசையில் ஒட்டிக்கொண் டிருந்த பங்கி பானத்தின் துளி களைத் துடைத்தவாறே, "என்னை நடுவில் இழுக்காதே ரூப்பன்! நீ இப்பொழுது கன்னு பக்கம் பேசுகிறாய் என்று பிரின்ஸ் பாலுக்கு ரொம்பவும் வருத்தம். நீயே அவருடன் பேசி, விஷ யத்தைத் தீர்த்துக்கொள்" என்றார்.

மூவரும் ரிக்ஷா ஸ்டாண்டை நோக்கி நடந்தனர். வைத்தி யரின் பதிலைக் கேட்டதுமே ரூப்பன் நின்ற இடத்திலேயே நின்றுவிட்டான். பையை நடைபாதையிலே வைத்துவிட்டு, பிரின்ஸ்பாலை நோக்கி, "வாருங்கள். முதலில் கன்னு மாஸ்டர் விஷயத்தைத் தீர்த்துவிடலாம்" என்றான்.

முகத்தை வேறுபுறம் திருப்பிக்கொண்டு நடந்த பிரின்ஸ் பால், "பிறகு பார்த்துக்கொள்ளலாம்" என்றார்.

ரூப்பன் ஆவேசத்துடன், "இன்றைய காரியத்தை நாளைக்கு ஒத்திப் போடும் கையாலாகதவன் வேறெங்கேயாவது இருப் பான். இந்த விஷயத்தை இப்போதே தீர்த்துக் கட்டியாகவேண் டும். அப்புறம் என்றால், பிறகு அது நடக்கவே நடக்காது" என்றான்.

ஓர் அரசமரத்தின் கீழே இருந்த சிவலிங்கம் வைத்திய ரின் கண்களிலே பட்டது. அதைச் சுற்றிலும் ஒரு சிறிய ஆலயம் கட்டப் பட்டிருந்தது. சிவலிங்கத்தைக் கண்ட மாத்திரத் திலே வைத்தியர் பக்தியிலே நெக்குருகிப் போனார். 'இது கோராஷாஹி பஜார். இங்கே கடவுளின் பெயரை உரக்கச் சொல்லக்கூடாது' என்பதையே மறந்து, அந்த ஆலமரத்தின் அடியிலே போய் நின்று உரத்த குரலில் சிவஸ்துதியைக் கூறலானார்.

நடைபாதையில் பிரின்ஸ்பாலும், ரூப்பனும் நாளைய காரி யத்தை இன்றே முடித்துவிடும் முனைப்புடன் நின்றனர்.

வைத்தியர் கண்களை இறுக மூடிக்கொண்டார். அவர் முதுகுக்குப் பின்னால் கார்கள் விரைந்து வருவதும் போவது மாக இருந்தன. பெண்கள் ஆங்கிலத்தில் பேசும் குரல்கள் காற்றிலே ஒரு துடிப்பை ஏற்றிக் கொண்டிருந்தன. விளையாட் டுச் சாமான்களை விற்பவர்கள், ஏதோ ஒரு திரைப்படத்திலே பொம்மைகள் விற்பவன் பாடும் பாடலொன்றைக் கர்ண கடூர மாய்ப் பாடிக்கொண்டிருந்தனர். எதிர்க் கட்சிகளின் வசை மாறியையும், கூச்சல் களேபரத்தையும், அர்த்தமற்றதாகக் கருதி, ஒரு மந்திரி தமக்கு வேண்டியவர்களை ஆதரிக்கும் வழியில் தம்பாட்டுக்குப் போய்க்கொண்டிருப்பது போன்ற நிர்விகாரமான பாவத்துடன், பற்றற்ற நிலையில், வைத்தியரும் இந்தச் சத்தங்களைச் சற்றும் பொருட்படுத்தாத வகையில் சிவபிரானைப் பிரார்த்திப்பதில் ஈடுபட்டிருந்தார்.

ஆயிரக் கணக்கான தோத்திரங்கள் என்ற வேர்களையும், மூலிகைகளையும் அரைத்துக் கரைத்து வஸ்திரகாயம் செய்த பிறகு வெளிவந்த சூரணம் என்ற பிரார்த்தனைதான் இது.

"ஹே! சங்கரா! சத்துருக்களை நாசம் செய்வாயாக! நீ ருத்திரன்! அகில சிருஷ்டியிலும் சம்ஹரிக்கும் பாவத்துடன் கலந்திருப்பவன். ஊரில், ராமாதீன் பீகம்கேடவி கல்லூரியின் மானேஜருக்கான தேர்தலில் தோற்றுப் போய்விட்டான். தேர்தல் துப்பாக்கி முனையில் நடந்திருப்பதாக அவன் ஜில்லாக் கல்வி அதிகாரிக்குப் புகார் எழுதியிருக்கிறான். போலீஸ் உயர் அதிகாரிக்கும் புகார் செய்திருக்கிறான். சங்கரா! நீ பங்கியை யும் ஊமத்தையையும் அருந்துகிறவன். இந்த அதிகாரிகளின் பிரஷ்டமாகிவிட்ட மூளையை நீ உன்னுடைய பங்கியினாலும், ஊமத்தையின் பிரபாவத்தினாலும் பின்னும் பிரஷ்டமாக்கி

விடுவாயாக. அவர்கள் என் சார்பாகத் தீர்ப்பு எழுதும்படி தூண்டுவாயாக! ஹே! பூதநாதா! ராமாதீன் பீகம்கேடவியைக் கொன்றுவிடு!

"ஹே! த்ரியம்பகா! சுகந்திமய! புஷ்டிவர்த்தன, என்னை மரணத்தின் பிடியிலிருந்து, வெள்ளரிக்காயைத் தண்டிலிருந்து பறிப்பதுபோல் பறித்துவிடு. ஆனால் அமரத்துவத்திலிருந்து என்னை அகற்றிவிடாதே! ஹே! சிவபிரானே! எனது சத்துருவை அமரத்துவம் என்ற கிளையிலிருந்து ஒடித்து மரணமென்ற பாதாளக் கிணற்றில் தள்ளிவிடு. உன் தொண்டனின் துன்பத்தை உனது துன்பமாக நினைக்கும் தேவா! உன் தொண்டருக்குத் தொண்டனை சனிஸ்வரனின் துன்பத்தை நீக்குவாயாக. அவன் தலைவனாகத்தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளதற்கு எதிராக, எதிரி, தேர்தல் முறையானதல்ல என்று மனுக் கொடுத்திருக்கிறான். இதில் சனிஸ்வரனுக்கு வெற்றியைக் கொடு. எதிரி, தன் மனுவைத் திரும்பப் பெற்றுக்கொள்ளாவிட்டால் அவனைக் கொன்றுவிடு.

"ஹே! உமாபதி! ஜகத்காரணா! ஆபத்பாந்தவா! சிவபிரானே! கோவாபரேட்டிவ் சூபர்வைசர், ராம ஸ்வரூப்பின் விஷயமாக எதிரிகள், யூனியனில் நடந்த கையாடல் குறித்துப் பிரச்னையைக் கிளப்பியுள்ளார்கள். இதில் எனக்குப் பங்குள்ளது என்று கூச்சல் போடுகின்றனர். கோவாபரேட்டிவ் இன்ஸ்பெக்டர் மகா நீசன், தூர்த்தன். (அதாவது நாணயமானவன்) என் வலைக்குள் விழமாட்டேன் என்கிறான். சென்ற தடவை என்னைத் தனியே சந்தித்துப் பயமுறுத்தி இருக்கிறான். இதனால் சிவபிரானே! இந்த நேர்மையான கோவாபரேட்டிவ் இன்ஸ்பெக்டரைக் கொன்றுவிடு.

"ஹே! ருத்திரதேவா! திரிலோகத்திலும் உனது அஸ்திரம் மழை, விண்வெளியில் உனது அஸ்திரம் வாயு, பூலோகத்தில் உனது அஸ்திரம் அன்னம். எதிரியை நீ இடியினாலோ, புயலினாலோ, காலராவினாலோ, காஸ்டிரோ என்ட்டிரைட்டிசினாலோ, உனக்கு எது சௌகரியமோ அந்த அஸ்திரத்தினால் மாய்த்துவிடு.

"ஹே! சிவபிரானே! ஹே! மகேசா! நான் உன்னையே தியானிக்கிறேன். நீ எல்லையற்றவன். விண்ணிலும், மண்ணிலும் எங்கும் வியாபித்து நிற்பவன். புலன்களுக் கெல்லாம் எட்டாதவன், சூட்சமமானவன், அனந்தமானவன், பற்றற்றவன். ஆதியும் அந்தமும் இல்லாதவன்!

"இதனால், ஹே! சிவபிரானே! என் எதிரிகளைக் கொன்றுவிடு. என் எதிரிகளை மாய்த்துவிடு."

வைத்தியர் தம் கண்களைத் திறந்தபொழுது, அவர் கண்களை மூடிக்கொள்வதற்குமுன் இந்த உலகம் எப்படியிருந்ததோ, அப்படியே சற்றும் மாறாமல் காட்சி அளித்தது. பத்து கஜ தூரத்தில் நின்றுகொண்டு ரூப்பன் பிரின்ஸ்பாலுடன் உரக்கக் கத்திக் கத்திப் பேசிக்கொண் டிருந்தான். வித்தியாசம் இவ்வளவுதான்.

"நீர் பெரிய ஆளோ! என்னைக் கன்னாவின் கையாள் என்றா சொல்லுகிறீர்? நான் எந்தப் பயலுடைய கட்சியிலும் இல்லை. நான் உண்மையின் சார்பிலே பேசுகிறவன். என்னை என்ன வென்று நினைத்துக்கொண்டீர் பிரின்ஸ்பால் சாகப்?"

பிரின்ஸ்பால், வயது முதிர்ந்தவருக்குரிய சிரிப்புடன், 'ரூப்பன் பாபு! ரொம்ப அதிகமாகப் போய்விட்டது. இனி வாயை மூடிக்கொள்" என்றார்.

"இன்னும் ஒன்றுமே ஆகவில்லை, பிரின்ஸ்பால் சாகப்! இனிமேல்தான் எல்லாமே இருக்கிறது. நீங்கள் 107–ஆம் பிரிவின்படி வழக்குத் தொடுத்திருக்கிறீர்கள், அல்லவா? அதை நாளைக்கே சமரசம் செய்துகொண்டாக வேண்டும். தெரிந்ததா? நாளைக்குப் பிறகு இந்த வழக்குத் தொடர்ந்தால், எல்லா மாணவர்களும் 'இன்குலாப் ஜிந்தாபாத்' என்று கோஷம் போட்டுக்கொண்டு கிளம்பிவிடுவார்கள். உம்முடைய 'கோஷ்டி கீஷ்டி' எல்லாம் அப்படியே அமிழ்ந்துவிடும்."

"ரூப்பன்?" வைத்தியர் அருகே நெருங்கி வந்து கடுமையான குரலில் அழைத்தார். ஆனால் ரூப்பன் இதனால் சற்றும் பாதிக்கப் படவில்லை. "அப்பா! அப்போதெல்லாம் நான் ஒன்றும் பேசவில்லை. கன்னா மாஸ்டருக்கும், பிரின்ஸ்பாலுக்கும் சண்டை வந்தபோது நான் அங்கே இருந்தேன். நான்தான் இடையிலே புகுந்து சமாதானம் செய்துவைத்தேன். ஆனால் 107-ஆவது ஷரத்துப்படி வழக்குத் தொடர்ந்துள்ளது முற்றும் பொய்யானது. கன்னா மாஸ்டரைச் சிக்கவைப்பதற்காக நடக்கிறது. மாணவர் சமூகம் இதைக் கொஞ்சங்கூட ஆதரிக்காது" என்றான்.

வைத்தியர் சில்லிட்ட குரலில், "பரவாயில்லை, பரவாயில்லை. வீட்டுக்குப் போய் எல்லாவற்றையும் யோசித்துக் கொள்ளலாம்" என்றார்.

பிரின்ஸ்பாலுக்கு என்ன வந்துவிட்டதோ தெரியாது. திடீரென உரக்கக் கத்திஞர். "யோசியுங்கள் மகராஜ்! ஆனால் ரூப்பன் இங்கே நட்ட நடுக் கடைத்தெருவில் என்னை அவமதித்திருக்கிறான். கன்னாவுக்காகப் பரிந்துகொண்டு என்னை என்னென்னவோ பேசிவிட்டான். நான் என்ன சொல்ல? மிஸிஸ் கன்னா இவன் மூளையைக் கெடுத்துவிட்டாள். திரைக்குப் பின்னால் என்ன நடக்கிறதோ?"

வைத்தியர் கம்பீரத்துடன், "சொல்லவேண்டிய அவசியம் இல்லை. எனக்கு எல்லாம் தெரியும்" என்றார்.

அவர் புறப்படத் தயாராகிவிட்டார். ஆனால் ரூப்பன் அவரைத் தடுத்து, "அப்பா! இந்த விஷயம் இங்கேயே முடிவாகிவிடவேண்டும். சொல்லுங்கள். உங்களுக்கு என்ன தெரியும்? சொல்லுங்கள், சொல்லுங்கள் அப்பா. மிஸிஸ் கன்னாவை இந்த விஷயத்தில் எதற்காக இழுக்கிறீர்கள்?" என்றான் காரமாக.

வைத்தியர் நின்றுவிட்டார். பிறகு நாடக பாணியில் பிரின்ஸ்பாலை நோக்கினார். அந்தப் பார்வையே பிரின்ஸ்பாலை வென்றுவிட்டது. பிறகு அதே பாணியில் ரூப்பனை நோக்கினார். சாதாரணமான ஆளாக இருந்தால் அந்தப் பார்வையில் அந்தக் கணமே இடிந்து சரிந்திருப்பான். ஆனால் இந்த விஷயத்தில் தன் அப்பனுக்கும் அப்பனாய் இருந்த ரூப்பன் படபடப்புடன், "பேசுங்கள்? ஏன் சும்மா இருக்கிறீர்கள்?" என்றான்.

"எனக்குத் தெரியும் ரூப்பன்! நீ திடீரென்று உன் குருவுக்கு ஏன் துரோகம் செய்கிறாய்? அந்தக் கன்னா மாஸ்டருக்கு ஏன் துரோகம் செய்கிறாய்? எல்லாம் எனக்குத் தெரியும். தெளிவாகச் சொல்லுகிறேன். நீ அங்கே போவது வருவதெல்லாம் எனக்கு உசிதமாகப் படவில்லை" என்றார் வைத்தியர் ஒரே மூச்சில்.

ரூப்பன் சில நிமிஷம் ஒன்றும் பேசவில்லை. பிறகு கழுத்தில் தொங்கிய கைக் குட்டையை முறுக்கிவிட்டுக் கொண்டான். கையிலே பையை எடுத்துக் கொண்டு, "புரிந்துவிட்டது உங்களுக்கு என் நடத்தையைப் பற்றிச் சந்தேகம். எனக்கு எல்லாம் புரிகிறது" என்றவன், விரலை உயர்த்தி ஏதோ எதிர்காலத்தைப் பற்றிச் சோதிடம் கூறுபவன் போல், "இந்தப் பிரின்ஸ்பால்தான் உங்களிடம் கோள் சொல்லியிருக்கிறார். இதன் பலன் நல்லதாக இருக்காது" என்றான்.

சட்டென்று முறைத்துப் பார்த்தவாறு ரூப்பன் கூறினான்: "பத்ரி அண்ணா விஷயம் என்ன? ஊர் முழுதும் அவரைப் பற்றிக் கண்டபடி பேசிக் கொள்கிறார்களே! பேலாவை நம் வீட்டிலே வரவழைத்துக் கொள்கிறாரே அவர்! அவரிடம் பேசத் தைரியம் இல்லை யாருக்கும்! அவரது நடத்தையைப் பற்றி....."

இனி இடி விழப் போகிறது என்று நினைத்தார் பிரின்ஸ்பால். தமது மூத்த மகனின் நடத்தை கெட்ட தனத்தைப் பற்றிக் கேள்வியுற்று வைத்திய மகராஜ் நட்ட நடுப் பாதையில் மூர்ச்சை அடைந்து விழுந்துவிடப் போகிறாரே என்று, குறுக்கே பாய்ந்த பிரின்ஸ்பால், "என்ன உளறுகிறாய் ரூப்பன்! கொஞ்சம் நிதானத்துக்கு வா" என்றார்.

"விடுங்கள், ரூப்பன் இன்னும் சின்னப் பிள்ளை தானே ஏதாவது காதில் விழுந்திருக்கும். அதையே கத்திக்கொண்டு திரிகிறான்" என்றார் வைத்தியர் அமைதியாக. அவருக்குப் பிரின்ஸ்பாலின் சமாதானமோ, பூசி மெழுகி விஷயத்தை மறைப்பதற்கான தேவையோ இருக்கவில்லை. ரூப்பனின் ஆவேசத்தை அவர் மிகவும் அமைதியுடன், கம்பீரமாகத் தாங்கிக் கொண்டிருந்தார். அவருடைய முகத்தில், மீசையில் லேசான இரண்டொரு துடிப்பைத் தவிர வேறு எவ்விதச் சலனமும் இல்லை. ரூப்பன் ஆவேசத்துடன் பத்ரியின் காதல் விவகாரத்தைத் தாக்கலானான். முதலில் இதன் கடந்த காலச் சரித்திரம் ஆராயப்பட்டது. பிறகு இன்றைய நிலைமை, அதன் சம்பந்தமான தக்க ஆதாரங்கள், சான்றுகளுடன் சமர்ப்பிக்கப் பட்டன. முடிவில், எல்லாவற்றையும் பார்த்தும் பாராமலிருக்கும் வைத்தியரின் கோழைத்தனமும், பட்சபாதமான போக்கும் கடுமையாக விமர்சிக்கப்பட்டன. தன்னையும், பத்ரியையும் வெவ்வேறு அளவுகோல்களினால் அளக்கிறார் என்பதை ரூப்பன் நிரூபிக்க முயன்றான். இது மக்களாட்சிக் குடியரசின் அடிப்படையான, மூலாதாரச் சித்தாந்தங்களுக்கு முற்றும் விரோதமானது என்பதை எடுத்துக் காட்ட அவன் விரும்பினான். பேசி முடித்தபோது அவன் முகம் ஜிவு ஜிவு வென்று சிவந்துவிட்டது. நுரையினால் உதடுகள் ஈரமாகிவிட்டன. கண்கள் பனித்துவிட்டன.

பிரின்ஸ்பால் சாகப் தமது சமாதான வார்த்தைகள் அர்த்தமற்றவை என்புதை உணர்ந்து நசுங்கிய பழங்களைப் போல் அவற்றைத் திரட்டித் தம் பையிலே அடைத்துக் கொண்டு

விட்டார். தன் கூற்று வைத்தியரிடம் எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தாது கண்டு ரூப்பனும் வாளா நின்ருன். ஏதாவதோர் உபாயம் தேடி இங்கிருந்து கத்தரித்துக் கொள்ளவேண்டும் என்று யோசிக்கலாஞன். வைத்தியர் அமைதியுடன் யாவற்றையும் கேட்டுக் கொண்டார். ரூப்பனின் ஆவேசம் மிகுந்த பிரலாபம் கீதையின் சமத்துவ யோகத்தின் சாரம் என்பது போலவும், அதை மிகுந்த அன்புடன் நடைபாதையிலே தமக்கு அளிப்பது போலவும் கேட்டுக்கொண்டு நின்ருர். ரூப்பன் மௌனமானதும் அவர் பிரின்ஸ்பாலே நோக்கி, "வாருங்கள்! ஸ்டேஷனுக்குப் போகலாம். வண்டிக்கு நேரமாகிவிட்டது" என்ருர்.

தன் தந்தையின் இந்தப் பேரமைதியின் முன ரூப்பன் ஆடிப் போய்விட்டான். சற்றே தயங்கியவனுய், "நான் இரவு வண்டியில் வருகிறேன்" என்ருன்.

அவன் சொன்னதை யாரும் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லே. சூழ்நிலேயின் இறுக்கத்தைத் தவிர்க்க விரும்பிய பிரின்ஸ்பால் இந்த விஷயத்தைப் பற்றிச் சாதாரணமாக ஏதோ கூற விரும்புகிறவர்போல், "பத்ரி பயில்வானேப் பற்றி...." என்று ஆரம்பித்தார்.

'வைத்தியர் கரத்தை உயர்த்தி அவரைப் பேசாமலிருக்கச் செய்தவாறே சரளமான பாவத்துடன், "ஒன்றும் சொல்ல வேண்டிய அவசியம் இல்லே. நான் முடிவு செய்தாகிவிட்டது" என்ருர்.

ரூப்பனே ஆவலும், அதிசயமும் ஓர் உலுக்கு உலுக்கிவிட்டன. ஆயினும் தனக்கு இதில் அக்கறை இல்லே என்று காட்டிக் கொள்ள விரும்புபவன்போல் சற்றுத் தள்ளிப் போய் நின்று கொண்டு போகிற வருகிறவர்களேப் பார்க்கலாஞன். வைத்தியர் குரலே உயர்த்தி, அக்கறை இல்லாதவர்களின் காதில் கூட விழட்டுமே என்பதுபோல், "நான் பழைமைவாதி அல்ல. காந்திஜி கலப்பு மணத்தை ஆதரித்தார். நானும் ஆதரிக்கிறேன். பத்ரி, பேலாவின் திருமணம் எல்லாவிதத்திலும் ஆதர்சமானதுதான். ஆனல் சயாதீனின் எதிர்விளேவு எப்படி இருக்குமோ... பார்க்கலாம்" என்று கூறியபிறகு ரூப்பனே நோக்கினுர். ரூப்பனுக்கு அவரது பார்வையைச் சந்திக்கும் துணிவு ஏனே ஏற்படவில்லே, "நான் போகிறேன்" என்று முணுமுணுத்தான் அவன்.

# அத்தியாயம் 24

பகல் இறங்கிக் கொண்டிருந்தது. வீட்டுக்குள்ளே வராந்தாவில் வைத்தியரையும், பத்ரியையும் தவிர்த்து வேறு யாரும் இல்லை. இது வீட்டில் ஆண்களின் பகுதி; இந்தப் பக்கம் பெண்கள் அதிகமாக வருவதில்லை. எங்கும் சந்தடியே இல்லை. ரூப்பன் வராந்தாவை ஒட்டிய அறையிலே மௌனமாய்ப் படுத்துக்கொண் டிருந்தான். இன்று கல்லூரியில் விடுமுறை. தவிர முந்திய இரவு அவன் நெடுநேரம் விழித்துக்கொண் டிருந்தான். இதனால் நெடுநேரம் தூங்கிய பின்னுங்கூட மீண்டும் உறங்க முயற்சி செய்து கொண்டிருந்தபோதுதான், தன் தந்தையின் சாஸ்திர சுத்தமான குரல் கேட்டது. "நீ இவ்வளவு நீசன் என்பது எனக்குத் தெரியாது."

இந்த வார்த்தைகள் யார் காதில் விழுந்தாலும் அது நிமிரா விட்டால் அது நாய் வாலைவிட மோசமானது. ரூப்பனின் காதுகள் கூர்மையாகின. அவன் மெல்ல எட்டிப் பார்த்தான். வைத்தியர், கட்டிலின்மீது சம்மணம் போட்டு உட்கார்ந்திருக்க, பத்ரி பயில்வான் அருகே திண்ணையில் குத்திட்டு உட்கார்ந்திருந்தார். முன்பின் அறிவிப்பின்றி, இருவரிடையேயும் சகஜமான யதார்த்த சூழ்நிலையில், சண்டை நடந்துகொண் டிருந்தது. ரூப்பனின் காதில் வைத்தியர் கூறிய சொற்கள் விழுந்திரா விட்டால் அண்ணுவுடன் அவர் கோவாபரேட்டிவ் யூனியனில் உடனடியாகக் கையாடல் செய்யவேண்டியதின் அவசியத்தைக் குறித்துக் கலந்து ஆலோசனை நடத்திக்கொண் டிருக்கிறார் என்றே நினைத்திருப்பான்.

என்னவானாலும் சரி, ரூப்பனின் காதுக்கு விஷயம் எட்டி விட்டது. அதே வேகத்துடன் வைத்தியரின் வாயிலிருந்து மீண்டும் வெளிப்பட்ட சொற்கள் அவனைத் தாக்கின. "நீ முட்டாளுங்கூட; என்னால் இதைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை."

பத்ரி பயில்வான் அலட்சியத்துடன் கொட்டாவிவிட்ட வாறே, "வீட்டுக்குள் திட்டிக்கொள்வதால் என்ன பயன்? இது நல்லதல்ல'' என்றான்.

நடைமுறைக் கேற்ற இந்தப் பதில் வைத்தியரிடம் ஓரளவு பாதிப்பை ஏற்படுத்தியதுபோலும். சோரப்-ரஸ்டம் பாணியை மாற்றிக் கொண்டு சாதாரணமாகப் பேசுவதுபோல், "நீ செய்திருக்கும் காரியம் ரொம்ப நல்லதாக்கும். இதன் பலனைப் பற்றி ஏதாவது தெரியுமா? இதனுல் என் ஆத்மாவுக்கு எவ்வளவு துன்பம் ஏற்பட்டிருக்கிறது தெரியுமா?'' என்ருர்.

பத்ரி பயில்வான் அன்று காலை பங்கி அருந்தவில்லை போலிருக்கிறது. பங்கி குடிக்காதவர்களுக்குப் பங்கி குடித்தால் கொட்டாவி வரும். பங்கி குடிப்பவர்களுக்கே, பங்கி குடிக்காவிட்டால்தான் கொட்டாவி கொட்டாவியாக வரும் என்பது பொதுப்படையான சித்தாந்தமாகும். இதனுல் பத்ரி மீண்டும் கொட்டாவிவிட்டார். தம் தோளில் வந்தமர்ந்த ஒரு கொசுவை லேசாக ஒரு தட்டுத் தட்டி விரட்ட நினைத்தார். ஆனுல் அது ஓடவில்லை. செத்துவிட்டது. இந்தக் காரியங்கள் முடிந்த பிறகே அவர் வைத்தியருக்குப் பதில் அளித்தார். "இதில் துன்பம் என்ன இருக்கிறது? சொல்லுங்கள். ஏதாவது சிரமம் இருந்தால் அகற்றிவிடுகிறேன்.''

வைத்தியர் குரலைத் தாழ்த்தி, "நீ இவ்வளவு புத்திசாலியாக இருந்தும் கயாதீன் பெண்ணின் வலையில் எப்படி மாட்டிக் கொண்டாய்?'' என்று வினவினுர்.

பத்ரி பயில்வான் சில கணங்கள் மௌனமாய் அமர்ந்திருந்தார். பிறகு, "உங்களிடம் பேசுவது அர்த்தமற்றது'' என்று கூறியவர், எழுந்து ஆணியில் தொங்கிய சட்டையை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டு வாயிலை நோக்கி நடந்தார். "எங்கே ஓடுகிருய்?'' என்ருர் வைத்தியர்.

"யார் ஓடுகிருர்கள்? அர்த்தத்துடன் ஏதாவது பேசினுல் பேசலாம். வீட்டுக்குள் இப்படிப் பேச ஆரம்பித்தால் அவ்வளவுதான்.''

குரலின் கியரை மாற்றினுர் வைத்தியர். "எப்போதாவது இதைப் பற்றிப் பேசித்தானே தீரவேண்டும்?''

பத்ரி தம் கால்களுக்குப் பிரேக் போட்டுவிட்டார். நின்ற இடத்திலிருந்தே, "இப்போது உங்கள் வாயிலிருந்து தாறு

மாருய் வார்த்தைகள் வெளிவருகின்றன. இது சரியல்ல, பிறகு பேசிக்கொள்ளலாம்'' என்ருர்.

''பிறகு எப்பொழுது? என் மூக்கு அறுந்து விழுந்தபிறகா?''

வேறு வழியின்றிப் பத்ரி பயில்வான் திரும்பி வந்தார். தோளிலிருந்த ஷர்ட்டை மீண்டும் ஆணியில் மாட்டிவிட்டு மீண்டும் திண்ணையில் உட்கார்ந்தார். ''மூக்கு, நாக்கு என்றெல்லாம் பேசாதீர்கள். மூக்கு எங்கே இருக்கிறது? அது தான் பண்டிதர் அஜ்யுதா பிரசாத் காலத்திலேயே அறுபட்டு விட்டதே!'' என்ருர்.

''நீ இப்போது நீசத்தனமாகப் பேசுகிருய்.''

பத்ரி பயில்வான் உட்கார்ந்த நிலையிலே முன்னும் பின்னும் அசைந்தார். அவரது குரலின் சைலன்சர் உடைந்துவிட்டது. ''பேசுகிறேன் என்ருல், பேச வைக்கிறீர்கள். நான் பேலாவின் வலையில் சிக்கி விட்டேன் என்கிறீர்கள், நீங்கள் என்னுடைய அப்பா. உங்களுக்கு எப்படிப் புரியவைப்பது? சிக்குவதும், சிக்கவைப்பதும், கையாலாகாதவன் வேலை. உங்க வம்சத்திலே, உங்கள் அப்பா அஜ்யுதா பிரசாத், ரகுவராவின் பெண்டாட்டியிடம் சிக்கி இருந்தாரே, அதைத்தான் 'சிக்குவது' என்று சொல்லுகிருர்கள். ஆமாம், பின் என்ன?'' என்ற பத்ரி, ''சரி, விஷயத்தை இத்துடன் விடுங்கள்'' என்ருர்.

வைத்தியரும் தம் குரலின் ஆக்ஸிலரேடரை அழுத்திஞர். ''உங்கள் வம்சம்...உங்கள் அப்பா....என்ன பேச்சுப் பேசுகிருய் நீ? அப்படியாளுல் இது என்னுடைய வம்சம். உன்னுடைய வம்சம் இல்லையா? அவர் உன்னுடைய தாத்தா இல்லையா?''

நாற்சந்தி முனையின் சிவப்பு விளக்கைக் கண்டதும் பத்ரியின் வண்டி சரேலென்று நின்று விட்டது. குரலை சற்று அடக்கி, ''மீண்டும் ஆரம்பித்து விட்டீர்களா? உண்மையைச் சொன்னேன். அதற்கே கோபம் வந்துவிட்டது. சரி. விடுங்கள் பேச்சை'' என்ருர்.

க்ளச், ஆக்ஸிலரேடர் இரண்டையுமே ஒன்ருக அழுத்திக் கொண்டு புதிய வண்டியோட்டி, வண்டியை ஓட்ட முயற்சி செய்வதுபோல வைத்தியர் கூவிஞர். ''இல்லை பத்ரி, விடப் போவதில்லை நான். இன்றே இந்த விஷயம் முடிவாகி விட வேண்டும். நாம் பிராம்மணர்கள். அவர்கள் வைசியர்கள். இது ஜாதிப் பிரச்னை மட்டுமல்ல. கொள்கைப் பிரச்னையுங்

கூட. அப்படிப்பட்ட நடத்தையுடைய பெண்ணை.... சின்ன வஸ்தாது கோர்ட்டில் என்ன சொன்னான் தெரியுமா?''

பத்ரி பயில்வான் எழுந்து நின்றுவிட்டார். ''போதும், நிறுத்துங்கள்! இன்னும் ஒன்றே ஒன்று. அத்துடன் நானும் நிறுத்தி விடுகிறேன். என்னால் தாத்தா அஜ்யுதா பிரசாத் மாதிரி நடந்துகொள்ள முடியாது. எது செய்தாலும் அதை ஒழுங்காக நியமப்படிதான் செய்வேன். இப்படி அப்படி மாறுவது எனக்குப் பிடிக்காது'' என்றவர் கதவை நோக்கி நடந்து விட்டார். வைத்தியரும் சடாலென்று கட்டிலிலிருந்து எழுந்து நின்றார். ஜடாமுடி, தாடி, மீசை, கமண்டலம், கௌபீனம் எதுவுமேயின்றி வீராவேசத்துடன் சாபம் கொடுக்கும் நிலையில் நின்று இரட்டிப்பு வேகத்துடன் ஹாரினை அழுத்தினார். ''நீசனே! நான் சொல்வதைக் கேள்!''

ரூப்பன் இந்த உரையாடலை வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தான். முதல் நாள் நகரத்தில் வைத்தியர் கூறியதைக் கேட்டதிலிருந்து, 'பத்ரி—பேலா திருமணம் நடந்துவிடும். இதற்குத் தடை ஏதுமிருந்தால் அது கயாதீனின் தரப்பிலிருந்துதான் ஏற்படும்' என்று நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் இப்பொழுது நடைபெற்ற உரையாடலிலிருந்து அவன் எதைப் போராட்டத்தின் முடிவு என்று நினைத்திருந்தானோ அதுதான் ஆரம்பம் என்பது தெரிந்துவிட்டது.

அவனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலவில்லை. அறைக்குள்ளிருந்து பாய்ந்தோடி வந்தவன் சமாதானத் தூதுவனாகப் பணியாற்றலானான். ''அப்பா! இனிமேல் பேசுவதால் என்ன பயன்? நேற்றுப் பிரின்ஸ்பாலின் முன்னிலையில் என்ன சொன்னீர்களோ அதையே திருப்பிச் சொல்லுங்கள்: 'நாங்கள் ஜாதி, கீதி பார்ப்பதில்லை' என்று நாமும் இனிச் சொல்லிக் கொள்ளலாம். பத்ரி அண்ணா பேலாவின் வலையில் சிக்கிக் கொண்டபின்.........''

ரூப்பன் தன் பேச்சை முடிப்பதற்குமுன் தன் கழுத்து முறிந்து விடுவது போன்ற உணர்வு அவனுக்கு ஏற்பட்டு விட்டது. தினப்படி நடக்கும் காரியந்தான். பத்ரி பயில்வான் தினசரி யார் கழுத்தையாவது நெறித்துவிடுவார். இன்று ரூப்பனின் மென்னி அவர் கையில் இருந்தது. ஆனால் ரூப்பனின் விழிகள் ஒரு செகண்டில் முற்றத்தைப் பத்து முறை சுற்றி வந்து மேலே செருகிக்கொண்டு விட்டன. பற்களை நறநற

வென்று கடித்தவாறு பத்ரி கூறிக்கொண் டிருந்தார். "விட்டி லேயே உன் லீடர்தனத்தைக் காட்டுகிருயா? நான் அவளிடம் சிக்கிவிட்டேனென்ரு சொல்லுகிருய்? அதுவும் என் முகத்துக்கு நேரே! அயோக்கியப் பயலே.'

ரூப்பனின் கழுத்தைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கி அலட்சிய மாக முற்றத்தின் ஒருபுறம் தள்ளிவிட்டார். திகிலில், இப்படி அசாதாரண முறையில் கிடைத்த 'அயோக்கியப் பயலே' என்ற பட்டத்தை 'ஏற்றுக்கொள்வதா, திருப்பிக் கொடுப்பதா?' என்று ரூப்பனுல் நிச்சயிக்க முடியவில்லை. பத்ரி பயில் வான் வைத்தியரிடம் சொல்லிக்கொண் டிருந்தார். "இவனைத் தான் சாட்சாத் தலைவரென்று சொல்லுகிறார்கள். இவன் அவளுக்கு இரண்டு பக்கம் கடிதம் எழுதி அனுப்பி இருந்தான். என்ன என்ன உளறியிருந்தான் தெரியுமா? தான் சிக்கிக் கொண்டுவிட்டு இப்பொழுது என்னைச் சொல்லுகிருன்."

ரூப்பன் விழாமல் சமாளித்துக் கொண்டவன் மிடுக்குடன் கூறினுன். "உன்னிடம் இதைப் பற்றிச் சர்ச்சை செய்யும் அள வுக்கு நான் அவ்வளவு அற்பமானவன் அல்ல." பிறகு வைத் தியரை நோக்கி, "அப்பா! இனி இவரிடம் பேசுவது வீண். அவர் போக்குப்படி விட்டுவிடுங்கள்" என்ருன்.

ஆனுல் இப்போது வைத்தியர் ஆலோசனையை ஏற்றுக்கொள் ளும் நிலையில் இல்லை. ஆலோசனை கூறவே துடித்துக்கொண் டிருந்தார். கடுமையான குரலில், "எதுவானுலும் சரி, ரூப்பன் இது நீ பேசவேண்டிய, தலையிடவேண்டிய விஷயம் அல்ல. உங்கள் எல்லார் மேலேயுமே புகார் இருக்கிறது. உன் நடத் தையைப் பற்றி எனக்குத் தெரியும்" என்ருர்.

ரூப்பன் ஆவேசமடைந்தான். "ஓகோ! அப்படியா விஷயம்?" என்றவன் தலையை நிமிர்த்தி, நிமிர்ந்து நின்று, "அப்படி யென்ருல் எனக்கும் தங்கள் நடத்தையைப் பற்றித் தெரியும்" என்ருன்.

சண்டையின் கடைசிக் காட்சி இது. பத்ரி பயில்வான் தந்தையை நோக்கிக் கிண்டலாக, "கேட்டீர்களா?" என்ருர்.

ரூப்பன் ஒரே பாய்ச்சலில் வெளியேறினுன். வைத்தியர் கட்டிலின் அருகே மௌனமாய் நின்ருர். இத்தகைய சந்தர்ப் பங்களில் திரைப்படக் கதாநாயகனின் தந்தையைப் போல் அவர் ஓவென்று அலறி அழவில்லை. தமது தவருன நடத்தை யைப் பற்றி விசாரிக்கக் கமிஷன் நியமிக்கப்பட்டுள்ளது என்று

செய்தி கிட்டியதும், தவருன நடத்தை என்ன என்பதுபற்றி ஒரு பரிபாஷை முதலில் ஏற்படவேண்டும் என்று தலைவர்களைப் போல் நீண்டதொரு அறிக்கை விடவில்லை. 'டெக்ஸ்ட் புக்' கமிட்டியாரின் கிருபையினுல் லட்சாதிபதியாகும் எழுத்தாளன், தமது நூல்களைப் பற்றிய மோசமான விமர்சனங்களைப் படித்துவிட்டு எள்ளி நகையாடுவதுபோல் நகையாடவும் இல்லை. தம் நடத்தையைப் பற்றி இவ்வளவு பெரிய 'சவாலை'க் கேட்ட பின்னும் அவர் எதுவுமே செய்யவில்லை. மௌனமாய் நின்ருர். அவருடைய தொழிலுக்கு எது மிக மிக எளிதான செயலோ அதைக் கூட அவர் செய்யவில்லை. அவர் வாயிலிருந்து 'ஹே ராமா!' என்ற சொல்கூட வெளிவரவில்லை.

பகற்பொழுது கழிந்துவிட்டது. ஒரு பட்சணக் கடையில், அந்தக் கடைச் சொந்தக்காரனே உட்கார்ந்திருந்தான். தூரத்திலிருந்து பார்த்தாலே அவன் ஹோட்டல்காரன் என்பது தெரிந்தது. கடைக்கு முன்பு ஒரு தலைவன் நின்று கொண்டிருந்தான். அவன் தோற்றமும் அப்படித்தான் இருந்தது. அருகே சைக்கிளின் ஹாண்டிலைப் பிடித்துக் கொண்டு ஒரு போலீஸ்காரன் நின்ருன். கடையில் வைத்திருந்த பண்டங்கள், பழையனவாய்க் கலப்படமான சாமான்களால் செய்யப்பட்டன என்று தோன்றின. உண்மையும் அதுதான். பால் தண்ணீராய், ஆரோரூட் மாவின் காரணமாய்ச் சற்றே கெட்டியாய் இருப்பது போல் தோற்றம் அளித்தது. இந்த மண்ணுலகத்தில் சொர்க்கத்தின் ஒரு காட்சியாக, அதாவது உண்மையை அப்படியே நிதர்சனமாக அது காட்டிக் கொண்டிருந்தது. எங்கும் ஒளிவு மறைவு இல்லை. அப்படி மறைக்கவேண்டிய அவசியமும் இல்லை.

கடையில் ஜிலேபி, பேடா, லட்டு முதலியன வைக்கப்பட்டிருந்தன. அவற்றுக்குப் பக்கத்திலேயே சிறிய சிறிய கண்ணுடி ஜாடிகளில், உலர்ந்து, வறண்டு கிடந்த சில பிஸ்கட்கள், ரஸ்க் என்ற பெயரில் நாட்டுச் சரக்குகளாகக் காட்சி தந்தன. நகரத்தைப் போலவே, இங்கும் இந்தப் பண்டங்கள், 'கிழக்குக் கிழக்குத்தான், மேற்கு மேற்குத்தான். ஆனுல் இந்த இனிப்புகளும் சிவபால்கஞ்சில் கிடைக்கின்றன' என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன.

ரூப்பன், நொண்டியின் சந்திப்பு இங்கேதான் நடைபெற்றது. முதல் வகுப்பில் பிரயாணம் செய்பவன், மூன்ரும் வகுப்புப் பிரயாணியைப் பார்ப்பதுபோல், ரூப்பன் நொண்டியை ஒரு

பார்வை பார்த்தான். ஒருகால் டிக்கெட் இன்றிப் பிரயாணம் செய்கிருேனே என்ற சந்தேகம் அந்தப் பார்வையில் பளிச்சிடுவது போல் ரூப்பனும் அவனை உற்று நோக்கினுன். ஆனுல் இன்று ரூப்பனின் மனநிலை ஒரு மாதிரி இருந்தது. உலகச் சமாதானம், பஞ்சசீலம் போன்ற எல்லாத் தத்துவங்களையும், சித்தாந்தங்களையும் மிக எளிதாக நடைமுறைக்குக் கொண்டு வந்து விடலாம் என்பது போன்ற பாவனை அது. அதனுல் குரலை மிகவும் தாழ்த்தியவாறே விசாரித்தான். "என்னப்பா? உன் விஷயம் என்னவாயிற்று?"

"இன்று விடுமுறை பாபு! அதனுல் ஒன்றும் தெரியவில்லை. நகல் தயாராகிக் கொண்டிருக்கும்" என்ருன் நொண்டி. "முன்பே தயாராகிவிட்டது. ஆனுல் அதை வாங்கிக்கொள்ள என்னுல் போகமுடியவில்லை. எனக்கு முறைக் காய்ச்சல் வந்து விட்டது. அன்று கோர்ட்டில் விழுந்தவன்தான். பிறகு எழுந்திருக்க முடியவில்லை. அப்புறம் நான் செத்தாலும் நம் கிராமத்து மண்ணில்தான் சாகவேண்டுமென்று தோன்றியது. ஊரிலிருந்து ஒரு டாக்டர் அங்கு வந்திருந்தார். அவர் அழைத்துக் கொண்டு போனுர். அங்கு எல்லாரும் இதை மலேரியாக் காய்ச்சல் என்ருர்கள்.

"ஒரு நாள் கிராமத்துக்குப் பலர் மோட்டாரில் வந்தனர். ஊர் முழுக்கச் சுவற்றில் காவிக் கட்டியினுல் ஆங்கிலத்தில் என்ன என்னவோ எழுதினுர்கள், இதற்குப் பிறகு, பாபு, அவர்கள் எங்கள் ரத்தத்தை எடுத்து ஏதோ கருவியில் வைத்துச் சோதித்தார்கள். பார்த்தீர்களா பாபு! கலியுகத்தின் அதிசயத்தை! நாங்கள் நாட்டுப் புறத்தார்கள், பட்டிக்காடுகள். ஆனுல் எங்களுக்கு வெளிநாட்டு வியாதி வந்திருக்கிறதாம். காரில் வந்திருந்தவர்கள் நொண்டிக்கு 'மலேரியா' என்று சொல்லிவிட்டார்கள்.

"என்ன சொல்லட்டும் பாபு! இதற்குப் பின் அந்த மோட்டாரில் வந்த ஆட்கள், ஊரிலே என்ன என்னமோ செய்தார்கள். இரண்டு மூன்று பேர், ஒவ்வொரு மெஷினை எடுத்துக் கொண்டு, கிராமத்திலிருக்கிற கிணறு, குளம், குட்டை ஆகிய எல்லா இடத்திலும் 'கிர் கிர்' ரென்று சுற்றி வந்தார்கள். இரண்டு பேர் ஒவ்வொரு வீட்டு வாசலிலும் நின்று சுவற்றில் காவிக் கட்டியினுல் மலேரியா மகாராணி ஸ்துதியை ஆங்கிலத்தில் எழுதிக் கொண்டே போனுர்கள். அந்த எழுத்துக்களின் பிரதா

பத்தை என்ன சொல்ல, பாபு! எல்லாக் கொசுக்களும் பயந்து ஓடிவிட்டன. நானுங்கூட ஒரு மாதம் கஷ்டப்பட்டுவிட்டு, உங்களைப் பார்ப்பதற்காக இதோ எழுந்து வந்துவிட்டேன்."

"பிரமாதமாகச் சொன்னாய் நொண்டி..." என்றான் தலைவன்.

"எழுதிய ஆங்கில எழுத்தைப் பார்த்து ஓடிவிட்டன மலேரியா கொசுக்கள் விரைந்து."

"என்ன பிரமாதமான கவிதை! இந்தாருங்கள் ஜிலேபி, சாப்பிடுங்கள் ஒன்று" என்று பாராட்டினான் ஹோட்டல்காரன்.

தலைவன் எவ்விதத் தயக்கமோ, சங்கோஜமோ இன்றித் தட்டில் மொய்த்துக்கொண்டிருந்த ஈக்களை விரட்டி விட்டு நாலைந்து ஜிலேபிகளை எடுத்துச் சாப்பிடலானான். போலீஸ்காரன் நொண்டியைப் பார்த்து, "நீ செத்துப் பிழைத்தாய் என்று சொல்" என்றான்.

"அது உண்மைதான் பாபு! ஆனால் நான் சாகமாட்டேன் என்று எனக்குத் தெரியும். கடவுளின் சந்நிதானத்தில் அப்படிப்பட்ட அநியாயம் நடக்காது. எனக்குத் தாலுக்கா ஆபீஸிலிருந்து நகலின் பிரதி கிடைக்கும் வரையில் நான் சாகமாட்டேன்."

நொண்டியின் குரலில் எத்தனை கபீர், துளசி, ஸுர்தாஸ் ஒன்று சேர்ந்து பேசினார்களோ தெரியாது. "நகலைக் கண்ணால் பார்க்காமல் என் உயிர் பிரியாது. நான் சத்தியத்துக்காகப் போராடுகிறேன்" என்றான் அவன்.

"நீ அடி முட்டாள்" என்றான் போலீஸ்காரன். "இரண்டு ரூபாய்க்காக, இப்படி வாழ்க்கையையே வீணாக்கிக் கொண்டிருக்கிறாயே! இரண்டு ரூபாயை விட்டெறிவதுதானே?"

நொண்டி வேகமாய்த் தலையை ஆட்டினான். "உனக்கு இது புரியாது பாபு! இது சத்தியப் போராட்டம்."

ரூப்பன் பேச்சை மாற்றினான். "இப்பொழுது என்ன நடக்கிறது?"

"நாளைக்கு அல்லது நாளை மறு நாள் கிடைத்து விடும் பாபு! இப்பொழுதே போய்த் தாலுக்கா ஆபீஸ் முன்னால் கிடக்கப் போகிறேன்" என்றான் நொண்டி. "அங்கேயே ஒரு குடிசையைப் போட்டுக்கொள், அலைச்சலாவது மிச்சம்" என்றான் தலைவன்.

ரூப்பன் பெஞ்சியின் மீது அமர்ந்து சற்று நேரம் இரண்டு கால்களின் சதையையும் 'பிடித்து விட்டுக் கொண்டிருந்தான்.

பிறகு கடைக்காரனை நோக்கி, "ஒரு கலயம் பால் கொடு" என்றவன் ஏதோ யோசித்தவனாய், "ஒரு கலயம் நொண்டிக்கும் கொடு" என்றான்.

நொண்டியுடன், தானும் பாலைப் பருகிவிட்டு ரூப்பன் எழுந்திருக்கும் சமயத்தில் தலைவன் கேட்டான்: "என்ன நொண்டியப்பா, நீ தாலுக்கா ஆபீஸ் முன்னாலே முகாம் போடப் போகிறாயா?"

நொண்டி வைணவப் பக்தர்களைப்போல் சிரித்தான். 'நீ ஒரு முட்டாள், நான் மிகவும் பணிவுள்ளன்' என்பது போல் இருந்தது அந்தச் சிரிப்பு.

"கொஞ்ச நாட்கள் கழித்துப் பட்டினிப் போராட்டத்தைத் துவக்கிவிடு. ரொம்ப நல்லது. பத்திரிகைகளில் உன் பெயர் வரும். நகல் கிடைக்கிறதோ இல்லையோ பெயர் கிடைக்கும். யோசித்துப் பார் நொண்டியப்பா!" என்றான் தலைவன் மீண்டும்.

ரூப்பன் இருந்த மனநிலையில் அந்தத் தலைவனின் கிண்டல் கோபத்தை ஏற்படுத்தியது. "நொண்டியப்பா" என்று அழைத்து அவன் நொண்டியைப் பரிகாசம் செய்கிறான் என்பது தெரிந்தது. 'எல்லாரும் அவரை நொண்டி என்றுதான் சொல்லுகிறார்கள். அவனுடைய உண்மைப் பெயர் என்னவோ?' என்றெல்லாம் யோசித்தவாறே நடந்த ரூப்பனுக்குப் பல பெயர்கள் நினைவுக்கு வந்தன. 'நொண்டியை 'நொண்டி' என்கிறோம். கண் இல்லாதவன் ஒருவன் அவர்களின் வீட்டுக்கு வருவதுண்டு. அவனைக் 'குருடன்' என்பார்கள். குஸ்தியில் காது கிழிந்தவனுக்கு 'காதறுந்தவன்' என்று பெயர். வைத்தியரின் நோயாளிகளில் ஒற்றைக் கண்ணுடையவன் ஒருவன் இருந்தான். அவனைப் பார்த்ததுமே, 'என்ன சுக்ராச்சாரியாரே! என்ன சமாச்சாரம்?' என்றுதான் விசாரிப்பது வழக்கம். காது கேட்காதவரை, 'செவிட்டு ஐயா' என்று மரியாதையுடன் அழைப்பார்கள். இப்படி எத்தனையோ! 'அங்கஹீனர்கள், முடமானவர்களிடம் பரம்பரையாக நமக்குள்ள அன்பைத்தான் இந்தப் பெயர்கள் காட்டுகின்றன' என்று வேதனையுடன் நினைத்த ரூப்பன் சற்றே எரிச்சலுடன், "இவனை ஏன் நொண்டியப்பா என்கிறாய்? பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதுதானே?" என்றான்.

தலைவன் நொண்டியின் பக்கம் திரும்பி, "உன் பெயர் என்னப்பா?" என்றான்.

"இப்போ எல்லாரும் நொண்டின்னுதான் கூப்பிடறாங்க" என்றவன் சற்று யோசித்து, "அம்மா வைத்த பெயர் நொண்டி பிரசாத்" என்றான்.

இன்று எல்லா மெஷின்களும் கெட்டுக் கிடக்கின்றன. எல்லா இடத்திலும் ஏதோ ஒரு கெடுபிடி, கலாட்டா. அறிந்தவர்கள், தெரிந்தவர்கள் எல்லாருமே திருடர்கள். தெருவிலே நாயும், பூனையும், பன்றிகளுமே திரிகின்றன. மண்ணை வாரி இறைக்கத்தான் காற்று வீசுகிறது. வானத்துக்கென்று ஒரு நிறமே கிடையாது. அதன் நீல வண்ணம் ஒரு மாயை. முட்டாள்கள் மக்களை முட்டாள்களாக்க, முட்டாள்களின் உதவியினால் முட்டாள்களுக்கு எதிராக, முட்டாள்தனம் செய்கிறார்கள். பயப்படவோ, அவசரப்பட்டுத் தற்கொலை செய்துகொள்ள வேண்டிய அவசியமோ இல்லை. அயோக்கியனின், அயோக்கியத்தனம் எல்லா இடங்களிலும், எல்லாத் துறைகளிலும் பத்திரமாக இருக்கின்றது. இன்று பகல் 48 மணி நேரம்

ரூப்பனும் மற்றவர்களும் ஓர் அடர்ந்த மாமரச் சோலையின் வழியாகச் சென்றனர். சித்திரை மாதம், பயிர்கள் பெரும்பாலும் அறுவடையாகிவிட்டிருந்தது. தோட்டத்தில் களஞ்சியம் போட்டிருந்தது. காலியாகக் கிடந்த வயல் வெளிகளில் மாடுகளும் எருமைகளும் மந்தை மந்தையாகத் திரிந்து கொண்டிருந்தன. இன்னும் அறுவடையாகாத நிலங்களில் நிம்மதியாக மேய்ந்துகொண்டிருந்தன. மாடு மேய்க்கும் சிறுவர்கள் களத்துமேட்டில் குவித்திருந்த கதிர்களுக்குப் பின்னே ஒளிந்துகொண்டும், சிலர் பகிரங்கமாகவும் தரையில் அமர்ந்து சூதாடிக்கொண்டிருந்தனர். இந்தச் சோழியாட்டத்தைப் பார்க்கும்போது அவர்களெல்லாம் இந்தப் பொதுவான சித்தாந்தத்துக்கு உட்பட்டு, அதாவது, 'இந்த உலகத்தில் பிறந்துவிட்டாய் உன்னால் முடிந்தவரை அநுபவி; இல்லாவிடில் அந்திமக் காலத்தில் பச்சாதாபப்படும்படியாகிவிடும்' என்று நினைப்பதுபோலிருந்தது. இந்த ஆட்டத்தில் பறி கொடுத்தவர்களோ, உயிர் போவதற்கு முன்னரே பச்சாதாபப்பட்டுக் கொண்டிருந்தனர். ஒரு சிலர் இந்தச் சூதாடிகளை விட்டுச் சற்றுத் தூரத்தில் அமர்ந்து 'சரஸ்' அருந்திக்கொண்டிருந்தனர். மாடு மேய்ப்பவர்களில் இரண்டொருவர்தான் சீனியர். பெரும்பாலோர் பொதுமேடைகளில், இவர்களிடமிருந்துதான் எதிர்காலத்தில் காந்தியும், நேருவும், தாகூரும், சி. வி. ராமனும்

தோன்றப் போகிறார்கள் என்று கூறுகிறார்களே—அத்தகைய இளம் பருவத்துச் சிறுவர்கள்.

சூதாடிகளின் ஜமா சேர்ந்திருப்பதைக் கண்ட ரூப்பன் மெல்ல நடந்து அந்தப் பக்கம் சென்றான். இன்றைய மன நிலையில் மாடு மேய்க்கும் லீலையின் இந்தச் சூழ்நிலை, அதாவது, மாடுகள் எளியவர்கள் வயல்களில் புகுந்தடித்துக்கொண்டு மேய்ந்து திரிய, மேய்ப்பவர்கள், தங்கள் மாடுகளைத் தக்க இடத்தில் மேய்ச்சலுக்கு விட்டிருக்கிறோம் என்ற நிம்மதியுடன் சூதாட்டத்தில் முழுமூச்சாக இறங்கி இருப்பது ரூப்பனுக்கு அவ்வளவு கவர்ச்சிகரமாகத் தோன்றவில்லை. அவனைக் கண்டதும் அனைவரும் பள்ளிப் பிள்ளைகளைப்போல் எழுந்து நிற்க, மாஸ்டரைப் போல, "பரவாயில்லை. உங்கள் காரியத்தை நடத்துங்கள்" என்றான் அவன்.

சற்று நேரம் நின்று அவர்களின் ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். பதினொரு வயது சிறுவன் ஒருவன் அவனைப் பார்த்தவாறே, 'சரஸ்' புகையை ஊதலானான். நெடு நேரம் வெளிவிட்டுக்கொண் டிருந்த புகையைப் பார்த்த ரூப்பன் இனி இது சீக்கிரம் முடியுமென்ற நம்பிக்கையை இழந்து மேலே நடந்தான். பின்னாலிருந்து சூதாடிகளின் கூட்டம் கோரஸாக அவனுக்கு வணக்கம் தெரிவித்தது. ஆசீர்வதிப்பதற்காகத் திரும்பியும் பாராமல் ரூப்பன் மேலே நடந்தான். சற்றுத்தூரம் சென்றதும் உரத்த குரலில், "அயோக்கியப் பயல்களா? பயிரை என் மேயவிடுகிறீர்கள்? யாருடைய மாடுகள் இவை?" என்று கத்தினான் ரூப்பன்.

"என்னுடையது அல்ல."

"என்னுடையது அல்ல."

"என்னுடையதும் அல்ல."

"என்னுடையது அதோ அங்கே...."

"யாருடையதோ தெரியவில்லை."

பயிர்களை மேயும் மாடுகளைப் பற்றிய இந்தப் பதில்களைக் கேட்டதும் ரூப்பன் நின்று விட்டான். பிறகு "செருப்படி விழும்" என்று உரக்கக் கத்தினான்.

இதைக் கேட்டதும் மாடு மேய்ப்பவர்கள் பயந்தோடிப் போய்த் தங்கள் மாடுகளை விரட்டவில்லை. இன்று ரூப்பன் பாபு கொஞ்சம் கோபமாய் இருக்கிறார் என்று முடிவு செய்தனர். இதற்குள் ரூப்பன் மறுபடியும் சீறினான். "காதில் விழ

வில்லையா? செருப்படி விழுமென்று சொன்னேன் அல்லவா?" இதற்குப் பின் ஒருவன், "எங்களுடைய மாடுகள் இல்லை, இருந் தாலும் விரட்டுகிறேன்" என்றவாறே மாடுகளை விரட்ட, அதே சமயத்தில் இன்னொரு வயலில் அவற்றுக்கு மேயச் சந்தர்ப் பம் அளிக்கச் சென்றான்.

அவர்கள் ஒரு சந்தின் வழியாகச் சென்றனர். பல்முனைத் திட்டத்தின்படி அந்தச் சந்து உருவாக்கப் பட்டிருக்காவிடினும், அது தானாகவே நமது பல முனைத் திட்டங்களின் ஓர் அங்கமாகி விட்டிருந்தது. அது ஒரு பாதைச் சந்து. கூடவே சாக்கடை நீர் ஆயிரக்கணக்கான தாரைகளாகப் பெருகியோடும் வாய்க்கால், சாக்கடையில் பெருகிவரும் அழுக்குகளை, நாற்றம் அடிக்க வைத்து, நல்ல எருவாக மாற்றும் டிப்போ. இவை மட்டுமா? அந்தச் சந்தில் பஞ்சாயத்துப் போர்டின் விளக்குகள் எதுவும் இல்லாத காரணத்தினால் காதல் வயப்பட்ட ஜோடிகள் இருட் டிலே மகிழ்ந்து குலாவுவதற்குரிய சமுதாய நலக்கேந்திரமாக வும் விளங்கியது. சுருக்கமாகக் கூறினால், தன்னிருக்கையின் காரணமாய், கிராம அபிவிருத்திக்கு ஒரு நல்ல திட்டமாகவும் அது விளங்கியது.

ரூப்பன் முகத்தைச் சுளிக்காமல் சந்தைத் தாண்டி வெளியே வந்தான். இதற்கப்பால்தான், ஒரு மைதானமும் தாலுக்கா ஆபீஸ், போலீஸ் ஸ்டேஷன் கட்டடங்களும் தென்பட்டன. அதற்கும் சற்றுத் தள்ளி, சங்காமல் வித்யாலயத்தின் இன்டர் காலேஜின் கூரை தென்பட்டது. சாந்தி நிகேதன்பற்றிக் கேள்விப்பட்டிருந்த வைத்தியர், கொள்கை ரீதியாக அதை இன்னம் அகற்றாமலேயே விட்டு வைத்திருந்தார்.

சந்தின் முனையில் ஒருவன் கிழவியிடம் கோழி வாங்கிக் கொண்டிருந்தான். "நான் பட்டான் பாபாவின் சமாதிக்கு நேர்ந்து கொண்டிருந்தேன். இந்தக் கோழியை அதற்காகத் தான் வளர்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றாள் கிழவி.

கோழியை வாங்க வந்தவன் அதை வாங்கி விடவேண்டு மென்பதில் தீவிரமாய் இருந்ததால் எந்த வித ஆபத்தையும் அநுபவிக்கத் தயாராக இருந்தான். "பட்டான் பாபாவுக்குக் கோழி தானே வேண்டும். அது இந்தக் கோழியாக இருந்தால் என்ன? வேறு எந்தக் கோழியாக இருந்தால் என்ன?" என்று கிழவிக்குச் சமாதானம் கூற ஆரம்பித்தான். "கோழியை விற்க இரண்டு வழிகள் உண்டு. ஒன்று நேரான வழி

இன்னொன்று உதை வாங்கும் வழி" என்பதையும் கிழவிக்கு எடுத்துக் கூறிய அவன் மிகவும் நல்லதன்மாக, "இந்த இரண்டு வழியில் நீ எதை வேண்டுமானாலும் மேற்கொள்ளலாம்" என்றும் கூறினான். "நான் கோழியை வாங்குவதுடன் அதற்குக் கொஞ்சம் விலையும் தருவேன்" என்றான் முடிவில்.

போகிற போக்கில் ரூப்பன் அந்த ஆளிடம், "யாராவது ஆபீசர் வருகிறாரா?" என்று விசாரித்தான்.

பதிலுக்கு யாரையோ வசை பாடினான் அந்த ஆள் காலையிலிருந்து கோழியைத் தேடி அலைவதாயும், சிவபால்கஞ்ச் மிக மிக மோசமான ஊர் என்றும், எல்லாரும் சொல்வதைக் கேட்டால் எங்கே பார்த்தாலும் கோழிகளாக நிறைந்திருப்பது போல் தோன்றினாலும் வாங்கப் போனால் எல்லாம் எங்கேயோ மறைந்து விடுகின்றன என்றும் அவன் முணு முணுத்தான்.

சரி, நகரத்திலிருந்து இவனுடைய உயர் அதிகாரி வரப் போகிறான் என்பதை ரூப்பன் புரிந்து கொண்டான். நடந்து கொண்டே மெதுவாக, "கோழி வரைக்கும் சரிதான். ஆனால் அதற்கு என்ன செய்யப் போகிறாய்?" என்றான்.

"எதற்கு?"

ரூப்பன் ஜாடை காட்டினான். ஆனால் அந்த ஆளிற்கு அது முற்றும் புரியாத கலையாக இருந்தது. அவன் புரிந்துகொள்ளத் தயாராக இல்லை. கழுத்தை வளைத்து மீண்டும் கேட்டான்.

"எதற்கு?"

"ரமண்ணாவின் பெண் புக்ககம் போய்விட்டாளே இப்போது என்ன செய்வாய்?" என்றான் ரூப்பன்.

"ராம் ராம். நீங்கள் என்ன வார்த்தை பேசுகிறீர்கள் பண்டித்ஜீ!" என்று கடிந்து கொண்டான் அந்த ஆள்.

போலீஸ் ஸ்டேஷனுக்கு வெளியே, காதில் பூணூலைச் சுற்றிக் கொண்டு, பனியன், அன்டர்வேருடன் காட்சி தந்தான் கட்டுமஸ்தான போலீஸ்காரன். மரத்தின் கீழே நாயைப்போல் சுருண்டு கிடந்தான் காவல்காரன். உடைந்த மண் கலயங்கள், சட்டிகள், அழுக்கும் பிசுக்கும் ஏறிய இலைகள், புகை கப்பும் சிம்னி விளக்குகள் ஆகியவற்றினால் நிறைந்து காட்சி தந்தன பட்சண, பலகாரக் கடைகள், தேநீர்க் கடைகள், எல்லாம். எண்ணெய்ச் சிக்கேறிய பீப்பாய்கள் உருண்டு பாதையிலே கடகடவென்று ஓசை எழுப்பின. குடிகார டிரைவர்கள் ஓட்டும் கொலை வெறி பிடித்த டிரக்குகளின் சங்கிலித் தொடர்ச்சி, சைக்கிளின் காரிய

ரில் புல்லுக்கட்டைப்போல் தஸ்தாவேஜு மூட்டையைச் சுமந்து கொண்டு வசூலுக்காகத் திரியும் அமீனுக்கள்... தாசில்தாரின் அதிகப் பிரசங்கி ஆர்டர்லி குடித்துவிட்டு நாவிதனின் கடையில் சண்டை போட்டான். பண்டிதர் ராமதரரின் அடங்காத பிள்ளை, உள்ளூர் போஸ்ட்மேன் வாரத்தில் ஏழு நாள் அவனைவிட அதிகம் குடித்துவிட்டு அவனைச் செருப்பால் அடிப்பான். கல்லூரியிலிருந்து திரும்பி வரும் மாணவர்கள்.........

# அத்தியாயம் 25

வைத்தியரின் இல்லத்திலிருந்து கிட்டத்தட்ட நூறு கஜ தூரத்தில் ஒரு சிறிய மைதானம் இருந்தது. அதிலே ஒரு சில வேப்ப மரங்கள். அவற்றின் அடர்ந்த கிளைகளிலே நூற்றுக்கணக்கான கிளிகள் கிச்மூச்சென்று சத்தமிட்டுக் கொண்டே இருக்கும். மரங்களின் நிழலிலே நூற்றுக்கணக்கான நாய்கள் ஓடியாடி விளையாடும். சில நாட்களுக்கு முன் அங்கே உற்சாகமுள்ள துடிப்பான பிரைமரி ஸ்கூல் ஆசிரியரான இளைஞன் ஒருவன் சில பையன்களைக் கூட்டி வைத்துக்கொண்டு, தேகப் பயிற்சிகள் 'பலீன் சடுகுடு' விளையாட்டுப் போன்றவற்றைக் கற்றுக்கொடுக்க ஆரம்பித்திருந்தான். வைத்தியர் இதற்குப் பின்னால் ஏதோ அரசியல் இருப்பதாகக் கருதினார். ஏனென்றால் அந்த ஆசிரியர் ராமாதீன் பீகம் கேடவியின் குழுவைச் சார்ந்தவன். இதனால் வைத்தியர் தமது இந்தக் கருத்தைத் தம் அறையிலுள்ளவர்களின் முன் வெளியிட்டு விஷயத்தை அத்துடன் முடித்திருந்தார். அதே இடத்தில் வாரத்துக்கு ஒருமுறை உள்ளூர்ச் சந்தை கூடும். காய்கறிகள் விற்பனைக்கு வரும். சில சமயம் அதிசயப் பிறவியான குழந்தையைப் போல் காண்பதற்கரிய பொருளான கோதுமைகூட மூட்டையாக வந்து சில்லறையில் விற்பனையாகும்.

பஞ்சாயத்துத் தலைவனானபின் சனிஸ்வரன் அந்த மைதானத்தின் ஒரு மூலையில் ஒரு கேபின் மாதிரி மரப் பலகைகளினால் கட்டிக் கொண்டிருந்தான். அங்கேயே அரிசி பருப்பு முதலிய சாமான்கள் விற்கும் மளிகைக்கடை ஒன்றையும் ஆரம்பித்திருந்தான். தலைவனாவதற்குமுன் இதை ஏன் அவனால் செய்ய முடியவில்லை என்பதுபற்றி ஏதும் கூறுவதற்கில்லை.

ஹோலிக்குப் பதினைந்து நாட்கள் இருந்தபோது அவனுடைய கடை திறக்கப்பட்டது. பத்ரி பயில்வானை முகஸ்துதி செய்து அவர் மூலமாகத் திறப்பு விழாவை நடத்தினான். திறப்பு விழா மிக எளிமையாக, ஆனால் பிரமாதமாக நடந்தது. சின்ன வஸ்தாது தன் தோழர்களுடன், கடை திறக்கும் சமயத்தில் அங்கே சென்று, அங்கிருந்த உடைசல் பெஞ்சியில் அமர்ந்து கொண்டான். சின்ன வஸ்தாது கடையிலிருந்து ஒரு வெல்லக் கட்டியை எடுத்து வந்தான். யாவரும் அதைப் பங்கிட்டுச் சாப்பிட்டார்கள்.

பத்ரி பயில்வான் மக்களின் வருகையை எதிர்பார்த்து மௌனமாய் வீற்றிருந்தார். மக்கள் என்ற பெயரில் பத்துப் பதினைந்து தறுதலைப் பேர்வழிகள் அந்தப் பக்கமாக வந்ததும், பத்ரி பயில்வான் சுருக்கமான, ஆனால் சாரம் நிறைந்த சொற்பொழிவாற்றினார். 'சனிஸ்வரன் இனி இரவு பகல் சும்மா உட்கார்ந்திருப்பது சரி அல்ல. கடை திறந்தாகிவிட்டது, இனி நேரான வழியிலே சென்றால் சிறிது காலத்துக்குள் உருப்படியான மனிதனாகிவிடமுடியும்' என்பதே அவர் கூறியதின் சாரம்.

சனிஸ்வரன் தன் வரையில் கடையை நன்கு அலங்கரித்திருந்தான். மரப் பலகைச் சுவற்றின் ஒருபுறம், 'உற்பத்தியைப் பெருக்கு' என்ற பெரிய போஸ்டர், மற்ற இடங்களில் யாரோ ஒரு கிழவி கண்டுபிடித்த கண் மை, இருமல், சொறி, சிரங்குக்கான மருந்துகள் பற்றிய விளம்பரங்கள், புதியதொரு பாட்டரி, வனஸ்பதி நெய்யின் விளம்பரங்கள் முதலியன ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. விளம்பரங்களில் கண்டிருந்த பொருள்கள் பெரும்பாலும் இல்லை. கடையில் இருந்தவை விளம்பரங்களில் இல்லை.

கடையில் வெற்றிலை பாக்கு பீடியிலிருந்து, கோதுமை மாவு, பருப்பு, அரிசி, கரம் மசாலா போன்ற பொருள்களே இருந்தன. இவை யெல்லாம் அறிக்கையில் கூறியிருக்கும் அரசியல்

கொள்கைகளின் ஒரு பகுதி போன்றவை. இதன் பின்பே ரகசிய ஆலோசனைக் கூட்டத்தில் ரகசியமாகக் கூறப்படும் அம்சங்கள், அதிலும் நம்பிக்கைக் குரியவர்களுக்கு மட்டுமே அறிவிக்கப்படுபவை இடம் பெறும். வெளிப்படையாக விற்கப் படாத, சாப்பிடப்படாத பொருள்களும் அங்கே இருந்தன.

இந்த வகையில், உள்ளூர் ஆஸ்பத்திரி ஸ்டோரிலிருந்து கிளப் பிய ஆங்கில மருந்து வகைகள் பலவும் இருந்தன. உள்ளூர்ப் பிரைமரி ஸ்கூலிலிருந்து வந்தவை, அமெரிக்கப் பால் பவுடர் டின்கள். இவற்றைத் தவிர மறைமுகமாக வாங்கி யாரும் அறியாமல் அருந்தவேண்டிய வகையைச் சேர்ந்த கஞ்சா, பங்கி, சரஸ் போன்றவையும் அங்கே இருந்தன. இவற்றில் 'அபினி'யைப் பற்றிச் சனிஸ்வரன் அதிகம் உற்சாகம் காட்ட வில்லை. ஏனென்றால் ஊரில் கள்ளத்தனமான அபினி வியா பாரம் செய்யத் தனி உரிமை ராமாதீன் பீகம் கேடளிக்கே இருந்தது.

ஹோலிப் பண்டிகை நெருங்க நெருங்கச் சனிஸ்வரனின் கடைக்குச் சர்க்காரின் ஒப்புதல் கிடைத்துவிட்டது. சர்க்கரை விற்க ஆரம்பித்தான். பர்மிட்டின்பேரில் சர்க்கரை விற்கப் படும் என்பது பிரசித்தம். ஆனால் அந்தப் பர்மிட் எவ்வகையில் எங்கிருந்து கிடைக்கிறது என்பது பிரசித்தமாகவில்லை. ஹோலி அன்றிலிருந்து அங்கே நாட்டுச் சாராயம், அதிலும் தண்ணீர் கலக்காத சாராயம் கிடைக்க ஆரம்பித்ததே இதன் சிறப்பு அம்சம். ஏனெனில் சர்க்கார் லைசென்ஸ் பெற்ற கடை யில் விற்ற சாராயத்தில் இந்தச் சிறப்பு இல்லை.

இந்தக் கடைக்கு எல்லாருடைய ஆசிகளும் கிடைத்தன. பத்ரி, சின்ன வஸ்தாது, வைத்தியர், பிரின்ஸ்பால் என்று யாவரும் வந்து ஆசீர்வதித்தனர். "கொஞ்ச இடம் இருந்தால் நோட்டுப் புத்தகம், பென்சில்களும் விற்க ஆரம்பித்துவிடு" என்று யோசனை கூறினார் பிரின்ஸ்பால். கோவாபரேட்டிவ் சூபர் வைசர், "இந்தக் கடைக்கு நல்ல கட்டடம் கிடைத்துவிட்டால் இதைக் கோவாபரேட்டிவ் ஸ்டோராக நடத்தலாம்" என்று கூறிவிட்டுப் போனான்.

"இப்போதே இதைக் கோவாபரேட்டிவ் ஸ்டோராக ஏன் நீ நினைத்துக் கொள்ளக்கூடாது? கோவாபரேட்டிவ் அலுவலகத் துக்காக லட்சக்கணக்கில் செலவழித்துக் கட்டடம் கட்டுகிறீர் களே, அந்த வட்டாரத்திலேயே கோவாபரேட்டிவ் ஸ்டோருக்

கும் கட்டடம் கட்டுங்களேன்" என்று பதிலுக்குக் கூறினுன் சனிஸ்வரன்.

உடனே அந்தச் சூபர்வைசர் சொன்னுன். "ஸ்டோருக்குக் கட்டடம் என்ன கட்டடம்? நாலு சுவரை எழுப்பி மேலே ஒரு கூரை போடு. கட்டடமாயிற்று. சொல்லு, நாளையே கட்டி விடலாம். ஆனல் வைத்தியர் நீ பஞ்சாயத்துக் கட்டடம் கட்டப் போவதாகக் கூறினுர். அப்படியானுல் அதிலேயே நீ இதையும் கட்டிவிடலாம்."

பஞ்சாயத்துத் தலைவன் என்ற மிடுக்குடன் சனிஸ்வரன் முணு முணுக்க ஆரம்பித்தான். "வைத்திய மகாராஜிடம் இதுதான் கஷ்டம். ஒருவருக்கு 'இல்லை' என்று சொல்லமாட்டார்; சொல்ல முடியாது அவரால். என்னிடம் இப்படிச் சொல்லு கிருர். பிரின்ஸ்பாலிடம், 'பஞ்சாயத்து ஆபீஸ் கல்லூரிக்குப் பக்கத்திலேயே இருக்கட்டும். அவசியம் நேர்ந்தால் இரண் டொரு வகுப்புகளை அங்கே நடத்திக் கொள்ளலாம்' என்று சொல்லி இருக்கிருர். பத்ரி பயில்வானிடம், 'சனிஸ்வரன் அங்கே இருக்க, படுக்க ஏற்பாடு செய்துவிடு. இரவு பகல் பஞ்சாயத்து வேலைகளைக் கவனிக்கச் சரியாக இருக்கும்' என்று சொல்லி இருக்கிருர். இப்பொழுது நீங்கள் இப்படிச் சொல்லு கிறீர்கள். பஞ்சாயத்து ஆபீஸ் கட்டடமே இன்னும் எழவில்லை. ஆயிரம் பேர் இதை முற்றுகையிடக் காத்திருக்கின்றனர்."

"வைத்தியரிடமே இதைப் பற்றிப் பேசு. இல்லை, நான் பேசு கிறேன்" என்ருர் சூபர்வைசர்.

"பேசுவதற்கு என்ன இருக்கிறது? அவர் சொல்வது ஒவ் வொன்றும் உத்தரவுதான் நமக்கு" என்ருன் சனிஸ்வரன்.

இருபத்துநாலு, இருபத்தைந்து வயது மதிக்கத் தகுந்த இளைஞன் ஒருவன், சனிஸ்வரனின் கடையிலே உட்கார்ந்து ஒரு மணி நேரமாகப் பேசிக்கொண் டிருந்தான். நாலைந்து பேர் அவன் பேச்சை ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்தனர். அவர் களில் ரூப்பனும் ஒருவன். இளைஞனின் பேச்சு பண்புடனும் தர்க்க ரீதியாக ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் இருந்தது. ஆனல் கேட்டுக் கொண்டிருந்தவர்கள், தங்களுக்கேற்றபடி அதைப் புரிந்து கொண்டனர்.

'குழந்தைகள் பெரிய தொந்தரவு' என்பதை ஏற்றுக்கொள்ளு வதில் அறிவுள்ளவர்களுக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை. இளைஞன் இதை விளக்க ஓர் உதாரணம் கூறினுன். வீட்டில்

ஒரு டம்ளர் பாயசம் வைத்தால், கணவனும் மனைவியுமாக இருந்தால் ஆளுக்குப் பாதி அருந்தலாம். ஒரு குழந்தை இருந்தால் ஆளுக்குக் கொஞ்சமாய்ச் சாப்பிடலாம். ஐந்து குழந்தைகள் இருந்தால் ஆளுக்கு ஒருவாய்கூடக் கிட்டாது. பாயசம் பருகும் ஆனந்தமும் போய்விடும்.

"இதோ பார்! எனக்குப் பிள்ளை குட்டி கிடையாது. பிள்ளை குட்டி எப்படிப் பிறக்கிறது என்பதும் தெரியாது. ஆனால் ஒரு விஷயம், குழந்தைகள் ஐந்து கூடாது இரண்டு அல்லது மூன்று போதும். அதுவே அதிகம். அது சரி. ஆனால் பாயசத்தை எதற்காக ஒரு டம்ளர்தான் பண்ணவேண்டும்? ஒரு சேர் பாயசம் ஏன் பண்ணக்கூடாது?" என்றான் ரூப்பன்,

இளைஞன் ரூப்பனிடம் பேசுவதற்குத் தயங்கினான். பின்பு, "ஒரு சேர் பாயசம் வைக்கும் தகுதி எத்தனை பேருக்கு இருக்கிறது?" என்றான்.

"அப்பொழுது தகுதியை எப்படி அதிகரிக்கச் செய்வது என்பதைப் பற்றிப் பேசு. குழந்தைகளை ஒழிக்க ஏன் கங்கணம் கட்டிக்கொள்கிறாய்?"

சனிஸ்வரன் கரத்தை உயர்த்தி, பஞ்சாயத்துத் தலைவன் என்ற தோரணையில் பேச ஆரம்பித்தான். "மனிதனை மலடாக்குவது பற்றி எந்த ஆட்சேபமும் இல்லை. ஆனால் என்ன செய்யவேண்டுமென்பதை நான் சொல்லுகிறேன். சில வருஷங்களுக்கு முன்பு நம்ம ஊரில் குரங்குகள் பெருகிப் பயிரை எல்லாம் நாசம் செய்தன. குரங்குகள், இந்தக் குழந்தைகளை விட எண்ணிக்கையில் ஏராளமாகிவிட்டன. ஊர்க்காரர்கள் பொழுது விடிந்ததுமே கையிலே கம்புடன் கிளம்பிவிடுவார்கள். வயல் வெளியில் போய் "டிரியோ, டிரியோ, டிரியோ" என்று கூவிக் குரங்குகளை ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு விரட்டுவார்கள். என்ன செய்தும் பயிர்கள் பிழைக்கவில்லை. அப்புறம் நாங்கள் வேறு ஊரிலிருந்து சில ஆட்களை வரவழைத்தோம். அவர்கள் குரங்கு பிடிப்பதில் கெட்டிக்காரர்கள். சில நாட்களுக்குள் எல்லாக் குரங்குகளையும் அவர்கள் பிடித்துவிட்டார்கள். இங்கிருந்து அவற்றை அகற்றியும் விட்டோம்.

"நீங்களும் அதையே செய்யுங்கள். எத்தனை பசங்க கிடைக்கிறாங்களோ, பிடித்து அடைத்து விடுங்கள். குண்டு கிண்டு போட்டுச் சுடவேண்டிய அவசியம் இல்லை. குரங்குகளை வெளிநாட்டுக்கு அனுப்புவதாகக் கேள்விப்பட்டேன். இந்தப் பசங்

களையும் கப்பலிலே ஏற்றி அனுப்பிவிடுங்கள். அங்கேயே போய் இருக்கட்டும். வம்ச விருத்தி செய்யட்டும்."

ரூப்பன் சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்தான். "வெளி நாட்டுக்கு அனுப்புவதில் செலவும் அதிகமில்லை. வெளிநாட்டி லிருந்து கப்பல்களில் கோதுமை வருவதாகக் கேள்விப்பட் டேன். அவை திரும்பிச் செல்லும்போது பசங்களை நிரப்பிக் கொண்டு போகட்டும். எல்லாக் காரியமும் இனுமாகவே முடிந்துவிடும்" என்ருன்.

சங்கோஜியான அந்த இளைஞன் சற்று நேரம் இந்த ஆலோ சனைகளைப் பற்றி யோசித்தவாறு இருந்தான். பிறகு வெட்கத் துடன், "அடே! நீங்கள் எல்லாரும் பரிகாசம் செய்கிறீர்கள்" என்று கூறி எழுந்து நின்று சனிஸ்வரனின் உருவத்தில் காட்சி தந்த மக்களாட்சிக்கு, மிகுந்த மரியாதையுடன் வணக்கம் செலுத்திவிட்டு, "நானே வந்து பார்க்கிறேன்" என்ருன்.

"தவருக நினைத்துக்கொள்ளாதே அப்பா! இதெல்லாம் இந்த ஊர்க்காரர்களின் கேலிப் பேச்சு. நானே வந்தால் வைத்தியரின் வீட்டு வாசலில் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்கிறேன். எல்லா ரும் சம்மதித்தால் அறுவைச் சிகிச்சை வெற்றி பெறும். நான் பிரம்மச்சாரி அப்பா, பெண்டாட்டி பிள்ளை கிடையாது. நீ சொன்னல் நானும் செய்துகொள்கிறேன். மஜாவாக இருக் கும்" என்ருன் சனிஸ்வரன்.

எல்லாரும் இளைஞனுக்கு மகிழ்ச்சியுடன் விடைகொடுத் தனர். இளைஞனே துயரம் மிகுந்த மனத்துடன் திரும்பினுன்.

பகல் சுமார் மூன்று மணி இருக்கும். எல்லார் வீட்டு வாச லும், கதவும் வெறிச்சோடிக் கிடந்தன. அறுவடை நடந்து கொண்டிருந்ததால், ஊராரில் பெரும் பகுதியினர் வயலுக்கும், களத்துமேட்டுக்கும் சென்றுவிட்டனர். அந்த இளைஞன் பிளேக் கினுல் அழிந்துவிட்ட பிரதேசத்தில் சுற்றிவரும் ஏசுநாதரைப் போல், நிமிர்ந்த நடையும் நேர்கொண்ட பார்வையுமாய் நடந்து சென்று கொண்டிருந்தான்.

இளைஞன், அதிகாரிபோல் பளபளக்கும் டெரிலின் ஷர்ட்டும், பாண்ட்டும் அணிந்திருந்தான். கிராமத்தின் எல்லையை நெருங்க இன்னும் சற்றுத் தூரம் இருக்கும்போது திடீரென்று அவனுக்குத் தனது புஷ்ஷர்ட் ஒரு நாயினுடைய இதயத்தைக் கவர்ந்துவிட்டது என்பது தெரிந்தது. அது குரைத்துக் கொண்டே அவனை நோக்கி வந்தது. இளைஞன் ஒரே தாவலில்

எதிரே இருந்த வீட்டை நோக்கி ஓடித் திண்ணையில் ஏறித் தகரக்கூரைக்குக் கீழே நின்றுகொண்டான். சட்டென்று அருகே கிடந்த ஓர் உலர்ந்த துவரக் குச்சியை எடுத்து, அபிமன்யூ உடைந்த சக்கரத்தைக் கரத்திலேந்தி நின்றதுபோல் நின்று, நாய்களின் சக்கர வியூகத்தை எதிர்க்கத் தயாரானான்.

பாய்ந்தோடி வந்த நாயின் குரைப்பில் எந்த மாயம் இருந்ததோ, கணப்போதில் அவை நாலாப் பக்கமும் ஓடியபடி குரைத்தன. குரைக்க முடியாதவை வீராவேசத்துடன் வாலை ஆட்டிக்கொண் டிருந்தன; இடுப்பை நெளித்துக்கொண்டிருந்தன. நிறைய நாய்க் குட்டிகள் மெல்லிய சன்னமான குரலில், 'கோய், கோய்' என்ன கத்தியவாறு வானத்தை அதிரடித்துத் தரையிலே கொண்டு வந்து மோதிக்கொண் டிருந்தன.

திடீரென்று வீட்டின் வாயிற் கதவு திறந்தது. கயாதீன் வெளியே வந்தார். வந்தவர் அமைதியுடன், "என்ன அமர்க்களம்?" என்றார்.

தம் வீட்டுத் திண்ணையில் கையில் துவரக் குச்சியுடன் நின்று நாய்களின் பட்டாளத்தை எதிர்க்கும் இளைஞனைக் கண்டதும், அவர் நாய்களை விரட்டலானார். அருகிலிருந்த வீட்டிலிருந்து உற்சாகத்துடன் ஓடி வந்த ஒரு பையன் இங்குமங்கும் ஓடி நாய்களின் மீது கற்களை வீசலானான். அவ்வளவுதான். எதிரிப் பட்டாளம் பின்வாங்கி ஓட்டம் எடுத்தது. ஆனால் அவற்றின் குரைப்பு மட்டும் தொடர்ந்தது.

"நீ யாரப்பா?" என்று அந்தச் சங்கோஜியான இளைஞனை நோக்கி வினவினார் கயாதீன்.

இத்தகைய கேள்விக்கு ஒவ்வோர் இந்திய இளைஞனிடமிருந்தும் சுலபமாய்க் கிடைக்கக்கூடிய பதில், அவன் சட்டென்று தன் ஜாதியின் பெயரைச் சொல்லுவதுதான். அப்படியே இவனும் சொன்னான்.

"நான் அகர்வால்."

சுவற்றோடு சாய்த்து வைத்திருந்த கட்டிலைக் கீழே தள்ளிய கயாதீன், "உட்காரப்பா! நீ என்ன செய்துகொண் டிருக்கிறாய்?" என்று விசாரித்தார்.

இளைஞன் கட்டிலில் அமர்ந்து முகத்தின் வேர்வையைத் துடைத்துக்கொண்டான். வெயிலினால் அல்ல; நாய்களின் தாக்குதலினால் அவனுக்கு வேர்த்து விட்டிருந்தது. "வேலை செய்கிறேன்" என்றான் அவன் சுருக்கமாக.

கயாதீன் இளைஞனை உற்றுப் பார்த்தார். அதில் வெட்கம் நிழலாடியது. பொதுவாகப் பையன் பார்ப்பதற்கு வனப்புடன் இருந்தான். "இங்கு எங்கு வந்தாய்?" என்றார் அவர்.

இளைஞன் சற்றே தயங்கித் தயங்கி நாட்டில் நாளுக்கு நாள் பெருகிவரும் குழந்தைகளைப் பற்றிப் பேச ஆரம்பித்தான். சற்றைக்கெல்லாம், 'மற்றவர்கள் இடைவிடாமல் குழந்தைகளை உற்பத்தி செய்ய, இந்த இளைஞனின் வேலை அந்த உற்பத்தியைத் தடுப்பது' என்பது அவருக்குப் புரிந்துவிட்டது. அவர் இளைஞனின் சம்பளத்தைப் பற்றி விசாரித்தார். குழந்தைகளின் பிறப்பைக் கட்டுப்பாடு செய்வது பற்றிப் பிரசங்கம் செய்தே ஒருவன் வயிறு வளர்க்கமுடியும் என்று தெரிந்ததும் வியப்பினால் மௌனமாகிவிட்டார்.

திடீரென்று அவர் கேட்டார்; "உனக்கு எத்தனை குழந்தைகள்?",

"எனக்கு இன்னும் திருமணமாகவில்லை." இதைக் கேட்டதும் கயாதீன் மிகுந்த அக்கறையுடன் இளைஞனைத் தலையிலிருந்து கால்வரை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு மீண்டும் ஒரு முறை, "நீ வைசிய அகர்வால்தானே?" என்று விசாரித்தார்.

அவன் தலை அசைத்து அதை உறுதிப்படுத்தினான். கயாதீன் இன்னும் சற்று நெருங்கிவந்தார். இளைஞனின் விலாசம், ஊர், பேர், தாய், தந்தையரைப் பற்றியெல்லாம் கேட்டார். ஊர், பக்கத்தில் இருக்கும் ஒரு நகரம் என்று தெரிந்தது. அவன் அப்பா கூட அவருக்குத் தெரிந்த ஒரு வியாபாரியாக இருந்தார். மற்ற விவரங்களையெல்லாம் விசாரிக்கையில், அவன் அப்பா கூட ஏனைய பெரிய சின்ன வியாபாரிகளைப் போல ஒரு குட்டித் தலைவராகிவிட்டார் என்று தெரிந்தது. அதற்கு அத்தாட்சி தன் பிள்ளையை வெகு தூரத்தில் வேலைக்கு அனுப்பாமல், சுமார் பத்துப் பதினைந்து மைல் வட்டாரத்துக்குள் சுற்றி வரும் வேலையாக வாங்கித் தந்திருக்கிறார்.

கயாதீன், உடன் பிறந்தவர்களைப் பற்றியும் கேட்டுக்கொண்டார். இளைஞனின் சகோதரி ஒரு பணக்காரச் சேட்டின் வீட்டில் வாழ்க்கைப் பட்டிருக்கிறாள். தங்கையின் கணவன் கல்கத்தாவில் பெரிய பணக்கார இளைஞன். சிறிய தம்பி தன் அத்தானுடன் தொழிலைக் கவனிக்கிறான் என்பது தெரிந்தது. மேலும் தூண்டித் துருவிக் கேட்டதில் அந்தப் பணக்காரச் சேட்டுக்கு இது மூன்றாவது திருமணம் என்பதும் தெரிந்தது.

கயாதீன் விடவில்லை. சுற்றி வளைத்து அவனும் திருமணம் செய்துகொள்ளப் போகிருனு இல்லையா என்பதையும் கேட்டு விட்டார். "இந்த வருடம் செய்துகொள்ளவேண்டும் என்பது அப்பாவின் உத்தரவு" என்ருன் இளைஞன்.

முடிவில் கயாதீன் அவனை நோக்கி, "நீயே படித்தவன். பி. ஏ., எம். ஏ. படித்த பெண்களை விட்டு விட்டா வேறு பெண்களை மணப்பாய்? என்று வினவினுர்.

இதற்கு அந்த இளைஞன், "இந்த நாட்டின் சராசரி இளைஞர்கள் கூடப் படிக்கும் பெண்ணுடன் காதல் புரிந்துவிட்டு, அப்பா வரதட்சணையுடன் கொண்டுவரும் பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதுபோல எனக்கொன்றும் தெரியாது. அப்பா எப்படிச் சொல்லுகிருரோ அது தான்" என்ருன் பவ்யமாக.

இதைக் கேட்டதும், இளைஞன் கட்டிலிருந்து எழுந்து விடுவதற்குள், கயாதின், "நீ நம்மைச் சேர்ந்தவனுகிவிட்டாய். வீட்டுக்கும் வந்திருக்கிருய், சர்பத்தாவது குடித்துவிட்டுப் போ! இல்லாவிட்டால் பால் குடி; பாலும் வேண்டாமென்ருல், தேனீர் குடி" என்றவர் உட்பக்கம் திரும்பிப் பேலாவை அழைத்தார்.

வைத்தியரின் சீற்றத்துக்கு ஆளானதால் சிவபால்கஞ்சிலிருந்து மாற்றப்பட்ட இன்ஸ்பெக்டர், ஜோக்நாத்திடம் மன்னிப்பு கேட்பதற்காக இன்று வந்திருக்கிருர் என்ற செய்தி ஊர் முழுவதும் பரவியது. வைத்தியரின் வீட்டு வரவேற்பறையில் அவர் அமர்ந்திருக்கிருர் என்ற செய்தி ஓரளவு உண்மை; அவர் அங்கேதான் உட்கார்ந்திருந்தார். டெரிலின் புஷ் ஷர்ட், தங்க ஃபிரேம் போட்ட மூக்குக் கண்ணுடி, முறுக்கு மீசை. இப்போது அவரைப் பார்த்தால், எண்ணற்ற அபலைகளின்பால் அநுதாபம் கொண்டு தன் ஜமீனை விட்டுவிட்டு நகரத்தில் வந்து வசிக்கும் ஒரு ஜமீந்தார் போல் இருந்தது. அதிகாரத் தோரணையுடன் கூடிய வாட்ட சாட்டமான உருவம், கம்பீரமான ஆகிருதி. ஆனுல் விழிகளிலே பளிச்சிட்ட இன்பச்சுவை உணர்வு, லேசான தூண்டுதல் கிடைத்தாலும் சிருங்கார ரசம் மிகுந்த உர்தூக் கவிதைகளைப் பொழிய ஆரம்பித்து விடுவார் என்பதை உணர்த்தியது.

தற்சமயம் ரூப்பன், பிரின்ஸ்பாலின் வெளிப்படையான எதிரியாகி யிருந்தான். பெரும்பாலும் கன்னு மாஸ்டரின் வீட்டில்தான் அவன் இருந்தான். இரண்டு நாட்களுக்கொருதரம்

ஊருக்குத் திரும்பிப் போய்விடலாமா என்று நினைத்த ரங்க நாத் கூட, சில சமயம் கன்னு மாஸ்டர் வீட்டுக்குப் போய் வர ஆரம்பித்தான். பத்ரி பயில்வான் அக்கம்பக்கத்து ஜில்லாக் களில் சுற்றி வரப் புறப்பட்டுச் சென்றிருந்தார். ஏனென்றால் அவருடைய இரண்டொரு சீடர்கள், தெரியாத்தனமாக, வழிப் பறி, கொள்ளையடித்தல் போன்ற விஷயங்களில் கைது செய் யப் பட்டிருந்தனர் என்ற செய்தியும் வந்திருந்தது. அப்போது வைத்தியர் வீட்டின் வரவேற்பறையில் வைத்தியர், இன்ஸ்பெக் டர், ஜோக்நாத், சின்ன வஸ்தாதுவின் தந்தை, குசஹர் பிர சாத் ஆகியோர் இருந்தனர்.

இந்த ஸ்டேஷனிலிருந்து மாற்றலாகிப் போனபின், இன்ஸ் பெக்டருக்குப் பலவிதச் சிரமங்கள் நேர்ந்தன. அவற்றிலே ஒன்று, அவருக்குப் பதிலாக வந்திருந்த இன்ஸ்பெக்டர், 'இது வரை யெல்லாம் பாழாகிவிட்டது. பரவாயில்லை. இனி எல் லாம் சரியாகிவிடும்' என்ற சித்தாந்தத்தைக் கடைப்பிடிக்கிற வகை இல்லை. அதனால் பழைய குப்பைகள் கிளறப்பட்டன. முந்திய இன்ஸ்பெக்டரின்மீது பல விஷயங்களில் நடவடிக்கை எடுக்கப்பட்டது. எதையும் புனராலோசனை செய்வது என் பது கஷ்டமான காரியம். மயக்க மருந்து கொடுக்காமல் ஆப்பரேஷன் செய்வது போன்ற விவகாரம். இதன் முடிவு, காபி ஹவுஸில் நடக்கும் சர்ச்சைகளைப் போல், ஒரு முடிவுக்கு வரா மலேயே போனாலுங்கூட வியப்பில்லை. தற்சமயம் அவருடைய இலாக்கா. இன்ஸ்பெக்டரை நன்றாக வாட்டி எடுத்தது.

மற்றொரு பிரச்னை பசு. பசுவை நகரத்துக்குக் கொண்டு சென்றால்தான் அவர் தம்பி ராணுவப் பண்ணையில் வேலை செய் வதால், பசுவையும் அங்கேயே பண்ணையில் வைத்துக் கொண்டு இலவசமாகத் தீனிபோட ஏற்பாடு செய்ய முடியும். ஆனால் தற்சமயம் அவர் மீது முறையற்ற செயல்களுக்காகக் குற்றச்சாட்டுகள் இருக்கும்போது கோமாதாவுக்குச் சேவை புரியும் பணியை ஏற்றுக்கொள்ள அவர் தயங்குகிறார் என்பது தெரிந்தது. தெருவிலே உள்ள வீட்டில் வசித்துக் கொண்டு பசுவை என்ன செய்வது என்பது தெரிந்தது. தெரு விலே உள்ள வீட்டில் வசித்துக் கொண்டு, பசுவை என்ன செய் வது என்பது இன்ஸ்பெக்டருக்குத் தினம் தினம் பெரும் பிரச்னையாக இருந்தது. மூன்றாவது, ஜோக்நாத் அவர் மீது வழக்குத் தொடுத்திருந்தான்.

அவன் அவர் மீது எட்டாயிரம் ரூபாய்க்கு மானநஷ்ட வழக்குத் தொடுத்திருந்தான். சிவில் ஜட்ஜின் கோர்ட்டில் இந்த வழக்கு தாக்கலாகி இருந்தது.

பிரதிவாதியானவர், 'வாதியின்மீது பொய்யான திருட்டுக் குற்றம் சாட்டி, அவனுக்கு மானபங்கம் ஏற்படுத்தும் வகையில் வாதியின் மீது பொய் வழக்கொன்றையும் தொடுத்துள்ளார். கிட்டத்தட்ட இரண்டு மாதம் வாதி காவலில் வைக்கப்பட்டுள்ளார். இதனுல் சமூகத்தில் அவருக்கு ஏற்பட்ட அவமானத்தைத் தவிர, அவரது தொழிலுக்கும் பெருத்த நஷ்டம் விளைந்துள்ளது. இவற்றினுல் ஏற்பட்டுள்ள நஷ்டம் பல லட்சங்களாகும். ஆனுல் பிரதிவாதியின் நிலைமை அத்தகைய நஷ்டத்தை ஈடு செய்ய முடியாததாக உள்ளதால், பெயருக்காக எட்டாயிரம் ரூபாய் மான நஷ்டம் கோரி வாதி தாவா செய்திருக்கிருர்.' இது வாதி விண்ணப்பத்தின் ஒரு பகுதியாகும்.

இன்ஸ்பெக்டரின் தகுதியைக் குறைத்து அவரை எந்தப் புள்ளியை வைத்து மதிப்பிட்டிருந்தாலும் அதைப் பற்றிக்கூட அவருக்கு ஆட்சேபம் இருக்கவில்லை. அவருடைய வருத்தமெல்லாம் மக்கள் இவ்வழக்கில் காட்டிய உற்சாகத்தைப் பற்றியதே. அந்த நகரத்தில் கிட்டத்தட்ட அரை டஜன் இந்தி உர்தூக் குப்பைகள் 'வாராந்தர ஏடுகள்' என்ற பெயரில் வெளிவந்தன. இந்தக் குப்பைகளை வெளியிடுபவர்கள் அரைகுறைப் படிப்புடையவர்கள். 'ஜர்னலிஸ்ட்'கள் என்று கூறிக்கொண்டவர்களை உண்மையான 'ஜர்னலிஸ்ட்'கள் 'சேரதாப் பயல்'கள் என்று கூறினர்.

இந்தக் குப்பைப் பத்திரிகைகளில் பெரும்பாலும் கோர்ட் விவகாரங்கள், நோட்டீஸுகள், தெருவிலே நடக்கும் சம்பவங்கள் ஆகியவையே இடம் பெற்றன. கூடவே, இந்தப் பத்திரிகைகளில் ஏதாவதொரு சர்க்கார் அதிகாரியின் அந்தரங்க வாழ்க்கையைப் பற்றிய அவலங்கள் வெளிவந்தன. பேட்டியைப் போல், ஒரு பாத்திரம் இன்னெரு பாத்திரத்திடம், மதுப் புட்டிகள், பெண் சம்பந்தப்பட்ட விவகாரங்கள், நோட்டுக் கற்றைகள், ஊழல், லஞ்சம், சூதாட்டம் பற்றி விவரமாகக் கூறுவது போல் இது எழுதப்பட்டிருக்கும். இந்தக் குப்பைப் பத்திரிகைகளை, கோர்ட், மற்றும் அதிகாரிகள் வட்டத்தில் மிக்கக் கவனத்துடன் படித்தார்கள். அதோடு இந்தி, உர்தூப் பத்திரிகைகளால் விளையும் ஆபத்தைக் குறித்தும் விவாதித்

தார்கள். சில சமயம் திடீரென ஓர் அதிகாரியைப் பற்றி எழுதிய அவதூறுக்கு மறுப்பு வெளியாகும். குறிப்பிட்ட தேதியில் அந்தப் பத்திரிகையில் வெளியான சம்பவத்தைப் பற்றி ஆசிரியரே நேரில் விசாரித்ததாகவும், அதில் உண்மையில்லை என்று உணர்வதால் உண்மைக்குப் புறம்பான செய்தியைப் பிரசுரிக்க நேர்ந்ததற்காக வருந்துவதாகவும் அதில் ஆசிரியரே எழுதியிருப்பார். இந்தச் செய்தியை அளித்த தம் பிரத்தியேக நிருபரை வேலை நீக்கம் செய்துவிட்டதால் இனி அவன் வேர்க்கடலை விற்பதைத் தவிர வேறு வழியில்லை என்ற நிலை ஏற்பட்டு விட்டது என்ற குறிப்பும் இருக்கும்.

யாரைப் பற்றிய அவதூறுக் கட்டுரைக்கு இத்தகைய மறுப்பு வெளியாகிறதோ, அவர் பெருமையுடன் இதைத் தன் தோழர்களுக்குப் படித்துக் காட்டுவார்கள். "பார்த்தீர்களா?" என்பார் புன்சிரிப்புடன். ஆனால் அவர் நண்பர்கள் அவர் தலை மறைந்ததும், பத்திரிகை ஆசிரியர் இவரிடம் பணம் கறக்காமல் விட்டிருக்கமாட்டார் என்பார்கள். பத்திரிகை உலகத்துக்கும், அதிகார வர்க்கத்துக்குமிடையே இவ்விதமான நெருக்கமான உறவு நாளுக்கு நாள் வலுப்பட்டுக் கொண்டிருந்தது. இந்தக் குப்பை கூளங்களால் சமூக அரசியல் கலாசார நோக்கில் கிடைத்த கைங்கரியம் இவையே.

இப்படிப்பட்ட ஒரு மஞ்சள் பத்திரிகைதான் இன்ஸ்பெக்டருக்கு விரோதமாக ஜோக்நாத் தொடுத்திருந்த வழக்கைப் பற்றி முதற்பக்கத்தில் செய்தியாக வெளியிட்டிருந்தது. இந்தச் செய்தியைப் பழையது என்று நினைத்துவிடக் கூடாதே என்று சக பத்திரிகைகள், இதில் பல சுவையான மாற்றங்களைச் செய்து, மெருகூட்டி, பலமுறை, பலவிதமாகப் பிரசுரித்தன. நகரத்துக்கு வந்ததுமே இன்ஸ்பெக்டர் மிகவும் பெயர் பெற்றவராகி விட்டார்.

வழக்கு இன்னும் விசாரணைக்குக்கூட வரவில்லை. அதற்குள், பத்திரிகையாளர்களுடன் அவரது இலாக்காவிலுள்ளவர்களுக்கும் இதில் ஆர்வம் ஏற்பட்டுவிட்டதை அவர் கண்டார். அவர் கிளப்புக்குப் போனால் அங்கு நண்பர்கள் இதுபற்றிப் பேச ஆரம்பித்தார்கள். "காலம் மிகவும் மோசமாக இருக்கிறது. ஒன்றுமில்லாத பயல்கள் எல்லாம் பிரமாத ஆளாகிவிட்டான். வேலையை ஒழுங்காகச் செய்யும் காலம் அல்ல இது. நீ புத்திசாலியாயிற்றே, இந்த வம்பில் போய் ஏன் மாட்டிக்கொண்டாய்?"

இப்படிப் பல உபதேசங்கள் கிட்டின. நண்பர்களின் இத்த கைய அநுதாபங்கள் மிகுந்துவிடவே அவர் வெளியே தலை காட்டுவதே கடினமாகியது. எல்லாருமாகச் சேர்ந்து, "பயப் படாதே! நாம் எல்லோரும் சேர்ந்து சுப்ரீம் கோர்ட்வரை ஒரு கை பார்த்துவிடலாம். சத்தியமே வெல்லும் என்று சாஸ்திரத் திலேயே கூறியிருக்கிறது" என்று கோரஸ் பாடத் தொடங் கியதும் இன்ஸ்பெக்டர் நம்பிக்கை இழக்கலானார்.

ஒரு நாள் வயதும் அநுபவமும் மிகுந்த ஒருவர், "நீ விசித்திர மான ஆளாக இருக்கிறாயே! கேசு என்கிற நெருப்பைக் கட்டிக் கொண்டு, இங்கேயும் அங்கேயும் திரிந்துகொண் டிருக்கிறாயே! போய், ஏதாவது உபாயம் செய்து அதற்குச் சமாதி கட்டி விட்டு வருவதுதானே?" என்று கடிந்துகொண்டதும் இன்ஸ் பெக்டர் வைத்தியரின் சரணங்களை நாடி வந்தார்.

எல்லாரும் மௌனமாய் வீற்றிருந்தனர். பேசவேண்டிய விஷயங்களைப் பேசி முடித்தாகிவிட்டதோ என்னவோ? எல்லாரு டைய பார்வையும் வைத்தியரின் மீதே நிலைத்திருந்தது.

திடீரென்று இன்ஸ்பெக்டர் சொன்னார்; "வைத்தியர்ஜீ! எனக் குப் பஸ்ஸுக்கு நேரமாகிவிட்டது."

"எப்படிச் சொல்லுகிறீர்களோ, அப்படியே செய்கிறேன்" என்று ஆரம்பித்தார் வைத்தியர்: "நீங்கள் பிரதிவாதி, ஜோக் நாத் வாதி இரண்டுபேருமே இங்கே இருக்கிறீர்கள். இருவரும் பேசி ஒரு முடிவுக்கு வாருங்கள். இது இளைஞர்களான உங்க ளுடைய விஷயம். இதில் நான் சொல்ல என்ன இருக்கிறது?"

"மகராஜ் இது என் சொந்த விஷயம் மட்டும் அல்ல, சிவபால் கஞ்சின் கௌரவப் பிரச்னை இது. இதனால் தான் பஞ்சாயத்து இந்த வழக்குக்காக, சொந்தமாகச் செலவு செய்ய முன் வந் திருக்கிறது. சமாதானம் ஏற்படுவதென்றாலும் அதையும் பஞ் சாயத்தே தீர்மானிக்கவேண்டும். நான் அப்போதும் இன்ஸ் பெக்டர்ஸாரைவிடச் சின்னவன். இப்போதும் அப்படித்தான். அதிகாரி அதிகாரிதான். ஆனால் நான் சொல்ல என்ன இருக் கிறது? நீங்க எது சொன்னாலும் சரிதான்" என்றான் ஜோக்நாத்.

மாலையானதுமே வாடித் துவளும் மலரைப்போல் தம் மீசை தொய்ந்துவிட்டதாக இன்ஸ்பெக்டருக்குத் தோன்றியது. மெழுகு தடவி நன்றாய் முறுக்கிவிட்டுக் கொண்டதால் உணர்ச்சி வசப்பட்டாலும் அது துவளாமல் விறைப்புடன் இருந்தது. ஆனால் வாய் திறந்து எதுவும் பேசவில்லை.

வைத்தியர் ஜோக்நாத்தை நோக்கி, "சரி! அப்பொழுது பஞ்சாயத்திடமே இதை விட்டு விடு. சனிஸ்வரனிடம் ஆலோசித்துக்கொள். இவ்வளவு பெரிய அதிகாரி நகரத்திலிருந்து இவ்வளவு தூரம் ஓடிவந்திருக்கிருர். விஷயத்தை முடித்துவிடு" என்ருர்.

இன்ஸ்பெக்டரின் நெற்றி சுருங்கியது. "சனிஸ்வரனு? யார் அது?" என்ருர்.

"உங்களுக்குத் தெரியாதென்று நினைக்கிறேன். அவருடைய இயற்பெயர் மங்கள் பிரசாத். எங்களுடைய பஞ்சாயத்துத் தலைவர். அங்கேதான் அவருடைய கடையும் இருக்கிறது. நீங்கள் அங்கேயே போய்ப் பேசிக்கொள்ளலாம்" என்று வைத்தியர் மரியாதையுடன் கூறினர்.

"சனிஸ்வரனை இங்கேயே வரச்சொல்லலாமே" என்றது ஒரு குரல்.

"பதவிக்குரிய மரியாதையை அளிக்கவேண்டும், நேருஜீ பிரதம மந்திரியாகிவிட்டதும் காந்திஜி அவருக்குரிய மரியாதையை எப்படி அளித்து வந்தார்? நமக்குள் உள்ள உறவு வேறு, உலக ரீதியான விவகாரத்தில் பதவிக்குரிய மரியாதையைத் தரவேண்டும்" என்ருர் வைத்தியர் கம்பீரத்துடன்.

பிறகு இன்ஸ்பெக்டருக்குத் தைரிய மூட்டியவராய் மீண்டும் சொன்னர். "அங்கேயே கடைக்குப் போங்கள். தலைவர் அங்கே வந்திருப்பார்."

சனிஸ்வரன், இன்ஸ்பெக்டர், ஜோக்நாத் இருவர் வருகையையும் எதிர் நோக்கி தனது கேபினில் வீற்றிருந்தான். வயலிலிருந்து திரும்பி வந்ததுமே, கஞ்சின் வழக்கப்படி, அவன் காதுக்கும் செய்தி எட்டிவிட்டது. ஜோக்நாத் வழக்குத் தொடுத்ததுமே, இன்ஸ்பெக்டரின் மிடுக்கெல்லாம் புஸ்ஸென்று காற்ருய்ப் போய்விட்டது. ஆசாமி வெலவெலத்துப் போய்ச் சமாதானம் செய்துகொள்ள ஓடோடியும் வந்திருக்கிருர் என்பது தெரிந்தது. இவரை நன்ருக ஒரு கை பார்த்துவிடவேண்டும். நினைவில் இருக்கும்படி பாடம் புகட்டவேண்டும். எத்தனை பெரிய பெரிய இன்ஸ்பெக்டர்கள் எல்லாம் சிவபால் கஞ்சுக்கு வந்து, வாலைச் சுருட்டிக்கொண்டு போயிருக்கிருர்கள்! இது அவனுக்குச் சமயத்தில் பயன்படவேண்டுமென்று நினைத்தான் அவன். இன்ஸ்பெக்டரின் வரவை எதிர்பார்த்து நாலைந்து பங்கி பொட்டலங்களை விற்றுவிட்டான். பிறகு ஒரு பொட்ட

லத்தை, வழியிலே போன பஞ்சாயத்து உறுப்பினன் ஒரு
வனைக் கூப்பிட்டு இனாமாகவே கொடுத்துவிட்டான். இதை
என்ன செய்வது என்று அவன் கேட்டதும், "வைத்துக்கொள்.
இன்ஸ்பெக்டர் வரப்போகிறார் பார்க்கலாம். அப்புறம் பங்கி
விருந்து நடத்தலாம். பங்கி என்னுடையது. பாதாம், பிஸ்தா,
சர்க்கரை, பால் எல்லாம் உன்னுடையது" என்றான்
சனிஸ்வரன்.

பஞ்சாயத்து உறுப்பினன் பொட்டலத்தை வேட்டியின் மடிப்
பிலே செருகிக்கொண்டான். பின்னர் சிரித்துக்கொண்டே,
"தலைவரே! எங்கிட்டயே கைவரிசையைக் காட்டுகிறீர்களே!
இந்த நாலணா பங்கி இருந்தாப் போதுமா? உண்மையான விலை,
பாதாமுக்கும், பிஸ்தாவுக்குந்தானே?" என்றான். தன் தாராள
மனத்தை இப்படி ஆட்சேபிப்பதைத் தான் சற்றும் விரும்ப
வில்லை என்பதுபோல் சனிஸ்வரன் முகத்தைத் தூக்கிவைத்துக்
கொண்டான். "பொட்டலத்தை வைத்துக்கொள்ளேன். அது
உன்னைக் கடிக்கவா செய்கிறது? இன்ஸ்பெக்டர் வந்து பேசட்
டும். அதற்கப்புறம் பஞ்சாயத்தின் சார்பிலே பங்கி விருந்து
நடத்தலாம்" என்றான் அவன்.

"இருபத்தைந்து ரூபாயாவது ஆகிவிடும்."

"ஆகட்டுமே!"

"பஞ்சாயத்து மந்திரி இந்தச் செலவை ஆட்சேபிப்பார்."

சனிஸ்வரன் மிகவும் பிரயாசைப் பட்டுத் தன் கோபத்தை
வரவழைத்துக்கொண்டான். "கோவாபரேட்டிவ் யூனியனிலே
பத்து வருடமாகத் தினமும் சாயந்திரம் பங்கிப் பார்ட்டி
நடக்கிறது. ஒரு பயல் ஆட்சேபத்தைக் கிளப்பவில்லை. பஞ்
சாயத்தே பங்கி பார்ட்டி நடத்தினா எவன் எந்தத் துணிச்சலு
டன் ஆட்சேபிப்பான்?" என்றான்

இதற்குள் இன்ஸ்பெக்டரும் ஜோக்நாத்தும் வருவது தென்
பட்டது. சனிஸ்வரன் முதலில் ஷர்ட்டை எடுத்துப் போட்டுக்
கொள்ள நினைத்தான். இந்தச் சட்டை தேர்தலுக்குப் பிறகு
தைத்தது. முக்கியமான சந்தர்ப்பங்களில் வைத்தியரின் உத்தர
வுப்படி அணிந்துகொண்டான். பிறகு என்ன தோன்றியதோ
என்னவோ, கையிலெடுத்த சட்டையை அப்படியே அரிசிக்
கூடையின் மீது வைத்துவிட்டான் அவன். வெற்றுடம்பை ஒரு
தரம் கையால் நன்றாய்த் தடவி விட்டுக்கொண்டான். தலை
மயிரை நன்றாகப் பறக்கச் கலைத்துவிட்டுக்கொண்டான். அண்

டர்வேரை மேலுக்குத் தொடைச் சந்துவரை நன்றாக இழுத்து விட்டுக்கொண்டான். இதன் பின் பற்றற்ற துறவிபோல் அதாவது, கற்பனை வாடிக்கைக்காரனுக்காகத் தராசில் எதையோ நிறுத்தவாறு, இன்ஸ்பெக்டரை வரவேற்கத் தயாரானான்.

ஜோக்நாத் வந்ததுமே, ''தலைவரே! இன்ஸ்பெக்டர் வந்திருக்கிறார்'' என்று அறிவித்தான்.

சனிஸ்வரன் இன்ஸ்பெக்டரை ஏற இறங்க ஒரு பார்வை பார்த்து விட்டு, ''எங்கே இருக்கிறார்?'' என்றான்.

''இதோ இவர்தான்.''

சனிஸ்வரன் தன் எதிரே பெஞ்சியைச் சுட்டிக் காட்டியவாறு, வறண்ட குரலில், ''உட்காருங்கள் இன்ஸ்பெக்டர் சார்! நீங்கள் யூனிபாரம் இல்லாமல் வந்திருக்கிறீர்களா? எனக்குப் புரிந்து கொள்ள கொஞ்சம் சிரமமாகிவிட்டது'' என்றான்.

இன்ஸ்பெக்டர் பெஞ்சியின் மீது அமர்ந்தார். அதன் மீதிருந்த தூசியைத் தட்டுவது தம் கொள்கைக்கு விரோதம் என்று அவர் நினைத்தார். அவர் பக்கத்தில் ஜோக்நாத்தும் அமர்ந்தான்.

சனிஸ்வரன் போன்ற ஒருவனின் தலைமையில் சிவபால் கஞ்ச் வெகுவாக முன்னேற்றம் அடைந்துவிடும் என்று பேச்சை ஆரம்பித்தார் இன்ஸ்பெக்டர். தாம் அங்கிருந்த சமயத்தில் சனிஸ்வரனுடன் அதிகப் பரிசயம் ஏற்படவில்லை என்பதற்காகத் தம் வருத்தத்தை வெளியிட்டார். 'ஜோக்நாத்துக்கு ஏதோ தவறான எண்ணம் தோன்றிவிட்டது. அதனால் தான் கோர்ட்டில் தாவா....' என்று கூறிக்கொண்டிருந்தபோதே இடைமறித்தான் சனிஸ்வரன். ''தவறு! அப்படியென்றால் என்ன, சாகப்? ஆங்கிலத்தை விட்டு விட்டு நம்ப பாஷையில் சொல்லுங்கள், நான் நாட்டுப்புறத்தான். எனக்குப் புரியும் படியாகச் சொல்லுங்கள்.''

இன்ஸ்பெக்டர் மீசையிலே தடவி இருந்த மெழுகுதான் அவரது மானத்தைக் காப்பாற்றியது. முறுக்கு மீசையின் மிடுக்குடன் குரலைக் கூடிய மட்டும் இனிமையாக்கிக்கொண்டு, ''ஜோக்நாத்துக்கு ஏதோ கொஞ்சம் தவறான பிரமை...'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''பிரமையாக இருந்தால் இந்த வழக்கிலே அது விலகிவிடப் போகிறது. நாலு தடவை கேஸ் நடந்தா யாருக்குப் பிரமை என்பது தானாகத் தெரிந்து விடும்'' என்றான் சனிஸ்வரன்.

இன்ஸ்பெக்டர் எவ்வித உணர்ச்சியையும் காட்டவில்லை. கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே, "எனக்குப் பிரமை ஏற்பட்டது என்றே வைத்துக்கொள்ளுங்கள்; தவறு என்னுடையதுதான். தடயங்களையும், சாட்சியங்களையும் நன்றாகக் கவனிப்பதற்கு முன்னால் இந்த வழக்கை நான் எடுத்துக் கொண்டிருக்கக்கூடாது. இப்போது சமரசம் செய்து கொள்ள நான் தயார். தாங்கள் எது உசிதமென நினைக்கிறீர்களோ, அப்படியே செய்யலாம்" என்றார் நிதானமாக.

ஜோக்நாத் புன்முறுவல் பூத்தான். ஆனால் சனிஸ்வரன் கம்பீரத்துடன், "ஜோக்நாத்! என்னப்பா சொல்லுகிறாய்?" என்றான்.

"நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? நான் அப்போதும் ஒரு சோதா, இப்போதும் அதே சோதாதான். சொல்லவேண்டியது, கேட்கவேண்டியது எல்லாம் உன் பொறுப்பு. என் அபிப்பிராயத்தைக் கேட்பதால் சொல்லுகிறேன். இன்ஸ்பெக்டர் சார் என்ன சொன்னாரோ, அதை அப்படியே எழுத்து மூலம் எழுதித் தரச் சொல்லு. அவ்வளவுதான். விஷயம் முடிந்தது என்று நினைத்துக்கொள்ளலாம்" என்றான் அவன்.

இன்ஸ்பெக்டர் ஒன்றுமே பேசவில்லை. சனிஸ்வரன் சற்று நேரம் யோசித்துக்கொண்டிருந்தான். பிறகு, "இன்ஸ்பெக்டர் வாருங்கள்! வைத்தியரிடம் போய்ப் பேசுவோம்" என்றான்.

"அவரிடம் நான் பேசியாகிவிட்டது. அவர் 'விஷயம் பஞ்சாயத்தின் கையில்தான் இருக்கிறது' என்கிறார். ஜோக்நாத்தின் வழக்கைப் பஞ்சாயத்துதான் நடத்துகிறதாமே! அதனால் வழக்கை வாபஸ் பெற்றுக்கொள்ளுவது பற்றி நீங்கள்தான் முடிவு செய்யவேண்டுமென்று அவர் அபிப்பிராயப்படுகிறார். வைத்தியர் பஞ்சாயத்து மெம்பர் கூட இல்லையே!" என்றார் இன்ஸ்பெக்டர்.

"ஆமாம். அது சரி" என்ற சனிஸ்வரன் தொடர்ந்து கூறினான்: "இருந்தாலும் அவரிடம் இது பற்றிப் பேசவேண்டும்" என்றான்.

"அவர்தான், தாம் மெம்பர் கூட இல்லை என்கிறாரே!"

அரிசிக் கூடையின் மேல் கிடந்த சட்டையை எடுத்துப் பலமாக உதறினான் சனிஸ்வரன். தூசி பறந்தது எனினும் இன்ஸ்பெக்டர் முகத்தைக் கூடச் சுளிக்கவில்லை. சட்டையை அணிந்தவாறே அவன் சொன்னான். "வாருங்கள், அந்தத தர்பாருக்குத் தான் போயாகவேண்டும்."

அன்று மாலையே பஞ்சாயத்துச் சபையின் சார்பிலே பங்கிப் பார்ட்டி நடந்தது. காந்திச் சதுக்கத்தில் பல அம்மிகள் ஒரே சமயத்தில் ஓசை எழுப்பின. தூசிப் படலத்தினிடையே பங்கி அரைக்கப்பட்டது. 'பங்கி, போதை தர மறுத்து விடப் போகிறதே' என்ற நினைப்பில், அந்த நிலையைத் தவிர்க்க வேண்டி, சில ஊமத்தை விதைகளையும் சேர்த்து அரைத்தார்கள். பாதாம், பிஸ்தா, மிளகு, ஏலக்காய் இன்னும் சில மசாலாச் சாமான்களையும் அரைத்து அதில் கலக்கப்பட்டன. இந்தக் கலவையைப் பாலிலும், தண்ணீரிலும் கலந்தார்கள். விரைவிலேயே பல வாளிகளில் நுரைபோல் பொங்கிவந்தது, குரங்கு மாதிரி குதித்துக்கொண்டு சனிஸ்வரன், முதலில் ஒரு டம்ளர் பங்கி பானத்தை எடுத்து, அருகேயிருந்த மரத்தடியில் வீற்றிருந்த சிவலிங்கத்துக்கு அபிஷேகம் செய்தான். கூடவே பங்கி சம்பந்தப்பட்ட நூற்றுக்கணக்கான சூத்திரங்களையும் பிரார்த்தனைகளையும் கூறினான். பழைய காலத்துப் படிக்காத மனிதன், இன்றைப் படித்தவர்களைவிட எவ்வளவு அதிக விஷயஞானம் உள்ளவனாக இருக்கிறான் என்ற பாவனையுடன் கூடியிருந்த மக்கள் அவனைப் பாராட்டித் தலையாட்டினார்கள். இதன் பின் பங்கி பானத்தை வந்திருந்தவருக்கு எல்லாம் வழங்கினார்கள்.

எத்தனை பையன்கள காந்திச் சதுக்கத்தின் அருகே கூடியிருந்தார்களோ தெரியாது, அவர்களின் கண்களில் புளிச்சையும், வாயிலிருந்து உமிழ் நீரும் சொட்டிக்கொண்டிருந்தன. எல்லாருக்கும் சூனை வயிறு தட்டி, முன்னுக்கு வந்திருந்ததைப் பார்த்தால் அவர்கள் வீட்டில் சாப்பாட்டுக்குப் பஞ்சம் இருந்ததாகத் தோன்றவில்லை. பையன்கள் குரல்கள் கீச்சு மூச் சென்றும், சில சமயம் கரகரப்புடனும் ஒலித்தன. இவை எல்லாவற்றையும் விட அவர்களின் முகத்திலே நிலவிய மகிழ்ச்சிதான் பின்னும் இயற்கைக்கு விரோதமானதாக இருந்தது. அவர்களைப் பார்க்கும் யாரும், வருங்காலத் தலை முறை உரக்கக் கூச்சலிட்டுப் பேசும்; எந்த நிலைமையிலும் உப்பிய வயிறுடனும் சிரித்த முகத்துடனும் இருக்கும் என்பதைப் புரிந்துகொள்வார்கள். பங்கி பானத்தை முதலில் இந்தச் சிறுவர்களுக்கே வழங்கினார்கள். பாலின் சுவையை அறிந்திராவிடினும் பங்கியின் சுவையை ரசித்தவர்களாய் "மிகப் பிரமாதம்," "பஸ்ட்கிளாஸ்" என்ற அபிப்பிராயத்தை வெளியிட்டவர்களாய், மகிழ்ச்சியுடன் அதை அருந்தினார்கள்.

அன்றிரவே ஜோக்நாத் சாராயக் கடையில் முக்கியமானவர்களுக்குக் கள்ளுப் பார்ட்டி கொடுத்தான். இந்தப் பார்ட்டியில் முக்கிய விருந்தினனைக் கருதப்பட்டவன், பக்கத்துக் கிராமத்தில் கொலை சம்பந்தமான வழக்கில் கைதாகி, விடுதலை பெற்று சமீபத்தில் வெளிவந்தவன். அவன் இருந்ததால் சூழ்நிலை முதலில் மிகவும் கௌரவமானதாக, அமைதியாக இருந்தது. பின் யாரோ ஒருவன், ராணுவ பாஷையில், 'தூங்கிக் கொண்டிருந்தவனை ஆடு வெட்டுகிற மாதிரி வெட்டிவிடுவது வீரம் இல்லை, தம்பி இது. கசாப்புக் கடைக்காரன் வேலை' என்று சொன்னதும், சூழ்நிலையின் அமைதி வாலைச் சுருட்டிக் கொண்டோடி ஏதோ ஒரு பொந்தில் பதுங்கிக்கொண்டு விட்டது.

அந்தப் பிரதான விருந்தாளி கேட்டான்: "நீ எப்போதாவது ஆடு வெட்டியிருக்கிருயா?"

"நான் கசாப்புக் கடைக்காரன் அல்ல."

"நான் நேரிடையாகத்தான் கேட்கிறேன்." பிரதான விருந்தாளி மீண்டும் கேட்டான்: "நீ எப்போதாவது ஆடு வெட்டியிருக்கிருயா?" அவன் தன் காரியத்தின் மீது பார்வையை நிறுத்தி, மிகவும் மெதுவான, ஆனல் உறுதியான குரலில் பேசிக்கொண் டிருந்தான். அவன் இரண்டாம் முறை தன் கேள்வியைத் தொடர்ந்ததும் பலர் திகிலடைந்தவர்களாய் அவனிடம் நெருங்கி வந்தனர். ஒருவன் அவன் கரத்தைத் தொட்டு, "சும்மா விடப்பா, கிடக்கட்டும்" என்றுன்.

அவன், அவனுடைய கையை உதறிவிட்டு மூன்ரும் முறையாகக் கேட்டான்: "நீ எப்பொழுதாவது............"

"விடு... விடப்பா... விடப்பா தம்பி...... கிடக்கட்டும் விடு!" என்று ஆளுக்கொருவராய் அவனைச் சமாதானப்படுத்தினர். ஆனல் ராணுவ பாஷையில் பேசியவனே உச்சகட்டத்தை எட்டியிருந்தான். அவன் இருந்த நிலையில் எல்லாம் ஒரு துரும்பாக, ஒவ்வொரு மனிதனும் மிக அற்பமாகக் காட்சி தந்தனர். "இந்த ஆளுக்குப் போதை தலைக்கேறிவிட்டது. கொண்டு போய் மூலையில் போட்டுத் தலையிலே குளிர்ந்த ஜலத்தை ஊத்துங்க" என்ருன் அவன்.

இதுதான் தொடக்கம். இதன்பின் மண்கலயங்களும், பாட்டில்களும் படபடவென மோதி உடைய அதிக நேரமாகவில்லை. பின்னர் கள்ளுக்கடையை விட்டு வெளியே வந்து, கொஞ்ச

நேரம் வசைமாறி பொழிந்து கொண்டிருந்தனர். ஒரு மணி ஆன பின், அடி, உதை, தடியடி என்று ஆரம்பாகி விட்டது.

அக்கம்பக்கத்து வீடுகளில் உள்ளவர்கள் விழித்துக் கொண்டனர். ஆனால் ஸ்டேஷனில் உள்ளவர்கள் யாவரும் தூங்கி விட்டனர்.

ரங்கநாத் மாடி வராந்தாவில் படுத்திருந்தான். அவன் தூக்கம் கலைந்துவிட்டது. சற்று நேரம் மௌனமாய்க் கிராமத்தின் ஒரு கோடியிலிருந்து காற்றிலே மிதந்து வந்த கூச்சலையும், அமர்க்களத்தையும் கேட்டுக் கொண்டிருந்தான். பிறகு ரூப்பனிடம், "எனக்கு இங்கே வெறுத்துப் போய் விட்டது. நான் நாளைக்கே திரும்பி ஊருக்குப் போய்விடப் போகிறேன்" என்றான்.

ரூப்பன் இன்றைய விருந்தில் பங்கெடுத்துக் கொள்ளச் செல்லவில்லை. அவனுடைய பங்கு வீட்டுக்கே அனுப்பி வைக்கப் பட்டது. தூக்க மயக்கம் மிகுந்த குரலில், "எங்கே போவாய் அண்ணா? அங்கேயும் இதே மாதிரியான மோசக்காரர்களே இருப்பார்கள்" என்றான்.

"எனக்கு அங்கும் வெறுப்பாகத்தான் இருக்கிறது" என்றான் ரங்கநாத் ஆவேசத்துடன்.

புரண்டு படுத்த ரூப்பன் கொட்டாவி விட்டவாறே, "வெறுப்பதற்கு நீ யார்? இதிலிருந்து வேறுபட்டவனா நீ" என்று கூறியவன் எழுந்து உட்கார்ந்து கொண்டு, "சில நாட்களாகவே நீ இப்படித்தான் பேசுகிறாய். நீ ஏதோ வெளிநாட்டிலிருந்து வந்தவன் போலவும், மற்றவர்கள் எல்லாரும் கறுப்பர்களாய், அசுத்தத்திலே புரண்டு கொண்டிருக்கிறவர்கள் போலும் அல்லவா நீ பேசுகிறாய்?" என்றான். பிறகு, "தூக்கம் வந்தால் பேசாமல் தூங்கு. இல்லாவிட்டால் இரவு முழுவதும் வெறுப்பை உமிழ்ந்துகொண்டே இரு" என்று கூறிய ரூப்பன் மீண்டும் படுத்துக் கொண்டான்.

# அத்தியாயம் 26

**வீ**டு திரும்பிய பத்ரி பயில்வான் வைத்தியர் துயரமாக இருப்பதைக் கண்டார். அவர் துயரமாக இருக்கிறார் என்பதற்கு அடையாளம் அவருடைய தலைப்பாகை சற்றுத் தளர்ந்து போயிருக்கும். மீசை கலைந்திருப்பது மட்டும் அல்லாமல் அடிக்கொருதரம், "நான் என்ன சொல்லட்டும்? உங்களுக்கு எப்படித் தோன்றுகிறதோ, அப்படிச் செய்யுங்கள்" என்பார்.

பக்கத்து ஜில்லாவில், பத்ரியின் நண்பன் ஒருவனுக்கு அநுமதியின்றி ஆயுதங்களை வைத்திருந்த குற்றத்துக்காகத் தண்டனை கிடைத்திருந்தது. அவனுடைய வீட்டில் ரை:பிள், பிஸ்டல் தவிர, பல ஆயுதங்களும் கைப்பற்றப்பட்டன. தவிரவும் அவன் தான் இந்த ஆயுதசாலைக்கு உரிமையாளன் என்பதும் நிரூபணமாகி யிருந்தது. அந்த நண்பன் கோர்ட்டில் இந்த ஆயுதங்களோ, அந்த வீடோ தன்னுடையது அல்ல என்று கூறி விட்டான். வீடு அவனது கூற்றின்படி அவனுடைய மனைவியினுடையது. ஆனால் கோர்ட்டார் இதயம், இந்த ஆயுதங்களைப் பார்த்ததுமே அரண்டு விட்டதாகக் கேள்வி. சமயம் கிடைத்ததே என்று அவனுக்கு இரண்டாண்டுச் சிறைத் தண்டனை வழங்கப்பட்டது.

பயில்வான் பத்ரிக்கு ஆயுதங்களில் அவ்வளவாக ஈடுபாடு இல்லை. ஆனால் நண்பனைத் துக்கம் விசாரித்து வரவேண்டியது அவசியம் என்று கருதினார். நண்பனே ஹைக்கோர்ட்டுக்கு அப்பீல் செய்துவிட்டுத் தற்சமயம் பெயிலில் இருந்தான். ஹைக்கோர்ட்டில் தோற்றுப் போய் விட்டால், சுப்ரீம் கோர்ட்டுக்குப் போயாகவேண்டும். இதற்கெல்லாம் நிறையப் பணம் செலவழிக்க வேண்டியிருக்கும். "இதையெல்லாம் நானேதான் சமாளிக்கவேண்டும். இந்தக் காலத்தில் யாருக்கு யார் உதவுகிறார்கள்?" என்று அவன் திரும்பத் திரும்பப் பத்ரியிடம் கூறினான்.

பத்ரி இதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டார். அதாவது இந்த வழக்குக்கான செலவை அக்கம்பக்கத்து ஊர்களில் சூரியன் அத்தமித்ததும் தெருவிலே போகும் பாதசாரிகளும், வழிப்போக்கர்களுமே பகிர்ந்துகொள்ள வேண்டியிருக்கும் என்பதுதான் விஷயம்.

வழிப்பறி, கொள்ளையடித்தல் எல்லாம் பத்ரிக்குப் பிடிக்காத விஷயங்கள். இதனால் அவர், "பணத்தைப் பற்றிக் கவலைப் படாதே. கடவுள் பார்த்துக்கொள்வார்" என்று ஆறுதல் சொன்னதும் நண்பன் சிரித்தான்.

"ஆமாம்ப்பா, பகவான்தான் கொடுத்திருக்கிறான்" என்று கூரையிலே செருகி வைத்திருந்த ஒரு துணி முடிச்சை எடுத்தான். பொட்டலத்தில் கசங்கிய நோட்டுகள் ஏராளமாய் இருந்தன. அதிலிருந்து இரண்டாயிரம் ரூபாய் நோட்டுகளை எண்ணிப் பத்ரியின் கையிலே கொடுத்தவாறே நண்பன் கூறினான். "இவற்றை வைத்துக்கொள். நான் என்ன நிச்சயம்? இன்றைக்கு இங்கே; நாளைக்கு எங்கேயோ? ஒரு கால் ஜயிலிலும், ஒரு கால் வீட்டிலுமாய் இருக்கிறேன். ஹைக்கோர்ட்டில் அப்பீல் தள்ளுபடியாகி விட்டால், ஜாமீன் அத்துடன் முடிந்துவிடும். அப்பொழுது இந்தப் பணத்தில் சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்ய ஏற்பாடு செய்துவிடு. இதற்குள் கடவுள் இன்னமும் மூவாயிரம் ரூபாய்க்குமேல் ஏற்பாடு செய்து விட்டாரானால் அதையும் உன்னிடமே அனுப்பி வைக்கிறேன். இது எனது போதாத காலம். பகவானும் நீங்களுந்தான் எனக்குத் துணை" என்றான் நண்பன்.

இவ்வாறாகக் கடவுளைப் பற்றிய சர்ச்சையை முடித்துவிட்டுப் பயில்வான் பத்ரி வீடு திரும்பியபோது, பிறருடைய பணமாக இருந்தாலும் அவர் பையில் இரண்டாயிரம் ரூபாய்கள் இருந்தன. வீட்டுக்கு வந்ததுமே அவர் தம் நண்பனின் துயரக் கதையை வைத்தியரிடம் கூறிவிட்டு, சுப்ரீம் கோர்ட் வரை போக நேர்ந்தாலும், நானும் சற்று அலைய நேரிடும் என்பதைத் தெரிவித்தார். வைத்தியர் உற்சாகமற்ற குரலில், "நான் என்ன சொல்லட்டும்? எப்படித் தோன்றுகிறதோ அப்படியே........." என்றார்.

பத்ரி திடுக்கிட்டவராய் அவரை நோக்கினார். தலையில் தலைப்பாகையைக் காணோம். ஆனால் மீசை மட்டும் கலைந்து கிடந்தது. பத்ரிக்குக் கவலையாகப் போய்விட்டது. வைத்தியர்

வருத்தமாக இருக்கிறுர் என்பது புரிந்தது. பிறகு தூண்டித் துருவி அவருடைய வருத்தத்தின் காரணத்தையும் அறிந்து கொண்டார். கடந்த நாலைந்து நாட்களுக்குள் பலரும் தவருன பல காரியங்களையே செய்திருக்கிறுர்கள் என்பது தெரிந்தது.

பிரின்ஸ்பால் ஜில்லாக் கல்வி அதிகாரிக்குக் கல்லூரிக் கமிட்டியின் வருடாந்திர அறிக்கையை அனுப்பியிருக்கிறுர். அறிக்கை அழகான எழுத்தில் நன்ருக எழுதியிருந்தது. எளிய, அலங்காரமான நடை. வைத்தியரின் பொலிவு மிக்கத் தனித் தன்மையை நிரூபித்தவாறு அவரை, இந்த ஊரின் "நரகேசரி" (ஆண் சிங்கம்) என்று அதில் வர்ணித்திருந்தது. தன்னிகரில்லாத் தனிச் சிறப்புப் பெற்ற அவர் எல்லாருடைய சம்மதத்தின் பேரில் மகிழ்ச்சியுடன் ஒருமனதாக, மானேஜர் பதவிக்கு மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார் எனவும் அதில் குறிப்பிட்டிருந்தது. ஆனுல் ஒரு சில உறுப்பினர்கள் கல்லூரி வாயிலில் துப்பாக்கி முனையில் மிரட்டப்பட்டனர். அவர்கள் கல்லூரிக்குள் நுழைய அநுமதிக்கப்படவில்லை என்பது இதில் குறிப்பிடப் படவில்லை. எழுத்து மூலமாகக் கொடுத்திருந்த இந்த அத்தாட்சிக்குப் பிறகும், கல்வி அதிகாரி, ராமாதீன் பீகம் கேடவியின் குற்றச்சாட்டின்படி, மானேஜருக்கான தேர்தல் துப்பாக்கியின் அச்சுறுத்தலின் பலத்தின் மீது நடந்ததா இல்லையா என்பதை ஆராய விரும்புகிறுர் என்பதும், ஆராய்வதற்கு எவ்வித ஆதாயமும் முகாந்திரமும் இல்லாவிடினும், இவ்விஷயத்தை நேரிடையாகப் பரிசீலனை செய்யப் போவதாகப் பிரின்ஸ்பாலுக்கு அறிவித்து அதற்கெனத் தேதியும் குறிப்பிட்டிருக்கிறுர் எனவும் தெரிந்தது.

கன்ஞ மாஸ்டரும், டிப்டி டைரெக்டருக்கு எழுத்துமூலம் புகார் மனு அனுப்பி இருந்தார். குற்றச்சாட்டுகளுடன், ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தைவிட இரட்டிப்புத் தொகைக்கு அவர்களிடம் கையெழுத்து வாங்கப்படுவதாகவும் கூறியிருந்தார். பொதுவாக இதைப் பற்றிக் கவனிக்கவேண்டிய அவசியம் இல்லை. 75 சத வீதக் கல்லூரிகளில் இப்படித்தான் நடக்கிறது என்ருலும் டிப்டி டைரெக்டர் இதைப் பற்றிக் கவனிப்பதாக அவருக்கு வாக்களித்திருந்தார். ரசீது எந்தத் தொகைக்கு உள்ளதோ, அதுதான் சட்டபூர்வமானது என்று உலகம் முழுவதும் பொதுவான மாருத நியமம் என்று நிலவி வருகையில், எழுத்து மூலமாக உள்ள இந்தப் பிரமாணம் இருக்

தும் இதைப் பற்றிப் பரிசிலனை செய்யப் போவதாகத் தெரிந்தது.

மாளவியா மாஸ்டரின் துராகிருதச் செயல்கள், மோசமான நடவடிக்கைகள் பற்றி யாரோ அநாமதேயத் துண்டுப் பிரசுரம் வெளியிட்டிருக்கிறார்கள். குற்றச்சாட்டு உண்மையோ, பொய்யோ இப்படி அநாமதேயமுறையில் தாக்குவது கோழைத் தனம். மாளவியா அப்படி நடந்து கொண்டிருக்கிறார் என்றால் யாரேனும் நாலு பேர் அறிய அவரை எதிர்த்துக் கண்டித்திருக்க வேண்டும். கன்னு மாஸ்டர், ஒரு சில கல்லூரி மாணவர்களைச் சாட்சியாக வைத்துக்கொண்டு அப்பாவி பிரின்ஸ்பால்தான் இதை வெளியிட்டுள்ளார் என்று நிரூபிக்கப் போவதாய்க் கேள்வி. ரூப்பன் வாயே திறப்பதில்லை. ஆனால் கன்னு மாஸ் டருக்குத் துண்டுப் பிரசுரம் வெளியிட்டது சம்பந்தமான ருஜுக் கள் ரூப்பனின் உதவியினால் கிடைத்தது என்று காதில் விழுந் தது. 'கல்லூரியில் எல்லாம் நடக்கிறது, பாடம் போதிப்பது தவிர' என்று சில மாணவர்களைத் தூண்டிவிட்டுப் புகார் செய் யப்பட்டுள்ளது. அப்பாவி மாஸ்டர் மோதிராமிற்கு எதிராக 'வகுப்பில் விஞ்ஞானம் போதிப்பதில்லை. மாவு மிஷன் நடத்து வது எப்படி' என்று சொல்லிக் கொடுக்கிறார் என்று குறை சொல்லப்பட்டுள்ளது. இதற்கெல்லாம் எழுத்து மூலமாக ருஜுவோ, அத்தாட்சிகளோ கிடையாது. ஆனால் இவையெல் லாம் ஆராயப்படப் போகின்றன என்பதைப் பத்ரி அறிந்து கொண்டார்.

இவற்றைத் தவிர, இப்பொழுதெல்லாம் ரங்கநாத்கூடச் சில சமயம் கன்னுவுடன் பேசுகிறான். அவன் உடல் நிலை நன்றாகத் தேறி இருந்தது. ஆனால் மூளைதான் கெட்டுவிட்டது. இந்தக் கோவாபரேட்டிவ் இன்ஸ்பெக்டர் இருக்கிறானே, இவன் யுதிஷ்டிரருக்கு அப்பனாகிவிட்டான். பெரிய தருமாத்மா! இரண் டாயிரம் ரூபாய்க்குமேல் கையாடல் செய்திருக்கும் சூபர் வைசர் ராம் ஸ்வரூப், இதை வைத்தியருக்குத் தெரிந்து தான் செய்திருக்கிறான். அந்தப் பணத்தை அவரிடமிருந்தே வசூல் செய்து கொள்ளும்படி மேலிடத்துக்கு எழுதியிருக்கிறான்.

மானேஜிங் டைரெக்டர் என்ற முறையில் வைத்தியர் இன்ஸ் பெக்டருக்கு எதிராகப் புகார் செய்தும், அது எழுத்து மூல மாக இருந்தும், அவன் மீது எவ்விதமான நடவடிக்கையும் இது வரை எடுக்கப்படாதது மட்டும் அல்ல, இன்ஸ்பெக்டரை அங்

இருந்து மாற்றிவிட எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. இன்ஸ்பெக்டர் குடிக்கிறான் என்று கூட எழுத்துமூலம் எழுதிக் கொடுத்திருக்கிறார் வைத்தியர். அப்படியும் கோவாபரேட்டிவ் இலாக்காவில், எரிமலை வெடிக்கவில்லை என்பதுடன் லேசான பூகம்பம் கூட ஏற்படவில்லையே.

பத்ரி பயில்வான் தந்தை அமர்ந்திருந்த ஆசனத்தின்மீது ஒரு காலை வைத்துக் கொண்டு, அந்த முழங்காலின்மீது முழங்கையை ஊன்றிய அந்தக் கையில் தன் முகத்தை ஏந்திய நிலையில் நின்றிருந்தார். வைத்தியர் இதையெல்லாம் கூறி முடித்ததும், "இவ்வளவுதானே?" என்றார் பத்ரி.

"இவ்வளவு தானே என்கிறாய் நீ! என் சேவைகளுக்கு இதுவா பரிசு?" என்றார் வைத்தியர் ஆற்றாமையுடன்.

'பரிசு' என்ற விஷயத்தைப் பயில்வான் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. "இந்தத் தொந்தரவுகளை எல்லாம் பத்து நிமிஷத்தில் தீர்த்துவிடலாம். அந்தக் கோவாபரேட்டிவ் இன்ஸ்பெக்டருக்கு நாலு செருப்படி கொடுத்தால் தீர்ந்தது விஷயம். டிப்டி டைரெக்டர் நமக்கு இசைந்து வராவிட்டால், இதைப் பற்றிப் பரிசீலனை செய்ய வந்தால் யாரையாவது ஏவி விட்டு அவருக்கும் திருவடி சேவை செய்து விடுவோம். கன்னு மாஸ்டரையும் அவருடைய கோஷ்டியையும் நாளையிலிருந்து கல்லூரிக்குள் பிரவேசிக்கக் கூடாது என்று உத்தரவு போடுவோம். எல்லாரையும், 'ஆப்சென்ட்' போட்டுப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு கல்லூரியிலிருந்து நீக்கி விட்டால் போச்சு."

"இவை எல்லாம் எப்படி முடியும்?" என்று இடைமறித்தார் வைத்தியர்.

"பிரின்ஸ்பால் செய்வார். போன வருஷம், திரிபாடியை எப்படி வெளியேற்றினோம்? அவரை ஒரு மாதம் ஆப்சென்டாக வைத்திருக்கவில்லை?"

வைத்தியரின் முகத்தில் நம்பிக்கையின் அறிகுறிகள் லேசாகப் படர்வதைக் கண்டு பயில்வான் பத்ரி சொன்னார். "நீங்கள் இதையெல்லாம் இப்படியே விட்டு விடுங்கள். பிரின்ஸ்பால் பார்த்துக் கொள்வார். சின்ன வஸ்தாது இரண்டு, மூன்று குண்டர்களைத் தயார் செய்து வைத்திருக்கிறான். கல்லூரிக்கு வெளியே அவர்களை டியூட்டியில் போட்டுவிடுவோம். கன்னு கல்லூரிக்குள் கால் வைத்தால் செருப்படி விழும்."

"ரங்கநாத் காச்சு மூச்சென்று கத்தட்டும். அதனால் என்ன? கவலையில்லை. பட்டினத்து ஆசாமி. நீங்க முறைத்தால் போதும், பயந்து ஓடிவிடுவான்."

"ரூப்பன் கிடக்கிறான், அவனுக்கும் நாலு உதை வேண்டும். எப்போது சொல்லுகிறீர்களோ, கொடுக்கிறேன் நாலு."

வைத்தியர், பயில்வானின் தற்காப்புத் திட்டங்களைக் கேட்ட வாறு மௌனமாய் உட்கார்ந்திருந்தார். பிறகு, "உள்ளூர் விஷயமெல்லாம் சரிதான். ஆனால் மேலிடத்தில் அல்லவா கெடுபிடியாக இருக்கிறது. அதனால்தான் இந்தச் சின்னப் பசங்க துள்ளுகிறார்கள். கோவாபரேட்டிவ் இன்ஸ்பெக் டரைக் கூட மாற்றமுடியவில்லையே. இதற்குப் பின்னால் ரொம்ப பாலிடிக்ஸ் இருக்கிறது. அதுதான் கவலை" என்றார்.

"பாலிடிக்ஸ் கிலிடிக்ஸ் உங்களுக்குத்தான் தெரியும் நான் சொல்லிவிட்டேன். இன்ஸ்பெக்டருக்குச் சரியாகப் பத்து செருப்படி விழப்போகிறது. ஒன்று கூடாது, ஒன்று குறை யாது" என்று எரிச்சலுடன் கூறிய பத்ரி சற்று யோசித்தபின் ஒரு திருத்தம் கொணர்ந்தார். "அவன் லீவு எடுத்துக்கொண்டு வெளியூர் போய்விட்டால் செருப்படி விழாது, விட்டுவிடுவேன்."

பத்ரி தம் சட்டைப் பைக்குள் கைவிட்டார். சில நோட்டுகளை எடுத்தார். வைத்தியரின் முன்னே நீட்டியவாறே, "இதில் 1300 ரூபாய் இருக்கிறது..சமரசத்துக்காகப் போலீஸ் இன்ஸ் பெக்டரும் கொஞ்சம் பணம் கொடுத்ததாகக் கேள்விப்பட் டேன். எல்லாவற்றையும் சேர்த்து இரண்டாயிரமாக்கி விடுங் கள். கோவாபரேட்டிவ்காரர்கள் வற்புறுத்தினால் முதலிலேயே இதைக் கட்டிவிடுங்கள்" என்றார்.

"இன்ஸ்பெக்டர் கொடுத்ததில் கொஞ்சம் ஜோக்நாத்துக்குக் கொடுத்தாகிவிட்டது. நானூறு, ஐந்நூறுதான் மிச்சம் இருக் கும். இது மக்களுடைய பணம்" என்றார் வைத்தியர் கம்பீரமாக.

"கோவாபரேட்டிவ் பணம் மக்களுடையதுதானே."

வைத்தியர் பத்ரியிடம் நோட்டுகளைத் திருப்பிக் கொடுத்து விட்டார். "வைத்துக்கொள், பின்னால் பார்த்துக் கொள்ளலாம்."

இதற்குப் பின் தன் நண்பனைப் பற்றிய விவரங்களைப் பேசப் பத்ரி பயில்வான் அங்கே நிற்கவில்லை. வீட்டுக்குள்ளேபோக இருந்தவர் ஒரு முறை திரும்பித் தம் தந்தையைப் பார்த்தார்.

பின் விசித்திரமான ஒரு குரலில், இதற்குள் கிசுகிசுத்தார் "அப்பா! கயாதீனிடம் கூடப் பேசிவிடுங்கள்."

சில வருஷங்களாகவே பத்ரி பயில்வான் தம் தந்தையை எந்தப் பெயரிட்டும் விளிப்பதில்லை. சிறுவனாக இருக்கும் போது 'பாபு' என்பார். இளைஞனாகி, குஸ்தி கிஸ்தி பழக ஆரம்பித்ததும் இதைக் குழந்தைத்தனம் என்று விட்டு விட்டிருந்தார். இன்று பத்ரி கூறியதைக் கேட்டபின் ஏனோ வைத்தியர் கண்களை மூடிக்கொண்டார்.

சிவபால் கஞ்சின் சிறிய குழந்தைக்குக் கூடப் பிராணிகள் சம்பந்தப்பட்ட இந்த நியமம் நினைவு இருந்தது. காக்காய் குப்பையைத்தான் தான் கிளறும்; வைத்தியர் விஷயத்திலும் நடந்தது இது தான்.

இந்தக் கோவாபரேட்டிங் இன்ஸ்பெக்டர் மிகுந்த சிரமத்தை ஏற்படுத்திவிட்டான். முன்பு இருந்த இன்ஸ்பெக்டர் கண தந்திர முறைப்படி செயலாற்றி வந்தான். அதாவது யூனியன் கட்டடத்தில் பங்கி அரைக்க ஏற்பாடுகள் நடந்தால், அம்மியின் மீது குழவி படும் சத்தத்தைக் கேட்டதுமே, அவன் மற்ற உறுப்பினர்களுக்கு முன்பே அங்கே ஆஜராகி விடுவது மட்டும் அல்ல, மக்களில் ஒருவனாகி, அந்தக் காரியத்தில் பங்கெடுத்துக்கொள்வான். இந்த இன்ஸ்பெக்டரோ, பங்கிக்கு எதிரி. வைத்தியருக்குக் கிடைந்த தகவல்களின்படி, வைத்தியர் மேலதிகாரிகளுக்கு எழுதிய கடிதத்தின்படி அவன் மதுப்பிரியன். மதுவுடன், அவனுக்கு நேர்மை, நாணயம் ஆகியவற்றின் வெறியும் பிடித்திருந்தது. யூனியனின் உறுப்பினர்களுடன் ஒத்துழைப்பதற்குப் பதிலாக அவன் அவர்களின் போக்கை எதிர்த்தான். அவனுக்கு மாற்றலாகிவிடும் என்று தான் முதலில் வைத்தியர் நினைத்தார். ஆனால் தம் கடிதத்துக்குப் பதில் வராமல் போகவே அவருக்குக் கவலையுண்டாயிற்று. விசாரித்ததில் எல்லாம் பாலிட்டிக்ஸ் என்று தெரிந்தது. மக்களின் ஊழியர்களான சர்க்கார் அதிகாரிகளின் இடமாற்றம் எப்படி அரசியல் மூலம் நடைபெறமுடிகிறதோ, அதே போல், மேல் மட்டத்தில்-பாலிட்டிக்ஸ் மூலம் அதைத் தடுக்கவும் இயலும். இன்ஸ்பெக்டரின் கரங்கள், மதுப் புட்டி, பேனாவுடன் நிற்கவில்லை. அரசியல் நாடகத்தின் சூத்திரக் கயிறுவரை எட்டி இருக்கிறது என்பதையும் வைத்தியரால் புரிந்துகொள்ள முடிந்தது.

ஒரு நாள் வைத்தியர் நட்புறவு, நல்லெண்ண யாத்திரைக் காகத் தனியாகவே புறப்பட்டார். பட்டணத்தை அடைந் ததும் சாலையிலேயே எத்தனையோ பங்களாக்களைச் சுற்றி வட்டமிட்டார். ஒரு மணி, அரை மணி வெளியே காத்திருப்பது அவமானமாய்க் கருதப்படாத இடங்களில், அவர் மகிழ்ச்சியு டன் வரவேற்கப்பட்டார். அடிபட்டுச் சுருண்டு கிடந்த அவரது தன்னம்பிக்கை அப்போதெல்லாம் மீண்டும் புஸ்ஸென்று சீறிப் படம் எடுத்தது. பல பங்களாக்களில், அவருடைய 'தாது விருத்தி' மாத்திரையைப் பெற்று மகிழ்ச்சி அடைந்தார்கள். பல பேரிடம் இந்த வீரியவிருத்தி மாத்திரையுடன் கூடவே, 'உங்களுடைய ஜாதகத்தைக் கொடுங்கள். சில நாட்களுக்கு முன் மிகச் சிறந்த சோதிடர் ஒருவர் அறிமுகமாகி இருக்கிறார். அவரிடம் தங்களது ஜாதகத்தைக் கொடுத்து மீண்டும் பார்க்கச் சொல்லுகிறேன்' என்றும் கூறவேண்டியிருந்தது. இன்னும் சிலருக்கு உற்சாகமூட்ட, வீரிய விருத்தி மாத்திரையும், சோதிடர் விஷயம் மட்டும் போதவில்லை. 'ஹிரிஷிகேசத்தி லிருந்து ஒருவர் இந்தத் தேதியில் வரப்போகிறார். ஆமாம், அந்தப் போலீஸ் அதிகாரியின் மீதிருந்த குற்றச் சாட்டுகளெல் லாம் அந்த மகானின் ஆசீர்வாதத்தினால்தான் பொய்யென நிரூபணமாயிற்று. அவருக்கு உடனடியான பதவி உயர்வும் கிடைத்தது' என்றும் கூறவேண்டி வந்தது. 'அவரை இரவு பத்து மணிக்குப் பிறகு சந்திப்பதுதான் சௌகரியம். தாங்கள் விரும் பினால் அவரை அறிமுகம் செய்துவைக்க, குறித்த தினத்தில் நானும் வருகிறேன்' என்றும் கூற நேர்ந்தது. மேலிடத்து அரசி யல்வாதிகள், உயர்மட்ட அதிகாரிகளை இவ்வாறு முறியடித்த பிறகே, கோவாபரேட்டிவ் இன்ஸ்பெக்டருக்குப் பாதுகாப்பு தந்துவரும் பங்களாவுக்குச் சென்றார் வைத்தியர். அங்கே சென்ற பிறகே, கூட்டுறவு இயக்கத்தில் புதியதொரு சிந்தனை அலை தோன்றியிருப்பது தெரிந்தது. அண்ணன், தம்பி முறை, இனவாதம், பொதுவுடமை வாதம்போன்ற உயரிய சித்தாந் தங்களை ஒன்றாகக் கலந்து எதிர்கால ஊழியர்களுக்குப் புதிய உற்சாகம் அளிக்கும் ஊற்றாக அது விளங்கப் போகிறது என் பதும் புரிந்தது.

அந்தச் சிந்தனையின் ஒரு சில கருத்துக்கள் இவ்வாறு இருந் தன. 'உன் கையில் வலிமையிருந்தால் அந்த வலிமையை அதிகரிக்கச் செய்வதற்காக, உன் திறமையை நேரடியாகப்

பயன்படுத்தாதே. இதற்குமாறாக, சில புதிய எதிர்ப்புச் சக்திகளை உருவாக்கு. அந்த விரோதச் சக்திகள் தங்களுக்குள் போராடிக்கொண்டே இருக்கும்படியாக அவற்றை வலிமை மிக்கதாக ஆக்கிவிடு. அவ்வளவுதான், உனது சக்தியும், வலிமையும் பத்திரமாக, மிகச் சிறந்ததாக இருந்து வரும். இதற்குமாறாக நீ உன் வலிமையைப் பெருக்கிக்கொள்ள முயற்சி செய்தால், ஏனைய, பரஸ்பர விரோத சக்திகளைச் சிருஷ்டித்து, காப்பாற்றி, அழித்து உன்னை வல்லமையுள்ளவனாக ஆக்கிக் கொள்ளாவிடில், சில நாட்களுக்குப் பிறகு சில சக்திகள், எங்கிருந்தோ உனக்குத் தெரியாத ஒரு கோணத்திலிருந்து திடீரெனக் கிளம்பி உன்னைத் தாக்குவதுமட்டுமன்றி உன் சக்தியைச் சின்ன பின்னமாக்கிவிடும்.'

இந்தச் சித்தாந்தத்தை நடைமுறையில் பிரயோகித்ததின் பலனாக, அந்தப் பங்களாவில், இப்போது தங்களது குழுச் சிபாரிசுகள் மட்டும் அல்ல, மற்ற எதிர்க் கட்சிகளின் சிபாரிசுகளும் செவி சாய்க்கப்பட்டன. கோவாபரேட்டிவ் இன்ஸ்பெக்டருக்கு மாற்றலாவதைத் தடுக்கும் சிபாரிசு, இப்போதும் எதிர்க்கட்சியின் ஒரு மாவட்டத் தலைவனிடமிருந்து வந்திருந்தது. அந்த மாவட்டத் தலைவனின் வலிமையைக் கொண்டு இன்னொரு மூன்றாவது எதிர்க்கட்சியின் மாவட்டத் தலைவனை நசுக்கவேண்டியிருந்ததால், இந்தச் சமயத்தில் கோவாபரேட்டிவ் இன்ஸ்பெக்டரை மாற்றவேண்டுமென வைத்தியர் சாகும் வரை உண்ணா விரதம் இருந்தால் கூட அந்த மாற்றல் இயலாததாக இருந்தது.

இதையெல்லாம் வைத்தியரிடம் யாரும் வாய் திறந்து கூறவில்லை. பங்களாவில் நடைபெற்ற பல விஷயங்களைச் சும்மா கண்ணால் பார்த்தாலோ, முகர்ந்தாலோ புரிந்துவிடும். இதனால் அங்கே போனதுமே அவருக்கு எல்லாம் புரிந்துவிட்டது. இருப்பினும் அவர் தைரியத்தை இழக்கவில்லை. அவர் வெகு தூரம் விஷயத்தை எடுத்துரைக்கவே முயன்றார். ஆனால் அது மேலும் சிக்கலாகிவிட்டது. 'எங்கள் யூனியனில் கையாடல் மாதிரி எதுவும் நடக்கவில்லை. அப்படியே ஏற்பட்டிருந்தாலும் கையாடல் செய்தவன் கண் மறைவாக இருக்கிறான். அரசாங்க யந்திரம் திறமை யற்றிருப்பதால் அவனை இன்னும் பிடிக்கவில்லை. தமக்கும் இந்த ரகளைக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது. அப்படியே சம்பந்தம் இருப்பதாக நிரூபணமாகிவிட்

டால் அவர்கள் எவ்வளவு சொல்லுகிருர்களோ, அந்தப் பணத்தைத் தானமாகக் கொடுத்துவிடத் தயார். ஆனல் இதற்கெல்லாம் முன்னர் அந்த இன்ஸ்பெக்டர் மாற்றப்பட வேண்டும்.' அவரது நிபந்தனை இதுதான். இதன்பின் அவர்கள் எது சொன்னலும் அவர் கேட்கத் தயார்! இதுதான் வைத்தியர் கூறியதின் சாரம்.

'மக்களுக்குமுன் நாங்கள் லட்சிய உதாரணத்தை முன் வைக்க வேண்டியவர்களாக இருக்கிருேம்?' என்று வைத்தியருக்குப் பதில் கூறப்பட்டது. 'அப்படிச் செய்யாவிடில் மக்களின் நடத்தை கெட்டுவிடும். மக்கள் வழி தவறினல் நாடு முழுவதுமே கெட்டுவிடும். நிகழ்காலம், வருங்காலம் எல்லாம் நாசமாகிவிடும். ராமர் என்ன செய்தார்? சீதையைத் தியாகம் செய்தாரா இல்லையா? அதனல் தான் நாம் இன்னும் ராமராஜ்யத்தை நினைவு கூர்கிருேம். தியாகத்தின் மூலமாகப் போகத்தை அநுபவிக்கவேண்டும். இதுதான் எங்களுடைய லட்சியம். "தேன த்யக்தேன புஞ்ஜீதா" (பிறருக்குத் தியாகம் செய்துவிட்டுச் சாப்பிடவேண்டும்.) இன்றுகூட எல்லாத் தலைவர்களும் இதைச் செய்கிருர்கள். போகத்தை அநுபவித்த பிறகே தியாகம் செய்கிருர்கள். பின் தியாகத்தின் மூலமாகப் போகத்தை அநுபவிக்கிருர்கள். அந்த நிதி மந்திரி என்ன செய்தார்? ராஜிநாமாக் கொடுத்தாரா இல்லையா? அந்த ரெயில்வே மந்திரியும் இதைத் தானே செய்தார். அந்த ஒலி பரப்பு, பிரச்சார இலாக்கா மந்திரியும் இதையேதான் செய்தார். இந்தச் சமயம் இந்த நாட்டுக்கு, இந்த ராஜ்யத்துக்கு, இந்த ஜிப்பாவுக்கு இந்தக் கோவாபரேட்டிவ் யூனியனுக்கு இப்படிப்பட்ட தியாகந்தான் தேவை. குற்றச்சாட்டுகளின் விசாரணை நடப்பதைவிட, வைத்தியர் ஓர் இலட்சியத்தை மக்களின் முன் வைப்பதே மிக உத்தமமானது. இலட்சியம் என்ற இந்த மாளிகையை நிறுவியதுமே எல்லாக் குற்றச்சாட்டுகளும் அதன் அஸ்திவாரத்தின் அடியிலே புதைந்துவிடும். அதனல் வைத்தியர் தம் மானேஜிங் டைரெக்டர் பதவியைத் தியாகம் புரிந்துவிடவேண்டும். தமக்கெதிராக வந்துள்ள குற்றச்சாட்டுகளுக்கு அவர் தரும் பதில் இதுவாகவே இருக்கவேண்டும். தம் ராஜிநாமாவை, எந்த முறையில் வேண்டுமானலும் சமர்ப்பிக்கலாம். ஸ்தாபன அமைப்பிலுள்ள குறையைச் சுட்டிக் காட்டலாம். சக ஊழியர்களின் மோசமான தன்மையைக்

காட்டி, தம் ராஜிநாமாவைக் கொடுக்கலாம். அல்லது தம் கொள்கைக்காக இப்பதவியைத் துறந்ததாகவும் கூறலாம். அவர் மட்டும் ராஜிநாமாச் செய்வதாக இருந்தால் அதற்குரிய காரணத்தைத் தேடிக்கொள்ள அவருக்கு முழு உரிமையும் உண்டு. ராஜிநாமாவுடன் ஆனால், இனால் எல்லாம் கூடாது. அது வெறும் ராஜிநாமாவாகத் தான் இருக்கவேண்டும். இல்லா விட்டால் ஒன்றும் நடக்காது. அப்படி ஏதாவது நடந்தால் அதன் விளைவு பிரமாதமாகிவிடும். இதை ஒருக்கால் அவரே கூடவிரும்பமாட்டார்.' இதுதான் அவர்கள் கூறியதின் சாரம்.

வைத்தியர் முடிவு செய்து விட்டார். "நான் ராஜிநாமாச் செய்து விடுகிறேன். இதை என்னுடைய பலவீனமாகவும் நினைக்கக்கூடும். இருந்தாலும் வீணான பிரசாரத்துக்கு இடம் கொடாமல் உங்களுடைய ஆலோசனையின்படி நான் ராஜிநாமாச் செய்கிறேன். ஆனால் பிரதேச ஃபெடரேஷனுக்கு வேட்பாளரைத் தேர்ந்தெடுக்கும் பிரச்னை வரும்போது... ..." என்று இழுத்தார் வைத்தியர்.

அவருக்கு இது பற்றி உறுதியளிக்கப்பட்டது. எல்லா மகா புருஷர்களும் சமயம் நேரும்போது, ஓர் இலட்சியத்தை மக்களின் முன் வைப்பதற்காகவே இப்படிச் செய்கின்றனர். இதே நம்பிக்கையுடன் அவரும் ராஜிநாமாக் கடிதத்தைக் கொடுக்கலாம். தகுதி பெற்ற ஆட்கள் குறைவாகவே இருக்கின்றனர். இதனால் தகுதியுள்ளவர்களுக்கு எவ்விதக் குறையும் ஏற்படுவதில்லை. ஓரிடத்திலிருந்து விடுபட்டால், இன்னோர் இடம் அவனை அப்படியே சுவீகரித்துக் கொண்டுவிடும்.

இன்று நட்புறவு யாத்திரையைத் துவங்கிய வைத்தியர், விரிய புஷ்டி மாத்திரை, சோதிடர்கள் பற்றிய தகவல், ஒலி பரப்பு, சாது பாபாக்களுடைய மத்யஸ்தம் ஆகிய மூன்று காரியங்களைத் தவிர, நான்காவதாக ஒன்றைப்பற்றியும் பேசிக் கொண்டு போனார். பங்களாவைவிட்டு வெளியே வரும்முன் இங்கும் அதை ஆரம்பித்தார் அவர். "உங்களுக்கெல்லாம் மிக்க மகிழ்ச்சியாக இருக்கும். எனது மூத்த புதல்வனுக்குக் கலப்பு மணம் செய்விக்க யோசித்துக் கொண்டிருக்கிறேன். இன்னும் விஷயம் முடிவாகவில்லை. ஆனால் விரைவிலேயே திருமண அழைப்பை அனுப்பி வைக்கிறேன். தாங்கள் அவசியம் வரவேண்டும். தனிப்பட்ட முறையில் அழைக்க என்னால் வர முடியாமலும் போகலாம். அதனால்தான் இப்பொழுதே

கூறுகிறேன். இத்தகைய இலட்சியத் திருமணங்களில் உங்களைப் போன்ருேரின் ஒத்துழைப்பும், ஆசீர்வாதமும் மிக மிக அவசியம். உங்களுக்கு இதை அறிந்ததில் மகிழ்ச்சியாக இருக்கும்.''

அவர்களுக்கு இதை அறிந்து மகிழ்ச்சியாக இருந்தது. அவர்கள் கட்டாயம் வருவார்கள்.

கோவாபரேட்டிவ் யூனியனின் வருடாந்திர விழா இவ்வாண்டு மிக வெற்றிகரமாக நடைபெற்றது. ஏனென்ருல் இம்முறை பலகாரங்களை நகரத்திலிருந்து வரவழைத்திருந்தார்கள். யூனியன் கட்டிடத்தில் தோரணங்களைக் கட்டியிருந்தனர். மலர் மாலைகளாய்க் குவிந்திருந்தன. சில நாட்களுக்குமுன் கூட்டுறவுப் பண்ணையைத் துவங்கி வைத்த அதிகாரியையே இந்த விழாவிலும் பங்கேற்க அழைத்திருந்தார்கள். பொது ஜனங்களிடையே பிரசங்கம் புரிவது, மாலை போட்டுக் கொள்வதின் சுவையறிந்தவர் அவர். இந்த விஷயம் காதுக்கு எட்டியதுமே பாண்ட் அணிந்து கொண்டு, வியாபாரி ஒருவரின் மோட்டாரை இரவல் வாங்கிக் கொண்டு 'பாம் பாம்' என்று ஹாரன் முழங்க விழாவுக்கு வந்து விட்டார்.

யூனியனின் வருடாந்திர அறிக்கை, படிக்கப்படாமலே படிக்கப்பட்டதாக அங்கீகரிக்கப்பட்டது. வியாபாரத்தில் லாபம் கிட்டியிருந்தது. உறுப்பினர்களுக்கு லாபத்தில் பங்கும் கிடைக்கவேண்டியிருந்தது. அது அவர்களுக்குக் கொடுக்கப்படாமலேயே கிடைத்துவிட்டது. இன்னும் எவ்வளவோ நடக்காமலேயே நிறைவு பெற்று விட்டன. முடிவில் எது நடக்க வேண்டியது மிக மிக அவசியமோ, அது நடக்க ஆரம்பித்தது. அதாவது பிரசங்கங்கள் ஆரம்பமாகின.

பிரசங்கம் செய்வதுதான் முக்கியமே தவிர, கேட்பதில் ஒன்றுமில்லை. அதனுல் தான் மக்கள் பிரசங்கம் செய்து கொண்டே இருக்கிருர்கள். மக்கள் தங்களுக்குள்ளே வேறு ஏதேதோ பிரச்னைகளை அலச ஆரம்பித்து விடுகிருர்கள். நகரத்திலிருந்து வந்திருந்த அதிகாரி தம் பிரசங்கத்தில், 'வைத்தியர் அவர்கள் கூட்டுறவின் ஓர் உருவகம்' என்ருர். 'உருவகம்' என்ருல் என்ன அர்த்தம் என்று கேட்பதற்குப் பதிலாய் மக்கள், பத்ரி பயில்வான், கயாதீனின் பெண்ணின் வலையில் வீழ்ந்து விட்டார் என்று பேசிக் கொள்ளலாயினர். 'ஒவ்வொரு கிராமத்திலும் இவரைப் போன்றவர்கள் பிறக்காத வரையில்

கூட்டுறவு இயக்கம் பரவுவது கடினம்' என்று மீண்டும் கூறிய பின்னுங்கூட மக்கள் கூட்டுறவு என்றால் என்ன என்பதை அறிய முயற்சி செய்யவில்லை. இயக்கமென்றால் அதன் அர்த்தம் என்ன என்று மண்டையைக் குழப்பிக் கொள்ளவில்லை. இதற்கு மாறாக, 'ஊர் வாயை அடக்க முடியவில்லை. அதனால் திருமணம் செய்துவிடப் பார்க்கிறார்' என்று பேசிக் கொண்டார்கள். இப்படிக் காதோடு காதாய் ரகசியம் பேசிக் கொண்டாலும் யாரும் எழுந்து தங்கள் குறைகளைச் சொல்ல முன்வரவில்லை. ஏனென்றால் இன்னும் முடியாட்சி எங்கேனும் நிலவியதென்றால் அது யூனியனில்தான் செங்கோல் செலுத்தியது! அதிலும் வைத்தியர் தான் முடிசூடா மன்னராய் விளங்கினார்.

ராமராஜ்யத்தில் கூடக் குறை சொல்ல ஒரு வண்ணான் இருந்தான் அல்லவா? இன்று இங்கும் ஒருவன் எழுந்து நின்று, 'நான் பேசவேண்டும்' என்று கத்தினான். அவன் அருகில் அமர்ந்திருந்தவர்கள் அவனது வேட்டியைப் பிடித்து இழுத்தார்கள். வேட்டியின் மீதுள்ள ஆசையினாலாவது உட்காரட்டுமே என்று தானோ என்னவோ? ஆனால் அவன் உட்காரவில்லை. அவன் ராமாதீன் பீகம்கேடவியின் கட்சி ஆள். மேலிடத்து உத்தரவு பெற்று எதையும் செய்யத் துணிந்து வந்திருந்தான். இதனால் வேட்டியைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. மாறாக அவனது ஆவேசம் பின்னும் அதிகரித்து விட்டது. எல்லாச் சொற்பொழிவாளர்களையும் விடக் குரலை உயர்த்தி, "நான் பேசியே தீருவேன்" எனக் கத்தினான்.

உரக்கக் கத்தினால் என்ன நேருமோ அதுதான் நேர்ந்தது. எதிர் தரப்பினரின் குரல் தாழ்ந்துவிட்டது. பட்டணத்திலிருந்து வந்திருந்த அதிகாரி, "பேசு. கட்டாயம் பேசு. யார் வேண்டாமென்றார்கள்?" என்றார்.

அவன் பேச முன் வந்தான். எங்கே தனது ஆவேசம் தணிந்துவிடப் போகிறதோ என்று அவன், "அவைத் தலைவர் அவர்களே, சகோதர, சகோதரிகளே" என்று கூடச் சொல்லவில்லை. நேரடியாக விஷயத்துக்கு வந்து விட்டான். "இந்த அறிக்கையில், அவன் பெயர் என்ன. அவன் கையாடல் செய்தது பற்றிக் குறிப்பிடவேயில்லை. இங்கே ஓர் அயோக்கியப் பயல் சூபர்வைசராய் இருந்தான். அவன் பெயர் என்ன? ஆமாம்...! ராம, ஸ்வரூப் ஆமாம், அந்தப் பயல்தான் கையாடல் செய்தது. இரண்டு வண்டி கோதுமையை ஏற்றிக்

கொண்டு ஓடிவிட்டான். குடிகாரன் நல்லாக் குடிப்பான். ஆமாம், அவன் பெயர் என்ன? விலைமாது வீட்டுக்குக் கூடப் போவான். இந்த வைத்தியர் அவன் காதோடு காதாய்ப் பேசுவார். அவன் பெயர் என்ன? அவன் கிட்டத்தான் பேசுவார். ஒரு நாள் இரவு இரண்டு கை வண்டிகள் வந்தன. இரவோடிரவாய் மூட்டை ஏற்றியிருக்கிறார்கள். ஒருவருக்குமே தெரியாது. அவன் பெயர் என்னவோ? பயல் ரொம்ப இனிக்க இனிக்கப் பேசுவான். என்னைத் தூரத்தில் பார்த்தாலே... அவன் பெயர் என்ன...... தண்டம் சமர்ப்பிப்பான், வைத்தியருக்கும். அவன் பெயர் என்ன? ஒருவரும் தவறாக நினைக்காதீர்கள். நான் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் இது எல்லோருக்கும் தெரிந்ததுதான். ரொம்ப நெருங்கிய சிநேகிதம். பயல் இரண்டாயிரம் ரூபாய்க்குச் சாமானைக் கிளப்பிக்கொண்டு போய்விட்டானே! அவன் பெயர் என்ன? இதற்குப் பொ......பொறு ..... பொறுப்பு யார்? கோவாபரேடிவ் மிக நல்லதொரு அழகான சிலை....... என்ன பெயர்? சிலை......ஆம்..... சிலையை எடுத்துக் கொண்டு திரியுங்கள். யார் எங்கே போகிறான், என்ன விஷயமென்று வைத்தியரைத் தட்டிக் கேட்க ஆள் கிடையாது. மிட்டாய் சாப்பிடுங்கள், தண்ணீர் குடியுங்கள், வீட்டுக்குப் போங்கள். இந்த நாடு··· அவன் பெயர் என்ன? முன்னேற்றம் அடையாது. நாட்டில், நடப்புகள் சரியாக நடக்கவேண்டும். கையாடல் நடந்தது எப்படி? இதைப் பற்றி விசாரிக்கவேண்டும். நான் படித்தவனல்ல. இதனால் யாரும் தவறாக நினைக்காதீர்கள். ஹோலி........ஹோலி...'' சொற்பொழிவாளன் திடீரென ஓடவாரம்பித்தான்.

ஜனங்கள் அவன் பின்னாலேயே ஓடியுங்கூட அவன் நிற்கவில்லை. இந்தச் சமயத்தில் வைத்தியர் தம் இருக்கையை விட்டு எழுந்து மேடையிலே வந்து நின்றார். சொற்பொழிவு அவரைக் கண்டதுமே தன்னிடத்திலேயே சற்றுத் துள்ளியது. பிறகு வாலை ஆட்டிக்கொண்டு தரையை முகர ஆரம்பித்து விட்டது.

வைத்தியர் சில விநாடி சிரித்த முகத்துடன் நின்றார். கையாடலுக்கும் அவருக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை என்பது ருஜுவாகிவிட்டது. பின் என்ன? முனிபுங்கவர்களைப் போன்ற தோரணையில் அவர் பேச ஆரம்பித்தார். ''கையாடல் எப்படி நடக்கிறது என்பதுதான் கவனிக்கப்படவேண்டிய

விஷயம். உங்களிடத்தில் ஓராயிரம் பவுன் இருக்கிறதென்றால், நீங்கள் அதைக் கையாடல் செய்ய முடியாது. ஏனெனில் அந்தப் பொற்காசுகள், உங்களுடையவை. நீங்கள் அதை அநாவசியமாகச் செலவு செய்யலாம். ஆனால் கையாடல் செய்ய முடியாது. எவனுக்குத் தன்னுடையதென்று காசு இல்லையோ அவன் தான் கையாடல் செய்யமுடியும்.

"கூட்டுறவு என்பது எவருக்கும் தனிப்பட்ட சொத்துரிமை உடையதில்லை. அது எல்லாருடையதுமான பொதுச் சொத்து. பலருடைய சொத்து ஒரே இடத்தில் திரட்டி வைக்கப்படுகிறது. இது யாருடைய சொத்து இல்லையோ அவன் தான் இதற்குக் காப்பாளனாகிறான். சொத்து அவனுடையதல்ல. ஆனால் காப்பாளனாக அவன் நியமிக்கப்படுகிறான். அவன் அதை அநுசிதமாகச் செலவு செய்ய முற்படுகையில் அது கையாடல் என்ற குற்றமாகி விடுகிறது. பெருமக்களே! கவனியுங்கள். உங்களுடைய சொத்தை நீங்கள் அநுசிதமான வழியில் செலவிட்டால் அது கையாடல் குற்றமாகாது. மற்றவன் அதைச் செய்தால் அது குற்றம். கூட்டுறவின் சொத்து, தனிப்பட்ட எந்த நபருடைய சொத்தும் அல்ல. இதனால் அதன் அநுசிதமான செலவும், அநுசிதமான நாசமும், இந்தச் சொத்து எவனுடையது அல்லவோ, அவன் மூலமாக ஏற்படுகிறது. அதாவது கையாடல் நேருகிறது. இதன்மூலம் கூட்டுறவு சங்கத்தில் உசிதமற்ற செலவுகள் நடப்பதில்லை என்பது உறுதியாகிறது. எப்போதுமே கையாடல்தான் நடக்கிறது. இதுதான் கூட்டுறவு சங்கத்தின் தலையெழுத்து. இதைப் பற்றி வியப்படைய வேண்டியதில்லை. கூட்டுறவு இயக்கத்துடன் கையாடல் என்ற சொல்லும் இணைந்திருப்பதைக் கண்டு பயப்படவும் வேண்டாம்.

"சில இடங்களில் கையாடல் குற்றம் மறைக்கப்பட்டு விடுகிறது. குற்றத்தை ஒளிக்கக்கூடாது. அப்படிச் செய்வதால் அது வேரூன்றிவிடும். இதுதான் எனது கொள்கை. கையாடல் கணக்கு வழக்குகளிடையே மறைக்கப்பட்டு விடுகிறது. இங்கு எதுவுமே ஒளிவு, மறைவு கிடையாது. எல்லாம் மிகச் சீரான முறையில் கணக்கு வைக்கப்பட்டிருக்கிறது. கையாடல் நடந்தது. ஆனால் அது நடக்காத மாதிரிதான். ஏனென்றால் முடிவு சிறந்ததாக இருந்தது. வருட முடிவில் சங்கத்துக்கு கஷ்டம் ஏதும் ஏற்படவில்லை. லாபந்தான் கிடைத்துள்ளது.

லாபம் ஒரு பைசாவாக இருந்தால் என்ன, ஒரு கோடி ரூபாயாக இருந்தால் என்ன? லாபம், லாபந்தானே! நஷ்டம் நஷ்டந்தான். இங்கு நஷ்டத்தைப் பற்றிய பேச்சில்லை. லாபந்தான்.

''இத்தகைய நிலையில் கையாடல் பற்றிய அத்தியாயம் அர்த்தமற்றது. அதைப் பற்றிப் பேசுவது சங்கத்தை அவமதிப்பதாகும். இது கூட்டுறவு இயக்கத்துக்கே அவமானமாகிவிடும்.

''என்மீது தனிப்பட்ட முறையில் எனக்கு விரோதமாகக் குற்றச்சாட்டுகள் சாட்டப்பட்டுள்ளன. குற்றங்களைச் சுமத்துவது உசிதமற்ற செயல். அதிலும் தனிப்பட்ட முறையில் தாக்குவது பின்னும் உசிதமற்றது. இந்தச் சூழ்நிலையில் யாராலும் வேலை செய்யமுடியாது. அதிலும் பண்பும் மரியாதையுமுள்ள ஒருவனால் முடியவே முடியாது. இத்தகைய குற்றச்சாட்டுகளை நான் ஆட்சேபிக்கிறேன். மறந்துவிடாதீர்கள், நான் குற்றச்சாட்டுகளைத்தான் எதிர்க்கிறேனே தவிர, குற்றத்தை என்மீது சுமத்தியவர்களை அல்ல. குற்றங்களைச் சாட்டியவர் ஸ்ரீமான் ராம்சரண் அவர்கள். நான் அவரை மதிக்கிறேன். அவரிடம் என் மனத்தில் மிகுந்த மதிப்பு உள்ளது.

''ஆனால், அவர் கூறியுள்ள குற்றச்சாட்டுகளை நான் எதிர்க்கிறேன். பலமாக ஆட்சேபிக்கிறேன். எனது ஆட்சேபத்தைத் தெரிவிக்கும் பொருட்டுக் கூட்டுறவு சங்கத்தின் மானேஜிங் டைரெக்டர் பதவியை நான் ராஜிநாமாச் செய்கிறேன்.'' தம் நீண்ட இந்தச் சொற்பொழிவை முடித்துக்கொண்டு வைத்தியர் அமைதியாக உட்கார்ந்துவிட்டார்.

இதன் பின் யாவும் மின்னல் வேகத்தில் நடைபெற்றன. ஒரே கூச்சல், களேபரம். நாடாளுமன்றத்திலிருந்து யாரோ உறுப்பினரைக் கையைப் பிடித்திழுத்து வெளியேற்றி விட்டதுபோல் அவ்வளவு கூச்சல், சந்தடி. பிறகு இந்தக் கூச்சலும் சந்தடியும் மெதுவாக அடங்கியதும் பட்டணத்திலிருந்து வந்திருந்த அதிகாரியின் கம்பீரமான குரல் ஒலித்தது. ''வைத்தியர் தமது முடிவில் உறுதியாக இருக்கிறார். இதனால் அவரது ராஜிநாமா ஏற்றுக்கொள்ளப் படவேண்டுமென்று நான் சிபாரிசு செய்கிறேன். எப்படியும் இன்று அடுத்த ஆண்டிற்கான தேர்தல் நடக்கவேண்டும். ராஜிநாமாச் செய்துள்ளதின் அர்த்தம் அவர் இனி மீண்டும் மானேஜிங் டைரெக்டராக இருக்க விரும்பவில்லை என்பதுதான்.''

வைத்தியர் தாம் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்தே கூறினர். "நான் உறுப்பினராகக் கூட இருக்க விரும்பவில்லை. என் கடமை முடிந்துவிட்டது. இனி இளைஞர்கள் முன் வரவேண்டும். அவர்கள்தான் இந்த இயக்கத்தை நடத்தவேண்டும்."

"நீங்கள் இவ்வளவு தூரம் விலகிக்கொள்வது சரியல்ல என்பது என் அபிப்பிராயம். இல்லாவிட்டால் இந்தச் சங்கம் அப்படியே செயலற்றுப் போய்விடும். இளைஞர்களைப் பற்றிக் கூறுகிறீர்களே! சொல்லுங்கள்! இந்தக் காலத்தில் அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?" என்று வைத்தியருக்குச் சமாதானம் கூறலானர் வந்திருந்த அதிகாரி.

வைத்தியர் அசையவில்லை. "இளைஞர்கள்தான் முன் வர வேண்டும். இந்தக் காலத்திலும் அவர்கள்தான் இதை ஏற்று நடத்தவேண்டும்" என்று வற்புறுத்தினர். முடிவில் பட்டணத்திலிருந்து வந்திருந்த அதிகாரி, "புதிய மானேஜிங் டைரெக்டர் தேர்ந்தெடுக்கப்படுவார்" என்று அறிவித்தார். இதை அறிவித்தபின் மற்றவர்களுக்குப் பேச இடம் கொடாமல் அவர் தாமே பேச ஆரம்பித்தார். வழக்கமான ரீதியில் துவங்கினர்: "சகோதரர்களே! இந்தச் சங்கத்தில் நடக்கும் எல்லாத் தேர்தல்களும் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுவிடுவது இங்குள்ள பழக்கமாக இருந்து வருகிறது. இன்றும் இதே முறையில் காரியம் நடக்குமென்று நான் எதிர்பார்ப்பது மட்டும் அல்ல, மனப்பூர்வமாய் நம்புகிறேன். நீங்கள் யாராவது ஒருவரின் பெயரை..."

கூட்டத்திலிருந்து இடையிலே லுங்கியுடன் எழுந்து நின்றான் சின்ன வஸ்தாது. பேச்சின் நடுவிலே குறுக்கிட்ட அவன், "தேர்தல் கீர்தலில் என்ன இருக்கிறது சாகப்! இந்தச் சங்கம் பாங்க் மாதிரி. இதிலேயும் நீங்க தேர்தலை நுழைக்கிறீங்களா?" என்றான். இதைத் தொடர்ந்து சற்றே தாழ்ந்த குரலில் அவன் எதோ பழமொழியைக் கூறியதும் அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள் சிரிக்க ஆரம்பித்தனர். சின்ன வஸ்தாது தம்மைப் பற்றி ஏதோ ஆபாசமாய்ச் சொல்லியிருக்கிறான் என்று அதிகாரிக்குத் தோன்றவே அவர் திகிலடைந்தவராய், "பயில்வான்ஜீ, தாங்கள் ஏதோ தவருக..." என்று ஆரம்பித்தார்.

சின்ன வஸ்தாது மிடுக்காக இடைமறித்தான். "நான் தவருக நினைப்பேன் சாகப்! நீங்கள் பாண்ட் அணிந்தவர், நீங்கள் நினைப்பது சரியாகத்தான் இருக்கும்."

"கொஞ்சம் புரிந்துகொள்ளுங்கள் பயில்வான்ஜீ" என்றார் அதிகாரி பவ்யமாக. அவனைச் சற்றுத் தட்டிக் கொடுக்கிற மாதிரி பேசலானார். "நான் பேசியது தேர்தலுக்கு ஆதரவாக அல்ல. இங்குத் தேர்தல் நடத்தும் வழக்கமில்லை என்பதைச் சுட்டிக்காட்டினேன். இங்கு யாவுமே ஒருமனதாய்த் தீர்மானிக்கப்படுகின்றன. அதாவது தேர்தல் வந்து…"

சின்ன வஸ்தாதுவின் மார்பு நிமிர்ந்தது. உரத்தகுரலில், "மீண்டும் அதே தேர்தல், கீர்தல் என்கிறீர்கள் சாகப்! தேர்தலைப் பற்றித்தான் பேசுகிறீர்கள். நான் சொல்லிவிட்டேன். இங்கே தேர்தல் கீர்தல் எதுவும் தேவையில்லை, அது நடக்காது. வைத்தியருக்கு விருப்பம் இல்லேன்னு விட்டுவிடுங்க. கோழி கூவல்லேன்னு விடியாமலாப் போய்விடும்?" என்றான் வீறாப்புடன்.

மாலை சுமார் மணி நான்கு ஆகியிருக்கலாம். புழுதியைக் கிளப்பிக்கொண்டு காற்று வீசியது. புழுதிப் படலத்திலிருந்து தப்புவதற்காக, கண்களை அடிக்கடி சிமிட்டியவாறே சின்ன வஸ்தாது, தன்னிடத்திலிருந்தே உடலை இப்படியும்; அப்படியும் அசைத்து ஆட்டிப் பேசிக்கொண்டிருந்தவன் வெறி கொண்டவனாய்க் கத்தினான். அவனது ஆவேசத்துக்கும், கூச்சலுக்கும் காரணம் எதுவுமே இருக்கவில்லை. ஆனால் அவனது ஆவேசம் மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே போக, குரலும் உயர்ந்துகொண்டே போயிற்று. இந்த அளவுக்கு மக்களின் உற்சாகமும் அதிகரிப்பதைக் கண்ட அதிகாரியின் திகிலும் பல மடங்காகப் பெருகியது.

போர்க்களத்தில் பட்டாளத்தை முன்னேறும்படி உற்சாகமூட்டுபவன்போல் தன்னைப் பாவித்துக் கொண்டிருந்த சின்ன வஸ்தாது முடிவில் சொன்னான். "வைத்தியர்ஜீ விலகிவிட்டார். கவலையில்லை. அவருடைய இடத்தில் இன்னொருவர் உடனே உட்காரப் போகிறார். அவ்வளவுதானே! இதற்குத் தேர்தல் என்ன, தேர்தல்? ஹூம்! பெரிய தேர்தல்காரர்கள்! இந்த ஏமாற்று வித்தையெல்லாம் பட்டணத்தில்தான் நடக்கும். இங்கு நடக்காது. இங்கு யாரை விரும்புகிறோமோ, அவரைத் தான் வைத்தியரின் ஸ்தானத்தில் உட்காரவைப்போம். எழுந்திருங்கள், பத்ரி உஸ்தாத்! நீங்களே உட்காருங்க, அந்த இடத்தில். ஊம் உஸ்தாத்! எழுந்திருங்க."

கூச்சலினிடையே உரத்த கோஷங்கள் கேட்டன: "போலோ! பாரத்மாதா கி ஜெய்!" தொடர்ந்து அதே பழைய பல்லவிகள்:

"போலோ! மகாத்மா காந்தி கி ஜெய்", "போலோ! பண்டித் ஜவாஹர்லால் கி ஜெய்", "போலோ வைத்திய மகராஜ்கி ஜெய்", "போலோ பத்ரி பயில்வான் கி ஜெய்", "போலோ இத்ரீஸ் சாகப் கி ஜெய்."

இத்ரீஸ் சாகப் — அதாவது பட்டணத்திலிருந்து வந்திருந்த அதிகாரி அப்படியே கல்லாய்ச் சமைந்துவிட்டார். கண்ணை இருட்டிக்கொண்டு வந்தது. அவர் சுய நினைவுக்கு வந்தபோது பார்த்தால் வைத்தியர் எழுந்து போய்விட்டிருந்தார். அவரது எதிரியான ராமசரணை யாரோ கையைப் பிடித்து இழுத்து வெளியேற்றிக் கொண்டிருந்தார்கள்.

மேடையின் மீது அவருக்குப் பக்கத்தில் கழுத்தில் மாலையுடன் பத்ரி பயில்வான் வீற்றிருந்தார். அவர் முகத்தில் மானேஜிங் டைரக்டருக்கே உரித்தான பெருமிதப் புன்னகையும், பொலிவும் மிளிர்ந்துகொண் டிருந்தன.

# அத்தியாயம் 27

அந்த வருஷம் சிவபால் கஞ்சில் 'ரபி' பருவப் பயிர் நன்கு விளைச்சல் கண்டிருந்தது.

குளிர் காலத்தில் தக்க பருவத்தில் மழை பெய்தது. நீர்க் கால்வாய்களின் அதிகாரியாக இருந்து, மக்களை ஏதோ அற்பப் புல்லுக்குச் சமானமாகவும், ஜனநாயகத்தை ப்ளேக் என்றும் கருதியவனுக்கு மாற்றலாகிவிட்டது. அவனுக்குப் பதிலாக வந்தவன் தண்ணீரைத் தண்ணீராகக் கருதிச் செலவு செய்தான். எல்லா இடத்தையும் அது அடைவதற்குரிய ஏற்பாடுகளைக் கவனித்தான். வசந்த காலத்தின்போது மேற்கத்தியக் காற்று கடுமையாக வீசவில்லை. வெட்டுக் கிளிகளும், எலிகளும் கொள்ளை நோய்போல் வந்து தாக்கவில்லை. பசுமையான வயலில் தம் மாடுகளை மேயவிடும் குண்டர்கள் இரண்டு

பேர் இருந்தனர். அவர்களில் ஒருவன் டிரக்கில் அடிபட்டுச் செத்துவிட்டான். இன்னொருவன் காவலில் வைக்கப்பட்டிருந் தான். கிராமத்தில் பாதிப் பேருக்கு மேல் வயல் வேலைகளை விட்டு விட்டு ஜெயிலில் அடைபட்டுக் கிடக்கும்படியாக, ஊரில் கிரிமினல் கேசு, அடிதடி எதுவும் நேரவில்லை. பரஸ்பர துவேஷத்தினால் யாரும் தானியக் களஞ்சியத்துக்கு நெருப்பு வைக்கவில்லை.

கிராமத்து எல்லையிலிருந்த ஒரு காட்டில் சில நாடோடி வியா பாரிகள் வந்து தங்கியிருந்தனர். அவர்களின் பெண்கள், கட்டான உடலும், இளமைப் பொலிவும் கொண்டவர்களாக இருந்தனர். சாராயம் காய்ச்சி, அதை மலிவான விலைக்கு அவர்கள் விற்று வந்தனர். அந்த வழியாகச் செல்லும் இளை ஞர்களை, ஆட்டுக் குட்டியாக்கி அவர்கள் தங்கள் குடிசை களிலே கட்டிப் போட்டு விடுவார்கள். உழவேண்டிய காலத்தில், அவர்கள் வயலுக்குப் போய்த்தானாக வேண்டும் என்ற நிலையி லும் கட்டிப் போட்ட ஆட்டுக் குட்டிமாதிரி அவர்கள் குடிசையில் 'ம்மே, ம்மே' என்று கத்திக்கொண் டிருக்க வேண்டியதுதான். ஆனால் இந்த வருஷம் போலீசார் அந்தப் பெண்களையும் பிறகு கள்ளச் சாராயத்தையும் கைப்பற்றினார்கள். முடிவில் அந்த நாடோடிக் கும்பலின் குடியிருப்பையே கலைத்து, அந்த வட்டா ரத்திலிருந்தே அவர்களை விரட்டிவிட்டனர். இதனால், வயல் வெளிகளிலும், தோட்டம் துரவுகளிலும் எப்போதும் நடந்து வந்த சூதாட்டத்தைத் தவிர இளைஞர்களுக்கு எவ்விதத் தொந் தரவும் இருக்கவில்லை. அவர்கள் விவசாயத்தில் முழுமனத் துடன் ஈடுபட்டு உழைத்தனர்.

நல்ல விளைச்சல் கண்டது உண்மைதான். ஆனால் மக்கள் கருதியதுபோல் திடீரென அது ஏற்பட்டுவிடவில்லை. நல்ல விளைச்சலுக்குப் பின்னால் கீழ்க்கண்ட சம்பவம், அல்லது சம்பவங்கள் ஏதும் இல்லாமல் இருந்ததும் ஒரு காரணமாக இருந்தது.

நல்ல விளைச்சலைப் பற்றிக் குடியானவர்கள் அதிகம் கவலைப் படவில்லை. ஏனென்றால் மோசமான விளைச்சலைப் பற்றியும் அதிகம் கவலைப்பட்டதில்லை. ஆனால் மற்ற வர்க்கத்தினர்தான் கையைக் கொட்டிக்கொண்டு கூத்தாடினர். எங்களுடைய பிரசங்கங்களின் பயன்தான் இது என்றனர் தலைவர்கள். சமு தாய நல விஸ்தரிப்புத் திட்ட அதிகாரிகள், விகிதாசாரக்

கணக்குக் காட்டி இது எங்கள் முயற்சியின் பலன் என்றனர். சர்க்கார் அதிகாரிகள் ஒருவரை யொருவர் பாராட்டிக் கொண்டனர்.

நல்ல விளைச்சலினுல் கண் கூடாகக் கண்டதொரு பயன்— கயாதீனுக்குச் சண்டை சச்சரவுகளின் தொல்லைகளிலிருந்து சற்றே நிம்மதி கிடைத்ததுதான். கடன் பாக்கி வசூலுக்காக அவர் கோர்ட்டில் சில தாவாக்களைத் தொடுத்திருந்தார். அவ் வழக்குகளின் பிரதிவாதிகள் பணத்தைத் திருப்பிக் கொடுத்துச் சமரசம் செய்துகொண்டுவிட்டனர். பல குடியானவர்கள் தாங் களாகவே பணத்தை எடுத்துக்கொண்டு வந்தனர். கல்யாண காலம் நெருங்கி வந்தாலும் பண வசூலில் தாமதம் ஏற்பட வில்லை. வசூல் அதிகரித்து லாபம் குறைந்தது.

ஒரு நாள் ஏழெட்டுக் குடியானவர்கள் புடை சூழ அவர் கணக்கு வழக்குப் பார்த்துக்கொண் டிருந்த சமயம் வைத்திய மகராஜ் தமது இல்லத்தை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கயாதீன் கண்டார்.

ஒரு பெரிய மனிதர், இன்னொரு பெரிய மனிதரிடம் எப்படி நடந்துகொள்வாரோ, அப்படி ஓரளவு நடந்துகொண்ட கயா தீன், வைத்தியரை வரவேற்ருர். தனிமையில் விடப்பட்ட தும் வைத்தியர், "ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றித் தங் களிடம் பேச வந்திருக்கிறேன்" என்ருர்.

கயாதீன் ஒன்றும் பேசவில்லை. பேச வந்திருப்பவர் மௌனமாக இருந்தாலும் பேசவேண்டியதைப் பேசுவார் என் பது அவருக்குத் தெரியும். சில நிமிஷ மௌனத்துக்குப் பின், "ஜாதியைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று வினவினுர் வைத்தியர்.

கயாதீனின் முகத்தில் குழப்பம் பளிச்சிட்டது. "இது கடவுளின் விருப்பம். அவர் தங்களைப் பிராம்மணனுகப் படைத்திருக்கிருர். நான் வைசியாள் (பனியா)" என்ருர் மெதுவாக.

"இதை நான் ஒப்புக்கொள்ளவில்லை" என்ருர் வைத்தியர் சிரித்துக்கொண்டே. "இந்த ஜாதி, கீதி என்பதால்தான் நம் நாடு இவ்வளவு மோசமான நிலைமைக்கு வந்திருக்கிறது. இதனுல் நான் என் பிள்ளைகளுக்குக் கலப்புத் திருமணம் செய் விக்க விரும்புகிறேன். யாராவது துணிவுடன் இத்துறையில் முன்னே வரவேண்டியதுதானே? காந்தியடிகள்..."

கயாதீன் கையை உயர்த்தி அவர் பேசுவதை நிறுத்தினர். "பிள்ளைகளுக்கு உங்கள் இனத்தாரை விட்டு வெளியே சம்பந்தம் செய்துகொள்ள விரும்பினல் செய்துகொள்ளுங்கள், மகராஜ்! ஆனல் இவ்வளவு அறிவாளியாக இருந்தும், இந்தப் பெண்கள் பிள்ளைகளோடு, காந்தியடிகளின் பெயரைச் சம்பந்தப்படுத்தி இழுக்காதீர்கள்."

வைத்தியர் அதிர்ந்து போய்விட்டார். "நான் ஒரு விஷயம் சொல்லிக்கொண் டிருந்தேன்" என்ருர்.

"நானுந்தான்" என்ற கயாதீன் வாயை மூடிக்கொண்டு விட்டார்.

சற்று நேரத்துக்குப் பின் வைத்தியர் கேட்டார். "கலப்புத் திருமணத்தைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்னவோ?"

கயாதீன் குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்திருந்தவர் இதைக் கேட்டதும் மெல்ல தலையை நிமிர்த்தி, "மகராஜ், இதெல்லாம் பிராம்மணர், டாக்குர் வீட்டு விஷயங்கள். பனியாவான நான் இதைப் பற்றி என்ன சொல்ல?" என்ருர்.

வைத்தியர் புன்சிரிப்புடன், "கயாதீன் இதென்ன இப்படிப் பேசுகிறீர்கள்? இது நம்மிருவர் குடும்பம் சம்பந்தப்பட்ட விஷயமாயிற்றே! இதைப் பற்றி நீங்கள் ஒன்றும் சொல்லாவிட்டால் வேறு யார் சொல்லுவார்கள்?" என்ருர்.

கயாதீன் இப்பொழுது தம் முகத்தை வைத்தியர் உட்கார்ந்திருந்த பக்கம் திருப்பினர். வைத்தியரின் முகம் எதிரில் தெரிந்ததும் தம்முடைய துயரம் தோய்ந்த, சில்லிட்ட பார்வையை எவ்வித உணர்ச்சி பரிமாறலுமின்றி அந்த முகத்திலே பதித்தவாறே கேட்டார். "இதில் என் குடும்பத்துக்கு என்ன சம்பந்தம், மகராஜ்?"

வைத்தியரின் புருவங்கள் வியப்பினல் உயர்ந்தன. "உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா?" என்ருர்.

கயாதீன் முன்போலவே உட்கார்ந்திருந்தார். அவரது மௌனம் அவருக்கு ஒன்றும் தெரியாது என்பதைப் பறைசாற்றியது.

வைத்தியர் சற்றே வேகத்துடன் பேசினர். "பத்ரிக்கு இதில் விருப்பம். பையனுக்குப் பதினறு வயதாகிவிட்டால் நண்பனைப்போல் அவனை நடத்தவேண்டியிருக்கிறது. இதனல் நான் எந்த விதமான ஆட்சேபத்தையும் வெளியிடவில்லை. அவன், பெண்ணின் சம்மதத்தையும் தெரிந்து கொண்டிருப்பான்

போலிருக்கிறது. இனிமேல் தங்களுக்கு எவ்விதமான ஆட்சேபமும் இருக்காதென்று நினைக்கிறேன்."

"எனக்கென்ன ஆட்சேபம்? உங்கள் பிள்ளை எங்கே வேண்டுமானாலும் திருமணம் செய்துகொள்ளட்டுமே! என்னை ஏன் நடுவில் இழுக்கிறீர்கள், மகராஜ்?"

வைத்தியருக்கு எரிச்சல் வந்துவிட்டது. "உங்களை இழுக்கவில்லை, நான். ஆனால் பெண் உங்களுடைய வளாயிற்றே! அதனால் தான் உங்களிடம் பேச வந்திருக்கிறேன். நீங்களோ தெரிந்தும் தெரியாதவர்போல் பேசுகிறீர்கள். தூங்குகிறவனை எழுப்பலாம்; தூங்குவதுபோல் பாசாங்கு செய்பவனை எழுப்புவது எப்படி?"

கயாதீன் இதை மறுப்பவர்போலக் கரத்தை உயர்த்தினார். எனினும் வைத்தியர் தம் பாட்டில் பேசிக்கொண்டே போனார். "பத்ரி ஒரு முடிவுக்கு வந்த பிறகு, விஷயம் ஊர் முழுவதும் பரவியபின் இந்த விஷயத்தை அமைதியுடன் ஏற்றுக்கொள்வதே நமது கடமை. இது ஓர் ஆதர்சத் திருமணமாகக் கருதப்படும். இருவரும் சுகமாய் இருப்பார்கள். பத்ரியையும் நான் அரசியலில் பழக்கிவருகிறேன். கோவாபரேடிவ் யூனியனில் அவனை மானேஜிங் டைரெக்டராக்கி விட்டேன். உங்கள் பெண்ணையும் கொஞ்ச நாட்களுக்குப் பிறகு சமூக சேவையில் ஈடுபடுத்திவிடலாம். மகிளா போர்டு இருக்கிறதே அதில் ஏதாவதொரு பதவியில் அமர்த்திவிடலாம். கார் கொடுக்கிறார்கள், பியூனும் கூடவே இருப்பான். கொஞ்ச நாட்களுக்குப் பிறகு எம். எல். ஏ. டிக்கட் வாங்கிக் கொடுத்தால் போச்சு. கணவனும் மனைவியும் சேர்ந்து ஆனந்தமாய் நாட்டுக்குப் பணி புரிவார்கள். நமக்கு வேறு என்ன வேண்டும்?"

தம் உற்சாகப் பெருக்கத்தில் தாம் கூறியவற்றைக் கேட்டுக் கயாதீனின் முகம் போன போக்கைக் அவர் கவனிக்கவில்லை. தமது இரு கரங்களையும் குவித்தவாறு கயாதீன் கெஞ்சினார். "மகராஜ்! என் காரியத்தைக் கெடுத்துவிடாதீர்கள். என் பெண்ணுக்கு இருக்கிற கஷ்டங்கள் போதாதா? பெற்றவள் அவள் குழந்தையாக இருந்தபோதே அநாதையாக்கி விட்டுப் போய்விட்டாள். எப்படியோ வளர்த்து பெரியவளாக்கி இருக்கிறேன். நகரத்தில் அகர்வால் வைசியக் குடும்பம் ஒன்று இருக்கிறது. அவர்கள் அவளைக் கைதூக்கிவிடத் தயாராக இருக்கிறார்கள். பையன் படித்தவன், வேலையிலும்

இருக்கிறன். இன்னும் பதினைந்து நாளில் முகூர்த்தம். இதனி டையில் உங்களைப் போன்ற பெரிய மனிதர்கள் அவள் மீது அவதூறைக் கிளப்பிவிட்டால் அந்தப் பெண்ணின் கதி என்ன வாகும், மகராஜ்? நீங்களே யோசித்துப் பாருங்கள். என் பெண்ணின் மீது களங்கத்தைச் சுமத்திஞல் நீங்கள் எவ்வளவு பெரிய தலைவராக இருந்தாலும் நரகத்தில் புழுத்துப் போவீர் கள். என்னை இதற்கு மேலே பேச வைக்காதீர்கள் மகராஜ்!"

வைத்தியர் திகைத்துவிட்டார். கயாதீன் தொடர்ந்தார். "உங்களுடைய இந்தக் கோவில் காளைகள் — என்ன பெயர் அவர்களுக்கு? அது தான் ரூப்பன், சின்ன வஸ்தாது, சனிஸ் வரன், பனிஸ்வரன் எல்லாரும் என் பெண்ணின் மீது ஏதேதோ அவதூறுகளைப் பரப்பி வருகிருர்கள். நீங்களும் இவ்வளவு பெரிய அறிவாளியாக இருந்துகொண்டு அந்தக் காலிப் பயல் கள் சொல்லுகிருர்களென்று இப்படிப் பேசுகிறீர்கள், மகாராஜ்! உங்களிடம் கேட்டுக்கொள்வது இதுதான். நீங்களும் வாயை மூடிக்கொண்டு அந்தப் பயல்களின் வாயையும் அடையுங்கள். பெண்ணின் கல்யாணம் நடக்கும் வரையில் அமைதியாக இருங்கள். இது உங்கள் காலம். எல்லாரும் உங்கள் காலின் கீழே மண்டியிட்டுக்கொண்டு கிடக்கிருர்கள். ஆனல் அதற்காக இவ்வளவு துள்ளாதீர்கள். நல்லவர்களையும் சிவபால்கஞ்சில் வாழவிடுங்கள்."

வைத்தியர் வாயைத் திறவாமல் கேட்டுக்கொண் டிருந்தார். கடைசியில் புறப்பட எழுந்தவர், "நீங்கள் உங்கள் முடிவின்படி பெண்ணுக்குத் திருமணம் செய்யுங்கள் கயாதீன்! இதில் நான் செய்யக் கூடிய உதவி ஏதுமிருந்தால் தெரிவியுங்கள். நான் கூறியதை யெல்லாம் மறந்துவிடுங்கள். எனக்குத் தவருன செய்தி கிடைத்திருக்கிறது. இதற்காக நான் வருந்துகிறேன்" என்ருர் பணிவாக.

ஆனல் உள்ளூறத் தம் பெண்ணுக்குக் கயாதீன் திருமணம் செய்ய விருப்பதைக் கேட்டு அவர் வருந்தவில்லை. மாருக இலே சாகிவிட்ட மனத்துடன், சந்தோஷமாக வீடு திரும்பினர்.

உண்மையில் முடியாமலிருந்த ஒரு விஷயத்தை முடிவு செய்து விட்டதுபோல் கயாதீன் வைத்தியரிடம் கூறி இருந்தார். பேலாவின் திருமண விஷயம் இன்னமும் நிச்சயமாகவில்லை. குழந்தைகளைப் பெருமலிருப்பதால் ஏற்படும் லாபங்களைக் குறித்துப் பிரசாரம் செய்யச் சில நாள் முன் ஒரு வாலிபன்

சிவபால்கஞ்சிற்கு வந்திருந்தான் அல்லவா? அவனைத் தம் மாப்பிள்ளையாக்கிக் கொள்வது பற்றி, அதாவது மாப்பிள்ளை யாக விலைக்கு வாங்கிவிடுவது பற்றிக் கயாதீன் தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார். அந்த இளைஞனைச் சந்தித்த மறு நாள் நகரத்துக்குச் சென்று அவனுடைய தந்தையைப் பார்த்து விட்டு வந்தார். பையனின் தந்தைக்குச் சொந்தமாக ஒரு துணிக் கடை இருந்தது. அது நன்றாக நடந்தும் வந்தது. ஆனால் கடந்த இரு ஆண்டுகளாகப் பக்கத்தில் ஒரு பஞ்சாபி கடை போட்டு விட்டதால் வியாபாரம் கொஞ்சம் படுத்து விட்டிருந்தது. கடை இருந்த இடத்திலிருந்து சற்றுத் தூரத்தில் ஒரு பெண்கள் கல் லூரியும், அதற்கும் அப்பால் யூனிவர்ஸிட்டியும் இருந்தன.

பல ஆண்டுகளாகவே கல்லூரி மாணவிகள் இளைஞனின் கடையில் தான் துணி வாங்குவது வழக்கம். இந்தப் பெண்கள் மிக நாகரிகமானவர்களாக இருந்தாலும் முட்டாள்கள். தினமும் ஏதாவது வாங்கிக்கொண்டே இருந்தாலும் அவர் களுக்குத் துணிப் பற்றாக்குறை எப்பொழுதும் இருந்து கொண்டே இருந்தது. இதனால் கடையில் வியாபாரம் பிர மாதமாய் நடந்தது. அந்த வரும்படியில்தான் இளைஞன் எம். ஏ. முடித்து விட்டு, குடும்பக் கட்டுப்பாடு பிரசார வேலை யில் அமர்ந்திருக்கிறான். இந்த இளைஞனின் சகோதரி பி. ஏ. முடித்துவிட்டு ஒரு பணக்காரக் கணவனைப் பிடித்திருக்கிறாள். ஆனால் அந்தப் பஞ்சாப்காரனின் கடை பக்கத்தில் வந்ததுமே நிலைமை முழுவதும் மாறிவிட்டது. ஏனென்றால் அந்தக் கடை யில் இருபது, இருபத்து இரண்டு வயது மதிக்கத்தக்க ஓர் அழகிய இளைஞன், பளபளவென்று மழிக்கப்பட்ட முகத்துடன், டைட் பாண்ட்டும், டீ ஷர்ட்டுமாய்ப் பொழுது விடிந்ததுமே உட்கார ஆரம்பித்ததும், பெண்களின் கூட்டம் அந்தப் பக்கமே சாய ஆரம்பித்துவிட்டது. அந்த இளைஞன் அவர்களை “பஹன்ஜீ” என்று விளித்தான். சினிமா நட்சத்திரங்களின் பெயரில் புதிய புதிய டிசைன்களில் துணிகளைக் காண்பித் தான். புதிய பாஷன் சோலிகள், பைஜாமாக்களைப் பற்றி அவர்கள் கேட்காமலேயே ஆலோசனை கூறினான். பெண்கள் துணி வியாபாரம் செய்த வேகத்தைப் பார்த்தால் முன்னைவிட துணிப் பற்றாக்குறை அவர்களிடையே அதிகரித்து விட்டது போல் தோன்றியது. ஒருகால் பகலில் அணிந்த துணியை இரவில் யாருக்காவது கொடுத்துவிடுவார்களோ என்னவோ?

சுருக்கமாகக் கூறினால் இளைஞனின் தந்தையின் கடை வியாபாரம் படுத்துவிட்டது. அவர் கயாதீனிடம் இதையெல்லாம் விவரமாக எடுத்துரைத்தார். அதன் அர்த்தம், "பையன் உங்களுடையவன். எப்பொழுது வேண்டுமானாலும் கல்யாணத்தை வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் இப்பொழுது நான் மிகவும் சிரம தசையில் இருப்பதால் நான் பிள்ளையை மலிவான விலைக்கு விற்பதற்குத் தயாராக இல்லை" என்பதே.

பெண்களைப் பேச்சிலே கவர்ந்து, அவர்களுக்குச் சோளியை விற்றுச் சம்பாதிப்பவன் என்றேனும் வருத்தமடைய நேரும் என்று நினைத்தார் கயாதீன். பையனின் தந்தையினிடம் அநுதாபம் தெரிவித்தவர், தாம் மாப்பிள்ளையை வாங்கப் புறப்பட்டிருப்பதால் நிச்சயம் நல்ல விலை தருவேன் என்பதையும் சூசகமாகவே அறிவித்தார்.

திருமணம் சிரமம் ஏதுமின்றி நிச்சயமாகிவிட்டது. பையனின் விலை பற்றிய பேரந்தான் இன்னமும் முடியவில்லை. பையனின் தந்தை, பக்கத்தில் பஞ்சாபி இளைஞன் கடை போட்ட நாளிலிருந்து தமக்கு இதுவரை ஏற்பட்ட நஷ்டத்தைக் கணக்குப் போட்டுக் கயாதீனிடம் பதினைந்தாயிரம் கோரினார். கயாதீன் தம் இனத்தவரைப் புகழ்ந்து இந்த விலை நியாயமானதுதான் என்றார் "யானை லத்திகூட விலை போகிற இந்தக் காலத்தில் திவாலாகிப் போன கடைக்காரர் தம் பிள்ளையைப் பதினைந்தாயிரத்திற்கு மதிப்பிட முடியும். ஆனால் எனது நிலைமை உங்களை விடக் குறைந்தது தான். என்னால் உங்கள் பிள்ளைக்கு ஏழாயிரந்தான் தரமுடியும்" என்றும் கடைசியில் கூறிவிட்டார்.

வழக்கம்போல் இத்தகைய சந்தர்ப்பங்களில் என்ன நடக்குமோ அதுதான் நடந்தது. பையனின் தந்தை, "ஏழாயிரம் மிகவும் குறைவு. முன்பே பதினாறு ஆயிரம் வரை கேட்டிருக்கிறார்கள்" என்றார். கயாதீன், "அவ்வளவு கொடுக்க என்னால் இயலாது. நான் எனது நிலைமையைத் தான் சொல்லுகிறேன்" என்றார். இதன் பின் பிள்ளையின் தந்தை, "நான், பிள்ளையின் சித்தப்பா, அஸிஸ்டெண்ட் சேல்ஸ்டாக்ஸ் ஆபீசராக இருக்கிறார். அவரிடம் பேசுகிறேன். பையனின் மாமாவின் ஒன்றுவிட்ட தம்பி. ஜில்லா ஜட்ஜாக இருக்கிறார். அவரைக் கலந்தாலோசிக்கிறேன். என் பிள்ளையை அவர் தம் பிள்ளையாகத் தான் நினைக்கிறார். என் சித்தி பிள்ளையின் மைத்துனனைப் பார்த்துப் பேசுகிறேன். பையனின், அம்மா, சித்தி, அத்தை, பாட்டி, கொள்ளுப்

பார்ட்டி எல்லாரையும் கலந்தாலோசிக்கிறேன்'' என்று கூறினார். இவர்கள் யாவருடைய அபிப்பிராயங்களையும் தெரிந்து கொண்டு பையனின் முடிவான விலையைப் பத்து நாட்களுக்குள் தெரிவிப்பதாகக் கயாதீனிடம் உறுதி கூறினார் அவர். கடவுளின் விருப்பம் இருந்தால் நாம் இருவரும் சம்பந்தியாகலாம் என்றும் தெரிவித்தார். பேலாவைப் பற்றி எந்த விவரமும் தெரிந்து கொள்ள அவர் மறுத்துவிட்டார். "பெண் படித்தவளாக இருந்தால் நல்லது. இல்லாவிட்டால் ரொம்பவும் நல்லது. அவள் வேலை பார்க்க வேண்டியதில்லை. பெண் அழகாயிருந்தால் நல்லது. அப்படி இல்லாவிட்டாலும் ரொம்ப நல்லது. அவள் அழகை வைத்துச் சம்பாதிக்கப் போகிறேனா என்ன?'' என்று சொன்னார் அவர்.

வைத்தியர் வந்து கலப்புத் திருமணத்தைப் பற்றிப் பேசியதும் அவரது பேச்சு கயாதீனிடம் ஏற்படுத்திய முதல் விளைவு, அக்கணமே எழுந்து நகரத்துக்கு ஓடிப் போய் அந்தப் பையனின் தந்தையின் கையில் பதினைந்தாயிரத்தை வைத்து விடவேண்டும் என்பது தான். வைத்தியர் அப்பால் நகர்ந்ததுமே அவர் நகரத்துக்குச் செல்ல ஏற்பாடுகளைக் கவனித்தார்.

சற்று நேரத்துக்குப் பின் அவர் வீட்டை விட்டு வெளியே வந்ததும், கன்னா மாஸ்டர், மாளவியா, ரங்கநாத் மூவரும் எதிரே வந்தனர். 'சரி, ஒரு மணி நேரத்துக்கு இவர்கள் அசைய மாட்டார்கள்' என்று நினைத்தார் அவர். கூடவே நகரத்துக்குச் செல்லும் பஸ் வரவும், 'இதை விட்டால் இன்னும் இரண்டு மணி நேரமாகுமே?' என்ற எண்ணமும் தோன்றியது.

கன்னா மாஸ்டர் உள்ளூர்ச் செய்திகள் சிலவற்றைக் கூறிய பின், கீழ்க்கண்டவாறு ஓர் அறிவிப்பும் செய்தார். "நாடு படுகுழிக்குப் போய்க் கொண்டிருக்கிறது.''

ரசனையற்றவராய், விரக்தி மனப்பான்மை கொண்டிருந்தாலும் கயாதீனுக்கு, கன்னா மாஸ்டர் சுவாரசியமுள்ள மனிதராகத் தென்பட்டார். அவருடைய ஒவ்வொரு பேச்சிலும் முட்டாள்தனம் மின்னலைப் போல் பளிச்சிட்டது தெரிந்தது அவருக்கு. "இந்தப் படுகுழி எங்கே இருக்கிறது?'' என்று மெல்ல வினவினார் அவர்.

கன்னா மாஸ்டர் சரித்திர ஆசிரியர். அவருக்குப் பூகோளம் தெரியாது. இந்தக் கேள்வி அவர் காலை வாரி விட்டுவிட்டது. பெரியவர்கள் வாயிலாகக் கேட்டிருந்ததை வைத்துக்கொண்டு

பதில் கூறினார். "எங்கேயென்று சொல்லுவது? சொர்க்கம், நரகம், பாதாளம், படு பாதாளம் எல்லாம் நம் மனத்தில் தான் இருக்கின்றன."

கயாதீன் சற்று நேரம் இந்த வேதாந்தத்தைப் பற்றி யோசித்தார். பிறகு, "மனத்தில் இருந்தால் அதற்கு இவ்வளவு கவலை ஏன்? நாடு போகட்டும் படு பாதாளத்துக்கு! இதனால் யாருக்கு என்ன கெடுதல்?" என்றார்.

கன்னா மாஸ்டரின் உற்சாகம் தணிந்துவிட்டது. "கெடுதலைப்பற்றி என்ன சர்ச்சை? நான் ஒரு விஷயத்துக்காகச் சொன்னேன்."

"எல்லாருமே ஒன்றைச் சொல்லும்போது ஏதோ ஒரு விஷயத்துக்காகத்தானே சொல்லுகிறார்கள்!" என்றார் கயாதீன்.

சில நிமிஷம் கன்னா மாஸ்டர் பேசவில்லை. பிறகு கேட்டார். "பேலாவுக்கு உடம்பு எப்படி இருக்கிறது? உடம்பு சரியில்லை என்று கேள்விப்பட்டேனே."

மாளவியா அவரைப் பார்த்து முறைத்தார். ரங்கநாத் மனத்துக்குள்ளே, 'இந்த மாஸ்டர்களே இப்படித்தான். வகுப்பிலிருந்து வெளியே வந்ததும் இப்படித்தான் முட்டாள்தனமாகக் கேட்டுவைக்கிறார்கள்' என்று நினைத்தான்.

கயாதீனிடம் இந்தக் கேள்வி எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்தியதாகத் தெரியவில்லை. அவர் கன்னா மாஸ்டரை ஒரு நிமிடம் மௌனமாய், அப்பாவித்தனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார். அந்த ஒரு நிமிஷ நேரத்தில், தான் எந்தப் பக்கம் பார்ப்பதென்று, பாவம், கன்னா மாஸ்டருக்குப் புரியவில்லை.

கயாதீனே பேச்சைத் துவங்கினார். "முதலில் உங்களைப் பற்றிச் சொல்லுங்கள், கன்னா மாஸ்டர்! உங்க கேஸ் நிலைமை எப்படி இருக்கிறது?"

"அதைத்தான் உங்களிடம் சொல்ல வந்தேன்."

"ஆனால் நீங்கள் ஏதோ 'படு பாதாளம்' பற்றி அல்லவா குறிப்பிட்டீர்கள்?" என்று கயாதீன் கூறியவுடன் கன்னா மாஸ்டர், பர்வம், பரிதாபமாக விழித்தார். "இப்பொழுது எங்களை நீங்கள்தான் காப்பாற்றவேண்டும். இரண்டு பக்கமும் சங்கடமாகப் போய்விட்டது. இங்கே பிரின்ஸ்பால் எங்களை அடித்துத் தள்ள முனைந்திருக்கிறார். அங்கேயோ கேசு முழுவதையும் கேட்பதற்குள்ளேயே டெபுடி சாகப் கோபித்துக் கொண்டுவிட்டார்" என்றார்.

கயாதீன் ரங்கநாத்தை நோக்கினர். ஆனால் ஒன்றும் பேச வில்லை. "இந்த விஷயத்தில் ரங்கநாத் எங்கள் பக்கம் இருக்கிறார். இவர் எதிரிலேயே எல்லாம் பேசலாம்" என்றார் மாளவியா.

ஒவ்வோர் அறிவு ஜீவியும், ஏதாவதொரு சார்பு நோக்கம் இருந்துகூட, தான் ஒரு சாராரைச் சார்ந்தவன் என்பதைப் பகிரங்கமாகக் கேட்டதும் துள்ளுவதுபோல், ரங்கநாத்தும் வேகமாய்த் தலையை ஆட்டியவாறே சொன்னான். "நான் யார் பக்கமும் இல்லை. இந்த விஷயத்தில் இவர்களிடம் மிகுந்த அநியாயம் நடக்கிறது. இதனால் எனக்கு இவர்கள் மீது அநுதாபம் உள்ளது."

"அப்படியென்றால் நீ ஏன் உன்னைக் கட்சி சார்பற்றவன் என்று கூறிக்கொள்கிறாய்?" என்று வினவினார் கயாதீன்.

மாளவியா பேச ஆரம்பித்தார். "பிரின்ஸ்பால், சின்ன வஸ்தாதுவைத் தூண்டி விட்டிருக்கிறார். முந்தா நாள் நான் தெரு வழியே போய்க்கொண்டிருந்த சமயம், அவன் என்னை நோக்கி, 'மாஸ்டர் சாகப், இது வரையிலும் ஒன்றும் நடக்க வில்லை. சத்தமில்லாமல் சிவபால்கஞ்சை விட்டு ஓடிவிடு. இல்லாவிட்டால், பின்னால் ஏதாவது தாறுமாறாய் நடந்தால் வீணாக உங்க குடும்பத்திலுள்ளவர்கள் வருந்தும்படியாகிவிடும்' என்றான். இந்த மாதிரி இன்னும் சிலருக்கும் யோசனை கூறப் பட்டுள்ளதாகத் தெரிகிறது. பிரின்ஸ்பால் எங்களை ஆளை விட்டு அடிப்பார் போலிருக்கிறது. என்ன செய்வதென்றே புரியவில்லை."

"என்ன செய்வது? பேசாமல் அடியை வாங்கிக்கொள்ள வேண்டியதுதான். மாஸ்டராக இருந்து அடிக்கு அஞ்சலாமா?" கயாதீன் நிலத்தில் பார்வையைப் பதித்தவராய்த் தணிந்த குரலில் கூறினார்.

கன்னா மாஸ்டருக்கு ஆவேசமே வந்து விட்டது. "நாங்கள் சும்மா அடி வாங்கிக்கொள்ளப் போவதில்லை. அடிக்குப் பதிலடி கொடுப்போம்" என்றார் வீராவேசமாக.

கயாதீன் ஒன்றும் பேசவில்லை. "இதொன்றும் நவாப் காலம் அல்ல, யார் யாரை வேண்டுமானாலும் அடிக்க" என்றார் கன்னா.

"அதைவிட மோசமான காலம்" என்றார் கயாதீன். "நானும் நாலைந்து வருஷமாய்ப் பார்த்துக்கொண்டுதானே இருக் கிறேன். ரங்க்பூரில் ஹெட்மாஸ்டரையே கொலை செய்து விட்டார்கள் அல்லவா? பிறகு என்ன நடந்தது? கொலை செய்

தவன் இன்னும் மீசையை முறுக்கி விட்டுக்கொண்டு கையிலே குறுந்தடியுடன் திரிந்துகொண் டிருக்கிறான்.''

சில விநாடிக்குப் பிறகு அவர்களுக்கு ஆறுதல் அளிப்பவர் போல் அவர் தொடர்ந்தார். ''கூடாது. மாஸ்டர் சாகப்! நீங்கள் அடிக்குப் பதிலடி கொடுக்கக்கூடாது. பிரின்ஸ்பால், வைத்தியர் இரண்டு பேரிடமும் மிகுந்த ஆள் பலம் இருக்கிறது. நீங்கள் அப்படியே நாசமாகிப் போய்விடுவீர்கள். பரீட்சை சமயத்தில் ஒவ்வொரு வருஷமும் எத்தனை மாஸ்டர்கள், மாணவர்களிடம் அடிபடுகிறார்களோ, கணக்கே இல்லை. என்ன செய்ய முடிகிறது அவர்களால்? மண்டையைத் தடவிக்கொண்டு சத்தமில்லாமல் வீட்டுக்குப் போகிறார்கள், அவ்வளவுதான். பெண்டாட்டியிடம் கேட்டு ஒரு டம்ளர் தண்ணீரை வாங்கிக் குடித்து விட்டு உட்கார்ந்து விடுகிறார்கள். ஒரு சிலர் போலீஸில் ரிப்போர்ட் கொடுக்கிறார்கள். மீண்டும் அடி வாங்குகிறார்கள். வேறு என்ன?''

கயாதீன் மேலும் தைரிய மூட்டினார். ''இப்பொழுது நடப்பது இது தானே? மாஸ்டர்கள் எல்லாம் இனி அடி உதைக்குப் பயப் படக்கூடாது.''

கன்னா மாஸ்டர் அப்படியே அடங்கிப் போய்விட்டார். ''இப் போது என்ன செய்ய?'' என்றார் மெதுவாக.

''அவர்கள் சொல்கிறபடி நடந்துகொள்ளுங்கள். வழக்கில் சமரசம் செய்துகொள்ளுங்கள். அல்லது சிவபால்கஞ்சை விட்டுப் போய் விடுங்கள், அவ்வளவுதான்.''

''அது தானே இப்போது எங்கள் வேதனை.'' கன்னா மாஸ்டர் அழுவதற்கு முயன்றார். ''பிரின்ஸ்பாலிடம் சமரசம் செய்து கொள்ளச் சேதி அனுப்பினோம். சமரசத்துக்குப் பிரின்ஸ்பால் போடும் நிபந்தனை, சிவபால்கஞ்சை விட்டுப் போய்விடுங்கள் என்பதுதான். எப்படியானாலும் நாங்கள் இதை விட்டுப் போய் விடவேண்டும் என்கிறார். நீங்களே சொல்லுங்கள். நாங்கள் என்ன செய்வது?''

கயாதீன் யோசனையில் ஆழ்ந்தார். நெடுநேரம் யோசனை செய்தபின், தான் யோசித்து முடித்தாகிவிட்டது என்பதை நிரூபிப்பதுபோல் நெற்றிச் சுருக்கங்கள் மறைய, கம்பீரத்துடன் கூறினார். ''இவ்வளவுக்குப் பிறகும் என்ன செய்வீர்கள் மாஸ்டர்? தேசப் படத்தை எடுத்துப் பாருங்கள். சிவபால் கஞ்சைத் தவிர வேறு ஏதாவது ஓர் இடம் இருக்கும்.''

சற்று நேரம் ஒருவருமே பேசவில்லை. ஈரமண்ணில் மண்புழு நெளிந்து சுருண்டு கோடுகளை உருவாக்குவதும் கலைப்பதுமாய் இருப்பதுபோல் கன்னு மாஸ்டர் கோர்ட்டில் நடந்த விசாரணையை விரிவாகக் கூற ஆரம்பித்தார்.

107-ஆவது சட்டப் பிரிவின்படி, முதல் பிரதிவாதி, அதாவது, யாருடைய துஷ்டத்தனமான சுபாவம் பற்றிப் போலீசார் முன் கூட்டியே அறிவித்துள்ளார்களோ, அவர்கள் கன்னு மாஸ்டர், மாளவியா, மற்றும் மூன்று புதிய ஆசிரியர்கள் தாம். இவர்கள் பிரின்ஸ்பாலின் கட்சியில் இல்லாததால் அவரது எதிரியாகக் கருதப்பட்டனர். கன்னு மாஸ்டர் மாஜிஸ்டிரேட்டிடம் யார் யாரால் தம் உயிருக்கும் உடமைக்கும் அபாயம் ஏற்பட்டுள்ளது என்று புகார் செய்திருந்தாரோ அவர்கள் வாதியின் கட்சியில் இருந்தனர். இது பற்றி ஒரு வக்கீல், 'மாஸ்டர்களின் உடமை என்ன இருக்கப் போகிறது? மாஸ்டர்களின், அதாவது ஆசிரியப் பெருமக்களின் உயிருக்கு என்ன மதிப்பு இருக்கிறது?' என்று கிண்டலாகக் கேட்டாராம். ஆனால் மாஜிஸ்டிரேட் இதைக் காதில் போட்டுக் கொள்ளாமலேயே, இரண்டாவது வாதிக்கு எதிராகச் சம்மன் அனுப்பிவிட்டார். வாதியின் கட்சியில், அவருடைய இரண்டு மருமான்கள், அண்ணு பிள்ளைகள் இரண்டு பேர் இருந்தனர். கடந்த மூன்று ஆண்டுகளாக, அவர்கள் கல்லூரியில் வேலை பார்த்தும் மக்கள் அவர்களை ஆசிரியர்களாகக் கருதாமல், பிரின்ஸ்பாலின் அண்ணு பிள்ளைகள், மருமான்கள் என்றே நினைக்கப் பழக்கப் பட்டு விட்டிருந்தனர்.

வழக்கில் கன்னு மாஸ்டர் ஓர் இக்கட்டான, சிரமமான நிலையை எதிர் நோக்கவேண்டி வந்தது. வாதியின் சார்பிலே போலீஸ் இலாக்காவிலுள்ள ஆராய்ச்சியாளர்கள், சரித்திர ஆசிரியர்கள், படைப்பாற்றல் மிக்க கலைஞர்கள் யாவருமே, கன்னு மாஸ்டரும் அவருடைய சகாக்களும் சண்டைக்காரர்கள் என்பதை நிரூபித்தனர். பிரதிவாதிகளோ, பிரின்ஸ்பாலுக்கு எதிராகச் சிவபால் கஞ்சில் சாட்சியங்கள் எதுவும் கிடைக்காத காரணத்தினால், மகத்தான தொரு சரித்திரத்தை உருவாக்க இயலாதவர்களாக இருந்தனர். இதனால், கன்னுவின் வக்கீல் ஒரு நாள், குறைந்த ஆதாரங்களுடன், மிகுதியான தர்க்கத் திறனோடு பிரின்ஸ்பாலுக்கு எதிராகப் பலத்த வாதத்தை நடத்தியபோது கோர்ட்டார் அவர்கள், கன்னு மாஸ்டரைப்

பார்த்து, "நீங்கள் எல்லாம் ஆசிரியர்களா?" என்று வினவினார்.

"ஆமாம்."

"உங்களுக்கு வெட்கமாக இல்லை?"

தாங்கள் ஆசிரியர்களாக இருப்பது குறித்து அவர்கள் எப்பொழுதுமே வெட்கப் பட்டுக்கொண்டுதான் இருந்திருக்கிறார்கள். எனினும் இப்போது மாளவியா இதை ஏற்கத் தயாராக இல்லை. "ஆசிரியராக இருப்பதில் வெட்கப் படுவதற்கு என்ன இருக்கிறது சார்?" என்றார்.

"ஆசிரியர்களாக இருந்துகொண்டு நீங்கள் எல்லாம் ரௌடிகள் மாதிரி சண்டையிட்டுக் கொள்கிறீர்களே! 107—ஆவது பிரிவின்படி வழக்குத் தொடரும் நிலை வந்திருக்கிறதே! இது பற்றி உங்களுக்கு வெட்கமாக இல்லை?"

கன்னாவின் வக்கில் கோர்ட்டாரிடம் கேட்டார். "கனம் கோர்ட்டார் அவர்களே! இதே கேள்வியை எதிர்த் தரப்பாரிடமும் கேளுங்கள்."

கோர்ட்டார் கோபத்தில் இருந்தார். உறுமலுடன், இது இயல்பானது, ஆங்கிலத்தில் சொன்னார்: "அவசியம் கூறப்படும். ஆனால் இவர்களிடம் நான் கூற விரும்புவது ஆசிரியர்களாக இருந்துகொண்டு, இப்படி வழக்காடிக் கொண்டிருப்பது இவர்களுக்கு வெட்கமாக இல்லையா? இந்த வழக்கைக் கேட்க நான் அமர்ந்திருப்பதே எனக்கு வெட்கமாக இருக்கிறது. மாணவர்களிடையே இது எத்தகைய எதிர் விளைவை ஏற்படுத்தும் என்பது பற்றியே நான் சிந்திக்கிறேன்" என்றார் கனம் கோர்ட்டார்.

"கனம் கோர்ட்டார் அவர்களே! எதிர்த் தரப்பு ஆசிரியர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்பட்டால், மாணவர்களிடையே நல்லதொரு விளைவு ஏற்படுவது சாத்தியமாகலாம். ரௌடித்தனம் செய்வதன் பலன் மிக மோசமானதாக இருக்கும் என்பதை அவர்களும் உணர்வார்கள்" என்றார் பிரின்ஸ்பாலின் வக்கீல்.

ஆனால் கோர்ட்டார் தம் வாதத்திலேயே உழன்றுகொண்டிருந்தார் போலும். திடீரென அவரை வெட்கம் சூழ்ந்து கொண்டுவிட்டது. அதாவது, எல்லா விஷயங்களையும் விட்டு விட்டு விவாதம் முழுவதும் வெட்கத்தில் வந்து நின்று விட்டது. ஆசிரியர்கள் எத்தகைய பெரும் மதிப்புக் குரியவர்களாக

இருந்தனர். என்பதிலிருந்து வாதம் திசை திரும்பி, ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குத் தாவிக்கொண்டே சென்றது. ஆசிரியர்களிடம் ஏற்பட்டுள்ள சிரத்தைக் குறைவு, அடக்கமின்மை, நாட்டின் எதிர்காலம் முதலிய நிராசை மிகுந்த பல விஷயங்களைச் சுட்டிக் காட்டி, 'ஆசிரியர்கள் தியாகம் புரியவேண்டும். எல்லாருடைய செயல்களும் லட்சியத்தைச் சிதைப்பதாக இருந்தாலும், ஆசிரியர்கள் லட்சியத்தை உருவாக்கி, அதை உயர்த்திக் காட்டவேண்டும். இது அவர்களின் கடமை. ஊதியம் குறைவானாலும், கௌரவத்துடன் வாழ்ந்து காந்தி, நேரு போன்றவர்களை உருவாக்கும் பணி அவர்களுடையது' என்றெல்லாம் கூறப்பட்டது.

கன்னுமாஸ்டர் மட்டும் அல்ல, அவரது வக்கீல்கூட முடிவில், "தாங்கள் கூறுவதைச் சித்தாந்த ரீதியாக நான் ஏற்கிறேன். அதாவது, இந்தச் செயலுக்கு நாங்கள் வெட்கப்படத்தான் வேண்டும். ஆனால் அது இரு சாராரும் சம அளவில் உணர வேண்டிய ஒன்று" என்று கூறும்படி நேர்ந்தது.

இதன்பின் கோர்ட்டார், பிரின்ஸ்பாலை அதட்ட ஆரம்பித்தார். இம்மாதிரி பிரின்ஸ்பாலின் வேலையைச் செய்வது குறித்து வெட்கப்படவேண்டும் என்பதுதான் அதன் பொருளாக இருந்தது.

"நான் பிரின்ஸ்பாலாக இருந்தால், இத்தகைய ஆசிரியர்களை ஒரு நாள் கூடக் கல்லூரியில் வைத்துக்கொள்வதைச் சகித்துக் கொண்டிருக்க மாட்டேன். ஆசிரியர்களுக்குள்ளே தகராறு வந்தால், கோர்ட்டும், போலீஸ் ஸ்டேஷனுக்குமா போவது? திறமைசாலியான பிரின்ஸ்பாலாக இருந்தால் இம்மாதிரியான விஷயங்களைக் கல்லூரி எல்லைக்குள்ளே புகவே விடக் கூடாது. அப்படியே வந்துவிட்டாலும், அவற்றை வெளியேற்றுவதில் ஒரு விநாடிகூடத் தாமதம் காட்டக்கூடாது. இது மாணவர்களின் எதிர்காலத்தைப் பற்றிய பிரச்னை. இதில் பட்சபாதத்துக்கு இடம் ஏது? ஆனால், இன்றைய பிரின்ஸ்பால்கள் எப்படி இருக்கிறார்கள்? என் காலத்தில்.. ..." கோர்ட்டாரின் பிரசங்கம் இந்த ரீதியில் தொடர்ந்தது.

முடிவில் பிரின்ஸ்பாலின் வக்கீலும், "நான் சித்தாந்த ரீதியாக இதை ஏற்றுக்கொள்கிறேன். ஆசிரியர்களிடம் பிரின்ஸ்பால் சற்றுத் தம்மைப் பலவீனமானவராகத்தான் காட்டிக் கொண்டு விட்டார். அவர் துவக்கத்திலேயே கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ளவில்லை. அவ்வாறு செய்யாததற்காகப்

பிரின்ஸ்பால் வெட்கப்படத்தான் வேண்டும்'' என்பதை ஏற்றுக்கொண்டார்.

வாதங்கள் இந்தக் கட்டத்தை அடைந்ததும் கனம் கோர்ட்டார் அவர்கள் கன்ன மாஸ்டரிடம், "இந்த வேடிக்கை எல்லை மீறிப் போய்விட்டது. இத்துடன் இந்தச் சச்சரவு முடிய வேண்டும். ஒன்று உங்களுக்குள் சமரசம் செய்து கொள்ளுங்கள். அல்லது கல்லூரியைவிட்டு வெளியேறிவிடுங்கள். இல்லாவிடில் இந்த வழக்கில் நான் தீர்ப்பு எழுதும்படியாகிவிடும்'' என்று கூறிவிட்டார்.

இன்ஸ்பெக்டர், கனம் கோர்ட்டாரின் தாராள மனத்தைப் பற்றிச் சுருக்கமாக ஒரு பிரசங்கம் செய்தவாறு, "தாங்கள் தீர்ப்பு எழுதிவிடாதீர்கள். விஷயம் அனர்த்தமாகப் போய் விடும். என்னவாக இருந்தாலும் இவர்கள், பாவம் ஆசிரியர்கள். ஏதோ தவறான ஏமாற்றத்துக்கு ஆளாகிவிட்டனர். தாங்கள் தீர்ப்பு எழுதிவிட்டால், பாவம் சங்கடத்தில் மாட்டிக்கொள்வார்கள். தாங்களே இவ்வளவு தூரம் சொல்லிவிட்டீர்கள். இதுவே அதிகம், அவர்கள் புரிந்துகொண்டிருப்பார்கள். இனிமேல் சமரசம் ஏற்படுமென நான் நம்புகிறேன். இவர்களுக்கு இன்னும் ஒரு வாய்தாவுக்குச் சந்தர்ப்பம் கொடுங்கள். அதற்குள் எல்லாம் சரியாகிவிடும். தாங்களும் தீர்ப்பளிக்கும்படி நேராது'' என்றார்.

"அப்படியானால் இதன் பொருள் .....?'' என்று இழுத்தான் ரங்கநாத்.

"இதன் பொருள், கோர்ட்டிலிருந்து திரும்பியதுமே பிரின்ஸ்பால் மாஸ்டர் மோதிராமை எங்கள் பின்னாலேயே அனுப்பிவிட்டார். இதுவரை, பாவம் அவர் சயன்ஸ் பாடம் போதித்துக் கொண்டு, மாவரைக்கும் மிஷினைப் பார்த்துக்கொண்டிருந்தார். முந்தா நாளிலிருந்து, ஆசிரியர் வேலை பார்ப்பதைவிட யாவரைக்கும் மெஷினை வைத்துத் தொழில் நடத்துவது லாபகரமானது என்பதை எங்களுக்கு அறிவுறுத்த ஆரம்பித்திருக்கிறார் மோதிராம். லாபகரமானது என்ற நோக்கில் மரம் அறுக்கும் மிஷினைப்பற்றிக்கூடக் குறிப்பிட்டார் அவர். நேற்று மாலை மாளவியாவிடம் வெற்றிலை பாக்குக் கடை வைப்பதைப் பற்றிப் பேசினாராம். சொல்லுங்கள், இதற்கு என்ன அர்த்தம்?''

கொட்டாவி விட்டவாறே கயாதீன் சொன்னார்: "சமரசம் செய்துகொள்ளுவதுதான்.''

"இதன் அர்த்தம்?"

"அதைத்தான் நீங்களே சொல்லிவிட்டீர்களே? சிவபால் கஞ்சை விட்டுப் போய்விடுவதுதான். சமரசம் என்றால் அதைச் செய்யுங்கள். தினம் தினம் தகராறு செய்வதால் என்ன லாபம்? வேலையில்லாமல் போய்விடுவீர்கள். வேலையில்லாமல் இருப்பது அப்படியொன்றும் மோசமில்லை. வேலையற்றவர்கள் நம் நாட்டில் கோடிக் கணக்கானவர்கள் இருக்கிறார்கள். உண்மையான சிரமம் இந்தத் தகராறுதான். இதிலிருந்து நீங்கள் விலகி இருப்பதுதான் நல்லது."

ரங்கநாத், சிவபால்கஞ்சிற்கு வந்து ஆறு மாதங்களாகி விட்டன. அவனது உடல்நிலை நன்கு தேறிவிட்டது. நாக்குத் தான் கெட்டுவிட்டது. சரியான நல்ல சந்தர்ப்பத்தில் மௌன மாய் இருக்கவும், தவறான இடத்தில் வீராவேசத்தைக் காண் பிக்கும் பழக்கமும் அதற்கு ஏற்பட்டுவிட்டது. இந்தச் சண்டை யில் தனக்கு எந்தவிதமான இடமுமில்லை என்பது அவனது மனத்தில் தாழ்வுணர்ச்சியை ஏற்படுத்திவிட்டிருந்தது. சூழ் நிலைக்கெதிராக, அவன் மனத்தில் இயல்பான ஆத்திரம் ஏற் பட்டது. ஆனால் ஒரு சராசரி இந்தியனைப் போலவே அது வாத விவாதங்களில் வடிந்து, எஞ்சி நிற்பது நல்ல சாப்பாட்டிலும் தூக்கத்திலும் அடங்கிப் போய்க் கொண்டிருந்தது. ஆனால் இன்று இந்தத் தாழ்வுணர்ச்சியும் ரோஷமும் சேர்ந்து அவனை என்னவோ செய்துவிட்டன. அவன் அதட்டுகிற மாதிரி பேச வாரம்பித்தான். முடிவும் அதட்டலாகவே முடிந்தது. அவன் கூறியதின் சாரம், "கன்னா மாஸ்டர் பின்வாங்கக்கூடாது. எந்த நிலையிலும் உறுதியுடன் நின்று எதிர்க்கவேண்டும். அநியாயத் துடன் உடன்பாடு கொள்ளவே கூடாது" என்பதுதான்.

"எங்களால் எதுவும் முடியாது" என்றார் கன்னா.

"கயாதீன் ஜீ, உங்களால்?" என்று வினவினான் ரங்கநாத்.

மெதுவாக நிறுத்தி நிறுத்திக் கயாதீன் ஒரு கதை சொன்னார். "நம் வட்டாரத்தில் வெகுநாட்களுக்கு முன்னால் மாதா பிரசாத் என்று ஒருவர் இருந்தார். இந்த வட்டாரத்துக்கு அவர்தாம் முதல் தலைவர். மக்கள் அவர் பேசுவதை மிகுந்த விருப்பத்துடன் கேட்பார்கள். அவசியம் நேரிடும்போது அவர் ஜெயிலுக்குப் போவார். அப்பொழுதும் மக்கள் அன்புடன் அவரைப் பற்றி நினைத்துக்கொள்வார்கள். அவர் ஜெயிலிலிருந்து திரும்பி னாலும், தாங்கள் பேசுவதைக் கேட்டு ஆவேசம் கொண்டு

அவரை மீண்டும் ஜெயிலுக்குப் போகத் தூண்டுவதுபோல் தான் மக்கள் பெரும்பாலும் பேசுவார்கள். ஒரு முறை பல ஆண்டுகள் வரை அவர் ஜெயிலுக்குப் போகாமல் இருந்து விட்டார். இதனால் மக்கள் அவரது பிரசங்கத்தில் வெறுப் படையலானார்கள். ஜமீன்தாரி ஒழிப்பு, பெண் கல்வி, அந்நிய நாட்டுப் பொருள்களைப் பகிஷ்கரிப்பது, கள்ளுக் கடை மறியல் போன்ற விஷயங்களைப்பற்றிய அவரது சொற்பொழிவுகள் மக்களுக்கு மனப்பாடமே ஆகிவிட்டிருந்ததால் அவர் பேச எழுந்து நின்றால் பள்ளிச் சிறுவர்கள், அவர் ஏதும் கூறும் முன்னரே, அவருடைய பிரசங்கத்தின் சில சில வரிகளைச் சொல்ல ஆரம்பித்துவிடுவார்கள். பின்னர் அவர் பேசுவதற்கு ஏதும் இருக்காது. அவர் சந்தா வசூலிக்கச் சென்றால் மக்கள் அவர் யாசகம் கேட்பதாக நினைத்தனர். அவர் 'பாரதமாதா வுக்கு ஜே!' என்றால் ஏதோ தம் குடும்பத்தைப் பற்றிப் பிரசாரம் செய்வதாகக் கருதினர். அவர் ஜமீன்தாரி ஒழிப்புப் பற்றிப் பேசினால் வரி கொடுக்காமல் அந்த வருடத்தைக் கடத்த நினைக்கிறார் என்ற அபிப்பிராயம் மக்களிடையே ஏற்பட்டது.

"மாதா பிரசாதிற்கு இதன் பின் தன் பேச்சு எடுபடவில்லை என்ற உணர்வு ஏற்பட்டது. அப்பொழுது நான், 'அண்ணே, லீடருக்குத் தேவையான குணங்கள் உங்களிடம் இல்லை. மக்களைப் பற்றிய ஒவ்வொரு விஷயமும்; அந்தரங்கமும் லீட ருக்குத் தெரிந்திருக்கவேண்டும். ஆனால் லீடரைப்பற்றி மக் களுக்கு எதுவும் தெரிந்திருக்கக்கூடாது. இங்கு விஷயமே தலை கீழாக இருக்கிறது. உமக்கு மக்களைப் பற்றி அதிகம் தெரிய வில்லை. ஆனால் மக்கள் உம்மை அணு அணுவாக அறிந்து வைத்திருக்கிறார்கள். இதனால்தான் உமது தலைமை தற்சமயம் இங்கு எடுபடாமல் இருக்கிறது. நீங்கள் இங்கிருந்து வேறு இலாக்காவுக்குப் போய்விடுங்கள் அல்லது ஜெயிலுக்காவது போங்கள்' என்று கூறினேன். மாதா பிரசாத் ஜெயிலுக்குப் போய்விட்டார். இதற்கு ஒரு வருடம் கழித்து உன் மாமா, வைத்தியர் வேறு ஜில்லாவிலிருந்து இங்கு வந்தார். அவரைப் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. கரு கரு வென்ற மீசை, நல்ல வாட்ட சாட்டமான தேகம் என்பதுதான் ஜனங் களுக்குத் தெரிந்தது. தவிரவும் அவரது வீரிய புஷ்டி மருந்து களுக்கு நல்ல கிராக்கி. அவர் இங்கே கூட்டுறவுச் சங்கம்

ஏற்படுத்தினர். ஒரு மிடில் ஸ்கூலைத் திறந்தார். ஆயுர்வேத மருந்துச்சாலை அமைத்தார். 'இவர் யார்?' என்று மக்களுக்குத் தெரிவதற்கு முன்னரே அவர் இங்கே தலைவராகி விட்டார். ஒரு கிராமத்து ஜமீன்தாரியையே அவர் அடமானத்துக்கு வாங்கிவிட்டார். கூட்டுறவு வங்கியில் கடன் கொடுப்பதற்கு ஏற்பாடுகள் செய்யத் தாமதமாகி விடுவதால் யாருக்கும் கஷ்டம் ஏற்பட்டுவிடக் கூடாதே என்று தம் பணத்தை வட்டிக்கு விடலானர். அங்கு மாதா பிரசாத் ஜெயிலிலே கிடக்க, இங்கு இவர் ராணுவத்துக்கு ஆள் சேர்க்க ஆரம்பித்துவிட்டார். நகரத்தின் கூட்டங்களுக்குப் போய்வரலானர். சுதந்தரம் கிடைத்ததும் ஜமீன்தாரி எதிர்ப்பில் ஈடுபட்டுத் தம் கிராமத்தை விற்று, பணத்தைப் பெற்றுக்கொண்டு, கடந்த கால ஜமீன்தார் என்று பெயருடன் நிலைத்துவிட்டார். மாதா பிரசாத், பாவம், ஜெயிலிலிருந்து வெளியே வந்த பின் சர்க்கார் தியாகிகள் பென்ஷனைப் பெற்றுக்கொண்டு வயிறு வளர்க்க நகரத்தில் பிழைப்பை நாடிப் போய்விட்டார். இங்கே, பாபு ரங்கநாத், உங்கள் மாமா தனிக் காட்டு ராஜா வாகிவிட்டார்.

"ரங்கநாத் பாபு! லீடரின் தலைமை, தம் வீட்டிலிருந்து வெகு தூரத்திலுள்ள நிலத்தில் விளைந்தால்தான் விளையும். இதனல் நான் இங்கே தலைவராக முடியாது. மக்களுக்கு என்னை நன்றாகத் தெரியும். நான் ஏதாவது பேசினல், 'இதோ பார், கயாதீன் லீடராகப் பார்க்கிறன்' என்பார்கள். இந்தக் கன்ன மாஸ்டருக்காகவும் நான் லீடராக முடியாது. யாருக்குச் சுயமாக அறிவு இல்லையோ, அவர்களுக்காக எத்தனை நாட்கள் வக்காலத்து வாங்க முடியும்?"

கயாதீனின் இந்த நீண்ட பிரசங்கத்தை ரங்கநாத் அமைதியுடன் கேட்டுக்கொண்டான். பிறகு, "மாமாவை உங்களுக்கு நன்றாகத் தெரியும். நீங்கள்தான் அவரிடம் ஏதாவது செய்ய முடியும். தாங்கள் கன்ன மாஸ்டருக்கு ஏதாவது உதவி செய்துதான் ஆகவேண்டும்" என்றான்.

"கன்ன மாஸ்டருக்கு என்னல் உதவமுடியாது. ஆனல் உன்னல் முடியும். நீ இப்பொழுது உன் மாமாவுக்கு எதிராகப் பேச ஆரம்பித்துவிட்டாயே! உன் தயக்கம் விலகிவிட்டது. நீ வெளியூர்க்காரன். இங்குள்ளவர்களுக்கும் உன்னைப் பற்றித் தெரியாது. கன்ன மாஸ்டர் மாதிரிதான் நீயும். இனி நீயே தலைவனகிக் காட்டு, பார்க்கலாம்!" என்றார் கயாதீன்.

''அப்படியானல் அதுவே நடக்கும். நீங்கள் என்ன சொல்லு கிறீர்கள்?'' என்ருன் ரங்கநாத் உணர்ச்சி வேகத்துடன்.

'சின்னவர்களின் சகவாசம் தலேக்கு ஆபத்து' என்ருர் கயா தீன். ஆனல் இதை உரக்கச் சொல்லவில்லே. மனத்துக்குள் கூறிக்கொண்டார். வந்திருந்தவர்கள் எழுந்து போவதை எதிர் பார்த்தவராய் உட்கார்ந்திருந்தார் அவர். பட்டிணத்துக்குப் போக நேரமாகிவிட்டது என்பது நினைவு வந்தது. பதினைந்தா யிரம் பெரிய தொகைதான். ஆனல் பேலாவின் முன் அது அவருக்கு ஒரு பொருட்டாகத் தோன்றவில்லே.

# அத்தியாயம் 28

டெபுடி டைரெக்டர் ஆஃப் எஜுகேஷன் கல்லூரியின் பிரச்னே களேக் குறித்து விசாரணே செய்ய வரப்போவதாக இருந்தது. அவர் வருவதற்கு இன்னமும் நான்கு நாட்கள் இருந்தன. கன்ன மாஸ்டரின் வீட்டுக்குப் போய் அவர் என்ன ஏற்பாடுகள் செய்திருக்கிருர் என்று பார்த்து வரலாம் என்று ரங்கநாத்தும் ரூப்பனும் நினேத்தனர். அவர்கள் கோவிலுக்கும் பஸ் ஸ்டாண் டிற்கு மிடையே உள்ள சந்தின் வழியே சென்றபோது ஒரு காட்சியைக் கண்டனர்.

பஸ் ஸ்டாண்டின் மதிற்சுவருக்குப் பின்னலிருந்து ஒரு தலே மட்டும் தெரிந்தது. உடம்பு மறைந்திருந்தது. அதாவது, மோவாய் சுவரின்மீது பதிந்திருந்தது. தலே சற்றுக்கூட அசை யாமல் ஆலயத்தை நோக்கி வெறித்துப் பார்த்துக்கொண் டிருப்பதுபோல் காணப்பட்டது. அந்த முகத்தில் செயற்கை யான ஒரு சிரிப்பு மலர்ந்திருந்தது. தூரத்திலிருந்து பார்க்கும்போது சிரித்துக்கொண் டிருந்த ஒரு மனிதனின் தலேயை வெட்டி, மதிற்சுவரின்மேல் வைத்திருந்தது போலவே தோன்றியது.

ரூப்பன் நின்று, ரங்கநாத்தை அந்தப் பக்கம் பார்க்கும்படி ஜாடை காட்டினான். சில விநாடிகள் இமைக்காமல் பார்த்த ரங்கநாத் அது நொண்டியின் தலை என்பதை அறிந்து கொண்டான்.

ரூப்பன் அவனை அழைத்ததும் தலை கழுத்துவரை மேலே தெரிந்தது. இருவரும் சுவரின் அருகே சென்று நின்றுகொண்டனர். மதிற் சுவருக்கு இப்பக்கமும் அப்பக்கமும் நின்றபடியே சம்பாஷணை துவங்கியது.

"பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டு என்ன செய்கிறாய்?" என்று வினவினான் ரூப்பன்.

நொண்டியின் முகத்திலிருந்த புன்னகை மறைந்துவிட்டது. இப்பொழுது அவன் இயல்பாகக் காட்சி தந்தான். "இங்கே யார் என்ன செய்வார்கள் பாபு! ஊருக்குப் போகிறவர்கள் வருகிறவர்கள்தான் இங்கு வருவார்கள்."

"நீ ஊருக்குத் திரும்பிப் போகிறாயா? அதாவது, நகல் கைக்குக் கிடைத்துவிட்டதா? எப்பொழுது கிடைத்தது?"

"நகலை நான் பெற்றுக்கொண்ட மாதிரிதான் பாபு! ஆனால்...

இடக் கையால் தன் மண்டையில் 'படீர் படீர்' என்று நாலடி போட்டுக் கொண்டான் நொண்டி. ரூப்பனும், ரங்கநாத்தும் மௌனமாய் நின்றனர்.

"போன தடவை உங்களைக் கடையில் பார்த்தபோது நீங்கள் எவ்வளவு அன்பு காட்டினீர்கள்! பால் வாங்கிக் கொடுத்தீர்களே! அதற்கு மறுநாளே நான் என் ஊருக்குப் போகவேண்டி வந்துவிட்டது. உறவினர் யாரோ இறந்துவிட்டார்களென்ற செய்தி வந்தது. ஊருக்குப் போனதும் மறுபடி எனக்குக் காய்ச்சல் வந்து கீழே தள்ளிவிட்டது. பதினைந்து நாள் படுக்கையில் கிடந்தேன். நேற்றுத்தான் திரும்பி வந்தேன் பாபு. தாலுக்கா ஆபிஸுக்குப் போய் விசாரித்தால் விஷயம் கையை விட்டுப் போய்விட்டது என்று தெரிந்தது."

"ஆபிஸில் உன் நகல் பல நாட்களுக்கு முன்னரே தயாராகி விட்டதாக நோட்டீஸ் போர்டில் அறிவிக்கப்பட்டிருந்தது. பதினைந்து நாள்வரை அதைப் பெற்றுக்கொள்ள ஒருவரும் வராததால் அவர்கள் அதைக் கிழித்துப் போட்டுவிட்டதாகச் சொன்னார்கள்."

"நகல் தயார் பண்ணியதும் பதினைந்து நாட்கள் வைத்திருப்பார்களாம். ஒருவரும் வந்து பெற்றுக் கொள்ளாவிடில்

கிழித்துப் போட்டு விடுவார்களாம். இது எனக்குத் தெரியாது.''

நொண்டி இதைக் கூறியபின் வலியச் சிரிக்க முயன்ருன். ஆனால் அவன் அழுவதைத்தான் அவர்களால் காண முடிந்தது.

"இதோ பார் நொண்டி! சட்டம், நியமம் இதையெல்லாம் தெரிந்து கொள்வதால் ஒன்றும் நடக்கப் போவதில்லை. நீ தெரிந்துகொள்ளவேண்டியது ஒன்றே ஒன்றுதான். நீ ஒரு சாதாரண குடிமகன். குடிமகனுக்கு இவ்வளவு சுலபமாக வெற்றி கிடைக்காது'' என்று அறிவுறுத்த ஆரம்பித்தான் ரங்கநாத்.

நொண்டி அழுவதை நிறுத்திவிட்டு மீண்டும் முன்போலவே மோவாயை சுவரின் மேல் பதித்தவண்ணம் கண்கொட்டாமல் அவர்களையே பார்த்தான்.

''தோற்றுவிட்டதால் பரவாயில்லை. உன் ஊருக்குப் போய் விவசாயத்தைக் கவனி. கொஞ்ச நாட்களுக்குப் பிறகு இந்தக் காயம் தானே ஆறிவிடும்.''

"விவசாயம் எப்படிச் செய்வது பாபு? வயல்களைப் பற்றிய வழக்குத்தானே நடந்துகொண்டிருக்கிறது?''

''அப்படியென்ருல் திருடு. கொள்ளையடி!'' ருப்பனின் குரலில் திடீரெனக் கடுமை தொனித்தது.

நொண்டி சற்று நேரம் சும்மா நின்ருன். பின் ஏதோ யோசிப்பவன் போல், ''மீண்டும் நகலுக்காக விண்ணப்பம் போடட்டுமா?'' என்ருன்.

ரங்கநாத் நீண்டதொரு பெருமூச்செறிந்தான். "போட்டு வை. ஆனால் இந்தத் தடவை ஒரு வக்கீலை நியமித்துவிடு. லஞ்சம் கொடுக்காமலாவது தப்பலாம், கேசு போட்டுவிட்டு வக்கிலிடமிருந்து தப்பமுடியாது.''

இருவரும் மீண்டும் பாதைக்குத் திரும்பினர். வழியில் படுத்திருந்த ஒரு நாயை ருப்பன் எட்டி உதைத்தான். ஒரு முறைக் கண்ணைத் திறந்து பார்த்ததைத் தவிர அதனிடம் எவ்விதமான எதிர்விளைவும் ஏற்படவில்லை. "இந்த நொண்டி, சிவபால்கஞ்சை விட்டு வெளியே இருப்பதுதான் நல்லது. இவனைப் பார்த்தாலே மனத்தில் ஆத்திரம் வருகிறது. செவிட்டடியாக நாலு கொடுத்தால் என்ன என்று தோன்றுகிறது'' என்ருன் ருப்பன்.

"அப்போ கொடுப்பதுதானே?" என்று உறுமிய ரங்கநாத், மனத்துக்குள், இங்கு வந்தபின் இன்றுதான் முதல் முறையாகத் தான் சீறுவதாக நினைத்துக்கொண்டான்.

அவர்கள் இருவரும் கன்னா மாஸ்டரின் வீட்டிலே உட்கார்ந்திருந்தனர். வீடு, அதாவது பழங்காலத்துக் கட்டடம். முன்னால் ஓர் அறை, அதற்குப் பின்னால் முற்றம், வராந்தா. பிறகு ஓர் அறையும் இருந்தது. வராந்தாவில்தான் சமையல் நடந்தது. முற்றத்தின் ஓர் ஓரத்தில்தான் குளிப்பது, சிறுநீர் கழிப்பது எல்லாம் நடந்தன. சிவபால்கஞ்சில், 55 சதவீத வீடுகளில் குளியலறை, கக்கூஸ் கிடையாது. அறையிலே ஒரு மரக் கட்டில், அதன்மீது கிழிந்த கம்பளம் கிடந்தது. அதன்மீது ஒரு மூலையிலே உறையில்லாத தலையணை. அதைப் பார்த்தாலே இங்கே தேவைக்கதிகமாகவே கடுகெண்ணெய் கிடைக்கிறது என்று தோன்றும். கட்டிலுக்கருகே சுவரை ஒட்டினாற்போல் ஓர் அலமாரி. சோப்பு நுரை உலர்ந்து கெட்டியாகிப் போய் விட்ட ஷேவிங் பிரஷ். அதன் பக்கத்திலே ஒரு சேஃப்டி ரேசரும் கிடந்தன. ரேசரில் வழித்த மயிர்த் துணுக்குகளும் சோப்பு நுரையும் காய்ந்து கிடந்தன. அலமாரியில் பூட் பாலிஷ் டின் ஒன்று, பழசாகி மயிரிடையராகிவிட்ட பிரஷ், ஓர் அழுக்குக் கந்தல், பிலிம்ஸ்டார் சாதனாவின் படம் முதலியன காட்சி தந்தன. அந்தப் படத்தில் அந்த நடிகை, மிகக் குறைந்த ஆடைகளை அணிந்து, மேனாட்டு ஸ்டார்களிடம் உள்ளவை எல்லாம் என்னிடமும் இருக்கின்றன என்பதைப் பறை சாற்றுபவள் போல், மதமதர்த்து நின்றுகொண்டிருந்தாள்.

அலமாரியின் மேல் தட்டில் இலக்கியம் இருந்தது. டாக்டர் ஈசுவரி பிரசாத் எழுதிய இந்திய வரலாறு. 'கிராஜுவேட்' எழுதிய சரித்திரப் பாடத்துக்கான நோட்ஸ்கள், துப்பறியும் பாக்கெட் நாவல்களில் ஒரு சில, தார்மிகப் பத்திரிகையான 'கல்யாணி', தடித் தடியான பல வால்யூம்களும், குல்ஷன் நந்தாவின் நாவல்கள் முழு செட்டும் இருந்தன. சரித்திரம் போதித்த கன்னா மாஸ்டர் படித்த இலக்கியம் இவையே.

கன்னா மாஸ்டர், மாளவியாஜீ, அவர்களுடைய குழுவைச் சேர்ந்த இன்னும் இரண்டொருவர், ரங்கநாத் ஆகியவர்களைத் தவிர, இரண்டு பையன்களும் அங்கே இருந்தனர். வாய்ப் பேச்சு இருக்கும்போதே அடிதடியில் இறங்கிவிடுவதில் இவ்விரண்டு பேரும் மிகவும் சமர்த்தர்கள் என்பது ஊரெல்லாம் பிரசித்தம்.

தங்கள் இஷ்டம்போல் இவர்கள் கல்லூரிக்கு வந்து போவ துண்டு. இக் கூட்டத்தினரின் முன் இரண்டு விஷயங்கள் ஆலோ சனைக்காக வைக்கப்பட்டிருந்தன.

'மாளவியாவைப் பற்றி ஆபாசமாக எழுதி வெளியிட்டுள்ள துண்டுப் பிரசுரம். போனவாரம், பிரின்ஸ்பால் கன்னு மாஸ்டரி டம் தகாத முறையில் நடந்துகொண்டதால் ஏற்பட்டுள்ள நிலைமை' என்பது முதல் விஷயம். 'டெபுடி டைரெக்டர் ஆ:ப் எஜுகேஷன் மூலம் நடத்தப்படப் போகும் விசாரணைக்கான ஏற்பாடுகள்' இரண்டாவது.

இன்னும் மூன்ருவது விஷயமும் இருந்தது. பிரின்ஸ்பாலின் மூக்கை அறுக்கவேண்டும். அதாவது நன்ருய் அவமானப் படுத்தவேண்டும். அதாவது, நன்ருய் ஒரு தரம் செருப் பால் அடித்து விடவேண்டும். ரங்கநாத் இருந்ததால் இந்த மூன்ருவது விஷயம் அஜெண்டாவில் சேர்க்கப்பட வில்லை.

முதலிரண்டு விஷயங்களைப் பற்றித்தான் பேச்சு நடந்து கொண்டிருந்தது.

தற்சமயம் பையன்களுக்கு வருடாந்தரப் பரீட்சை நடந்து கொண்டிருந்தது. அதில் ஒரு பையன் காப்பி அடித்துக்கொண் டிருந்தபோது கன்னு மாஸ்டர் பிடித்துவிட்டார். பிடிபட்டவுடன் பையன், 'நான் பிரின்ஸ்பால் பக்கம் அநுதாபமுள்ளவனுக இருப்பதால் என்னைப் பிடித்திருக்கிருர். அவர் வேண்டுமென்றே பல பையன்களைக் காப்பியடிக்க விட்டிருக்கிருர்' என்று கத்த ஆரம்பித்தான். மாளவியா, கன்னு மாஸ்டரின் சார்பாக ஏதும் சொல்ல வாயெடுப்பதற்குள் அந்தப் பையன், "ஏய்! மாஸ்டர்! நீயேன் தொண தொணவென்கிருய்? உன்னுடன் சினிமா பார்க்க வருகிற பையன்களைப் புத்தகம் முழுவதுமே காப்பி யடிக்க விடுகிருய். நாங்கள் ஒரு வரி, இப்படி அப்படிப் பார்த்து எழுதினுல் அது உங்களுக்குத் தப்பாக இருக்கிறது" என்றதும் மாளவியா வெட்கத்திருல் குன்றிப் போனுர் பாவம். ஆனுல் கன்னு மாஸ்டர் பையனை மிரட்ட ஆரம்பித்தார். பையன் அஞ்ச வில்லை. "உம்மை அவமதிக்க நான் விரும்பவில்லை. இதனுல் பேசாமல் இந்த அறையை விட்டு வெளியேறுங்கள். இல்லா விட்டால், உம்மைத் தூக்கி அலாக்காய் ஜன்னல் வழியே வீசி எறிந்துவிடுவேன். கை கால் முறிந்துபோனுல் நான் ஜவாப் தாரி அல்ல" என்ருன்.

கன்னு மாஸ்டர் நேராகப் பிரின்ஸ்பாலிடம் சென்று முறையிட்டார். "இந்தக் கன்னு எங்கே போனாலும் ஏதாவதொரு தொந்தரவு வந்துவிடும்" என்றவாறே பிரின்ஸ்பால் ரிப்போர்ட்டை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

இதன் பின் போர் மூண்டுவிட்டதென்று அறிவிக்கப்பட்டது. கன்னு மாஸ்டரின் குழுவைச் சேர்ந்த நாலைந்து ஆசிரியர்கள் பிரின்ஸ்பாலின் அறையை நோக்கி விரைந்தனர். அவர்கள் போய்விட்டதால் அவர்கள் மேற்பார்வையிட்டு வந்த அறைகளில் மாணவர்கள் சுதந்தரமாய்க் காப்பி அடிக்கலானார்கள். வசவுகளே அஸ்திரமாக இருந்ததால் ஆசிரியர்கள் அதைத் தாராளமாக உபயோகித்து, தங்கள் பொது எதிரியான பிரின்ஸ்பாலைத் தாக்க ஆரம்பித்தார்கள். அந்த வசைமாறிகளையெல்லாம் தமது உரத்த குரலில் மூழ்கடித்தவாறே பிரின்ஸ்பால், கன்னு மாஸ்டரை நோக்கி, "நீர் கல்லூரியை விட்டு வெளியே போய் விடும். பரீட்சைகள் முடியும் வரை கல்லூரிக்கருகே கூட வரக்கூடாது" என்றார். "அப்படி வந்தால், வாயால் அல்ல, செருப்பால் அடிவிழும்" என்று எச்சரித்தார்.

கன்னு மாஸ்டர் இந்த உத்தரவை எதிர்த்தார். இதன் பேரில் தம் வார்த்தைகளையே செருப்படியாக்கி, பிரின்ஸ்பால் கன்னுவின் மீது தாராளமாய்ப் பொழியலானார். கன்னு இதை இன்னும் பலமாக எதிர்த்தார். முடிவில் கன்னுவின் குழுவைச் சேர்ந்த ஒருவர் போலீஸை அழைத்துவிட்டார். போலீஸைக் கூப்பிட அதிக தூரம் போகவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. மாணவர்களின் வருடாந்தரப் பரீட்சைகளுக்கும், அமைதிப் பாதுகாப்புக்கும் நெருங்கிய தொடர்பிருந்ததால் போலீசார் கல்லூரி வாசலிலேயே இருந்தனர். கூப்பிட்டவுடன் வந்துவிட்டனர். கொலையோ, கொள்ளையோ நடைபெறவில்லை அல்லவா? இதனால் கூப்பிட்டவுடன் அந்தச் சம்பவம் முடியட்டும் என்று காத்திராமல் உடனே ஸ்தலத்துக்கு விரைந்து வந்துவிட்டனர். வந்ததுமே பிரின்ஸ்பாலின் உத்தரவுப்படி கன்னு மாஸ்டர் உடனடியாக வெளியேற வேண்டும் என்று கூறிவிட்டனர்.

மாணவர்கள் இந்தச் சம்பவத்தைப் பற்றி அதிகம் கவலைப்படவில்லை. தங்கள் பாட்டிற்குப் பரீட்சை எழுதிக்கொண்டும் வழக்கப்படி காப்பி அடித்துக் கொண்டும் இருந்தனர்.

இந்தச் சம்பவத்தையே கன்னு மாஸ்டரிடம் பிரின்ஸ்பால் தகாத முறையில் நடந்துகொண்டதாகக் கூறப்பட்டு, அதைப் பற்றிய சர்ச்சையும் நடந்துகொண்டிருந்தது.

''சென்ற வருடம் திரிபாடியின் விஷயத்திலும் இதுவே தான் நடந்தது. நாளையிலிருந்து கல்லூரிக்கு வரவேண்டாம் என்று ஒரு நாள் திடீரென்று அவரிடம் கூறப்பட்டது. மறுநாள் அவர் வந்ததும், பத்ரி பயில்வானின் இரண்டொரு சீடர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டனர். பாவம், திரிபாடி! மானத்தைக் காப் பாற்றிக்கொண்டு ஓடி வந்துவிட்டார். அவர் எங்கேனும் ரிப் போர்ட் செய்யலாமா என்று யோசிப்பதற்குள் அவர் மீது கல்லூரிக்கு வராது இருந்ததைக் காரணம் காட்டி, ஸஸ்பென்ட் செய்தார்கள். பிறகு வேலை நீக்கமே செய்து விட்டார்கள். அவர் வழக்குத் தொடுத்தார். அது இன்றளவும் தொடர்ந்து கொண்டே இருக்கிறது. அவர் தம் கையிலிருந்து செலவழிக்க வேண்டி இருக்கிறது. பிரின்ஸ்பாலுக்குக் காலேஜ் கொடுக் கிறது. பிரின்ஸ்பாலுக்கு வழக்கு கிழக்கென்றால் பயமே கிடையாது'' என்றார் கன்னு மாஸ்டர், ரங்கநாத்திடம்.

''அப்படியானால் நீங்கள் கொஞ்சம் விரைவாகக் காரியத்தில் இறங்கவேண்டும்'' என்றான் ரங்கநாத்.

''இதைப் பற்றித்தான் யோசிக்கவேண்டும்.'' அவர் நெடு நேரம் யோசித்துக்கொண் டிருந்தார். பையன்கள் இருவரும் குல்ஷன் நந்தாவின் நாவலைப் புட்டிக்கொண் டிருந்தனர். இந்த நாடகத்தில் தங்களுடைய பார்ட்டைப் பற்றி யோசிக்கவேண் டிய அவசியம் இல்லை என்பது அவர்களுக்குத் தெரியும்.

''போலீஸில் புகார் கொடுத்தால் கல்லூரிக்குப் போகும் போது என்னை வழி மறிப்பார்கள்'' என்றார் மாளவியா.

கன்னு மாஸ்டர் வெறுப்புடன் சிரித்தார். இந்த மூளைகளைக் கொண்டு இந்தக் கட்சி, குழுவெல்லாம் எவ்வளவு தூரம் நடக் கும் என்பது போலிருந்தது அந்தச் சிரிப்பு. ''என்னைத்தான் கேரோ செய்வார்கள் என்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது? காலேஜிற்குப் போகத்தான் விடுவார்களா? அங்கு அவமரி யாதை செய்வார்களா? யார் கண்டது? புகார் செய்வதெல் லாம் அப்புறந்தானே! முதலில் அங்கே அவமானந்தானே கிடைக்கும்.''

மாளவியா மிக்க கவனத்துடன் இக்கூற்றைக் கேட்டார். ''அப்படியானால் நீங்கள் அங்கே செல்லப் பயப்படுகிறீர்கள்?''

இதுவரை சம்மணம் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்த கன்னு மாஸ்டர், இதைக் கேட்டதும் முழந்தாளிட்டுக்கொண்டு, மார்பை முன்னே தள்ளி, உருட்சி, திரட்சியான அங்கங்களின் வளைவு நெளிவுகளைக் காட்ட மர்லின் மன்ரோ போஸ் கொடுப்பதுபோல் அமர்ந்த நிலையில் படபடத்தார். "ஆமாம், பயப்படுகிறேன். இதில் தங்களுக்கு ஆட்சேபம் ஏதுமுண்டா?"

மாளவியா அவரைச் சாந்தப்படுத்த முயன்றார். "இதில் ஆட்சேபம் என்ன இருக்கிறது? ஆனால் நீங்கள் அங்கே போகாதவரையில், அவர்கள் உங்களைத் தடுக்காதவரையில் ரிப்போர்ட் செய்வது எப்படி?"

"ஆங்கிலத்தில் பிரமாதமாய் ஒரு விண்ணப்பம் எழுதுங்கள். டெபுடி டைரெக்டர் இங்கு வரும்போது அவரிடம் கொடுத்து விடுங்கள்" என்றான் ரங்கநாத்.

கன்னு மாஸ்டர் ஒரு வறண்ட சிரிப்புச் சிரித்தார். "ரங்கநாத் பாபு, நீங்கள் ஒருத்தர்! எனக்கு இந்த டெபுடி டைரெக்டரிடம் நம்பிக்கையே இல்லை. எதன் வாலைத் தூக்கிப் பார்த்தாலும் அது பெட்டையாகத்தான் இருக்கிறது."

இதைக் கேட்ட ஒரு மாஸ்டர் சிரிக்க ஆரம்பித்தார். பையன்கள் 'பெட்டை' என்ற சொல் காதில் விழுந்ததுமே, குல்ஷன் நந்தாவை மூடி வைத்து விட்டனர். நாவல்களின் மேலுறையில் அச்சிடப்பட்டிருக்கும் பெண்களின் உருவங்களை உற்றுப் பார்த்த வண்ணம் இவர்களின் பேச்சைக் காது கொடுத்துக் கேட்கலாயினர்.

"இந்த டெபுடி டைரெக்டர் புதிது. இவரிடம் கொஞ்சம் நம்பிக்கைக்கு இடம் இருக்கிறது. ரொம்பவும் கண்டிப்பானவர் என்று கேள்வி. பெரிய பெரிய தலைவர்களுக்குக் கூட இடம் கொடுப்பதில்லையாம். அர்த்தமற்றப் பேச்சு பேசுவதானால் அறையை விட்டு வெளியேற்றி விடுவேன் என்று மிரட்டுகிறாராம்" என்றார் மாளவியா.

"நீ ஏதோதோ கேள்விப்பட்டுக்கொண்டே இரு. எனக்கு எல்லாம் தெரியும்" என்று நிராசை தொனிக்கப் பேசினார் கன்னு. "எதிர்க் கட்சியைச் சேர்ந்த தலைவர்களிடந்தான் கண்டிப்பைக் காட்டுகிறார். எல்லாரிடமும் இல்லை. இவர் நல்ல கைதேர்ந்த ஆள். பாதித் தலைவர். பாதி ஆபீசர். தமக்கு வேண்டிய நாலைந்து தலைவர்களைத் தமக்கு அநுகூலமாக்கிக் கொண்டிருக்கிறார். இரவு வேளையில் போய் அவர்களுக்கு

முன்னால் வாலைக் குழைத்துக்கொண்டு நிற்கிறார். பகலில் இந்தப் பலத்தை வைத்துக்கொண்டு மற்றவர்களிடம் கண்டிப்பைக் காட்டுகிறார்."

"எப்படி இருந்தாலும், முன்பிருந்தவரைவிட லட்சம் மடங்குத் தேவலை" என்றார் மாளவியா. பின் ரங்கநாத்தை நோக்கி, "முன்னே இருந்த டெபுடி டைரெக்டர், பசு மாதிரி ரொம்பவும் சாது. இதுதான் அவரது பெருமை. நாங்கள் இரண்டு மூன்று ஆசிரியர்களாய்ச் சேர்ந்து டெபுடேஷனாய்ப் போனோம். அவருக்கு எல்லாவற்றையும் விவரமாய் எடுத்துக் கூறினோம். ரொம்பவும் கவனமாய்க் கேட்டுக்கொண் டிருந்தார். அவர் பேச ஆரம்பித்ததும் நம்ப ஊர்க் கயாதீன் பேசுவது மாதிரியே இருந்தது.

"'உங்கள் கல்லூரி மிக நல்ல ஸ்தாபனம். அங்கு வெறும் கட்சிப் பிரதிக் கட்சி தான் இருக்கிறது. மாணவர்களுக்குப் பாடம் போதிக்கப்படவில்லை, கணக்கு வழக்குகள் சரியாக இல்லை. பரீட்சையில் காப்பி அடிக்கிறார்கள். பிரின்ஸ்பால் உங்களிடம் மோசமாக நடந்துகொள்கிறார் என்றெல்லாம் சொல்லுகிறீர்கள். இவை எல்லாம் ஒரு விஷயமா? நீங்களே சொல்லுங்கள்! இது எல்லாக் கல்லூரிகளிலுந்தானே நடக்கிறது. மாணவர்களுக்குப் பாடம் சரிவர நடத்தப்படவில்லையென்றால் யார் என்ன செய்யமுடியும்? பையன்கள் தாங்களாகவே படிப்பில் சிரத்தை காட்டாவிட்டால் யார் என்ன செய்யமுடியும்? எப்படிப் படிப்புச் சொல்லிக்கொடுக்க முடியும்? எங்கள் காலத்தில் நல்ல குடும்பத்துப் பையன்கள்தான் படிக்க வந்தார்கள். கவனமாகப் படித்தார்கள். இப்பொழுது பறையன், சக்கிலியன் பிள்ளைகள் படிக்க வருகிறார்கள். படிப்பு என்ன நடக்கும்? நீங்களே சொல்லுங்கள்.

"'உண்மையைக் கேட்டால் உங்கள் கல்லூரிக்கு நல்ல பெயர் உண்டு. வைத்தியர்ஜி மானேஜராய் இருக்கிறார். ரொம்பவும் சாத்துவிகமான மனிதர். மாமிசமும் மீனும் இருக்கட்டும், வெங்காயத்தைக் கூடத் தொடுவதில்லை. இதோ பாருங்கள், உங்கள் கல்லூரி நஷ்டத்தில் ஓடவில்லை. உங்களுக்கு மாத மாதம் சம்பளம் கிடைக்கிறது. கையாடல் ஏதும் நடப்பதில்லை. ஹர்த்தால் ஸ்டிரைக் எதுவும் கிடையாது. கட்டிடத்துக்கு யாரும் நெருப்பு வைக்கவில்லை, திருட்டு நடக்கவில்லை. ஏன் கொலை கிலை ஏதுங்கூட நிகழவில்லை. எல்லாம் அமைதியாக

நடக்கிறது. உங்கள் கல்லூரி ஒரு லட்சியக் கல்லூரியாகத் திகழ்கிறது' என்றார் அவர். ரங்கநாத் பாபு, டெபுடி டைரக்டர் இவ்வாறு, எங்களுக்கு அமைதியைப் பற்றி, கல்வி அதிகாரி போல் அல்லாமல், போலீஸ் இன்ஸ்பெக்டர் போல அறிவுரை வழங்கினார். நாங்கள் புறப்பட்டதும், 'இந்த ரிப்போர்ட் கிப்போர்ட்டெல்லாம் சரியல்ல. உங்களுக்கு ஏதாவது சிரமம் இருந்தால் நேராக வைத்தியரிடம் போய்ச் சொல்லுங்கள். அவர் எல்லாவற்றையும் கவனிப்பார்' என்றார்.''

'பயலே, நீ பெரிய சாதுவான பசு என்றால் ஏதாவது மாட்டுப் பண்ணைக்குப் போய்விடு. வைக்கோலைத் தின்றுவிட்டு, பாலைக் கொடு. இந்த இடத்தில் உட்கார்ந்துகொண்டு என்ன செய் கிறாய்?' என்று நாங்கள் நினைத்தோம்.

இதைக் கேட்டதும் எல்லாரும் சிரித்தார்கள். முக்கியமாகப் பையன்கள் சிரித்தார்கள் பின் மேலட்டையில் அச்சிடப்பட் டுள்ள நங்கையின் வனப்பை ரசிப்பதில் மூழ்கிவிட்டனர். மாள வியா தொடர்ந்தார்: ''இப்பொழுது எனக்கு இந்தப் புது டெபுடி டைரெக்டரிடம் நம்பிக்கை உள்ளது. நாங்கள் இந்த முறை விண் ணப்பம் செய்துகொண்டதுமே, 'நீங்கள் போய் வாயைத் திறக் காமல் உங்கள் வேலையைப் பாருங்கள். நான் வருகிறேன். வந்து விசாரணை செய்கிறேன்' என்றார்.''

கன்னா மாஸ்டர் நிராசையுடன் தலை அசைத்தார். ''ஹூம்! எனக்கு நம்பிக்கை இல்லை. இது தேர்தல் வரும் வருஷம். கல்லூரிக்கு முன்னைவிட இரட்டிப்புப் பணம் தரப்போவதாகக் கேள்வி. இந்த வருடம் எல்லாருக்கும் இஷ்டம்போல் நடக்க அநுமதி உண்டு. விசாரணை நாளையன்றைக்கு நடக்கும். ஆனால் பலன் ஏதும் இராது. என்ன செய்வது?''

இதுவரை பையன்கள் ஒன்றுமே பேசவில்லை. அவர்களில் ஒரு வன் ஏதோ கூற வாயெடுத்தான். அவன் சிவபால்கஞ்சின் பிர சித்தி பெற்ற உடையில் இருந்தான். அதாவது, கோடுகள் போட்ட பைஜாமா, மேலே பனியன் இல்லாமல் மெல்லிய மஸ் லின் குர்தா. தலை மழுங்க மொட்டை. பார்த்தாலே சோதா மாதிரி இருந்தான். அவன் பேசியதும் அவன் பார்ப்பதற்கு எப் படி இருக்கிறானோ அதுதான் உண்மையுங்கூட என்பது தெளிவா யிற்று. ''மாஸ்டர் சாகப் விசாரணையாவது ஒன்றாவது? நேரான வழி இது. நீங்க உத்தரவிட்டால் ஒரு நாள் காலையிலோ மாலை

யிலேர் 'பாதுகா பட்டாபிஷேகம்' நடத்திவிடுவோம் பிரின்ஸ் பாலுக்கு'' என்ருன்.

''மூக்கை மட்டும் அறுத்துவிடலாம். உயிர் இருக்கட்டும்'' என்ருன் இன்ஞெருவன்.

நிலைமை மோசமாகிக்கொண்டிருக்கிறது என்பதை ரங்கநாத் உணர்ந்தான். கன்ஞ விஷயத்தில் கடந்த சில நாட்களாகத் தான் அவன் அக்கறை காட்ட ஆரம்பித்திருக்கிருன். இந்த ஆசிரியர்களிடம் அவனுக்குச் சற்றே அநுதாபம் ஏற்பட்டிருந்தது. 'எழுத்து மூலமாக எந்த நடவடிக்கையும் எடுக்காமல், அடிதடி, மிரட்டலின் பலத்தில் பிரின்ஸ்பால் இவர்களைக் கல்லூரிக்குள் வரவிடாமல் செய்கிருரே' என்ற இரக்க உணர்வு தான் அவனுடைய சீற்றத்தின் காரணமாக இருந்தது. இவர்களுடன் இரண்டொருமுறை அவனைப் பார்த்த வைத்தியரும், பிரின்ஸ்பாலும் புன்முறுவல் செய்தனர். 'கன்ஞ முதலியவர்களுடைய நோக்கத்தைப் புரிந்துகொண்டு நான் ஓர் உடன்பாடு செய்துவைக்க முயன்று கொண்டிருக்கிறேன்' என்று அவர்களிடம் எடுத்துரைக்க அவன் விரும்பினுன். வைத்தியரிடம் இதைக் கூறியபொழுது மௌனமாய்க் கேட்டுக் கொண்டாரே தவிர, பதிலேதும் கூறவில்லை.

பாதுகா பட்டாபிஷேகம், மூக்கறுப்பது போன்ற விஷயங்களைப் பையன்கள் ஆவேசமாய்ப் பேசுவதைக் கேட்டதுமே ரங்கநாத்துக்கு உள்ளூற வெலவெலத்துவிட்டது. அவனுக்கு ராமாயணத்தின் கதை நினைவிருந்தது. பாதுகா பட்டாபிஷேகத்துக்குப் பிறகு பிரின்ஸ்பாலுக்கு, ஏதோ ஒன்று நேரிட்டுவிட்டால், இரண்டொரு நாட்களுக்குள்ளேயே இந்தப் பையன்கள், ஆசிரியர்களுடன் அவனும் கொலைக் குற்றத்துக்காகக் கம்பி எண்ண வேண்டி இருக்கும். ஆரோக்கிய அபிவிருத்திக்குச் சிவபால்கஞ்ச் மிக உகந்ததாய் இருக்கிறதே தவிர, அங்குள்ள காவல் நிலையத்தின் கியாதி அத்தனைச் சிறப்பானதாக இருக்கவில்லை. ரங்கநாத் எழுந்துவிட்டான். அவன் புறப்படுவதற்குள் வெளியே காலடி ஓசை கேட்டது. கதவைத் திறந்துகொண்டு ரூப்பன் உள்ளே நுழைந்தான்.

இன்று அவன் வீர வேஷத்தில் இருந்தான். கழுத்திலே பட்டு உருமாலை. வேட்டியின் நுனி தோளின்மீது கிடந்தது. கற்றை மயிர் நெற்றியிலே புரண்டுகொண்டிருந்தது. எண்ணெயும் வேர்வையும் படிந்த முகம் மினுமினுத்தது. உதட்டோரத்தில்

வெற்றிலைச் சாறு படிந்திருந்தது. நுழைந்ததுமே, "உட்காருங்கள், உட்காருங்கள். எனக்கு நிறைய வேலை இருக்கிறது. நான் போகவேண்டும்" என்றான் ரூப்பன்.

சிங்கம்போல் நாலாப் பக்கமும் தலையைத் திருப்பிப் பார்த்தான் அவன். ஆனால் அங்கிருந்தவர்களின் கண்களுக்கு அவன் சிங்கமாகத் தென்படவில்லை. மெலிந்த உடலும், வனப்பும் கூடிய ஓர் அறியாப் பிள்ளையின் முகமாகத்தான் தெரிந்தது. கண்கள் சற்றே பனித்திருக்க, உதடுகள் எப்பொழுதும் இருப்பதைவிட மென்மையானவையாகவே தோன்றின.

"உட்காரு ரூப்பன். இதோ நானும் புறப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்" என்றான் ரங்கநாத்.

"இல்லை அண்ணா! என்னால் ஒருநிமிஷங்கூடத் தாமதிக்க முடியாது. அக்கம்பக்கத்துக் கிராமங்களை எல்லாம் தயார் பண்ணிவிட்டேன். இந்தக் கல்லூரிக்காக இலாக்கா முழுவதுமே உறுதியுடன் நின்று உண்மையைக் கூறுவார்கள். மக்கள் யாவருமே நம் பக்கந்தான். இதைக் கூறிவிட்டுச் செல்லத்தான் நான் வந்தேன்."

ரூப்பன், ஒரே ஆவேசத்தில் இருந்தான். "அப்பா விரும்பியது இதுதான் என்றால் இதுவே நடக்கட்டுமே. பொய்யான சித்தாந்தத்தினால் உண்மைகளை மறைக்க முடியாதென்பதை அவரே தெரிந்துகொள்ளட்டும்."

இந்தக் கவிதைக் கச்சேரியைக் கன்னா மாஸ்டர்தான் குறுக்கிட்டு நிறுத்தினார். "உட்காருங்கள் ரூப்பன் பாபு! சொல்லுங்கள், என்ன என்ன செய்துவிட்டு வந்திருக்கிறீர்கள்?"

"சீக்கிரமாகப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள்" என்றான் ரூப்பன். "நாளைக்கு எல்லாமே புரிந்துவிடும். இதே சிவபால்கஞ்சில் ஐந்நூறு பேர்களுக்கு மத்தியில் டெபுடி டைரைக்டர் பிரின்ஸ்பாலுக்கு நூறு செருப்படி கொடுப்பார். அப்படிக் கொடுக்காவிட்டால் நீங்கள் எனக்கு நூறு செருப்படி கொடுங்கள்."

குரலை உயர்த்திய ரூப்பன், "நீங்கள் நிம்மதியாகத் தூங்குங்கள். நாளைய விஷயம், நாளைக்கு" என்றவன், "வாருங்கள், ரங்கநாத் அண்ணா! போகலாம். மாஸ்டர் சாகப் இளைப்பாறட்டும்" என்று கூறியவாறே அந்தப் பையன்களை ஆசீர்வதிப்பதுபோல் கரத்தை உயர்த்தினான். பானிப்பட் போர்க்களத்தில் படையினரை அறைகூவி அழைத்து எதிரிகளைத்

தாக்க உற் ாக மூட்டுவதுபோல், "ஜமாய்ங்கடா பயல்களே!" என்ருன்.

இருவரும் வெளியே வந்தனர். மௌனமாகவே சிறிது தூரம் சென்றனர். சாலேக்கு வந்ததும் ரங்கநாத் ரூப்பனின் தோள்களைத் தொட்டதும் ரூப்பன் திடுக்கிட்டவனுய் அவனேப் பார்த்தவன், சட்டென வேறுபுறம் முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

அவனுடைய தோளின்மீது தன் கரத்தை வைத்த ரங்கநாத் மிருதுவான குரலில் கேட்டான். "ரூப்பன்! நீ குடித்தாயா?"

உற்சாகத்துடன் நடந்துகொண்டிருந்த ரூப்பன் தடுமாறினுன். வேறுபுறம் பார்த்தவாறே கேட்டான். "ஆம் என்று சொல்லட்டுமா? இல்லேயென்று சொல்லட்டுமா?"

"எது உண்மையோ அதைச் சொல்."

"உண்மை என்கிறது என்னப்பா, சொல்லு? அது எந்தப் பொந்திலே இருக்கிறது? எந்தக் காட்டிலே கிடைக்கிறது?" ரூப்பன் உரக்க நகைத்தான். "அண்ணு, இது சிவபால்கஞ்ச். இங்கு எது பொய் எது மெய்யென்று சொல்வதே கடினம்."

ரங்கநாத் வீட்டுக்குச் செல்லும் பாதையிலிருந்து விலகி வேறு வழியிலே நடந்தான். ரூப்பனின் முழங்கையைப் பற்றி, "வா, போகலாம்! ஏதாவதொரு பாலத்தில் உட்கார்ந்து காற்று வாஙகலாம்" என்ருன்.

மெல்ல மெல்ல அவர்கள் ஜனசந்தடியற்ற பாதையிலே நடக்கலாயினர். சற்று நேரத்துக்குப் பிறகு ரூப்பன் தானுகவே ெ ுனை. "என்ருவது ஒரு நாள் ஆரம்பிககத்தானே வேண்டும்? சிவபால்கஞ்சில் இருக்கவேண்டுமென்ருல் இப்படித்தான் இருக்கமுடியும்." சற்றுப் பொறுத்து காரணமின்றியே ஆத்தி த்துடன் குமைந்தான். "இங்கே காந்தி-மகாத்மா ஆவ ெ ல்லாம் நடக்காது."

இருவரும் பாதை ஓரத்திலே ஒரு பாலத்தின்மீது அமர்ந்தனர். ரூபன் ரங்கநாத்துடன் நெருங்கி உட்கார்ந்தது மட்டும் அல்ல. அன்புடன் அவனது தோளின்மீது ஒரு கையைப்போட்டு அணேததுக ாண்டிருந்தான். அவனுடைய நடவடிக்கைகளில் ஒரு புது மையோ, போதையின் கிறக்கமோ இல்லே ரங்கநாத் இடைமறித்தான். "ரூப்பன்! நீ என்ன உளறுகிருய்? சிவபால்கஞ்சிற க நம்முடைய பழக்க வழக்கங்களே மாற்றிக்கொள்வது நல் தல்ல. இந்த உலகத்தில் சிவபால்கஞ்ச் மட்டும்

இல்லை. எனக்கும் உனக்கும் இந்தத் தேசம் முழுவதுமே பரந்து கிடக்கிறது."

ரூப்பன் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான். "அண்ணு! எனக்குத் தோன்றுகிறது. இந்த நாடு முழுவதிலுமே சிவபால்கஞ்ச்தான் விரவி நிற்கின்றது" என்று முணுமுணுத்தான் அவன்.

பிரின்ஸ்பால் சாகப் பல இன்னல்களைச் சமாளிக்க வேண்டி வந்துவிட்டது. நாளை மறுநாள் டெபுடி டைரைக்டர் விசாரணை செய்ய வரப்போகிருர். அவருக்கு முசாபரி பங்களாவில் எல்லா விதமான ஏற்பாடுகளும் செய்தாகவேண்டும். கல்லூரிக் குமாஸ்தாவுக்கு அவர் பல உத்தரவுகளை இட்டிருந்தார். கதவு அருகில் நின்றவாறே அவர் விவரங்களைச் சொல்லச் சொல்ல, குமாஸ்தா தன்னிடத்தைவிட்டு எழுந்திராமலேயே கேட்டுக் கொண்டிருந்தவன், "தினம் தினம் யாராவது ஒருவன் வந்து கொண்டுதான் இருக்கிருன். நாம் எதுவரை அவன் பின்னுல் சுற்றுவது?" என்ருன். டெபுடி டைரைக்டர் சந்தோஷமடைந்து நமக்கு நன்மைகள் செய்யாவிடினும், அதிருப்தி அடைந்தால் பெருத்த தீங்குகள் செய்யமுடியும் என்பதை நட்புரிமையுடன் விளக்கிய பிரின்ஸ்பால் கிட்டத்தட்ட ஒரு குட்டி ஒலிபரப்பே செய்து முடித்துவிட்டார். ஆனுல் குமாஸ்தாவிடம் இது எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. அவன் மௌனமாக தான் குடித்துக்கொண்டிருந்த சர்பத் டம்ளரைக் காலி செய்துவிட்டுப் பெரியதாக ஓர் ஏப்பம் விட்டவன், "சித்தப்பா இருக்கும்போது ஒருவனும் ஒன்றும் செய்துவிட முடியாது" என்ருன்.

சித்தப்பா, அதாவது வைத்தியர். 'குமாஸ்தா இன்று வேலை செய்யச் சண்டித்தனம் செய்கிருன். வேலை செய்யக் கட்டாயப் படுத்திஞல் பெஞ்சியின்மீது படுத்துவிடுவான். பழைய வயிற்று வலி வந்து விட்டது என்பான்' என்பதைப் புரிந்துகொண்டார். இந்த நிலைமையில் அவன் வேலை செய்ய மாட்டான் என்பதும் தெரியும். இன்றென்ன, நாளைக்கு வேலை செய்வது கூடச் சந்தேகந்தான். "அவரைத் தான் நம்பி இருக்கிறேன்" என்று அநாவசியமாக வைத்தியரைப் புகழ்ந்தவாறே பிரின்ஸ்பால் அறையைவிட்டு வெளியே வந்தார். பிறகு தமக்கு நம்பிக்கையுள்ள ஓர் ஆசிரியரைக் கூப்பிட்டு உத்தரவிடலாம் என்று நினைத்தார். ஆனுல் அந்த ஆசிரியர், ஒரு மாணவனுடன் சினிமாவுக்குப் போயிருக்கிருர் என்று தெரிந்தது. "இதுவரை ஒரு

மாளவியாதான் இருந்தார். இப்பொழுது இவரும் அவர் வழியே போயிருக்கிருர்" என்ருர் பிரின்ஸ்பால் உரக்க.

நாளைய ஏற்பாட்டை யாரிடம் ஒப்படைப்பதென்று யோசித்த வாறே முன்பின் அறியாத ஒருவனை ஏதோவொரு கற்பனை நிலையிலே நிறுத்தி மனம் கொண்ட மட்டும் 'அவதி' மொழி யிலே திட்டித் தீர்த்தார் அவர். இதைக் கண்ட சந்தனம் பூசிய நெற்றியும், பாதங்களில் குறடுகளும் அணிந்த அவரது பியூன், அவரை வெறுப்புடன் ஒரு பார்வை பார்த்துவிட்டு அவ்விடம் விட்டகன்ருன்.

பிரின்ஸ்பால் வைத்தியர் வீட்டை நோக்கி நடந்தார். பருவ காலத்துக்கு முன்பே பெய்த மழையும் காற்றும் அவரைத் தடுத்தன. அவர் கண்ணில் தூசி படர்ந்தது. தெருவோரம் இருந்த வெற்றிலைபாக்குக் கடையின் கூரை காற்றிலே விர் ரென்று பறந்து வந்து அவரது தோளிலே உராய்ந்து கொண்டு கீழே விழுந்து நொறுங்கியது. தூசிப் புயலிலும் காற்றிலும் அவரது கால் சாணக்குழியில் பட்டுவிட்டது. அவரது செருப் பும், கணுக்காலும் அந்த நைட்ரெஜன் குவியலில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடின. பிரின்ஸ்பால் கன்னு மாஸ்டரை மனம் கொண்ட மட்டும் திட்டினர். தொடர்ந்து மின்னல் இடியுடன் ஆலங்கட்டி மழை பெய்யலாயிற்று. பிரின்ஸ்பால், கன்னுவை வைதவாறே இரண்டொருவரைத் தள்ளிக்கொண்டு, ஒரு நாயின் வாலை மிதித்தவாறே ஒரு தேநீர்க் கடையில் சரண் புகுந்தார்.

காற்று, மழை, ஆலங்கட்டிகளின் தமாஷா ஒருவாறு முடிந்த பின் அவர் மெதுவாக வைத்தியரின் வீட்டை நோக்கி நடக்க லானர். வழியிலே சந்தித்த அவருடைய குடியானவன், 'களத்து மேட்டிலிருந்து தானியத்தை இன்னும் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்க்கவில்லையே? எல்லாம் வீணுகிவிடுமே' என்று கூறி யதைக் கூட அவர் காதில் போட்டுக் கொள்ளவில்லை. அவர் காலெல்லாம் ஒரே சாணி அப்பிக் கிடந்தது. இதுதான் இப் பொழுது அவருக்கு உலகத்திலேயே மிகத் துயரமான விஷயமாக இருந்தது. தெருவிலே போய்க் கொண்டிருந்த ஒவ்வொருவனைப் பார்க்கும்போதும், இதோ இவன் என்னைப் பார்த்துச் சிரிக்கப் போகிருன் என்றே நினைத்துக் கொண்டார். ஆனல் ஒருவரும் இதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. பிரின்ஸ்பால் வைத்தியரின் வீட்டை அடைந்தார்.

முன்னறையின் கதவு மூடியிருந்தது. அவர் தாழ்ப்பாளை அசைத்தார். தூசிக்காக மூடிவிட்டார்கள் போலிருந்தது. கதவு திறந்ததும் கண்ணில் பட்டவர்கள், வைத்தியர், பத்ரி பயில்வான், சின்ன வஸ்தாது, சனிஸ்வரன் ஆகியவர்களே. அவர்கள் முகத்தில் சிந்தனை தேங்கி நின்றது. பிரின்ஸ்பாலை உள்ளே வரும்படி ஜாடை காட்டினார் வைத்தியர். தம்முடைய வழக்கமான, உற்சாகமான பாஷையில், "முதலில் ஒரு செம்பில் தண்ணீர் கொண்டு வரச் சொல்லுங்கள். காலை அலம்பிக் கொண்டு உள்ளே வருகிறேன். கோமாதாவின் மலத்தை மிதித்து விட்டேன்" என்றார் பிரின்ஸ்பால். இதை அவர் வேடிக்கையாகக் கூறியபோதும் யாரும சிரிக்கவில்லை என்பதை அவர் மனத்தில் குறித்துக் கொண்டார். சனிஸ்வரன் எழுந்துபோய்த் தண்ணீர் கொண்டு வந்தான். பிரின்ஸ்பால் வெட்கத்துடன் பல்லைக் காட்டிக் கொண்டே உள்ளே வந்தார். வைத்தியரை வணங்கி விட்டுத் தம்மிடத்தில் அமர்ந்தார். "எப்படி இருக்கிறீர்கள் பிரின்ஸ்பால்ஜீ?" என்றார் பயில்வான் பத்ரி.

"நான் எப்பொழுதும் நன்றாகத் தானிருக்கிறேன்" என்று துணிவுடன் மீண்டுமொரு முறை தமாஷாகப் பேச முயற்சி செய்த பிரின்ஸ்பால், "நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்? மாப்பிள்ளை அழைப்பு எப்பொழுது?" என்றார்.

பதிலுக்குப் பத்ரி பயில்வானின் பார்வை, 'மாப்பிள்ளை அழைப்பு' கேள்விக் குறியுடன் சீறியது என்பதைப் புரிந்து கொள்ளவில்லை என்பது போலிருந்தது அவர் முகபாவம்.

"யாருடைய மாப்பிள்ளை அழைப்பு பிரின்ஸ்பால்ஜீ?" என்றார் வைத்தியர் மெல்ல.

"நமது புதிய மானேஜிங் டைரெக்டருடையதுதான். கிராமம் என்றாலும் மாப்பிள்ளை அழைப்பு, மாப்பிள்ளை அழைப்பு தானே? நான் கூட ஒரு சில்க் குர்த்தாவுக்கு அளவு கொடுத்திருக்கிறேன். பணம் நீங்கதான் கொடுக்கவேண்டும், மானேஜர் சாகப்" என்றார் பிரின்ஸ்பால் சிரித்துக்கொண்டே. அவருடைய எரிச்சலும் ஏமாற்றமும் கேலியாக மாறிக்கொண்டிருந்தன.

பிரின்ஸ்பால் கூறியதைக் கவனியாதவர்போல் பத்ரி, சின்ன வஸ்தாதிடம் ஏதோ பேசவாரம்பித்தார். "பத்ரிக்கு இந்த வருஷம் விவாகம் நடக்கப்போவதில்லை. நீங்கள் யாருடைய விவாகத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள்?" என்றார் வைத்தியர்.

"ஏன்? கயாதீன்..." வைத்தியர் கரத்தையுயர்த்தி இடை மறித்தவராய், "நீங்கள் எதிரிகளின் பேச்சை நம்பிவிட்டீர்கள். இது மிகவும் வருந்துதற்குரியது" என்றார்.

பிரின்ஸ்பால் வியப்பிலாழ்ந்தார். "ஊர் முழுவதும் பத்ரி—பேலாவின் திருமணத்தைப் பற்றியே பேச்சாயிருக்கும் போது..."

"எதிரிகள் கயாதீனின் பெண்ணைப் பற்றி அவதூறுகளைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள். பேலா சாட்சாத் தேவி. பத்ரியோ எல்லாவிதத்திலும் களங்கமற்ற தூய்மையான நடத்தையுடையவன். அன்று நகரத்திலிருந்து திரும்பி வந்தபின் நான் தீர விசாரித்தேன். எல்லாம், எதிரிகளின் சூழ்ச்சியென்று பின்னால்தான் தெரிந்தது. ஒரு பெண்ணின் நல்வாழ்வுக்காக இந்தச் சம்பவத்தை முற்றிலும் மறந்துவிடுவது நல்லது என்று கூறிவிட்டேன். பாவம், கயாதீன் இந்த அபவாதத்துக்குப் பயந்து ஊரைவிட்டே போய்விட்டார். பட்டணத்திலேயே ஒரு வரன் பார்த்து முடிக்கப் போவதாய்க் கேள்வி."

"ஓகோ! இந்தக் கிராமம் ரொம்பவும் அற்புதமானது!"

பத்ரி பயில்வான் இதற்குள் எழுந்து வெளியே போய்விட்டிருந்தார். சின்னவஸ்தாது எங்கேயே பார்த்தவாறு தன் துடையைத் தடவிவிட்டுக்கொண்டிருந்தான். தன் பட்டிக்காட்டுத்தனத்தை வெளிக்காட்ட இதை விட அவனுக்கு வேறு வழியொன்றும் தெரியாது. பஞ்சாயத்துத் தலைவரென்ற முறையில் தன் பொறுப்பை உணர்ந்தவன்போல் சனிச்சரன், "இந்தக் கிராமத்தை நான் சரிப்படுத்திவிடுவேன். நான் தலைவனாகி இன்னமும் அதிக நாட்கள் ஆகவில்லையே!" என்றான்.

தவளைக்குக்கூட ஜலதோஷம் பிடிக்க ஆரம்பித்துவிட்டதா என்று நினைப்பவன்போல் சின்னவஸ்தாது 'பிச்' சென்று காறி உமிழ்ந்தான். சற்று நேரம் ஒருவருமே பேசவில்லை. வைத்தியர் தான் பின் பேச்சைத் துவங்கினார். "ஒரு பெண்ணைப் பற்றி மிகவும் யோசித்துப் பொறுப்புணர்ச்சியுடன்தான் பேசவேண்டும். பத்ரி, தாமே கயாதீனுடன் சம்பந்தம் செய்துகொள்ள விரும்புகிறார் என்று எந்தப் பகைவன் வதந்தியைக் கிளப்பி விட்டானோ தெரியவில்லை."

சின்ன வாஸ்தாது குறுக்கிட்டான். "நான் ஒன்று சொன்னால் தவறாக நினைக்கமாட்டீர்களே!"

"நீ முட்டாள். நீ வாயை மூடிக்கொண் டிருக்கிற வரையில் தான் நல்லது" என்று கடுமை தொனிக்கும் குரலில் கூறிய வைத்தியர், "நீங்கள் எல்லாருந்தான் சிறுபிள்ளைத்தனமாய் வாய்க்கு வந்ததைக் கூறிப் பரப்பி விட்டிருக்கிறீர்கள். பாவம், கயாதீனை அவமானத்துக் குள்ளாக்கி, அவமதித்து விட்டீர்கள். இனி அடங்கிக் கிடங்கள். அவர் பெண்ணை நல்லபடியாய் விவாகம் செய்துகொண்டு வாழ விடுங்கள். அவ்வளவுதான். இந்த விஷயம் இதோடு முடிந்தது. இதை மீண்டும் கிளப்ப வேண்டிய அவசியம் இல்லை." என்றவர், முகலாய மன்னர் ஒருவர், அடிமையொருவனை நாடு கடத்தி விட்ட நிம்மதியில், வேறு எதைப் பற்றியும் பேசத் தயாராக இல்லை என்பதுபோல் அமைதியாகத் திண்டில் சாய்ந்துகொண்டார்.

# அத்தியாயம் 29

இந்தியாவில் ஆங்கிலேயர்களின் அரசாட்சி நடந்து கொண்டிருந்த சமயத்தில் நதிக்கரைகளில், பள்ளத்தாக்குகளில், காடுகளில், மாந்தோப்புகளில், துரவுகளில்—எங்கு வேண்டுமானாலும் வோட்ஸ்வொர்த், ரவீந்திரநாத் டாகுர், சுமித்திரானந்தன் பந்த் ஆகியோரின் கவிதைகள் நம்மையும் அறியாமல் இதயத்திலிருந்து பொங்கிவரும் இடங்களில் டாக்பங்களாக்களும் பயணிகள் விடுதிகளும் கட்டப்பட்டன. தூசி தும்பு, பிளேக், வைசூரி, காலரா, பஞ்சம், பசி பட்டினி, அசிங்கம், குரூபம், அநாகரிகம் முதலியவை எட்டிப் பார்க்காத இடங்களான இங்கேதான் இரண்டு இனத்தவரும், அதாவது வெள்ளையர், கறுப்பர்களுமான துரைமார்கள் கிராமப்புறங்களில் சுற்றுப் பயணம் வரும்பொழுது தங்குவதுண்டு.

அந்த நாட்களில் இந்த டாக் பங்களாவில் இருந்து கொண்டு தங்கள் சுற்றுப்பயணத்தைப் பிக்னிக்காக மாற்றிவிடுவதும்

உண்டு. இன்று பிக்னிக்கைச் சுற்றுலாவாக மாற்றிவிட்டார்கள் அல்லவா, அப்படித்தான்! துரைமார்கள் இவ்விடுதிகளில் அமர்ந்தவாறே அதிகாரத் தோரணையிலை் பிரச்னைகளையும், பிரச்னைகளை அதிகாரத்திலுைம் உறுதிப்படுத்திக் கொண்டும், மரம் செடி கொடிகள், மிருகங்கள், பறவையினங்கள், புழு, பூச்சிகள் ஆகியவைப் பற்றி ஆராய்ச்சி நடத்தியவாறும், சில சமயம் ஆடு மேய்த்துக் கொண்டு வரும் கிராமத்துப் பெண்ணின் கட்டான உடலமைப்பைக் கண்டு வியந்தபடியும், திறமை மிக்கத் தையல்காரர்கள் தைக்கும் ஆடைகளின் கூட்டுச் சதியின் பலத்தைக் கொண்டும், மேற்காலை் என்ன, கிழக்காலை் என்ன, ஆண் மகனிடம் எந்த வேறுபாடும் கிடையாது என்பதை வட்டாரத்திலுள்ள ஒழுக்கம் கெட்ட பெண்களுக்கு நிரூபித்துக்கொண்டும், சில சமயம் கூடைகளில் வரும் ஸ்காட்ச் விஸ்கி பாட்டில்களைக் காலி செய்தவாறும், சிரித்தும், அழுதும், கோபித்தும், மௌனமாகவும், மக்களுக்கும், அரசாங்கத்துக்கும் இடையே, மலையாகவும் பாலைவனமாகவும் சாணக் குவியலாகவும் நதியாகவும் சில சமயம் பாலமாகவும் பயன்பட்டு வந்தனர்.

இவை எல்லாம் முன்னொரு காலத்துச் சமாசாரங்கள். இப்போதெல்லாம் கிராமம் பட்டினத்தில் தான் இருக்கிறது. கிராமங்களில் பிரைமரிப் பள்ளிகளும், பஞ்சாயத்துச் சபைகளும் ஏற்பட்டுள்ளன. மனிதனே பிளேக் ஆகிவிடாத வரைப் பிளேக் நோய்க்கு இடம் இல்லை. படித்தவன், அதாவது, மேலைட்டு நாகரிகமுள்ள மனிதன் பட்டணத்திலிருந்து கிராமத்துக்குச் சென்றால் வித்தியாசமாக ஏதும் நடந்து விடுவதில்லை. கறுப்புத் துரைமார்கள் பட்டணத்திலிருந்து கிராமத்துக்குப் போய், இரண்டொரு நாட்கள் அங்கே தங்கி, அந்தத் தண்ணீரைக் குடித்தாலும் எந்தவிதமான தொத்து நோயும் இல்லாமல் பத்திரமாக ஊர் திரும்புகிறார்கள் என்பது தற்சமயம் நிதரிசனமாகிவிட்டது. கிராமத்தைப்பற்றி மக்களின் எண்ணம் மாறிவிட்டது. என்றாலும் கிராமத்துத் தண்ணீரைப் பற்றி முடிவாக ஏதும் கூறுவது இன்னும் சிரமமாகவே இருக்கிறது. ஆனால் இரவும் பகலும் தூசிப்படலத்தையும், புழுதியையும் வாரி இறைத்துக்கொண்டு ஓடும் ஜீப்களையும், டிரக்குகளையும் பார்க்கும்போது, நகரங்களிலிருந்த இந்தியா, கிராமங்களுக்கும் பரவ ஆரம்பித்துவிட்டதோ என்று தோன்றியது.

கூடைகளில் வரும் ஸ்காட்ச் புட்டிகள் வெகுநாட்களுக்கு முன்னரே காலியாகி விட்டபோதும், காம்பௌன்டில் மேய்ந்து கொண்டிருக்கும் ஆடுகளையெல்லாம் தின்று தீர்த்துவிட்ட போதும், அந்த ஆடுகளை மேய்க்கும் பெண்கள் கிழவிகளாகி விட்டபோதும், இன்னமும் டாக் பங்களாவின் மோகத்தில் கட்டுண்டவர்களாய்ச் சில கறுப்புத் துரைமார்கள் இருந்து கொண்டுதான் இருக்கிறார்கள்.

சங்காமல் வித்யாலயம் இன்டர்காலேஜின் இன்ஸ்பெக்ஷ னுக்கு வரப்போவதாயிருக்கும் டெபுடி டைரக்டர் ஆஃப் எஜு கேஷன் இப்படிப்பட்ட கறுப்புத் துரைமார்களிலும் விசேட மானவர். கிடைத்தற் கரியவர். டெபுடி இன்ஸ்பெக்டர் ஆஃப் ஸ்கூலாக இருந்தபோதே, அவர் மனத்தில் தில்லியின் சிம் மாதனத்தில் வீற்றிருக்கும் ஆசை ஷேர்கானுக்கு வந்துவிட்டது போல் தாம் பதவி உயர்வு பெற்று 'டாக் பங்களாவில்' தங்க வேண்டும் என்ற ஆசை குடிகொண்டு விட்டது. 'டாக் பங்களா வில் தங்கும்போது, பக்தி சிரத்தையுள்ள மனைவியைப் பின் புறத்துப் படிகளின் வழியாகக் கூட்டிக்கொண்டு சென்று கங்கா ஸ்நானம் செய்விப்பேன். பங்களாவில் இருந்துகொண்டு ராணா பிரதாப் பற்றி ஒரு குறுங் காப்பியம் எழுதுவேன். அது பின் னால் பாடநூலாக ஆக்கப்படும். 'துஸ்' பங்களாவிலிருந்து கொண்டே வருடத்துக்கு ஒரு முறை, 'பிடக்ரிஹா பாபா'வின் பர்ணசாலைக்குச் செல்லுவேன். 'முச்' டாக் பங்களாவுக்குப் போய்த் தங்கி, கீதையைப் பாராயணம் செய்துகொண்டே இதுவரை முட்டாள்தனமாகக் கழித்துவிட்ட சந்தர்ப்பங்களை நினைத்துத் தவிக்கும் இதயத்துக்கு அமைதி தேடுவேன்' என் றெல்லாம் பல கனவுகள் அவருக்கு வருவதுண்டு.

டெபுடி டைரக்டரான பின், பட்டணத்தின் சந்தடியிலிருந்து தப்புவதற்காக, 'சிவால்கஞ்சின் டாக் பங்களாவுக்குப் போய் விடவேண்டும். நிம்மதியாய்க் கரும்பைச் சாப்பிட்டுக்கொண்டு, 'சிங்கோடா'வைத் தின்றுகொண்டு, மக்காச் சோளத்தை மென்றுகொண்டு, ஒரு நாளைக்கு ஐந்நூறு ஃபைல்களைப் பட படவென்று புரட்டுவேன்' என்று நினைத்தார் அவர்.

சின்னவஸ்தாது டாக் பங்களாவின் வாசலிலே நின்று இரைந்து கொண்டிருந்தான். "போகிறவங்க வெளிநாட்டுக்கே போய்விட்டார்கள். ஆனால் பின்னால் சந்ததிகளையும் அல்லவா விட்டு விட்டுப் போயிருக்கிறார்கள். நேராகக் கிராமத்துக்கு

வந்தால் மளமளவென்று பேச்சு முடிந்திருக்கும். ஆனல் அவங்க குதிரை நேராக டாக் பங்களாவுக்கு வந்துல்ல நிற்கும். கிராமமே, ஒரு மைல் நடந்து வந்துல்ல இங்கே கொட்டுக் கொட்டுன்னு உட்கார்ந்திருக்குது.

“காலையில் ஒன்பது மணிக்கு வந்தேன். இப்பொழுது மணி ஒன்று. நூற்றைம்பது மனிதர்கள் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். இனி சாயங்காலம் பூம் பூம் என்று காரை முழக்கிக் கொண்டு வருவார் அவர். வந்ததும் ‘நேரமாகி விட்டது’ என்பார். வெட்கங் கெட்டவர்களான நீங்களும் இருக்கிறீர்களே! பல்லைக் காட்டிக்கொண்டு ‘ஹி ஹி ஹி’ என்பீர்கள். இதையெல்லாம் பார்க்கும்போதுதான் என் உடம்பின் ஒவ்வொரு ரோமமும் பற்றி எரிகிறது.”

சின்ன வஸ்தாது தன் பாட்டில் பேசிக்கொண்டே போனன்.

டாக் பங்களாவின் முகப்பில் பசுமையான புல்வெளி இருந்தது. பக்கத்து வயலின் கோதுமைப் பயிர் தண்ணீர் இல்லாமல் வாடியே போனலும் இங்கு எப்பொழுதும் பசுமை அசைந்தாடியது. நாற்புறமும் மதிற் சுவரின் ஓரமாக வரிசையாக மாமரங்கள். அதன் பழங்களைத் தோட்டக்காரனும், காவற்காரனும், அக்கம்பக்கத்திலுள்ள இரண்டொரு சோதாக்களும் பட்டிணத்திலிருந்த ஓர் இன்ஜினியருமே அதிகமாகச் சாப்பிட்டு வந்தனர். இங்குள்ள காற்றைப் போல மரங்களின் நிழல்களின் மீது மக்களுக்கு உரிமை இருந்தது. சிவபால்கஞ்சின் இரு கட்சியினரும் இவ்வுரிமையை விடாமல் அநுபவித்து வந்தனர்.

டாக் பங்களாவின் இருபுறமும் மரங்களின் நிழல்களிலே இரு சிறிய கூடாரங்கள் போடப்பட்டிருந்தன. தரையின் மீது கம்பளங்களும், ஜமக்காளங்களும் விரிக்கப்பட்டிருந்தன. இரு கூடாரங்களில் ஒருபுறம் பிரின்ஸ்பால் அவருடைய குழாமும், மற்றென்றில் கன்னு மாஸ்டரும் அவரது சகாக்களும் இருந்தனர். பிரின்ஸ்பாலின் காம்பில் இப்போது பத்ரி பயில்வானைத் தவிர அறுபது பேர் இருந்தனர். அவர்களில் ஒருவரான சின்ன வஸ்தாது ஒரு மரத்திலே சாய்ந்தவாறு உடலை முக்கோண வடிவிலே வளைத்து நின்ற நிலையிலே, டெபுடி டைரக்டரைப் பற்றிய தம் விமர்சனத்தைத் தாராளமாக வெளியிட்டுக் கொண்டிருந்தார். மற்றொருபுறம் கன்னு மாஸ்டர், ரூப்பன், இன்னும் சில ஆசிரியர்கள் இருந்தனர். ராமாதீன் பீகம்

கேடவி வருவதாக வாக்குக் கொடுத்திருந்தும் அவர்கள் எதிர்பார்த்தது போலவே இன்னும் வரவில்லை.

சின்ன வஸ்தாதுவின் கூச்சல், கூடியிருந்தவர்களின் சள சள வென்ற பேச்சு, வெற்றிலை பாக்கு போடுதல், தூங்கும் முயற்சிகள், கொட்டாவிகள், புகையிலை போடுதல், ஹுக்கா, பீடி, சிகரெட் புகைத்தல் ஆகிய களேபரத்துக்கிடையே இசை வெள்ளம் தாராளமாகப் பொங்கி வழிந்துகொண்டிருந்தது.

டிரான்ஸிஸ்டர்தான் இதற்குக் காரணம். இரு தரப்பிலும் இரண்டோர் உல்லாசப் புருஷர்கள், தோளிலே துண்டும், முதுகிலே துப்பாக்கியும், ஒரு கையில் கூண்டில் கௌதாரியும், மற்றொரு கரத்தில் டிரான்ஸிஸ்டரையும் எடுத்துக்கொண்டு வந்திருந்தனர். இருபுறத்துக் கூடாரங்களிலிருந்தும் 'ஹாய்ரே பாலமா', 'பேயிமான்', 'தகாபாஜ்' என விவித் பாரதி முழங்க ஆரம்பித்து விட்டது.

மணி பதினொன்று அடித்ததும் கன்னு மாஸ்டரின் முகா முக்கு எங்கிருந்தோ ஒரு கிராமபோனும், ரிக்கார்டுகளும், ஆம்பிளிஃபையரும் வந்து சேர்ந்துவிட்டன. அவ்வளவுதான். பதினொன்று மணியிலிருந்து 'போம் போம்' என்று அலறிக் கொண்டிருந்த பேயிமான் தகாபாஜுக்குப் பதிலாக, அமைதி யான, சகவாழ்வு, சமாதான பேரன்புக் கீதங்கள் முழங்கத் துவங்கிவிட்டன.

"மேரே ஹம்ராஹி, முஜே அப்னே கலே–சே–லகாவோ" (என் துணைவா! என்னை நெஞ்சாரத் தழுவிக்கொள்வாயாக) என்ற பாடலின் எழுத்துக் கெழுத்து வெண் புறாக்கள் வான் வெளியிலே சிறகடித்துப் பறந்தன. பசுமையான மென்கிளைகள் காற்றிலே அசைந்தாடின. ஆனால் பிரின்ஸ்பாலின் கேம்பில் இது போரின் அறைகூவலாகக் கருதப்பட்டது. இமைப் பொழுதிற்குள் அங்கும் கிராமபோனும், ரிக்கார்டுகளும், ஆம்பிளிஃபையரும் வந்து சேர்ந்துவிட்டன

'ஆ...ஆ...ஆ... கலே லகா' (வா–வா! தழுவிக்கொள்) பாடல் முழங்கலாயிற்று.

கிராமங்களில் 'மாப்பிள்ளை அழைப்பு' ஊர்வலத்தில் ஏற் படுவதுபோல் இந்த அறிவிப்புக்குப் பிறகு, இரு சார்பிலும் சினிமா சங்கீதம் கை கலக்க ஆரம்பித்துவிட்டது.

இத்தகைய சூழ்நிலையில் யாரால் கோபித்துக்கொள்ள முடியும்? சின்ன வஸ்தாதுவைத் தவிர ஒருவரும் கோபமான

மன நிலையில் இல்லை. ஒரு விதத்தில் சின்னவஸ்தாதுவின் கோபமும் நியாயமானதே. டெபுடி டைரக்டர் ஒன்பது மணிக்கு வருவதாக இருந்ததால் ஒரு சிலர் எட்டு மணிக்கே அங்கு வந்து விட்டனர். இரண்டு, மூன்று மணி நேரம் தாமதமாவதென்பது மிக மிக நல்லவரான, பசு மாதிரி சாதுவான அதிகாரிக்குச் சகஜமானதுதான். (பசு கூட அப்படித்தான். ஐந்து மணிக்கு வீட்டுக்குத் திரும்பும்பொழுது, யார் வயலிலாவது புகுந்து மேயத் துவங்கிவிட்டால், இரண்டடி வாங்கிக்கொண்டு ஏழெட்டு மணிக்குள் ஒருவாறு வீடு திரும்பிவிடும்.) ஆனால் ஐந்து மணி நேரமும் கழிந்தபின் சின்ன வஸ்தாது ஆத்திரமடைந்தது ஒரு விதத்தில் நியாயந்தான்.

"என்ன செய்வது? அவருக்கு இரவு பகலாய் மீட்டிங். அவர் எங்கேயாவது புறப்படத் தயாரானால் மீட்டிங் வந்து வழி மறித்துவிடுகிறது" என்றார் பிரின்ஸ்பால்.

மணி இரண்டடித்துவிட்டது. வெயில் மிகவும் தகிக்க ஆரம் பித்துவிட்டது மீண்டும் மீண்டும் ஒரே பாட்டுகளைப் போடு கிறார்களெனக் கூடியிருந்தவர்களுக்கு அலுப்புத் தட்ட ஆரம் பித்துவிட்டது. ஒவ்வொருவராக எழுந்து புதர் மறைவைத் தேடிப் போகலானார்கள். மூத்திரம் பெய்யப் போகிறவர்கள், அப்படியே போய்விடப் போகிறார்களே என்று இரு கட்சித் தலைவர்களுக்கும் உள்ளூறப் பயம். மரத்தடியை விட்டு விட்டுச் சின்ன வஸ்தாது கூடாரத்துக்குள் வந்து ரூப்பனைப் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டான்.

"ரூப்பன் எதிரிகளின் முகாமிற்குப் போய் விட்டானே! வேறு ஒருவரும் கிடைக்கவில்லை என்று தன் அப்பா மீதே பாய்ந்து விட்டாரே! நான் கூட என் அப்பா குசஹர் பிரசாத்தை நன்றாய் அடித்து நொறுக்கி இருக்கிறேன். ஆனால் வெளியார் ஒருத்தர் அவர் மீது கைவைக்கமுடியுமா? ஒரு வார்த்தை பேசமுடியுமா? இந்தப் பயல் கன்னாவும் மன்னாவும் அவருடைய அப்பாவைத் திட்டி நொறுக்கினாங்க. இவர் போய் அவன் பின்னாலேயே சுத்தியடித்துக்கொண்டு இருக்கிறாரே!"

பத்ரி பயில்வான் கூடாரத்தின் ஒரு மூலையை ஆக்கிரமித்துக் கொண்டவராய் இளைப்பாறிக்கொண் டிருந்தார். முழுவதையும் காதில் வாங்கிக்கொள்ளாமலேயே சின்ன வஸ்தாது, தன்னை விட ரூப்பனை மட்டமானவனாகத் தாழ்த்த விரும்புகிறான் என் பதைப் புரிந்து கொண்டுவிட்டார். சீனியர் உஸ்தாத் என்ற

தோரணையில், "போதும், போதும்! கொஞ்சம் நாக்கை அடக்கியே வைத்திரு" என்று உறுமினர்.

சுமார் நான்கு மணிக்கு வைத்தியர், சனிஸ்வரனுடன் பங்களாவின் வாசலிலே காணப்பட்டார். பட்டணத்திலிருந்து வந்திருந்த கிராமபோன்காரன் சந்தர்ப்பத்தை யொட்டி, திரைப் பாடலொன்றைப் போட்டுவிட்டான். 'நஜர் லாகே ராஜா, தொரே பங்களே பர்?' (உன் கண் பட்டுவிட்டதே ராஜா. பங்களாவின்மேல்) முதலடி முழங்கியதுமே சின்ன வஸ்தாது போட்ட அதட்டலில் கிராமபோன் தானே நின்றுவிட்டது. யாவரும் அவரவர் இடத்தில் ஒழுங்காக உட்கார்ந்து கொண்டனர். சிலர் நின்றனர். பத்ரி பயில்வான் மட்டும் வெட்டுண்ட மரம் போல் ஒரு மூலையில் கிடந்தார். எழுந்திருக்கவில்லை. வைத்தியர் உள்ளே வந்து கம்பளத்தின் மீது அமர்ந்தார். அவர் சாய்ந்து கொள்ளத் திண்டுகள் தானகவே வந்தன. கையிலே வெண்சாமரம் ஏந்தியவர்கள் போல் சனிஸ்வரனும், பிரின்ஸ் பாலும் ஆளுக்கொரு பக்கமாக நின்றனர். ஏதோ சக்கரவர்த்தி யொருவர் சிம்மாதனத்தில் வீற்றிருப்பது போல் வைத்தியர் அமர்ந்திருந்தார். அவரோடு ஒத்திட்டுப் பார்க்கும் போது இன்னொரு கூடாரத்தில் அமர்ந்திருந்த கன்னு மாஸ்டரும் அவரது சகாக்களும், போக்கிரிகளாய், சோதாக்களாய்த் தோன்றினர்கள்.

"என்ன சமாசாரம்?" என்று வைத்தியர் பிரின்ஸ்பாலிடம் கேட்டார்.

"நம் பக்கத்து ஆசாமிகளெல்லாம் இங்கேயேதான் இருக்கிருர்கள். எதிர்ப் பக்கத்துக்காரர்களுக்குத் தான் மூத்திர வியாதி வந்துவிட்டது போலிருக்கிறது."

இந்த ஹாஸ்யத்தை அநுபவித்தவனய்ச் சனிஸ்வரன் கூறினன். "நீங்கள் சொன்னல் ரூப்பனைக் கூப்பிட்டு விசாரிக்கலாம். பாவம், ரொம்பவும் கஷ்டமாக இருந்தால் வைத்திய மகராஜின் மருந்துக் கடையிலிருந்து ஆளுக்கொரு ஜமால் கொட்டை கொடுக்கலாமே!"

வைத்தியரின் முகம் சட்டென இருண்டது. "அந்த நீசனின் பெயரை எடுக்காதே!" என்றவர், சற்றுப் பொறுத்து ஒரு நிதானத்துக்கு வந்தவராய், "டெபுடி டைரெக்டரைப் பற்றி ஒன்றுமே தெரியவில்லையா? சூரியனே அஸ்தமித்து விடுவான் போலிருக்கிறதே" என்ருர்.

தாம் கூறுவது அதிகாரியின் காதுக்கே எட்டிவிடும் என்று நம்புபவர்போல் குழைந்த குரலில், "பெரிய அதிகாரி அல்லவா? ஏதாவது மீட்டிங் இருக்கும். வந்து கொண்டிருப்பார்" என்றார்.

"யாரையாவது அனுப்பி இருக்கிறீர்களா?"

"அதுதான் முன்பே அனுப்பி விட்டேனே?" என்றார் பிரின்ஸ் பால். "மாஸ்டர் மோதிராம் காலையிலேயே போயிருக்கிறார். அவர் இந்தப் பார்ட்டியிலோ, அந்தப் பார்ட்டியிலோ இல்லை. அவருக்கு வேண்டியதெல்லாம் அவரது மாவரைக்கும் மிஷன் ஒன்றுதான். இதனால்தான், 'மாஸ்டர் சாகப் நீங்கள் தான் பெரியவர்; நீங்களே போய் வாருங்கள்' என்றேன். 'டி. டி. துரையுடனேயே காரில் வாருங்கள். யாரும் நீங்கள் எங்களைப் பற்றிக் கோள் சொல்லப் போனீர்கள் என்று கூறமாட்டார்கள்' என்றேன்."

கூடியிருந்தவர்களின் பொழுதுபோக்கிற்காக வைத்தியர் ஒரு கதை சொல்ல ஆரம்பித்தார். "நம் மாகாணத்தில் பந்த்ஜீ இருந்த காலம் அது. தேசிய சர்க்கார் புதிதாக அமைந்திருந்தது. ஒரு தேர்தல் கூட்டம். பந்த்ஜீ பத்து மணிக்கு வரவேண்டியவர். ஜில்லா கலெக்டர், போலீஸ் டி. எஸ். பி. யிலிருந்து பியூன் வரை காத்துக்கொண்டிருந்தனர். மணி பன்னிரண்டாச்சு. ஒன்று, இரண்டு கூட அடித்தாகிவிட்டது."

கதை சொல்லுவது நீண்டது. மணி ஐந்தடித்தது. அப்பொழுது தான் பிரின்ஸ்பாலுக்குத் தம் கூடாரத்திலிருந்து ஒவ்வொருவராய் எழுந்து, புதருக்குப் பின்னால் போவது தெரிந்தது. மூத்திர வியாதி வெகு விரைவாகப் பரவிவிட்டதோ என்னவோ? புதருக்குப் பின்னால் போனவர்கள் ஒரு சிலர் திரும்பவேயில்லை. அவர் சின்ன வஸ்தாதை நோக்கி, "என்னப்பா! ஒன்றும் சரியாக இல்லையே?" என்றார்.

சின்ன வஸ்தாதுக்குச் சலித்துப் போய் விட்டது போலும். "நான் என்ன செய்ய? மூத்திரம் போவதையும், தும்முவதையும் நானா கட்டுப்படுத்த முடியும்?" எனச் சீறினான்.

கிராமபோனும் களைத்துவிட்டது போலும். மக்கள் சிறு சிறு கூட்டமாகப் பிரிந்து அரட்டை அடிக்கலானார்கள். சூரியன் மலைவாயில் விழும் தருணம் வந்துவிட்டது. பிரின்ஸ்பால் டாக் பங்களாவினருகே சாலையோரமாக நின்ற மாமரத்தை இமையாமல் பார்க்கலானார். அவர் பார்வை பதிந்த இடத்தில் உலர்ந்த மரக்கிளை ஒன்றிருந்தது. அந்தக் கிளையில் வெட்டரி

வாள் ஒன்று பதிந்திருந்தது. அந்த அரிவாள் ஒரு மூங்கிலுடன் பிணைக்கப்பட்டு, அந்த மூங்கிலின் கீழ் முனை அங்கே நின்ற ஒரு பெண்ணின் கரத்தில் இருந்தது. அப்பெண்ணுக்குச் சுமார் இருபது வயதிருக்கும். பிரின்ஸ்பாலின் பார்வை முன் சொன்னது போல் உலர்ந்த கிளையின் மீதே இருந்தது. அவர் திடுக்கிட்டவராய்ச் சாலையின் மறுபுறம் பார்வையைத் திருப்பினார். "அட! இந்தப் பஸ் இங்கே ஏன் மெதுவாக வருகிறது?" என்றார்.

மக்கள் வாசலுக்கு விரைந்தனர். ஒரு பஸ் உண்மையாகவே டாக் பங்களாவின் முன்னே நின்றது.

பஸ்ஸிலிருந்து பெரிய பையொன்றைத் தூக்கிக்கொண்டு மாஸ்டர்-மோதிராம் இறங்கினார். இரண்டு கட்சியினரும் அவரைச் சூழ்ந்து கொண்டனர். சற்றைக்கெல்லாம் அவர் வைத்தியரின் அருகே வந்து நின்றார். பின்னர் மெதுவாக, "டெபுடி டைரெக்டர் இன்று வரவில்லை" என்றார்.

இந்த விஷயம் முன்னரே அதிகாரமில்லாத தோரணையில் அறிவிக்கப்பட்டு விட்டதெனினும், இப்பொழுது அதிகார பூர்வமாக அறிவிக்கப்பட்டது. நாலாபுறமும் கூச்சலும் குழப்பமும் பரவின. மூத்திர வியாதி இல்லாதவர்கள் கூட இங்குமங்கும் கலையலானார்கள்.

"அப்படியென்றால் பின் எந்தத் தேதிக்கு வருவதாகக் கூறினார்?" என்று விசாரித்தார் வைத்தியர்.

"ஒன்றும் சொல்லமுடியாது. இன்று அவர் பட்டணத்திலேயே இல்லை. வெளியூர் போயிருக்கிறாராம். நாலைந்து நாட்களாகிவிட்டது. இன்னும் வரவில்லை என்றார்கள்."

"எப்பொழுது வருவாராம்?"

"எப்படிச் சொல்லமுடியும்? ஒருவருக்குமே ஒன்றும் தெரியவில்லை. ஒருவன் நான்கு நாட்களாகும் என்றான். இன்னொருவன் இரண்டு நாட்கள் என்கிறான். எனக்கு என்னவோ ஏழெட்டு நாட்களாகும் என்று தோன்றுகிறது."

வைத்தியர் கண்களை மூடிக்கொண்டு சிரமபரிகாரம் செய்து கொண்டார். "அப்போ நீங்கள் மத்தியானமே திரும்பி வந்திருக்கலாமே? ஜனங்களுக்கு எத்தனை கஷ்டம்?" என்றார்.

மாஸ்டர் மோதிராம் பவ்யமாகக் குழைந்தார். "எப்படி வரமுடியும் மகராஜ்! இதை வாங்கவேண்டி இருந்தது" என்றவர் பையைச் சுட்டிக் காட்டினார். "பழைய மெஷின். திருகாணி,

மறை யெல்லாம் தேஞ்சு மாஞ்சு போயிருந்தது. எங்கெங் கெல்லாமோ தேடித் துருவிக் கடைசியில் ஒரு பழைய சாமான் கடையில்.........."

மாஸ்டர் மோதிராமின் பேச்சைக் கேட்டுக்கொண் டிருந்தவர் களில் ரங்கநாத்தும் ஒருவன். எதிரிகளின் தரப்பிலிருந்து விஷ யத்தைப் பூராவும் அறிந்துகொள்ளவேண்டி அவன்தான் வந் திருந்தான். அவன் மெல்ல நழுவ ஆரம்பித்த சமயம் வைத்தி யர் அவனைக் கூப்பிட்டார். ரங்கநாத் அவர் அருகே வந்து அமர்ந்தான்.

வைத்தியர் அவனை நோக்கிப் புன்முறுவல் பூத்தார். புன் முறுவல் பூத்தவண்ணமாய் அவனைப் பார்த்துக்கொண்டே இருந்தார். ரங்கநாத் சற்று நேரம் தவித்தான். பின்னர் சற்றே துணிவுடன், "மாமா என்ன உத்தரவு?" என்றான்.

"உத்தரவு ஒன்றுமில்லை." வைத்தியர் இனிமையான குரலில் பேசலானார். "இது தர்ம யுத்தம். இந்த இரண்டொரு ஆசிரி யர்கள் சரியான பாதையில் செல்வதாக உனக்குத் தோன்று கிறது. அதனால் அவர்களிடம் அன்பு காட்டுகிறாய். ஆனால் எது சன்மார்க்கம், எது துர்மார்க்கம் என்பது அநுபவத்தின் மூலம் ஒரு நாள் உனக்குத் தெரிய வரும். அது தெரியும்போது நீயாகவே உன்னுடைய முந்திய நிலையை அடைந்து விடுவாய்."

பெருமூச்செறிந்தவாறே அவர் தொடர்ந்தார். "நீ படித்த வன், அறிவாளி. உன்னைப் பற்றி எனக்குக் கவலையில்லை. கவலையெல்லாம் ரூப்பனைப் பற்றித்தான்."

பேச்சுக்கு உயிரூட்ட நினைப்பவர்போல் பிரின்ஸ்பால் கெக் கலித்தார். "அரே மகராஜ், அப்படியில்லை. உங்களுக்கு ரங்க நாத் பாபுவைத் தெரியாது. இவர் பெரிய அரசியல்வாதி. அவ்விடத்து நிலைமையை முன்னரே அறிந்து கொண்டுவிட்டார். நீர் இவருக்கு அறிவுறுத்தவேண்டிய அவசியமே இல்லை."

வைத்தியரின் அதரங்களில் மீண்டும் முறுவல் படர்ந்தது. "தர்ம யுத்தம் என்பது அறிந்துகொள்ளப் படுவதன்று, நம் பிக்கை வைக்கவேண்டியதொன்றாகும். நாங்கள் தான் தவறு இழைப்பவர்கள் என்று நீ நம்புவதால், ஒரு கவலையும் இல்லை. உறுதியுடன் எங்களை எதிர்த்து நில். என்று என்னுயிர் தேவைப்படுகிறதோ, சொல்லிவிடு. பீஷ்மப் பிதாமகர் போல், மரணத்தின் தேதியைக் கூட நானே குறிப்பிட்டுக் கொடுக்கிறேன்."

ரங்கநாத்தால் ஒன்றும் பேச இயலவில்லை. "தாங்கள் ஏதோ தவறான எண்ணத்தில் இருக்கிறீர்கள்" என்றான்.

வைத்தியரின் முகம் சிவந்துவிட்டது. "இல்லை, அவர்கள்தான் தவறான எண்ணத்தில் இருக்கிறார்கள். ஜனநாயக மரபின்படி தான் நடக்கிறேன். எல்லாருக்கும் பேசச் சுதந்தரம் அளிக் கின்றேன். அதனால்தான் ஆசிரியர்கள், எனது அடிமைகள், எனக்கு எதிராகப் பேசிக்கொண்டு திரிகின்றார்கள். ஆனால் எதற்கும் ஓர் எல்லையுண்டு. இல்லையா, பிரின்ஸ்பால்ஜீ!" என்றார் உரத்த குரலில்.

விழிகளைத் தாழ்த்திய வண்ணம் பிரின்ஸ்பால் கூறினார். "உங்களுக்கு முன்னால் நான் என்ன சொல்ல? நீங்கள் மட்டும் இருந்திராவிடில் நான் எப்பொழுதோ ராஜிநாமாக் கொடுத்து விட்டுப் போயிருப்பேன்."

"தாங்கள் ஏன் போய்விடக்கூடாது? இந்த அத்தியாயத்தை முடிக்கவேண்டிய தருணம் வந்துவிட்டது. இருங்கள், நான் இப் பொழுதே ஒரு முடிவு செய்து விடுகிறேன்."

சின்ன வஸ்தாதுவை அழைத்து அவர் சொன்னார்: "சின்னவா! போய் அந்தக் கூடாரத்திலிருந்து கன்னா, மாளவியாவை யெல்லாம் அழைத்துவா. ரூப்பனையும் கூடவே அழைத்துக் கொண்டு வா. அவர்கள் வரமாட்டேன் என்றால் நாமே அங்கே போவோம். இதோ பார், ஜனங்களிடம் இனி அவரவர்கள் வீட்டுக்குப் போக லாமென்று சொல்லிவிடு. பிரின்ஸ்பால்ஜி, நீங்கள் போய் அவர் களுக்கு நமது சார்பில் நன்றி தெரிவித்துவிட்டு வாருங்கள்."

சற்று நேரத்தில் இரு கூடாரங்களும் காலியாகிவிட்டன. கன்னா மாஸ்டரின் கூடாரம் வெகு நேரத்துக்கு முன்பே காலி யாகிவிட்டது. ஏனென்றால் அடிக்கடி மூத்திரம் போவதைத் தடுத்து நிறுத்த சின்ன வஸ்தாது, பத்ரி பயில்வான் போன்ற கட்டுமஸ்தான பேர்வழிகள் அங்கே யாரும் இல்லை. டெபுடி டைரெக்டர் ஏமாற்றிவிட்டாரென்று தெரிந்ததும் பல பேர் உடனே பறந்தோடிவிட்டனர்.

மைக், கிராமபோன், ரிக்கார்ட், தண்ணீர்ப் பானை முதலிய வற்றை எடுத்துச் செல்லவேண்டியவர்கள் தான் எஞ்சி நின்றனர். வைத்தியரின் முகாமில், பத்ரி பயில்வான், சின்ன வஸ்தாது, சனிஸ்வரன், பிரின்ஸ்பால், வைத்தியர், இரண் டொரு பிரமுகர்கள், பத்ரியின் சிலம்பக் கூடத்தைச் சார்ந்த நாலைந்து குண்டர்கள் ஆகியோர் இருந்தனர்.

வைத்தியரின் அழைப்பைக் கேட்டதும் கன்ன மாஸ்டர், மாளவியா, இரண்டொரு ஆசிரியர்கள், ரூப்பன் எல்லாரும் தங்களுக்குள் ஏதேதோ பேசியவாறே வந்து அவர் எதிரே அமர்ந்தனர்.

"தாங்கள் கூப்பிட்டதாகச் சொன்னார்கள்" என்று ஆரம்பித்தார் கன்ன.

இருட்டும் சமயம். அந்திமாலையின் மங்கிய ஒளியில் காடு போல் அடர்ந்திருந்த தோட்டம், அந்தப் பங்களா, கூடாரங்கள், விரித்திருந்த கம்பளம் யாவுமே ஓர் அற்புதக் காட்சியாக விரிந்திருந்தன. தில்லியின் ஷா இன் ஷா ஒருவர் தக்காணத்துக்கு விஜயம் செய்து, தம் பரிவாரத்துடன் ஏதோவொரு மலையடிவாரத்தில் கூடாரம் அடித்துத் தங்கி, மிக முக்கியமான மந்திராலோசனையில் ஈடுபட்டிருப்பது போலவும், ஒரு சில ஜாகீர்தார்கள் அவர் முன்னே விசாரணைக்குக் கொணர்ந்து நிறுத்தப்பட்டிருப்பது போலவும் அக்காட்சி தோன்றியது.

வைத்தியர் பேச ஆரம்பித்தார். "கன்ன அவர்களே! மாளவியா அவர்களே! உங்களையெல்லாம் என்னுடையவர்களாகக் கருதியே இங்கு அழைத்திருக்கிறேன்.

"உங்களுக்கும் பிரின்ஸ்பாலுக்கும் பரஸ்பரம் விரோதம் மூண்டுள்ளது. அது அதிகரித்து வழக்கும் நடந்துகொண்டிருக்கிறது. பகிரங்கமாகத் திட்டிக்கொள்கிறீர்கள். அடிதடிக்குக் கூட ஏற்பாடுகள் நடப்பதாகக் கேள்வி. நான் உங்களைக் குறை கூறவில்லை. குற்றம் யாருடைதாக வேண்டுமானாலும் இருக்கலாம். நானே குற்றம் குறைகள் உள்ளவன்தான். குற்றம் யாருடையதென்று நான் எப்படிக் கூறமுடியும்? ஆனால் ஒன்று மட்டும் நான் அறிவேன். நிலை மிகக் கடினமானது, சிக்கலானது. இதற்கொரு தீர்வு கண்டாகவேண்டும்."

"நானும் என் அபிப்பிராயத்தைக் கூறச் சந்தர்ப்பம் தாருங்கள்" என்றார் கன்ன.

"கூடாது!" வைத்தியர் கம்பீரமாகத் தலை அசைத்தார். "கூடாது, கூடாது. நீங்கள் பலமுறை உங்கள் விஷயத்தைக் கூறியாகிவிட்டது. அநேக இடத்தில், அநேக ரூபத்தில் தெளிவுபடுத்தியாகிவிட்டது. பிரின்ஸ்பாலும் தம் விஷயத்தைக் கூறிவிட்டார். ஒரே ஒருவர்தான் இதுவரை, இன்று வரை தன் அபிப்பிராயத்தைக் கூறவில்லை. அந்த ஒருவன், நான்தான். இன்று நான்மட்டுந்தான் என் அபிப்பிராயத்தைக் கூறுவேன்.

"இந்த வித்யாலயம் என்னால் உருவாக்கப்பட்டது. இதை என் ரத்தத்தால் வளர்த்திருக்கிறேன். என் குருதியைப் பாய்ச்சி இருக்கிறேன். நீங்கள் இரு கட்சியினரும் சம்பளம் வாங்கும் ஊழியர்கள். இங்கில்லாவிட்டால், இன்னோர் இடத்தில் போய் ஆசிரியராகப் பணியாற்றுபவர்கள். எங்கு வேண்டுமானாலும் நீங்கள் ஆசிரியர்களாகப் போக முடியும். நல்ல ஊதியமும் பெறமுடியும். பெறுவீர்கள். ஆனால் நான் இங்கே தான் இருப்பேன். இந்த வித்யாலயம் வெற்றிகரமாக நடந்தால் வெற்றி பெற்றவனாக என்னை நினைத்துக்கொள்வேன். கட்சிப் பிரதி கட்சியின் காரணமாக இது அழிந்தால் நானே அழிந்து விட்டதாக நினைப்பேன். எனக்கு வேதனையாக இருக்கிறது, அளவற்ற வேதனை. உள்ளூற நான் வருத்தப்படுகிறேன். என் வருத்தத்தை, வேதனையை உங்களால் புரிந்துகொள்ள முடியாது."

சில நிமிஷம் அவர் எதுவுமே பேசவில்லை. கூடாரத்தில் மௌனம் தேங்கி நின்றது. திடீரென அவர் துள்ளினார்.

"எனக்கு ஒரே ஒரு வழிதான் தெரிகிறது. நான் முடிவு செய்தாகி விட்டது. எனது இந்த முடிவை நீங்கள் ஏற்கவேண்டும் என்று கரங் குவித்து வேண்டுகிறேன். உங்களுக்கும் அந்த ஒரே வழிதான் உள்ளது. அந்த வழியில்தான் நீங்கள் செல்ல வேண்டும்.

"கன்னாஜியிடமும், மாளவியாஜியிடமும் மட்டுமே சொல்லுகிறேன். மற்றவர்களிடம் அல்ல. நீங்கள் இருவரும் ராஜினாமாச் செய்து விடவேண்டும்.

கன்னா இடைமறித்தார். "ஆனால்...."

"இல்லை..." இரக்கத்துடன், ஆனால் உறுதியுடன் வைத்தியர் மீண்டும் கூறினார். "இல்லை, நான் முன்பே கூறியாகிவிட்டது. இன்று நான் மட்டுந்தான் பேசுவேன். நீங்கள் இருவரும் ராஜினாமாச் செய்ய வேண்டும் என்று கூறினேன் அல்லவா? அதை இன்றே, இப்பொழுதே, இந்த இடத்திலேயே செய்யவேண்டும். நீங்கள் ராஜினாமாச் செய்து தானாகவேண்டும். நான் கோபத்துடன் அல்ல, நிதானத்துடன், தீரயோசித்துத்தான் இதைக் கூறுகிறேன். உங்களது நன்மைக்காக, வித்யாலயத்தின் நன்மைக்காகக் கூறுகிறேன். சமூகத்தின் நன்மைக்காகக் கூறுகிறேன்.

"உங்களிடம் எனது தாழ்மையான வேண்டுகோள் இது. நீங்கள் எனது வேண்டுகோளைப் புறக்கணிக்காதீர்கள்.

நீங்கள் இக்கணமே ராஜிநாமாச் செய்து விடுங்கள். இதன் பிறகு நீங்கள் எதை விரும்பினுலும் கூறச் சுதந்தரம் உண்டு. நாங்கள் பலவந்தமாக ராஜிநாமாவைக் கோரிப் பெற்றதாகவும் நீங்கள் கூறலாம். இது விஷயத்தில் எங்கள் மீது வழக்குத் தொடரவும் உங்களுக்கு உரிமையுண்டு. இச்சமயம் நீங்களாகவே இந்த வித்யாலயத்தின் நன்மையைக் கோரி ஒன்றும் பேசாமல் ராஜிநாமாச் செய்யுமாறு நான் உங்களிடம் வேண்டிக்கொள்கிறேன்.

"நீங்கள் என்னிடம் எவ்வளவோ கேட்டிருக்கிறீர்கள். எவ்வளவோ அடைந்தும் இருக்கிறீர்கள். நான் என்றும் எதுவும் கேட்டதில்லை. இன்று வித்யாலயத்தின் சார்பாக, உங்களுடைய ராஜிநாமாவைக் கோருகிறேன். எனது பிரார்த்தனை இது தான்."

ரூப்பன் இதற்குள் தன்னிடத்தில் எழுந்து நின்று விட்டான். அவன் குரல் தடுமாறியது. ஆவேசத்தில் சொற்கள் ஒன்றன் மீதொன்ருக மோதிக்கொண்டு வெளியே வந்தன.

"முடியாது, இது நடக்காது. நீங்கள் பலவந்தமாக இவர்களிடமிருந்து ராஜிநாமாவைப் பெற்று விட முடியாது. இவர்கள் ராஜிநாமாக் கொடுக்கமாட்டார்கள்."

வைத்தியர் இதைக் காதிலே போட்டுக்கொள்ளாமல் பிரின்ஸ்பாலை நோக்கி, "உங்களிடம் டைப் செய்யப்பட்ட காகிதம் இருக்கிறதல்லவா? இருந்தால் அங்கே கொண்டு போங்கள். சின்னவா! கன்னுவையும், மாளவியாவையும் அங்கே அழைத்துக்கொண்டு போ. அவர்கள் புத்திசாலிகள். எல்லாவற்றையும் புரிந்துகொள்வார்கள். பத்ரி... போ, நீயும் போ" என்ருர்.

பின்னர் இரைந்தார் அவர். இந்த இடி முழக்கம் திடீரென ஏற்பட்டதாலும், புதுமையானதாக இருந்ததாலும் பத்ரி ஒரே தாவலில் ஓடிவந்து அவர் முன்னே நின்ருர். மற்றவர்களும் ஓடோடியும் வந்தனர். உரத்த குரலில் இரைந்தார் அவர். "இந்த ரூப்பன் மூர்க்கன்! நீசன், அற்பன், நம்பிக்கைத்துரோகி!"

அவர் இரைந்துகொண்டே போனர். 'வசவுகள் விஷயத்திலும் சம்ஸ்கிருத மொழி அப்படியொன்றும் வறட்சியானது அல்ல' என்பதை நிரூபிப்பதுபோல இருந்தது, அவர் இரைச்சல். குரலின் இடி முழக்கம் சம்ஸ்கிருத மொழியின் சொற் பிரவாகத்தைக் கண்டவர்கள் திகைத்து விட்டனர். இன்றுதான் வைத்தியரின் இத்தகைய சிற்றத்தை அவர்கள் பார்க்கிருர்கள்.

கம்பளத்தில் அமர்ந்திருந்த அவர் தம் இரு முழந்தாள்களையும் சக்கரங்களில் இணைக்கப்பட்ட எஃகுத் தண்டைப் போல் மாற்றி மாற்றி ஆட்டிக்கொண்டே கோபத்தினால் நடுங்கும் குரலில் கத்திக்கொண்டிருந்தார். "நீ தலைவனாக விரும்புகிறாயா? இதோ பார்! இப்பொழுதே சொல்லுகிறேன்."

அவர் குரல் பின்னும் நடுங்கியது. "வயதுக் காலம் அமைதியாகக் கழியுமென்று எதிர்பார்த்தேன். பஞ்சாயத்துத் தகராறெல்லாம் ஒரு வழியாக முடித்துவிட்டேன். கூட்டுறவுச் சங்கம் இருந்தது. அதைப் பத்ரிக்குக் கொடுத்து விட்டேன். இந்தக் கல்லூரியின் பொறுப்பை உனக்குக் கொடுத்துவிட்டுப் போகலாமென்று நினைத்தேன். கொடுப்பதற்கு இதைத் தவிர என்னிடம் வேறு என்ன இருக்கிறது? ஆனால், நீசனே! நீ துரோகியாகி விட்டாய். போ, போய்விடு, இனி உனக்கு ஒன்றும் கிடைக்காது."

அவரது குரலில் இன்னதென்று அறிய முடியாத வேகம் பிறந்துவிட்டது. "போ! உனக்கு எனது சொத்தில் பாத்தியம் கிடையாது. எல்லாரும் கேட்டுக் கொள்ளுங்கள். எனக்குப் பின் பத்ரிதான் இக்கல்லூரியின் மானேஜராக இருப்பான். இது தான் எனது கடைசி முடிவு. ரூப்பனுக்கு எதுவும் கிடையாது."

இதைக் கூறும்போதே அவர் தொண்டை அடைத்துக் கொண்டது. கோபத்தாலும், மிதமிஞ்சிய துயரத்தினாலும் கண்களில் கண்ணீர் பொங்கி வந்தது. எல்லோரும் தன்னையே உற்றுப் பார்ப்பது போல் தோன்றவே ரங்கநாத் விழிகளைத் தாழ்த்திக் கொண்டான்.

ரூப்பன் எழுந்து வாசலை நோக்கி நடக்கும்போதுதான் மக்கள் தம் உணர்வை அடைந்தனர். வைத்தியர் கண்களைத் துடைத்துக் கொண்டிருந்தார். கூடியிருந்தவர்களிடையே திடீர்ப் பரபரப்புத் தோன்றியது. இங்குமங்குமாய்க் கலையலானார்கள். பங்களாவின் வராந்தாவில் ஹரிக்கேன் விளக்கு ஒன்று எரிந்தது. அங்கே மாளவியா உரக்க ஏதோ சொல்ல, சின்ன வஸ்தாது, "பொறுமையாகக் காரியத்தை நடத்துங்கள் மாஸ்டர்" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

பிரின்ஸ்பால் கன்னாவின் கரத்தை இறுகப் பற்றியவாறே, "வாருங்கள், மாஸ்டர், நாம் அங்கேயே போகலாம். நமக்குள்ளே இருந்த தகராறு தீர்ந்துவிட்டது. இன்றிலிருந்து நாம் நண்பர்களாகி விட்டோம்" என்றார்.

நம்பிக்கை என்னவோ இல்லை. இருந்தாலும் அத்தகைய இரவுக்குப் பின்னும் பொழுது விடியத்தான் விடிந்தது.

ரங்கநாத்தால் இரவு தூங்கவும் முடியவில்லை, சிந்திக்கவும் இயலவில்லை. ஆனால் காலையில் கண் விழித்ததுமே தன்னைப் பற்றிச் சிந்தித்தான். சில மாதங்களுக்கு முன், நீண்ட நாள் நோய்வாய்ப் பட்டிருந்த தனது உடல் நலத்தைத் தேற்றிக் கொள்ளவேண்டியே அவன் இங்கே வந்திருந்தான். இன்று திடீரெனத் தன் உடல் நிலை முற்றும் தேறிவிட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது.

பக்கத்தில் ரூப்பனின் கட்டில் காலியாகக் கிடந்தது. இரவெல்லாம் எங்கே இருந்தானோ தெரியாது. சில விஷயங்களில் அவனுக்கு ரூப்பனிடம் முழு நம்பிக்கையும் இருந்தது. ரூப்பன் முட்டாளாவது கூடத் தன்னிச்சைப்படிதான், வேண்டுமென்றே தான் முட்டாளாகிறான் என்பது ரங்கநாத்துக்கு நன்றாய்த் தெரியும். முட்டாளாக இருப்பது கட்டாயத்தினால் அல்ல. ஓர் இன்பத்துக்காக, ஆசைக்காகத்தான். இதனால் வைத்தியரின் அலறலைக் கேட்டு அவன் சாராயக்கடையைச் சரணடைந்திருக்கமாட்டான் என்ற நம்பிக்கையும் இருந்தது. துயர மிகுதியினால், மதுவை நாடி யிருக்கமாட்டான். ஏனென்றால் அவன் 'தேவதாஸ்' படித்ததில்லை, பார்த்ததில்லை. கோவிலுக்கும் போயிருக்கமாட்டான். துன்பமடையும்போது கோயிலை நாடுபவன் எப்படி இருக்கவேண்டுமோ, அப்படி ரூப்பன் இல்லை.

அப்படி என்றால் அவன் எங்கே? கல்லூரியில் ஹர்த்தால் நடத்தத் தன் கூட்டத்தைத் திரட்டிக் கொண்டிருக்கிறானோ? கட்டடத்துக்குத் தீவைக்க, பிரின்ஸ்பாலை உதைக்க, கடைத் தெருவைக் கொள்ளையடிக்க, தற்சமயம் ஏதாவது புரட்சிக் கூட்டத்தைத் திரட்டிக்கொண் டிருக்கிறானோ? அல்லது கல்வி—தொழில் துறையின் பிரசித்தி பெற்ற வழக்கப்படி பக்கத்துக் கிராமம் எதிலேனும், கன்னு மாஸ்டரை, பிரின்ஸ்பாலின் அரியாசனத்தில் ஏற்றிவைத்து, இந்தச் சங்காமல் வித்யாலயம் இன்டர் காலேஜிற்குப் போட்டியாக இன்னொரு கல்லூரியைத் திறக்கப்போகிறானோ? இவற்றில் ஏதாவதொன்றை அவன் நிச்சயம் செய்வான் என்று நினைத்தான் ரங்கநாத். ஏனென்றால் வைத்தியர் தம் சீற்றத்தைப் பிரகடனப்படுத்திக் கொண்டிருந்தபோது அங்கிருந்து ரூப்பன் பயந்து ஓடவில்லை, வெகுண்டு எழுந்துதான் சென்றான்.

வைத்தியர் காலை வேளையில் வெகு தூரம் உலாவப் போவதுண்டு. அவர் இன்னமும் திரும்பிவரக் காணோம். இனி அவரிடம் சகஜமாகப் பேசுவதென்பது இயலாது என்பதை ரங்கநாத் உணர்ந்தான். செயற்கையாகப் பேசுவதற்கும் அவன் தயாராக இல்லை. 'எதிர்ப்பின் முதல் முயற்சியிலேயே வெலவெலத்துக் குப்புற விழுந்துவிட்டோமே' என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான் அவன். 'இப்பொழுது நான் என்னையே புரிந்துகொள்ளவேண்டும். மாமா வருவதற்குள் இந்த இடத்தைவிட்டுக் கிளம்பிவிடவேண்டும்' என்று நினைத்தான் அவன்.

'இருக்கக்கூடாது இங்கே. இது அந்நிய மண்.'

சனிஸ்வரனின் கடை திறந்திருந்தது. இரண்டு பேர் கடைக்கு முன்னே நின்று நாடக பாணியில் சச்சரவிட்டுக் கொண்டிருந்தனர். சொற்களின் பரிமாற்றம், வாத விவாதமாக அகிம்சை ரீதியான சண்டையாக இருந்தது. அவர்களில் ஒருவன் மற்றொருவனின் வயலுக்குப் பாய்ந்த நீரைத் தன் வயலுக்குப் பாய்ச்சிக் கொண்டுவிட்டான். பஞ்சாயத்துத் தலைவரிடம் தங்கள் சச்சரவைத் தீர்த்துக்கொள்ள வந்திருந்த அவர்கள், தீர்வு காண்பதற்கு முன் சண்டை செய்துகொள்ள வந்திருந்தனர் சரமாரியாக வசவுகள் இருபக்கத்திலிருந்தும் பொழிந்துகொண்டிருந்தன. அத்தகைய வசவுகளை, இலக்கியத்தில், கலையில், பத்திரிகைகளில், ரேடியோவில், சினிமாவிலே காண முடியாது. உண்மையான வாழ்வில்தான் காணமுடியும்.

கடந்த சில மாதங்களாய் அவன் எத்தகைய வாழ்க்கையினிடையே சுற்றிச் சுழன்று வந்தானோ, எந்த வாழ்க்கையில் புகுந்துகொண்டு தானும் ஒருவனாக இருக்க முயன்றும் அந்நியமாக, அந்நியனாகவே இருந்து விட்டானோ, அது ஓர் இகழ்ச்சியாக, அவமானமாக, அவன் எதிரே வந்து நின்றது. அவனது ஆத்மாவின் நரம்புகளிலே (ஆத்மா சாரங்கி வாத்தியமில்லை என்றாலும்) ராகமாகப் புறமுதுகிட்டுத் தப்பியோடும் ராகமாக ஒலிக்க ஆரம்பித்தது.

வாசலில் அமர்ந்தவாறே ரங்கநாத் பார்த்துக்கொண் டிருந்தான். சின்ன வஸ்தாது வழக்கம்போல் சொரிந்துகொண்டே போனான். ரங்கநாத்தின் பக்கம் பார்க்கவே இல்லை. பாதையில் கடகடவென்ற ஓசை கேட்கவே ரங்கநாத் நிமிர்ந்து பார்த்தான். பட்டணத்திலிருந்து பாலைச் சேகரித்துச் செல்ல கோவாபரேட்டிவ் டிரக் வந்திருக்கும். ஒருவன் கையிலே பாத்

திரத்துடன் சனிஸ்வரனின் கடைப்பக்கம் போவது தெரிந்தது. நகரத்தில் மெஷினில் அரைத்த எண்ணெயைச் செக்கில் ஆட்டிய சுத்தமான கடுகெண்ணெய் என்று கூறிக் கிராமங்களில் விற்பனை செய்யும் எண்ணெய் வியாபாரி என்பது ரங்கநாத்துக்குத் தெரிந்ததுதான். அண்டர்வேரும் பனியனும் அணிந்த, சிப்பாய் போன்ற ஒருவன் மாமிசத்தை வாங்கிக் கொண்டு திரும்பிச் சென்றுகொண் டிருந்தான். தினமும் போல் அவன் ரங்கநாத்தைப் பார்த்து, "ஜெய் ஹிந்த் சாப்!" என்ருன்.

அவன் மாமிசத்தைச் சுமந்து கொண்டுபோய் விட்டான். அவனது தோளிலே கரத்தைப் போட்டு அணைத்தவாறே, "நட்புபா! இந்தக் காரணத்துக்காகவாவது இங்கே ஒருவன் 'ஹிந்த்' என்ற வார்த்தையை உச்சரித்தாயே" என்று சொல்ல வேண்டும் போலிருந்தது.

எங்கோ தொலைவில் குரங்காட்டி 'டுங்க் டுங்க்' என மத்தளம் கொட்டிக்கொண் டிருந்தான். சனிஸ்வரனின் கடை எதிரே நடந்த வாய்ச்சண்டை உச்ச கட்டத்தை எட்ட முயற்சி செய்து கொண்டிருந்தது. ரங்கநாத்துக்கு ஒரே வெறுப்பாக இருந்தது. அவனது ஆத்மாவின் நரம்புகளிலே பலாயன சங்கீதம் முழு வேகத்துடன் ஒலிக்க ஆரம்பித்தது.

பலாயன, அதாவது, புற முதுகிட்டோடும் சங்கீதம்.

'நீ நடுத்தர வர்க்கத்து மனிதன். மனிதத்தன்மை என்ற சேற்றில் அழுந்திவிட்டாய். உன்னைச் சுற்றிலும் ஒரே சேறும் சகதியுந்தான். சகதியிலிருந்து தப்பித்துக்கொள். இந்த இடத்திலிருந்து போய்விடு, இங்கிருந்து தப்பித்தோடிவிடு.

'எங்கே அழகிய வண்ணப்படங்களில், நீ 'லுக்' லை:ப்பைத் தேடியிருக்கிருயோ, எங்கே மலர்க் கிரீடங்களும், கிட்டாரும் உன்னைக் கவர்ந்தனவோ, எங்கே பெண்கள் உனது ஆத்மாவை எப்பொழுதும் புதிய புதிய தேடல்களுக்காக அழைத்துக் கொண்டே இருக்கிருர்களோ, எங்கே காற்று மிக மிகச் சூட்சமமாக உள்ளதோ, எங்கே ரவி சங்கர் முத்திரை யடித்த இசையும், மகரிஷி யோகியின் முத்திரை பெற்ற ஆத்மிகத்தின் குன்ருத, குறையாத கனவு மயக்கமும் இருக்கிறதோ, அங்கேயே சென்று மறைந்துகொள். இங்கிருந்து ஓடிவிடு. இந்த இடத்தைத் துறந்துவிடு.

'இளைஞர்களான டாக்டர்கள், இன்ஜீனியர்கள், விஞ்ஞானிகள் யாவரும் அகில உலகப் புகழுக்காக ஏங்கும் மாந்தர்களைப்

போலவே எல்லாருமாகச் சேர்ந்து தங்களை இன்பமாக வாழ விடவில்லை என்று இருபத்திநாலு மணி நேரமும் அழுவதைப் போலவே நீயும் தப்பித்துக் கொள்ளப் பார். இங்கேயுள்ள தொந்தரவுகளில் மாட்டிக் கொள்ளாதே.

'துரதிர்ஷ்டவசமாய் நீ இங்கேயே இருக்கவேண்டி நேர்ந்தாலும் உனக்கென்று ஒரு தனியான கற்பனை உலகத்தைச் சிருஷ்டித்துக்கொள். எண்ணற்ற அறிவு ஜீவிகளைப் போலவே நீயும் கண்களை மூடிக்கொண்டு அந்த உலகத்திலேயே கிட. ஹோட்டல்கள், கிளப்புகள், மதுச்சாலைகள், காபி ஹோட்டல்கள், சண்டீகட், போபால், பெங்களூரில் கட்டப்பட்டுள்ள புதிய புதிய பவனங்களில், கட்டடங்களில், விடுதிகளில் மலை நாட்டு வாசஸ்தலங்களில், இடைவிடாமல் நடைபெற்று வரும் கூட்டங்களில், வெளிநாட்டு உதவியுடன் நிருவப்பட்டிருக்கும் ஆராய்ச்சிக் கூடங்களில் இந்தியத் திறமை உருவாகிக் கொண்டிருக்கிறதே, அங்கேபோய் நீயும் சஞ்சரித்துக் கொண்டிரு. சுருட்டின் புகை மண்டலம், பளபளக்கும் அட்டையுடன் கூடிய புத்தகங்கள், தவருன, ஆனுல் கட்டாயப் பாடமான ஆங்கிலத்தின் புகை படிந்த பல்கலைக் கழகங்களில் எங்கேயாவது ஒன்றில் போய் உன்னைப் புதைத்துக் கொள். அங்கேயே இரு.

'இதெல்லாம் முடியாவிட்டால் கடந்த காலத்தில் உன்னை மறைத்துக்கொள். கணுத், பதஞ்சலி, கௌதமிடத்திலோ; அஜந்தா, எல்லோரா, எலிபெண்டாவிலோ; கோனரக், கஜுராஹோவிலோ; சாலபஞ்சிகா, சுரசுந்தரி, அலசகன்யாவின் ஸ்தனபாரங்களிலோ; ஜப, தப, மந்திரங்களிலோ; சாதுக்களிலோ, சாதுக்களின் சத்சங்கத்திலோ, சோதிடத்திலோ, எங்கே இடம் கிடைக்கிறதோ அங்கே போய் ஒளிந்து கொள்.

'ஓடு, ஓடு, ஓடிவிடு!

'யதார்த்தம் உன்னைத் துரத்திக்கொண்டோடி வருகிறது.'

ரங்கநாத் எழுந்திருப்பதற்குள் பிரின்ஸ்பால் எதிரே வருவதைக் கண்டான். இன்று அதே ஷர்ட், ஹாஃப்பாண்ட், கால்களிலே மேஜோடு, கையில் அதே பிரம்பு. தூரத்திலிருந்தே சிரித்துக்கொண்டு கரம் கூப்பினர் அவர். விரைவில் திண்ணையை நெருங்கியும் விட்டார். அவர் அங்கே இல்லாதது தான் குறையாக இருந்தது என்பது போன்ற தன்னம்பிக்கையுடன் அங்கே கிடந்த நாற்காலியில் அமர்ந்தவாறு, "மகராஜ்,

இன்னும் உலாவிவிட்டுத் திரும்பவில்லே?" என்று வினவியவர் பூட்ஸையும் சாக்ஸுகளேயும் கழற்றலானுர்.

சற்றைக் கெல்லாம் அவர் நாற்காலியில் தவளே மாதிரி உட்கார்ந்துகொண்டு விட்டார்.

"நேற்று மகாராஜுக்கு ரொம்பவும் கஷ்டம் ஏற்பட்டுவிட்டது. ஆனல் போகட்டும். விஷயம் அத்துடன் முடிந்ததே" என்ருர்.

திடீரென அவருக்கு உற்சாகம் பிறந்துவிட்டது. "நான் தான் உங்களிடம் முன்பே சொன்னேனே! நீங்கள் எங்களுக்கு எதிராக எங்கே இருந்தீர்கள்? அவ்விடத்து நிலவரத்தைக் கண்டு வரத்தானே போனீர்கள். மகராஜுக்கு நான் எல்லாம் சொல்லி வைத்திருந்தேன்."

இருவரும் சற்றுநேரம் பேசவில்லே. குரங்காட்டியின் மத்தள ஓசை நெருங்கி வந்து கொண்டிருந்தது. "உங்கள் உடல் நிலே இப்போது ரொம்பச் சரியாக இருப்பதுபோல் தோன்றுகிறது" என்ருர் பிரின்ஸ்பால்.

"ஊம்."

"ஃபிட்டாக இருக்கிறதல்லவா?"

ரங்கநாத் உபசாரத்துக்காக, "தங்கள் தயவினுல்" என்ருன்.

"இனி என்ன செய்வதாக உத்தேசம்?"

"திரும்பிப் போகப்போகிறேன். ரிசர்ச் வேலே இத்தனே நாளாக அப்படியே கிடக்கிறது. கோடைக் காலத்துக்குள் முடித்தாக வேண்டும்."

பிரின்ஸ்பால், ஏதோ சம்பந்தா சம்பந்தமில்லாமல் பேசிக் கொண்டே போனுர். ரங்கநாத் சரித்திரத்தில் பெரும் புலமை பெற்றவன்; வித்வான்! ஆனல் பல பேர் வடிக்கட்டின முட்டாள் களாக இருக்கின்றனர். யுனிவர்ஸிட்டிகள் குதிரை லாயமாகி விட்டன. பெரிய பெரிய புரொபசர்களெல்லாம் வெறும் 'ஷோ' வாடகைக் குதிரைகள். இப்படிப் பல பல பேசினுர்.

ரங்கநாத் இவற்றில் எதிலுமே ஆர்வம் காட்டாது போகவே, "உங்கள் சான்ஸ் எப்படி? இந்த வருஷம் லெக்சரர் பதவி கிடைக்குமென்ற நம்பிக்கையுள்ளதா?" என்று விசாரித்தார் பிரின்ஸ்பால்.

"இன்னும் அந்தக் கேள்வியே எழவில்லே."

பிரின்ஸ்பால் தம் நாற்காலியை இன்னமும் கொஞ்சம் அருகே நகர்த்திக்கொண்டார். "உங்களுக்குத் தான் தெரியுமே! கன்னு ராஜிநாமாச் செய்துவிட்டார். சரித்திர ஆசிரியர்

பதவி எங்கள் கல்லூரியிலேயே காலியாகத்தான் இருக்கிறது. அதற்கே நீங்கள் ஏன் வந்துவிடக் கூடாது? ஜோராய் மாமா வீட்டிலே இருங்கள். கல்லூரியில் இரண்டு மணி நேரம் சொல்லிக் கொடுங்கள். மீதி நேரத்தில் ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்துங்கள்'' என்றார் தணிவான குரலில்.

ரங்கநாத்துக்கு உடலிலுள்ள ரத்தமெல்லாம் ஒரே விநாடியில் பாம்பைப்போல சீறிக்கொண்டு தலைக்குப் பாய்ந்துவிட்டாற் போல் தோன்றியது.

''உங்களிடம் நான் ஆசிரியர் வேலை பார்ப்பதா? அதுவும் கன்னுவுக்குப் பதிலாக?'' என்று காரமாக வினவினான் ரங்கநாத்.

பிரின்ஸ்பாலின் முகத்தில் லேசான சுருக்கம் கூடப் படியவில்லை. ''நான் வைத்திய மகராஜிடம் இதைப் பற்றிப் பேசிவிட்டேன்'' என்றார்.

''என் கண் எதிரே நடந்துள்ள விஷயம். கன்னுவை எப்படி வெளியேற்றினீர்கள் என்பதும் எனக்குத் தெரியும்.''

என்ன சொல்வது? பிரின்ஸ்பால் உற்சாகம் இழந்தவராய்த் தொடர்ந்தார். ''நீங்களுமா அப்படிச் சொல்லுகிறீர்கள்? இது கட்சி விஷயமல்லவா?''

கிழிந்த வேட்டியைச் சுற்றிக்கொண்டு, மேலே எண்ணெய்ப் பிசுக்குப் படிந்த கறுப்புச் சட்டை அணிந்த ஒருவன், 'டப, டப' வென்று முரசம் கொட்டியவாறே சனிஸ்வரனின் கடைக்கெதிரே வந்தான். அவனுடன் ஒரு பெண் குரங்கும், ஓர் ஆண் குரங்கும் மேடையில் ஆடும் நடிகர்களின் ஆடை அலங்காரத்துடன் வந்து கொண்டிருந்தன. அவற்றைத் தொடர்ந்து பல சிறுவர்கள், சிரித்துக் களித்தவண்ணம் வந்துகொண்டிருந்தனர். அந்தக் கூட்டத்தில் ஒரு சில நாய்களும் இருந்தன. அவற்றைப் பயமுறுத்துவதற்காக அந்தக் குரங்காட்டி, இடையிடையே, 'தடதட'வென்று முரசத்தை அவற்றின் தலைக்கருகே கொட்டிக் கொண்டிருந்தான்.

முரசத்தின் சத்தம் காரணமாய்ப் பிரின்ஸ்பால் தம் குரலை உயர்த்தவேண்டியிருந்தது. ''கன்னு போனதாலோ, மாளவியா செத்ததாலோ இடம் காலியாயிற்று என்பதைப்பற்றி உமக்கு என்ன வந்தது? உங்கள் வீட்டுத் தோட்டம், தாராளமாய் மாம்பழத்தைச் சாப்பிடுங்கள். மரத்தை ஏன் எண்ணுகிறீர்?''

பதிலேதும் வராதது கண்டு பிரின்ஸ்பால் மேலும் கொஞ்சம் அன்பைச் சொரியலானார். 'தாங்கள்' என்பதிலிருந்து, 'நீ'க்கு

இறங்கிவிட்டார். "நான் உன் வீட்டு மனிதன் மாதிரி சொல்லு கிறேன். கடைசியில் என்ன செய்யப்போகிருய்? எங்கேயாவது வேலை தேடித்தானே ஆகவேண்டும்? கன்ஞ தம் இஷ்டப்படி தான் ராஜிநாமாச் செய்துவிட்டார். வேறெங்கேயாவது ஒரு கன்ஞவைக் காதைப் பிடித்து வெளியேற்றி இருப்பார்கள். அவ்வளவுதானே?"

"எத்தனை நாட்களுக்கு இதிலிருந்தெல்லாம் தப்பமுடியும்? ரங்கநாத் பாபு, எங்கே போனலும் ஏதாவதொரு கன்ஞவின் இடந்தான் கிடைக்கும்" என்றவர் திண்ணையிலிருந்து சற்றுத் தூரத்தில் நின்ற குரங்காட்டியின் பக்கம் திரும்பிக் கையைக் கையை ஆட்டி; அவனை நரகத்துக்குப் போகும்படியாக யோசனை சொல்லலானுர்.

ரங்கநாத்தின் முகம் சிவந்துவிட்டது. குரலை உயர்த்தி, அத்துடனேயே சத்தியத்தின் கொடியையும் உயர்த்துபவன்போல், "பிரின்ஸ்பால் சாகப்! உங்கள் பேச்சைக் கேட்டாலே எனக்கு வெறுப்பாய் இருக்கிறது. பேச்சை நிறுத்துங்கள்" என்ருன்.

பிரின்ஸ்பால் வியப்புடன் இதைக் கேட்டுக்கொண்டார். பிறகு வருத்தத்துடன், "ரங்கநாத் பாபு! உமது எண்ணங்கள் மிக மிக உயர்ந்தவை. ஆனல் ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் நீர் ஒரு கழுதை என்பதே நிரூபணமாகிறது" என்ருர்.

இதன் பிறகு உரையாடலில் தேக்கம் ஏற்பட்டுவிட்டது. குரங்காட்டி, நரகத்துக்குப் போவதற்குப் பதிலாய், அங்கேயே நின்று உரக்கக் கத்திக் கத்திப் பாட ஆரம்பித்தான். அவனது முரசும் இப்பொழுது புதிய தாளத்தில் ஒலித்தது. சற்றுத் தூரத்தில் நாய்கள் வாலையாட்டிக்கொண்டு, உடலை நெளித்துக் கொண்டு குரைத்துக்கொண்டிருந்தன.

சிறுவர்கள் வட்டமாகச் சூழ்ந்து நின்றனர். இரண்டு குரங்குகளும், குரங்காட்டியின் முன்னே கம்பீரமாய் அமர்ந்திருந்தன. அவை ஆட எழுந்தால் பரதநாட்டியத்துக்குக் குறைந்து எதுவும் ஆடாது என்று தோன்றியது.

முற்றும்

Printed at Kay Kay Printers 150-D Kamla Nagar Delhi - 110007